உ

# தமிழ்ப் பொழில்



தஞ்சைக் கரந்தைத் [redacted]

திங்கள் வெளியீடு.

துணர்-௰ } பவ—சித்திரை. { மலர் - க.


க. புத்தாண்டு வாழ்த்து 1

உ. பழந்தமிழ்ப் பாவலருங் காவலரும் 3
பண்டிதர், திரு. கா. பொ. இரத்தினம்,

௩. ஆழ்வார்பாரதமும்-சோழர்களும் 15
திரு. ம. வி. இராகவன் திருவத்திபுரம்

௪. தருக்க விளக்க வினவிடை 19
திரு. சி.த. நாராயணசாமிகள்,

௫. சொல்லதிகார ஆராய்ச்சிக் குறிப்புரையும் மறுப்பும் 24
திரு. ம. நா. சோமசுந்தரம் பிள்ளையவர்கள்,

௬. திருந்திய கை எழுத்துக்கள் 35
திரு. வீ. உலகவூழியர்.

௭. தமிழ்ச்செய்திகள் 37

௮. மதிப்புரை 40


பொழிற்றொண்டர், த. வே. உமாமகேசுவரம் பிள்ளை.

தஞ்சைக் கூட்டுறவுப் பதிப்பகம், கரந்தை.



## அறிவிப்பு.

பதிப்பகத்தில் நேர்ந்த சில குழப்பங்களால் இம்மலர் வெளிவர இதுகாறுந் தாழ்த்தமைக்கு மிகமிக வருந்துகிறோம். சந்தா நேயர்கள் பொறுத்தருள்வாராக.

த. வே. உமாமகேசுவரன்,
பொழிற்றொண்டன்.

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு

துணர் ய } பவ, சித்திரை { மலர் க

## தமிழ்ப்பொழில் புத்தாண்டு வாழ்த்து

வேலணையூர்
பண்டிதர், திரு. கா. போ. இரத்தினம் அவர்கள்
இயற்றியது.

நேரிசை ஆசிரியப்பா.

செந்தமிழ்ப் பொழிலே! செந்தமிழ்ப் பொழிலே!!
நன்மணங் கமழும் பன்மர நிறைந்து
பன்மலர் மலர்ந்து நன்மணம் நாறி
குயிலின் னிசையொடு பயிலவண் டரற்றி
மயிலின் கணமொடு பயில்கொம் பாடி
நறுமென் றேறற் சிறுதுளி பிலிற்றி
மந்த மாருதம் சந்தமொடு கொண்டு
அருளி லார்தம் மருளுடை மனம்கொள்
இருள்போ னீங்கா விருள்குடி கொண்டு
நறுமென் தளிராம் சிறுமெல் விரலும்

நாருடை மொட்டாம் ஏருடை நகமும்
தற்சூழ் அளியாம் பொற்புடைக் கடகமும்
சீர்பெறக் கொண்டே பார்மகள் தன்னுடை
ஏர்நிறை வதனச் சீர்தனை நோக்க
ஆடியாம் மதிதனை நாடியே நீட்டிய
சீருடைக் கைபோற் காருட னோங்கிய
பன்மரப் பொழில்தான் மன்னு வுலகோர்
மடவினை யாலாம் உடற்களை தீர்த்து
மன்னு மின்பம் தன்னை நேர்தல்
அன்றி அருளுடை நின்போற் பற்பல
பவவினை யாலாம் பவக்களை போக்கி
அருந்தவத் தோரும் வருந்தியே பெறும்
அழியா வின்பக் கழிபெருஞ் சிறப்புடை
வீடுதனை யளிக்கும் பீடுடைத் தொன்றோ?
அதனால்,
ஒப்புயர் வில்லாய் செப்புவ ரையிலாய்
நிலையிலா வுலகத்து நிலைத்து நிற்கும்
இறைபோ லவர்தம் நிறையரு ளாலே
இமிழ் திரை வேலித் தமிழகத்து
கலைபல் பரப்பி நிலைத்திருப் பாயே.

சுபம்.



# * பழந்தமிழ்ப் பாவலருங் காவலரும்.



யாழ்ப்பாணம், வேலணையூர்
பண்டிதர், திரு. கா. போ. இரத்தினம் அவர்கள்

எம் தமிழ் மொழியும் ஆரியமும் ஆதிக்கண் பரமசிவனுல் தோற்றுவிக்கப்பெற்று நடைபெறும் தெய்வமொழிகள் எனக் கூறுவர். இஃது 'தம்மலரடி யொன்றடியவர் பரவத் தமிழ்ச் சொலும் வடசொலும் தாணிழ பாக்கமதாட்சி கொண்டரே.' எனுந் தமிழ் வேதத்தானும், 'ஆரியமுந் தமிழுமுட னல்கிக் காரிகை யார்க்குங் கருணை செய்தானே' எனும் திருமந்திரத் தானும், 'வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி அதற் கிணையாத் தென்மொழியை உலகமெலாந் தொழுதேத்துங் குட முனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகர்' என்றும் 'இரு மொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவர் இயல் வாய்ப்ப இரு மொழியும் வழிப் படுத்தார் முனிவேந்தர்' என்றும் வருஉங் காஞ்சிப் புராணச் செய்யுட்களானும் பிற ஏதுக்களானும் பெறப்படும்.

தமிழ் என்பதற்கு இனிமை என்பது பொருளாகும். 'தமிழ்தழிய சாயலவர்' என்பதற்கு உச்சிமேற் புலவர்கொள் நச்சினர்க்கினியரும் இனிமை தழுவிய சாயலை உடையவர் என்றே பொருளுரைத்தனர். 'தமிழ்மென் சாயலவளோடும்' எனும் வாயவ்வித சங்கிதைச் செய்யுளிலும் "வண்டு தமிழ்ப் பாட்டிசைக்குந் தாமரையே" எனும் இராமாயணச் செய்யுளி லும் தமிழ் என்பது இனிமை குறித்தே வந்தது.

இத்தகைய இனிய மொழி கடவுளாலும் காதலிக்கப் பட்டது. 'திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளும் குன்ற

---

* காரைநகர் இளைஞர் ஐக்கிய சங்க இரண்டாம் வருடாந்த விழா வில் பண்டிதரவர்கள் நிகழ்த்திய சொற்பொழிவின் சுருக்கம்.

மெறிந்த முருகவேளும் அகத்தியனாரோடு தலைச் சங்கமிருந்து தமிழாராய்ந்தார் என்று இறையனார் களவியலுரை கூறுகிறது. மணிவாசகரும் "சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்பலத்தும் என் சிந்தையுளும் உறைவான் உயர்மதிற் கூடலின் ஆய்ந்த ஒண்டீந் தமிழ்" என்று கூறினர். சிவப்பிரகாச சுவாமிகளும் "காதாரமுதம் பெறவேண்டி அன்றொரு காரிகைபாற் றூதாக நடந்தார்" என்று சிவபிரான் பரவையாரிடம் தூதுசென்றதன் காரணம் சுந்தரமூர்த்தி சுவாமிகளின் இனிய தமிழ்ப் பாடல்களைக் கேட்க விரும்பினமையே என்று கூறினர். "கண்ணுதற் பெருங் கடவுளும் கழகத்திருந்து ஆய்ந்த தமிழ்" எனுஞ் செய்யுளும் ஈண்டு கவனித்தற்குரியது.

இத்தகைத்தாய் கடவுளரும் காதல்கொள்ளும் இனிமையாங் குணத்து இயைந்து தட்பமுந் தகவும் ஒட்பமும் ஒருங்கமையப் பெற்ற பழந்தமிழ் மொழி முற்காலத்தில் நச்சும் பெருமை முச்சங்கத்தில் முத்தமிழ்த் துறையின் முற்றப் போகிய முது புலவர் பலரால் வளர்க்கப்பட்டு வந்தது. அக்காலத்தில் தமிழகத்தில் சிறந்துயர்ந்த நோக்கங்களை மேற்கொண்டு திருவருளுணர்ச்சியில் தலைப்படும் புலமைச்செல்வம் வாய்ந்து விளங்கிய புலவர்கள் பலர்நிறைந்திருந்தனர். அந்தணகுலத்தில் கபிலர், உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், தாமப்பல்கண்ணனார், பாலைக் கௌதமனார் முதலியோர் பலரும் அரசகுலத்தில் கோப்பெருஞ்சோழன், பெருங் கடுங்கோன், பாண்டியன் அறிவுடை நம்பி, நல்லுத்தரன் முதலியோர் பலரும், வைசிய குலத்தில் உறையூர் இளம்பொன் வணிகனார், அறுவை வணிகன் இளவேட்டனார், கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார், ஓலைக்கடைக் கண்ணம் புகுந்தாராயத்தனார் முதலியோர் பலரும், வேளாண் மரபில் கோவூர்கிழார், குறுங்கோழியூர் கிழார், அரிசில் கிழார், பெருங்குன்றூர் கிழார், கூடலூர்கிழார், காரி கிழார், முதலியோர் பலரும், குறக் குலத்தில் பேய்மகள் இளவெயினி, குறமகள் இளவெயினி, முதலியோரும் குயக் குலத்தில் வெண்ணிக் குயத்தியார் முதலியோரும் சிறந்து விளங்கினர்.

பெண் பாலாருள்ளும் ஔவையார், ஆதிமந்தியார், மாறோ கத்துநப் பசலையார், ஒக்கூர்மாசாத்தியார், வெண்ணிக் குயத்தியார், காக்கை பாடினியார் நச்செள்ளையார், காவற்பெண்டு, பெருங்கோப்பெண்டு, குறமகள் இளவெயினி, பேய்மகள் இளவெயினி, பாரிமகளிர், நக்கண்ணையன் மாறபித்தியார், வெறி பாடிய காமக் கண்ணியர், வெள்ளி வீதியார், குன்றியாள், கழார்க்கீரன் எயிற்றியார், நன்னாகையார், பூங்கணுத்திரையார், அள்ளூர் நன்முல்லையார், முதலிய மெல்லியலார் பலர் புலமையுடையவர்களாயிருந்தனர்.

இவ்வளவதிகமாகப் பெண்பாற் புலவர்கள் வேறெம் மொழியிலேனும் தோன்றினராக அறியப்பட்டிலதெனின் இஃதொன்றே தமிழின் மாண்பையும் பெருமையையும் விளக்கப் போதுமானதல்லவா? இவர்களுள் ஆதிமந்தி, பெருங்கோப் பெண்டு முதலியோர் அரசிகளாவர்.

பெருங்கோப்பெண்டு என்னுமரசியார் தம் நாயகன் இறந்த வமயத்துத் தீப்பாய எண்ணிய தம்மைத் தடுத்தவர்களை நோக்கி,

“பல்சான் றீரே பல்சான் றீரே
செல்கெனச் சொல்லா தொழிகென விலக்கும்
பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான் றீரே
அணில்வரிக் கொடுங்காய் வாள் போழ்ந்திட்ட
காழ்போல் நல்விளர் நறுநெய் தீண்டாது
அடையிடைக் கிடந்த கைபிழி பிண்டம்
வெள்ளெட் சாந்தொடு புழிப்பெய் தட்ட
வேளை வெந்தை வல்சி யாகப்
பரற்பெய் பள்ளியிற் பாயின் றுவதியும்
உயவற் பெண்டிரே மல்லே மாதோ
பெருங்காட்டுப் பண்ணிய பெருங்கோட் டீம
நுமக்கரி தாகுக தில்ல வெமக்கெம்
பெருந்தோட் கணவன் மாய்ந்தென அரும்பற
வள்ளிதழ் அவிழ்ந்த தாமரை
நள்ளிரும் பொய்கையும் தீயுமோ ரற்றே” எனக்

கூறினர். இஃது அம்மெல்லியலார் தம் கற்பின்றிறனையும் புலமையின் மாண்பையும் நன்கு விளக்குகின்றது. முற்காலத் தமிழ்ப் பெண்கள் சிலர் தம் கணவர் இறந்தவுடன் எரிபுகுந் தனர் என்பதும் சிலர் நீர்ச்சோற்றுத் திரளுடன் வேளையிலைக் கறியையும் உண்டு பருக்கைக் கற்பரப்பிய படுக்கையில் பாயின் றிக்கிடந்து கைம்மை நோன்பு நோற்றனர் என்பதும் இச்செய்யு ளால் அறியக் கிடக்கிறது. இதனை,

"காதலர் இறப்பிற் கனையெரி பொத்தி
ஊதுலைக் குருகின் உயிர்த்தகத் தடங்காது
இன்னுயிர் ஈவர் ஈயா ராயின்
நன்னீர்ப் பொய்கை நளியெரி புகுவர்
நளியெரி புகாராயின் அன்ப ரோடு
உடனுறை வாழ்க்கைக்கு நோற்றுடன் படுவர்"

எனும் மணிமேகலை அடிகளானும் அறிந்து கொள்ளலாம்.

ஆதிமந்தி என்னும் நல்லிசைப் புலமை நிறை மெல்லிய லார் தம் கணவனாகிய சேரன் ஆட்டனத்தியொடு சோணாட்டி லுள்ள கழார் முன்றுறையில் நீர் விளையாடுகையில் காவிரி அத்தியை வவ்விச் சென்றது. தம் கணவனைக் காணாது வருந்திய இவர் காவிரிவழி ஓடிக் கடல் மருங்கெய்திக் கூவிப் பின்பு மாருதி என்பாளால் அவனைக் கண்டு தழுவிக்கொண்டு போந்தனள். இதனை,

"மன்னன் கரிகால்வளவன் மகள் வஞ்சிக்கோன்
தன்னைப் புனல்கொள்ளத் தான்புனலின் பின்சென்று
கன்னவில் தோளாயோ வென்னக் கடல்வந்து
முன்னிறுத்திக் காட்ட வவனைத்தழீஇக் கொண்டு
பொன்னங் கொடிபோலப் போதந்தாள்" எனச்

சிலப்பதிகாரங் கூறுகிறது. இச்செய்தி அகநானூற்றிலுங் காணப்படுகிறது. இதனால் அக்காலத் தமிழ்ப் பெண்களின் கற்பின்றிறன் நன்கு விளங்குகிறது.

பழந்தமிழ்ப் பெண்களின் வீரத்தை ஔவையார், பூங் கணுத் திரையார், நச்செள்ளையார், ஒக்கூர் மாசாத்தியார் முதலிய மெல்லியலார்கள் நன்கு விளக்கிப் பாடியிருக்கின்றனர்.

"சிதைந்து வேருகிய மார்புகண் டருளி
வாடுமுலே ஊறிச் சுரந்தன
ஓடாப்பூட்கை விடலே தாய்க்கே." என்பது
ஒளவையார் கூற்று.

இலக்கண இலக்கியங்களிலன்றி இசைநூல், கணுநூல், சோதிடநூல், வானநூல், மருத்துவநூல், நாடகநூல் முதலிய வற்றிலும் எம்பழந் தமிழ்ப்பாவலர் அறிவுடையவராயிருந்தனர். அவர்களாவியற்றப்பட்ட இசை நுணுக்கம், பெருநாரை பெருங் குருகு முதலிய இசைத்தமிழ் நூல்களும் முறுவல் சயந்தங் குணநூல் முதலிய நாடகத் தமிழ்நூல்களும் இறந்தொழிந்தன.

கூடலூர்கிழார் எனுந்திருந்திய செந்நாவிருங்கலேப்புலவர் கூறிய, "ஆடியலழற் குட்டத்து
ஆரிருளரை யிரவின்
முடப்பனேயத்து வேர்முதலாக்
கடைக் குளத்துக் கயங்காயப்
பங்குனி யுயாழுவத்துத்
தலேநாண்மீன் நிலேதிரிய
நிலேநாண்மீன் அதனெதிர்தாத்
தோன்ருண்மீன் துறைபடியப்
பாசிச் செல்லா தூசி முன்னுது
அளக்கர்த் திணேவிளக்காக
கனேயெரி பரப்பக் காலெதிர் பொங்கி
ஒருமீன் விழுந்தன்ருல் விசும்பினுனே
அதுகண்டு
யாமும் பிறரும் பல்வே றிரவலர்
பறையிசை யருவி நன்னுட்டுப் பொருநன்
நோயி லனுயின் நன்று மற்றில்லென
அழிந்த நெஞ்சம் மடியுளம் பரப்ப
அஞ்சின மெழுநாள் வந்தன் றின்றே
.... .... .... ....
(அதனுல்) மாயோன் மேலோருலக மெய்தினுன்."

எனுஞ் செய்யுளால் அவரது சோதிட நூற்புலமை வெள்ளிடை யாகிறது. இதன்பொருள் "மேடவிராசி பொருந்திய கார்த் திகை நட்சத்திரத்தின் முதற்காலின் கண் நிறைந்த இருளை யுடைய பாதி யிரவின்கண் முடப் பனைபோலும் வடிவையுடைய அனுட நட்சத்திரத்தின் அடியின் வெள்ளி முதலாக, கயமாகிய குளவடிவு போலும் வடிவையுடைய புனர்பூசத்துக் கடையின் வெள்ளி எல்லையாக விளங்க, பங்குனி மாதத்தினது முதற் பதினைந்தின்கண் உச்சமாகிய உத்தரம் அவ்வுச்சியினின்றும் சாய, அதற்கு எட்டாம் மீனாகிய மூலம் அதற்கெதிரே எழா நிற்க, அந்த உத்தரத்திற்கு முன் சொல்லப்பட்ட எட்டாம் மீனாகிய மிருகசீரிடம் அஸ்தமிக்க, கீழ்த்திசையிற் போகாது, வடதிசையிற்போகாது, கடலாற் சூழப்பட்ட பூமிக்கு விளக் காக முழங்கா நின்ற தீப்பறக்க காற்றூற் பிதிர்ந்து கிளம்பி ஒரு நட்சத்திரம் ஆகாயத்தினின்றும் விழுந்தது. அதனைப்பார்த்து யாமும் பிறருமாகிய பல இரவலர் எம்முடைய பறையொலி போலும் ஒலிக்கும் அருவியையுடைய நல்ல மலை நாட்டுக்கு வேந்தனானவன் நோயை யுடையனல்லனாகப் பெறின் நன்று என இரங்கிய நெஞ்சத்துடனே, பயந்தோம். இன்று ஏழாம் நாளாகையால் அரசன் தேவருலகை யடைந்தான். என்பது.

பங்குனிமாதத்தில் நட்சத்திரம் வீழின் இராச பீடை என்பர். "ஆடுகயறேடனுச் சிங்கத்து எழுமீன் விழுமேல் அரசழிவாம்" என்பது சோதிட நூல்.

கபிலர் "நிலம் பயம் பொழியச் சுடர்சினந் தணியப் பயங்கெழு வெள்ளியானிய நிற்ப" எனவும் "மைம்மீன் புகை யினும் தூமந்தோன்றினும் தென்றிசை மருங்கின் வெள்ளி யோடினும்" எனவும் கூறினமையாலும், மதுரை அளக்கர் ஞாழர் மகனார் மள்ளனார் "வெள்ளி தென்புலத்துறைய விளை வயற் பள்ளம் வாடிய பயனில் காலை" எனக் கூறினமையாலும் கடியலூர் உருத்திரங்கண்ணனார் "வசையில் புகழ்வயங்கு வெண் மீன் திசை திரிந்து தெற்கேகினும் தற்பாடிய தளியுணவிற் புட்டேம்பப் புயன்மாறி வான் பொய்ப்பினும்" எனக் கூறி னமையாலும் இளங்கோவடிகள் "கரியவன் புகையினும் புகைக்

கொடி தோன்றினும் விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்'' எனக் கூறினமையாலும், பாலைக் கௌதமனார் "வறிது வடக் கிறைஞ்சிய சீர்சால் வெள்ளி பயங்கெழு பொழுதோடாநிய நிற்ப'' எனக் கூறினமையாலும் இவர்களும் சோதிட நூலறிவுடையாரென்பது பெறப்படும்.

கோவூர் கிழார் எனும் புலவருடைய செய்யுள்களிலிருந்து அவர் கணநூல், இசைநூல், சோதிடநூல்களில் வல்லுனரென்பதறியக்கிடக்கிறது.

தாமோதரனார் எனும் புலவர் மருத்துவநூலில் வல்லுனராயிருந்தமையால் மருத்துவன் தாமோதரனார் என அழைக்கப்பட்டார். திருவள்ளுவமாலையிற் காணப்படும் "சிந்திநீர்க் கண்டம் தெறிசுக்குத் தேனளாய்—மோந்தபின் யார்க்குந் தலைக்குத்தில்'' எனும் இவரது செய்யுளினாலும் இவரது மருத்துவ நூற்புலமையை அறிந்து கொள்ளலாம்.

பூங்குன்றன் எனும் புலவர் சோதிடத்தில் நிறைந்த அறிவுடையவரா யிருந்தமையால் கணியன் பூங்குன்றன் என்றும், தமிழ்க் கூத்தில் சிறந்த புலவர் ஒருவர் மதுரைத் தமிழ்க்கூத்தனார் என்றும், நாணய பரிசோதனையில் சிறந்திருந்த புலவர் ஒருவர் வண்ணக்கண் தாமோதரனார் என்றும் அழைக்கப்பட்டனர்.

தாவா நல்லிசைத் தண்டமிழ்ப் புலவர் சிலரின் புதல்வர்களும் புலமை உடையவர்களாக விளங்கினர். சாத்தந்தையார்க்குக் கண்ணஞ் சேந்தனாரும், ஆவூர் மூலங்கிழார்க்கு பெருந்தலைச் சாத்தனாரும், மதுரைக் கணக்காயனார்க்கு நக்கீரனாரும் புதல்வர்களாவர். இவ்வாறு வாழையடி வாழையாகப் புலவர்கள் தோன்றித் திகழ்ந்தனராக வேறெம் மொழியிலேனும் அறியப்பட்டிலதெனின் என்னே! எம் தாய் மொழியாம் தமிழ் மொழியின் தனிப்பெருமை!!

பழந்தமிழ்ப் பாவலர்களிடம் புலமைக் காய்ச்சல் எனும் கொடிய நோய் குடிகொண்டிருந்திலது. கபிலர் முதலிய புலவர்களைப் புகழ்ந்த புலவர்கள் பலர். திருவள்ளுவருடைய தமிழ் மறையைப் புகழாத புலவர்கள் யாவர்?

இவர்கள் யாவருடைய குற்றங்களையும் அஞ்சாது எடுத்துக் காட்டி அவர்களுக்கு நல்லதன் நலனைப்புகட்டி வந்தனர். "முக்கண்ணைக் காட்டினும் குற்றம் குற்றமே"யெனப் பரமசிவனுடன் எதிர்த்தவர் நந்தமிழ்ப் புலவரே. சுருங்கக் கூறுமிடத்து கொலை களவு முதலிய பஞ்சமா பாதகங்கள் நீங்கவும், சமரசம் நிலைக்கவும், தாமின்புறுவது உலகின்புறவும், வறுமை நீங்கவும், உழவுத்தொழில் உயர்நிலையடையவும் கைத்தொழில்கள் சிறக்கவும், தமிழ்மொழி மேன்மையடையவும், அறங்கள் சிறப்பாக நடக்கவும், அரசர்களுடைய செங்கோல் வழுவாது நடக்கவும், நாடு நன்னிலையடையவும் செய்வதே தங்கள் குறிக்கோளாகக் கொண்டொழுகினர் என்னலாம்.

ஒரு நாட்டின் செல்வமும் சிறப்பும் நாகரிகமும், நன்னிலையும், மொழிவளர்ச்சியும், பிறவும் அந்நாட்டு அரசியலையே பொறுத்திருக்கிறது எனும் உண்மையை எம்தமிழ்ப்பாவலர் அறியாதிருந்தாரல்லர். "நெல்லு முயிரன்றே நீரு முயிரன்றே மன்னனுயிர்த்தே மலர்தலையுலகு" என்பதை அவர்கள் அறிந்து அரசர்களை நண்ணி அவர்களாலோம்பப்பெற்று அவர்களுடனுறைந்தனர். அவர்களுக்கு நல்லதன் நலனையும் தீயதன் தீமையையும் தெள்ளிதினுணர்த்தினர்; இளமையும் யாக்கையும் செல்வமும் என்றிவற்றின் நிலையாமையை எடுத்துணர்த்தி அவரை மெய்யுணர்விற் றலைப்படுத்தினர். காதலிகந்து கைவிடப்பட்ட அவர் தம் கற்பரசியரை அவரோடிணைத்து நெறி பிறழா வண்ணம் வாழ்க்கையினை நடத்தச் செய்தனர். "நீரின்றமையா யாக்கைக் கெல்லாம் உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே" என்பதை அவர்க்குணர்த்தி உழவுத்தொழிலை விருத்தி செய்வித்தனர். அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கம் இவற்றின் இயல்பை எடுத்துக் காட்டினர். காட்சிக்கெளியராயும் கடுஞ்சொல் இல்லாதவராயும் அறனிழுக்காது அல்லவை

நீக்கி இன்சொல்லால் ஈத்தளித்து முறைசெய்து காப்பாற்று மாறு செவியறிவுறுத்தினர். சாம, பேத, தான தண்டமெனும் நால்வகை உபாயத்தின் தன்மைகளையும் நன்கெடுத்து விளக்கினர். காவலர் வெகுளிவாய்ப் பட்ட அமயங்களில் தம் நல்லுயிரையும் பொருட் படுத்தாது அவர்களுக்கு உண்மையை எடுத்துரைத்து அவர் தம்மை நன்னெறியில் நிறுத்தினர்.

"நிலம் பெயரினு நின்சொற் பெயரல்"

"அறனும் பொருளும் இன்பமும் மூன்றும்
ஆற்றும் பெருமநின் செல்வம்
ஆற்றாமை நிற்போற் றாமையே"

"அருளும் அன்பும் நீக்கி நீங்கா
நிரயங் கொள்பவ ரோடொன்றாது காவல்
குழவி கொள்வாரின் ஓம்புமதி"

"கொடியோர்த் தெறுதலும் செவ்வியோர்க் களித்தலும்
ஒடியா முறையின் மடிவிலை யாகி
நல்லதன் நலனும் தீயதன் தீமையும்
இல்லையென் போர்க் கின்னா கியர்"

என்பன போல்வன வெல்லாம் பாவலர் காவலர்க்கு எத்தகைய அறங்களை அறிவுறுத்தினர் என்பதைக் காட்டுகின்றன.

பழந்தமிழ்ப் பாவலர் பரிசில் பெறுதற் பொருட்டே காவலரைப் பாடினர் என்று கூறல் ஏற்புடைய தொன்றன்று. தம் தரமறிந்து வள்ளல்களும் அரசர்களும் மனமுவந் தளித்த பரிசில்களையே இவர்கள் ஏற்றார்கள்.

"காணாது ஈத்த இப்பொருட்கு யானோர்
வாணிகப் பரிசிலே னல்லேன்
தினையனைத் தாயினு மினிதவர்
துணையள வறிந்து நல்கினர் விடினே"

எனுஞ் செய்யுள் ஈண்டு நோக்கற்குரியது. தம்தரமறியாது ஈந்த பொருள்களையும் சிறிய பரிசில்களையும் இவர்கள் ஏற்றிலர்.

ஓர் பாவலர் தம் தரமறியாது காவலனீந்த சிறுபொருளை எற்காது "இரவலர் புரவலை நீயுமல்லை புரவலர் இரவலர்க் கில்லையு மல்லர்" எனக் கூறி அவனை விட்டுச் சென்றார்.

பழந்தமிழ்ப் பாவலர்கள் இயற்றிய இயலிசை நாடக மெனும் முத்தமிழ் நூல்கள் பல கொடுங்கடலால் கொள்ளப் பட்டன. சில எரியாலும் செல்லாலும் அழிந்தொழிந்தன. எஞ்சின சிலவே இப்பொழுது எமக்கு எய்ப்பினில் வைப்பாகக் கிடைத்திருக்கின்றன. அவைதாம் இடைச் சங்க காலத்திருந்த ஒல்காப்புலமைத் தொல்காப்பியரியற்றிய தினையளவு போதாச் சிறுபுன்னீர் பனையளவு காட்டும்படித்தாய் சிற்றளவினவாகிய சொற்களால் சிறந்தமைந்தனவாகிய பெரும் பொருள்கள் தோன்றத் திகழும் தொல்காப்பியமும் கடைச் சங்கம் மருவிய மேல், கீழ்க்கணக்கு நூல்களுமாம். அன்பினைந்திணைக் களவியல் பாரதவெண்பா, சிலப்பதிகாரம், மணிமேகலை எனுநான்கையும் இவற்றொடு சேர்த்துங் கூறலாம்.

மேற்கணக்கு நூல்கள் எட்டுத்தொகை பத்துப்பாட்டென இருபிரிவின. நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப் பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு, எட்டும் எட்டுத் தொகையாகும். திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற் றுப்படை, முல்லைப்பாட்டு மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் எனும் பத்தும் பத்துப்பாட்டாகும். கீழ்க்கணக்கு நூல்களை,

"நாலடி நான்மணி நானாற்பது ஐந்திணைமுப்
பால்கடுகங் கோவை பழமொழி—மாமூல
மெய்ந்நிலைய காஞ்சியோ டேலாதி என்பவே
கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு" எனும்

வெண்பாவினாலறிந்து கொள்க.

மேற்காட்டிய நூல்களெல்லாம் பெரும்பாலும் வெண்பா வானும் ஆசிரியத்தானுமே ஆக்கப்பட்டன. இவற்றிலிருந்தே யாம் பழந்தமிழ் நாட்டுப் பாவலர் காவலர் வள்ளல்கள் முதலி

யோர் தம் வரலாறுகளை அறியத்தக்கதாயிருக்கிறது. இவற்றின் நயங்களையும் விழுப்பத்தையும் அளவிட்டுரைத்தல் அரியது. இவற்றின் நடைக்கும் பிற்காலத்திய நூல்களின் நடைக்கும் சிறிதுபேதமுண்டு. இவற்றில் சொல்லணிகளும் பொருளணிகளும் அதிகமாகக் காணப்பட்டில. உவமை அணியும் அதன் கிளை அணிகளுமே இவற்றில் காணப்படுவன. இவற்றில் அமைந்திருக்கின்ற உவமைகள் ஆழமும் அழகும் உடையனவாய் நவில்தொறும் நமக்கு நல்லின்பம் நல்கின்றன.

"தலையினிழிந்த மயிரனையர் மாந்தர் நிலையினிழிந்தக் கடை" "உறங்குவது போலும் சாக்காடு உறங்கி விழிப்பது போலும் பிறப்பு" என்பன தெய்வப்புலவர் திருவாய் மலர்ந்தருளிய உவமைகள். மற்றைய பழந்தமிழ்ப் பாவலர்களும் எருமையின் கொம்பிற்குப் பயற்றம் நெற்றையும், சேவலின் நெற்றிச் சூட்டிற்கு முண்முருக்கம் பூவையும், கந்தைத் துணிக்குப் பாசி வேரையும், நரைக் கூந்தற்கு கொக்கின்றூவியையும், முயல் விழிக்கு நீர்க்கொப்புளையும், வண்மைக்கு மாரியையும், பன்றித் தலைக்கு உரலையும், வேள்வித்தீக்குத் தாமரையையும் ஒப்பிட்டு அழகுறக் கூறியிருக்கின்றனர். இவ்வுவமைகளின் நயங்களாலும் இடி வெள்ளை நிறமுடையது, நிலத்திலும் நீர் முந்தியது, புலி இடப்பக்கத்தில் விழுந்த உணவை உண்ணாது, மழைநீர்த்துளி கடலில் விழுந்து முத்தாகும், யானை தன்மேல் ஒருவன் எறிந்த கல்லைக் கவுளில் அடக்கிவைத்திருந்து பின்னர்க்காணும்பொழுது அதனை எறிந்து அவனைக்கொல்லும், மான் விளக்கொளியில் துயிலும் என அவர்கள் அறிந்திருந்தாராதலினாலும் அவர்களுடைய இயற்கைப்பொருள் அறிவு வெள்ளிடையாகும்.

ஈண்டுக் கூறிய நூல்களெல்லாம் அகப்புறப் பொருட்டுறைகளையும், அறம், பொருள், இன்பம் என்பவற்றையும் திறம் படக் கூறுவன. பொதுவாகக் கூறுமிடத்து இவற்றிலுள்ள செய்யுள்களில் தெய்வ வணக்கஞ் செய்யுமாறு கூறுவன சில; இல்லறத்தின் இயல்பை எடுத்துரைப்பன சில; துறவறத்தின் தூய்மையைக் கூறுவன சில; இம்மைப் பயனையும் மறுமைப் பயனையும் செம்மையிற்றெரிப்பனசில; அந்தணர் இயல்பையும்

அரசநீதியையும், வணிகர் இயல்பையும், வேளாண்மக்களின் ஞாளாண்மையையும் விளம்புவன சில; போர்க்குமுற்படும் அரசரைச் சந்துசெய்வன சில; ஒற்றுமைப் பயனையும் வீரச் சிறப்பையும் விளம்புவனசில; வறுமை நோயின் திறனைத் தெரிப் பனசில; நட்பின்பயனையும், கல்வியின் பயனையும் கட்டுரைப்பன சில; வண்மையும், தண்மையும், திண்மையும், உண்மையும் என்ப வற்றைப் பன்னுவனசில; அரசர் அமரருலகெய்தப் புலவர் புலம்பிய அலமரல் தெரிப்பன சில; இளமையும் யாக்கையும், வளமையும், நில்லா என்றியம்புவன சில; இனியவை கூறனனி நலனென்பன சில; உழவினுயர்வை அழகுற உரைப்பனசில; கொலையைக் கொல்லுமாறு கூறுவனசில; நல்லோர்ப் புணர்தும் அல்லோர்த்தணத்தும் வாழ்மின் என்பன சில; மக்கட்பேற்றின் மாண்புரைப்பன சில; கணவனையிழந்த கற்புடை மங்கையர்களை யெரிபுகுந்த செய்தி தெரிப்பன சில; கற்பின்றிறத்தைக் காட்டு வனசில; கொடுங்கோன்மையின் கொடுமை கூறுவனசில; தவத் தின்பெருமை சாற்றுவனசில; என்றின்னவாறு கூறலாம்.

“மூவர்கட் கரியானிற்பத் தாம் வீற்றிருந்தவரும்” ‘தட வரை முனிவனீன்ற தமிழ்க் கொழுங்குழவி தன்னைப் படர் வெயிலுமிழும் சங்கப் பலகையாந் தொட்டிலேற்றி நடைவர வளர்த்து ஞாலநனந்தலை மறுகில் விட்டவருமாகிய’ பழந்தமிழ் பாவலர்தம் பெருமைகளை அளவுபடுத்திக் கூறவொண்ணுதாகை யாலித்துடனிறுத்திக் காவலர்களைப்பற்றிச் சில கூறுதும்.

(தொடரும்.)



# ஆழ்வார் பாரதமும்—சோழர்களும்

திரு. கோமான் ம. வி. இராகவன், தமிழ் மாணவன்,
ஔவைத் தமிழகம், திருவத்திபுரம்.

(முற்றொடர்ச்சி துணர் 9. மலர் 12. பக்கம் 480.)

பின்னர் நான்கு செய்யுட்களால் இருவரும் போர் புரிந்தமை கூறி,

"பிறைமுடிச் சடையவன் பிள்ளை வள்ளுகிர், விறலுடைப்
[புலிக்கொடி வீரன் மெய்யெலாம்,
புறவினுக் கரிந்தநாள் போல மேல்விடும், திறலுடை வாளியாற்
[சிவப்பித் தானரோ" (ஷை-128)

எனவரும் பாவினால் அசுவத்தாமன் ஏவிய கணைகளால் துளைக்கப்பட்டுக் கணைபட்ட வாய்தொறும் உதிரமொழுக நின்ற சோழன் மேனியை, * புறவுக்காக உடலையரிந்து கொடுத்த

* "புள்ளுறு புன்கண் தீர்த்த வெள்வேல், சினங்கெழு தானைச் செம்பியன்" "புறவி னல்லல் சொல்லிய கறையடி, யானை வெண்மருப் பெறிந்த வெண்கடைக், கோனிறை துலா அம்புக்கோன்" "தன்னகம் புக்க குறுநடைப் புறவின், றபுதி யஞ்சிச் சீரை புக்க, வரையா வீகை யுரவோன்" "நீயே, புறவி னல்ல லன்றியும் பிறவு, மிடுக்கண் பலவும் விடுத்தோன்" (புறம்-37, 39, 43, 46) "எள்ளறு சிறப்பி னிமையவர் வியப்பப், புள்ளுறு புன்கண் தீர்த்தோன்" "அறநெறிச் செங்கோல் மறநெறி நெடுவாள், புறவு நிறை புக்கோன்" "புறவு நிறைபுக்குப் பொன்னுலக மேத்தக், குறைவி லுடம்பரிந்த கொற்றவன்" (சிலப்-20; 51-2, 23; 58, 29 அம்மானை) "உடல் கலக்கற வரிந்துதசை யிட்டுமெ'ருவன், ஒருதுலைப் புறவொடொக்கநிறை புக்கபுகழும்" (கலிங்-இராசபாரம்-13) "புக்கான், மருணிறையென்று வந்தடைந்த வஞ்சப், புறா நிறை புக்க புகழோன்" (இராசராச-உலா) "கொலையே றுடம்பைக் கொய்தாலு மெய்தாத், துலையேறி வீற்றிருந்த சோழன்" (குலோத்-உலா) "உலகறியக், காக்குஞ் சிறுபுறவுக் காகக் களிகூர்ந்து, தூக்குந் துலைபுக்க தூயோனும்" (விக்கிரம-உலா) "புக்கடைந்த புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க, மைக்கடங்கார் மதயானை வாள் வேந்தன்" "மின்னுயிர்க்கு நெடுவேலாய் இவன்குலத்தோன் மேற்பறவை, மன்னுயிர்க்குத் தன்னுயிரை மாறாக வழங்கினனால்"

சிபியினுடைய மேனியோடு ஒப்பிடுகின்றார். சிபியும் தனக்காக வன்றி ஒரு பறவைக்காகத் தன் உடலையரிந்து கொடுத்தான்; அவன் மரபினனாகிய இவனும் தனக்காகவன்றிப் பாண்டவர்க்காக உடலெங்கும் உதிரம் ஒழுக அம்படிபட்டு நின்றான் என நயம்படப் பகர்ந்தவாறும். சிபியொருவனேயன்றி அவன் குலத்தோர் யாவரும் தமக்கென வாழாப்பிறர்க்குரியாளராகவே வாழ்ந்தனரென்பதை இதனால் உணரவைத்தார்.

பின்னர் நான்கு செய்யுட்களால் போர் நிகழ்ச்சியையும், "கண்ணகன் காவிரி நாடன் கைக்கணை, மண்ணக நெருக்குற மலைந்த மன்னரை, விண்ணக மிடனற விறைவி னேற்றவே" (ஷை-133)

என வருமிதனால் சோழன் அசுவத்தாமன் படையையெல்லாம் கொன்று குவித்தமையையும்,

"முன்னிய சிலைமறை முனிவன் மைந்தனுந், தன்னிகரிலாவிறற் சகுனி யாதியாத், துன்னிய நிருபருந் தொல் லமர்க்குநீ, சென்னியென் றவன்புகழ் செப்பி மீளவே" (ஷை-134)

என்று சோழனுடைய போர் வன்மையை அசுவத்தாமன் முதலாய வீரர் யாவரும் புகழ்ந்து புறமிட்டமையையும் கூறினார். எதிர்ப்போர் யாவரேயாயினும் அவரை உயிர்வேறு உடல்வேறு செய்தல்லது மீளவிடாத வில்வீரனும், முக்கட் பரமன் திருவருளாற்றோன்றியவனுமாகிய அசுவத்தாமனும் புகழ்ந்து வெந்நிடப்பொருதான் சோழன் என்ற இதனானே ஆழ்வார் சோழரின் போர் வன்மையை எவ்வகை மதித்திருந்தாரென்பது போதரும்.

சோழர்களுடைய பெயர்கள் பலவினு ளொன்றாகிய சென்னியென்பதை, தலை உடலில் தலைமைபெற்று விளங்குதல்

---

(சம்பரா-திருவவதாரம்-65, குலமுறை 7) "என்பும் உரியராதல், தன்னகம் புக்க குறுநடைப் புறவின்ற புதியஞ்சிச் சீரைபுக்கோன் முதலாயினோர்கட் காண்க" (குறள்-72; பரிமே-உரை) எனவரும். இவை யாவும் புலிக்கொடி வீரன் மெய்யெலாம் புறவினுக் கரிந்தமை கூறுதல் காண்க. இவ்வாலாறு மகாபாரதத்துள் வீடுமன் தரும புத்திரனுக்குக் கூறியதாகக் கூறப்பட்டுள்ளது.

போல "போரில் தலைமைபெற்று விளங்குகின்றனே; அதனால் உன்னைச் சென்னியென்றல் தகும்" என அசுவத்தாமன் முதலியோர் புகழ்ந்ததாக அமைத்துள்ளமை பாராட்டற்பாலது.

சோழர் ஒவ்வொரு நாளும் போரில் வெற்றிபெற்றுப் பதினெட்டு நாளும் உயிரோடிருந்தனரென்றும், பதினெட்டாம் நாளிரவில் அசுவத்தாமனோடு பொருது அவிந்தாரென்றும் கீழ் வருமிரண்டு செய்யுட்களாலு முரைக்கின்றார்.

"இரவிடை யமர்மற் றென்னைகொ லென்னு இரவிதன் திருக்
[குலத் திறைவன்
பெருமையோ டெழுந்தான் பகைவன்மே லவன்முன் பின்னிடப்
[பொருதிடும் பெரியோன்."

"பொன்னிநன் னதியும் நேரியம் பொருப்பும் புகாரெனும்
[நகரியும் படைத்த
சென்னியு மவன்றன் சேனையின் விதமுஞ் சேனமண்ட லீகருஞ்
[சேர
முன்னிய சிலைக்கை முனிமக னுடன்போய் மோதியவ் வேதி
[யான் மடிந்தார்
பின்னிய சடையோன் வழங்கிய படைமுன் பிழைத்தவர்
[யாவரே பிழைத்தார்."

(18-ம் போர் 218, 219.)

எனப் பதினெட்டாம் நாளிரவில் பாண்டவரும் ஆண்டவனும் தம் பாசறைக்கு ஒரு பூதத்தைக் காவல் வைத்து விட்டு வேறிடஞ்சென்றனராக, அவ்வமயம் ஈசனாலருளப்பெற்ற பாசுபதாத்திரத்துடன் வந்த அசுவத்தாமன் பூதத்தைவென்று பாடிவீட்டுள் புகுந்து யாவரையும் கொல்லா நிற்க, அங்கெழுந்த பேரொலியால்விழித்தெழுந்த சோழன் தன் பெரும்படையைத் திரட்டிக்கொண்டு, முன்னாள் தன்னோடு பொரவாற்றாது முதுகிட்டோடினவனான முனிமகனை யெதிர்த்துப்பொருது, அவனால் சேனையோடும் கொலையுண்டிறந்தான் என்பது இவ்விரண்டு செய்யுட்களாலும் கூறப்படுவது.

அவ்வாறு முன் பின்னிடப்பொருதவன் பின் அப்பின்னிட்டவனால் மடிந்தானெனல் அமையுமோ? என்னும் வினாவிற்குச் செவ்வனிறையாகவும், சோழரின் வீரத்தை நிலைநிறுத்தக்கருதியும் "பின்னிய சடையோன் வழங்கிய படைமுன் பிழைத்தவர் யாவரே பிழைத்தார்" எனத் தன் கூற்றாகக் கூறுகின்றார். இதனால் சோழன் மடிந்தமைக்குப் பரமனருளிய பாசுபதாத்திரமே காரணமென்பதும், சோழன் அசுவத்தாமனுக்கு இளைப்பவனல்லனென்பதுமே முடிந்த முடிபாதலை யுணர்த்துகின்றார். இதில் ஈசன் படைக்கு ஏற்றம் கூறுமுகத்தால் சோழனுக்கு ஏற்றங் கூறியுள்ளமை காண்க. இரண்டாவது செய்யுளில் சோழர்க்குரிய யாறு, மலை, நகரம் முதலியவற்றைச் சிறப்பித்திருக்கின்றனர். பொன்கொழிக்கும் பொன்னியும், மணியுயிர்க்கும் நேரியும், வளங்குலவும் நகரியும் படைத்த சோழன் வேதியனால் மோதிக் கொல்லப்பட்டான் என ஆழ்வார் இரங்குகின்றார். இங்ஙனமே பாண்டியன்தேர் அழிந்தது என்று கூறுமிடத்தும் "அழிந்த தந்தோ, செங்கயனெடும்ப தாகைத் தென்னவன் செம்பொற்றேரே" என இரங்கியுள்ளார்.

இதுகாறும் கூறியவாற்றால் தமிழ் கூறும் நல்லுலகமாகிய நம்நாடு ஏனை நாடுகளினும் சிறந்ததென்பதும், தமிழ்நாடு மூன்றனுள்ளும் சோழநாடு சிறந்ததென்பதும், அச்சிறப்பிற் கேதுவாய காவிரியாறு வான் பொய்ப்பினுந் தான் பொய்யாச் சிறப்பினையுடையதென்பதும், தமிழ் மன்னர் மூவரும் மனவொற்றுமை மிக்க மாமுடி மன்னர் என்பதும், இம்மூவர்க்கும் பாண்டவர் பக்கல் பெருநட்பும், இவர் மாட்டு அவர்கட்குச் சீரிய பற்றும் உண்டென்பதும், இவருட் சோழர் சூரிய குலத்தினரென்பதும், ஆத்திமாலையும் புலிக்கொடியும் உடையரென்பதும், இவர் பாண்டவர்கட்குத் துணையாகப் போர் புரிந்தனரென்பதும், "அறத்தினலன்றி யருஞ்சமம் அமரார்க்கும் கடத்தல் மறத்தினலரிதென்பது மனத்திடை" வலித்த மாண்பினர் என்பதும், இவர் அரும்பெருஞ் செயல் புரிந்த ஆண்மையரென்பதும், "இறப்ப வருவழி யிளிவந்தன செய்தாயினும், உயிர்

உய்வேம்'' என்று கருதாத ஏற்றமுடையரென்பதும், தம்மை யடுத்தோரைக் காப்பான் உடல் பொருள் உயிர் முற்றும் ஒருங் குதவும் உளப்பாங்கினரென்பதும், இவரைப் புரமெரித்த விரிசடை யண்ணலன்றி மறங்குறித்தவர் வெல்ல மாட்டுவா ரல்லர் என்பதுமாகிய இன்னோரன்ன நலங்கண்ட வில்லிபுத்தூர் ஆழ்வார் வாய்ப்புழி யெல்லாம் இவர் மாண்பும் பிறவும் வளங் கெழுமிய செய்யுட்களால் வாயார வாழ்த்தி மகிழ்கின்றாரென் பதும் பிறவும் உரைத்தவாறும்.

---

# தருக்க விளக்க வினாவிடை.

சித. நாராயணசாமிகள், திருவோற்றியூரான்
வடமொழிக்கல்லூரி, சூளை, சென்னை.

தக்க வின்ன தகாதன வின்னவென வுணர்தற்கு ஒருதலை யாக வேண்டற்பாலது கலைப்பயிற்சியோகும். கலைப்பயிற்சி யில்லாதார்க்கு அவ்வுணர்ச்சி யெழாது; எழினும் நிலைபெறாது. அவ்வுணர்ச்சியை யுண்டாக்கி அழிவிலா வின்பம் பெறும்வரை துணைபுரியும் கலைப்பயிற்சிக் கின்றியமையாதன, அறம் பொரு ளின்பம் வீடென்பனவற்றை யுணர்த்தும் நூல்களாம். அந் நூல்களைக் கற்றற்கின்றியமையாதனவாய்க், கருவியாய்த், துணை புரிவன எண்ணும் எழுத்துமே யன்றி தருக்கமாகிய எண்ணும் ஒன்றாகும் என்பது அறிவுடையார் துணிவாகும். அதனால் இன்றியமையாதது தருக்கம் எனப் பலருணரினும், பயில்வோர் சிலராகின்றனர்; தருக்கமாய எண்ணையுணர்த்து நூல்கள் கடினப் போக்காக இருத்தலின் அதனால் யாவரும் பயிலும்படி விளக்கி வினாவிடையாக வமைய எழுதினால் நலமாகும் எனச் சில நண்பர்கள் வேண்டியதால் உயர்மிகு மாதவச் சிவஞானப் பெருந்தகையார் மொழிபெயர்த்த தருக்க சங்கிரகத்தையும்

பிற நூல்களையும் பின்பற்றி யெழுதி வருகின்றனன். இங்ஙனம் எழுதப்படும் பகுதிகளைப் பொழில் மூலமாக வெளிவரவிடினல மாகும் என்றெண்ணியதால் இதன் மூலமாக வெளிப்படுத்த முற்பட்டனன்.

வினா :—தருக்க மென்றூ லென்ன?

விடை:-கௌதமர் முதலியோரால் தருக்கித்து (ஆராய்ந்து) தெரிவிக்கப்பட்டன.

வினா :—அவையாவை? அவற்றினிலக்கணமென்னை?

விடை :—அவை திரவியம், குணம், கருமம், சாமானியம், விசேடம், சமவாயம், அபாவம் என எழுபதார்த்தங்கள். பதத் தாற் பெயரிட்டு வழங்கற்பான்மை அவற்றனிலக்கணம். (அலைதாடி கொம்புடையது பசுவென்றால் அலைதாடி கொம்பு உடைமை, பசுவின் இலக்கணம் (இயல்) என்றும், அலைதாடி கொம்புடையது பசுவென்றுங் கொள்வதுபோல பதத்தால் (சொல்லால்) பெயரிட்டு வழங்கற்பாலன பதார்த்தங்கள் (சொற் பொருள்கள்) என்னுமிடத்துப் பதத்தாற் பெயரிட்டு வழங்கற் பான்மை, பதார்த்தத்தின் இயல் (இலக்கணம்) என்றும் பதத் தாற் பெயரிட்டு வழங்கற்பாலன பதார்த்தங்களென்றும் கொள்க.

வினா :—அவை, திரவியம், குணம், கருமம், சாமானியம், விசேடம், சமவாயம், அபாவம் என்னும் பதார்த்தங்கள் எனக் கூறினாற் போதுமே. இவ்வாறு கூறுவதாலேயே எழு என்னுந் தொகைதானே பெறப்படுமே; தானே பெறப்படுவதை யெடுத் துக் கூறியதனால் பயன் யாதுளது? பயனின்மையால், அவை திரவியம், குணம், கருமம், சாமானியம், விசேடம், சமவாயம், அபாவம் என எழுபதார்த்தங்கள் எனக் கூறாது, அவை திரவி யம், குணம், கருமம், சாமானியம், விசேடம், சமவாயம், அபா வம் என்னும் பதார்த்தங்கள் என்றுமட்டுங் கூறினாற்போதாதா?

விடை :—ஒருவன் தமிழ்நாட்டுப் பேரரசர் சேர பாண்டிய சோழர் என்னும் மூவர் என்று கூறாது, தமிழ் நாட்டுப்பேரரசர்

சேர பாண்டிய சோழர் என்பார் என்றுமட்டுங்கூறினல் கேட்டோன் இவனற் கூறப்பட்ட மூவரும் தமிழ்நாட்டிற்குரிய பேரரசர் எனவுணரினும் தமிழ் நாட்டிற்குரிய பேரரசர் இம்மூவரே தான்; இவரையன்றி வேறு பேரரசரிலரென வரையாக வுணரான். (அவனுக்குத் தமிழ் நாட்டிற்குரிய பேரரசர் இம்மூவரேதான் எண்ணும் துணிவுணர்ச்சி யுண்டாகா தென்பதாம்) வரையறையாக உணர்வதற்கு தமிழ் நாட்டிற்குரிய பேரரசர் சேர பாண்டிய சோழர் என்னும் மூவர் என மூன்றென்னுமெண்ணேடு சேர்த்தே கூறல்வேண்டும். அதுபோல அவை திரவியம், குணம், கருமம், சாமானியம், விசேடம், சமவாயம், அபாவம் என எழு பதார்த்தங்கள் எனக்கூருது அவை திரவியம், குணம், கருமம், சாமானியம், விசேடம், சமவாயம், அபாவம் என்னும் பதார்த்தங்கள், என்றுமட்டுங் கூறினல் இவையேழும் பதார்த்தங்கள் எனவுணரினும் பதார்த்தங்கள் ஏழேதான் என்னும் வரையறை பெறப்படாது. வரையறை பெறப்படுவதற்கு அவை, திரவியம், குணம், கருமம், சாமானியம், விசேடம், சமவாயம், அபாவம் என ஏழுபதார்த்தங்கள் என்று ஏழு என்னுந் தொகையோடு கூட்டியே மொழிதல்வேண்டும் என்க.

வி௵:—எட்டாவது ஒரு பதார்த்தமில்லை ஏழு பதார்த்தங்கள் தானுண்டு என்பதற் காகத்தானே ஏழு என்னுந் தொகையோடு சேர்த்துக்கூறல்வேண்டும். எட்டாவது ஒரு பதார்த்தமிருந்தாற்றனே (அது இல்லாதபோழ்து) அது இல்லையென்னும் அறிவுண்டாகும். ஒருபொருளின் உண்மையறிவிருந்தால் அதனின்மையறிவுமுண்டாகும். குதிரைக்கொம்பில்லை அதனல் குதிரைக்கொம்பில்லை என்று வழங்கலுமுணர்தலுமில்லை விலங்கினங்கட்குத் துறக்கத்தினுண்மையறிவில்லை. அதனலவைக்கு அத்துறக்கத்தினின்மை யறிவுமில்லை. குருடனிரவில் உடுவை யுணர்வதில்லை அதனல் அவன் பகலில் உடுத்

ஒருபொருளினுண்மை யறிவிருந்தாற்றன் அதனின்மை யறிவுண்டாகும் என்பது தருக்க நூலார் துணிவு.

துறக்கம்—தேவருலகு. உடு—வான்மீன்.

தோன்றவில்லையென்றுணர்வதுமில்லை. அதனால் எட்டாவது பதார்த்தமில்லை ஏழு பதார்த்தங்கள் தானுண்டு என்பதற்காக ஏழு என்னுந் தொகையோடு கூட்டிக் கூறல் வேண்டுமென்பது பொருந்தாது. இன்மையென்பதே உண்மையென்பதையு நினைப்பூட்டுமே. எதிர்மறையென்றால் உடன்பாட்டை நினைப்பூட்டுகின்றதா இல்லையா?

விடை :—பருப்பு, மிளகு, உப்பு, மஞ்சளிவை வடைகள் என்றால் இவைகளாலாகியன வடைகள் எனவுணருமன்றி இவையொவ்வொன்றும் வடையாமென்றுணரான். அதுபோல அவை திரவியம், குணம், கருமம், சாமானியம், விசேடம், சமவாயம் அபாவம் என்னும் பதார்த்தங்கள் என்றால் இவைகளாலாகியன பதார்த்தங்கள் எனவுணர்வானன்றி இவை யொவ்வொன்றும் பதார்த்த மென்றுணரான். மெய், வாய், கண், மூக்குச் செவிகள் ஐம்பொறிகள் என்று கூறினவிடத்து 'ஐந்து' என்னுந் தொகையைப் பொறிகளுக் கடையாக்கியதால், மெய், வாய் முதலியனவொவ்வொன்றும் பொறியாம். (ஒவ்வொன்றிலும் பொறித் தன்மை யடங்கியுளது, இருக்கின்றது) எனக் கேட்டோன் உணர்வான். அதுபோல அவை, திரவியம், குணம், கருமம், சாமானியம், விசேடம், சமவாயம், அபாவம் என ஏழு பதார்த்தங்கள் என ஏழு என்னுந்தொகையைப் பதார்த்தங்கள் என்பதற்கு அடையாக்கிக் கூறினால் கேட்டோன் திரவியம் குணம் கரும முதலிய ஒவ்வொவ்வொன்றும் பதார்த்தந்தான் (ஒவ்வொன்றிலும் பதார்த்தத் தன்மை யடங்கியுளது) என உணர்வான். அதனால் திரவிய முதலிய வொவ்வொன்றும் பதார்த்தந்தான் (திரவிய முதலிய வொவ்வொன்றிலும் பதார்த் தன்மை யடங்கியுளது.) என்பதற்காக ஏழு என்னுந் தொகையோடு சேர்த்துக் கூறல்வேண்டுமென்க.

வினா:—அங்ஙனமாயின் நெருப்பின்கண்ணே இரசமணியை வைத்தபொழுது சுடுதற்குக் காரணமான ஆற்றல் அழிவதால் நெருப்புச் சுடுவதில்லை. (நெருப்பில் சூடு தோன்றுவதில்லை.) மணி நீங்கினபொழுது ஆற்றல் தோன்றுகிறது, அப்பொழுது நெருப்புச் சுடுகின்றது (நெருப்பிற் சூடு தோன்றுகிறது)

இங்ஙனம் சுடுதற்குக் காரணமான ஆற்றலென்னும் ஒரு பதார்த்தமிருக்க அதனை நீக்கிவிட்டு அவை திரவியம் குணம் கருமம், சாமானியம், விசேடம், சமவாயம், அபாவம் என ஏழு பதார்த்தங்கள் எனக் கூறியது ஏன்? ஆற்றல் என்பது திரவிய முதலிய வொன்றிலு மடங்குவதுமன்றே?

விடை:—சூட்டிற்கு இடையூறில்லாத நெருப்பே காரணமாமன்றி ஆற்றல் காரணமாகாது. சூட்டிற்கு வேறுகாரணமில்வழியன்றே ஆற்றலைக் கற்பிக்கவேண்டும். அங்ஙனம் கற்பித்தாலும் பல ஆற்றல்கள் உளவாக ஒப்புதல் வேண்டிவரும். ஏனென்றால் மணிசேர்ந்தவிடத்து முன்னிருந்த ஆற்றல்அழியும்; மணி நீங்கினவிடத்து ஒரு ஆற்றல் உண்டாகிறது. இப்படியே மணியினது சேர்க்கையாலும் அதன் நீக்கத்தாலும் பல ஆற்றல்கள் வெவ்வேறு தோன்றுவதால் என்க. இங்ஙனம் அழிந்தும் தோன்றியும் பேசப்படும் ஆற்றல்கள் பலவெனவே ஆற்றல்கள் அழிந்தபிறகு உண்டாகும் பின்னபாவங்களும் (அழிவுபாட்டபாவங்களும்) அவ்வாற்றல் தோன்று முன்னுள்ள முன்னபாவங்களும் பலவுளவென ஒப்புதல் வேண்டிவரும். இவையெல்லாவற்றையும் ஒப்புவதைவிட இடையூறில்லாத நெருப்பே சூட்டிற்குக் காரணமென்றலே பொருந்துவதாகும். அதனால் அவை திரவியம், குணம், கருமம், சாமானியம், விசேடம், சமவாயம், அபாவம் என ஏழு பதார்த்தங்கள் எனக் கூறியது பொருத்தமானதே யென்க. ("பொருள் குணம் கருமம் பொதுச் சிறப் பொற்றுமை யின்மையு டன்பொருளேழென மொழிப")

பின்னங்குடிச் சுப்பிரமணியசாத்திரியார்
தொல்காப்பியச் சொல்லதிகார வாராய்ச்சிக்

# குறிப்புரையும் மறுப்பும்

திரு. ம. நா. சோமசுந்தரம் பிள்ளையவர்கள்,
தமிழ்ப்புலவர், மன்னார்குடி.

(முற்றொடர்ச்சி துணர் 9. மலர் 10. பக்கம் 383.)

மறுப்பு 38 தொடர்ச்சி.

கருமகருத்தா என்னும் இலக்கணத்தைப் பற்றி.

'செயப்படு பொருளைச் செய்ததுபோலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கினுள் உரித்தே' என்னும் நன்னூற் சூத்திரத்திற்குச் சங்கர நமச்சிவாயர் கூறிய உரை போலியுரை யென்பது.

இந்நன்னூற் சூத்திரத்தையும்,
'செயப்படு பொருளைச் செய்ததுபோலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கியல் மரபே.' என்னும் தொல்காப்பிய முதனூற் சூத்திரத்தையும் ஒப்ப நோக்கின், இருநூல் ஆசிரியரும் கருதிய இலக்கணம் ஒன்றே யென்பதும் அவ்விருவர் கருத்தும் எவ்வாற்றானும் தம்முள் மாறுபடுவன வல்லவென்பதும் தெற்றெனவிளங்கும். தொல்காப்பியவுரையாசியர் எல்லாருமேயன்றி தேய்வப்புலமை நக்கீரனாரும், சிவஞான முனிவரும், பேராசிரியர், பரிமேலழகர், முதலிய ஏனை நூல் உரையாசிரியரும் இலக்கண விளக்கம் பிரயோக விவேகம் இலக்கணக்கொத்து முதலிய நூலாரும், 'இல்லம் மெழுகப்பட்டது' 'சோறு அடப்பட்டது' 'இல்வாழ்வான் எனப்படுவான்.' என்றாற்போலச் செயப்பாட்டு வினைச்சொல் வாய்பாட்டான் ஓதற்பாலன, அச் செயப்பாட்டு வினைச்சொற்

பொருண்மையை உணர்த்தும் படுவிகுதிதொக்கு 'இல்லம் மெழுகிற்று,' 'சோறு அட்டது,' 'இல்வாழ்வான் என்பான்' எனவரும் மரபு வழுவமைதியே அத்தொல்காப்பியச் சூத்திரத்தின் கருத்தாகக்கொண்டு தத்தம் உரைகளிலே குறித்தார்கள். அவ்வாறாகவும், நன்னூற்கு விருத்தியுரை யெழுதிய சங்கர நமச்சிவாயர் இந்நன்னூற் சூத்திரத்திற்கு அவ்வுரையாசிரியர் எல்லாருடைய கருத்திற்கும் மாறாகப் புதுவதாக உரை கூறினர். அது வருமாறு:—

'செயப்படு பொருளை வினைமுதல்போல வைத்து அதன் மேல் அவ்வினைமுதல் வினையேற்றிச் சொல்லுதலும் வழக்கிடத்து உரித்தாம்.' எ. று.

'வரலாறு:—இம்மாடு யான் கொண்டது. இச்சோறு யான் கொடுத்தது. இவ்வெழுத்து யான் எழுதியது—எனவரும்.'

'உம்மையால் கருமத்தைக் கருத்தாவாக இவ்வாறு கூறுதலேயன்றிக் கருவி நிலஞ் செயல் காலங்களைக் கருத்தாவாகக் கூறுதலும் அமையும் என்பது பெற்றாம்.' இவ்வெழுத்தாணி யான் எழுதியது. இவ்வீடு யான் இருந்தது. இத்தொழில் யான் செய்தது. இந்நாள் யான் பிறந்தது—எனவரும்.

'இனி, இல்லம் மெழுகிற்று, எழுத்தாணி யெழுதிற்று என உதாரணம் காட்டுவாரும் உளர். இல்லம் மெழுகிற்று என்பதோர் வழக்கின்மையானும் நடத்த நடந்த தேரினைப் போல ஒருவன் எழுத எழுதியது எழுத்தாணியாதலின் அஃது அதன் தொழிலேயன்றி ஒருவன் தொழிலன்று ஆகலானும் அவை காட்டாகா என்க' எ-று.

இவ்வுரையின்படியே இவர்க்குப் பிற்பட்ட காண்டிகையுரையாசிரியர் ஆறுமுகநாவலர் முதலியோரெல்லாம் உரையெழுதிச் சென்றார். சங்கரநமச்சிவாயர் நன்னூற்கு அரியவுரையெழுதிய பேரறிவாளர் ஆயினும், இச்சூத்திரவுரையில் கூறியது மாத்திரம் தம் ஆசிரியர் கருத்தொடும் மாறுபட்டது. 'நூலுரை போதகாசிரியர் மூவரும் முக்குணவயத்தான் முறைமறந்தறைவரே' என்னும் தம் ஆசிரியர் கூற்றுக்குத் தாமும் சான்றாயினர்; அதுவியப்பே. இப்பால்,

இருவர் மாறுகோள் ஒருதலை துணிவு என்னும் மதம்பற்றி யாம் இவ்வுரையினை ஆராயப் புக்குழி, இவரது உரையிலே கண்ட பெரும் பிழைகள் சில. அவற்றுள்,

1. வினையாலணையும் பெயரது இலக்கணத்தை இவர் நன்கு ஆராயாமை.

2. எழுவாய் பயனிலை முடிபு நன்குணர்ந்து கொள்ளாமை.

இவர் உரையில் காட்டிய உதாரணங்களிலே, 'கொண்டது' 'கொடுத்தது', 'எழுதியது', 'இருந்தது', 'செய்தது', 'பிறந்தது' என்னும் இவையெல்லாம் வினையாலணையும் பெயர் வாய்பாட்டில் வந்தனவே. ஒன்றேனும் வினைமுற்று, வினையெச்சம், பெயரெச்சம் ஆகிய வாய்பாட்டில் காட்டடப்படவில்லை. இனி,

வினையாலணையும் பெயரது இலக்கணம்:—இஃது ஓர் அரிய இலக்கணம். நன்னூல் அளவே பயின்றார்க்கு இஃது உணரலரிது. வினையாலணையும் பெயர் என்பது நன்னூல் வழக்கு. வினைப்பெயர் என்பது தொல்காப்பிய வழக்கு. பிரயோக விவேகம், இலக்கணக்கொத்து முதலிய நூல்வழக்கு வினைமுற்றுப் பெயர் என்பது.

வினையாலணையும் பெயர் (வினைப் பெயர்) என்பது வினையடியாகப்பிறந்த பெயர் என்பதாம். இது வினைச்சொற் பாகுபாடாகிய செய்பவன், கருவி, நிலம், செயல், காலம், செய்பொருள், என்னும் ஆறனுள்ளும் அடங்கும். ஏனைப் பெயரோ பொருளிடக்காலம் சினை குணம் தொழில் என்னும் பாகுபாட்டினுள் அடங்கும். சங்க நூல் உரையாசிரியர் பலரும் இவ்வினையாலணையும் பெயர் வகையினைப்பற்றி ஆங்காங்கு விளக்கிச் சென்றனர். தொல்காப்பிய வுரையாசிரியருள் நச்சினார்க்கினியரும் 'பெயர் நிலைக் கிளவி காலந்தோன்றா—தொழினிலை யொட்டும் ஒன்றலங் கடையே' என்னும் சூத்திரவுரையுள் இதனைச்சிறிது விரித்துணர்த்தினர். 'உண்டவன்' 'உண்பது' என்பன வினைமுதன் மேல் நின்ற வினைப்பெயர் எனவும், 'அவன் ஏறிற்றுக் (ஏறியது) குதிரை, கொலைவர் கொடுமரந் தேய்த்தார்'.

யான் சொன்னவன் (இவன்) 'உண்பவை நாழி.' என்பன செயப்படுபொருண்மேல் நின்ற வினைப்பெயர் எனவும் கூறிப் பிறவாறு வருவனவும் காண்கவென்றார். ஈண்டு வினைமுதன்மேல் நின்ற வினைப்பெயர் எனவும் செயப்படுபொருண்மேல் நின்ற வினைப் பெயர் எனவும் உரைக்கப்பட்டதன் கருத்தை உய்த்துணர்ந்து கொள்ளல்வேண்டும். உண்பவன் உண்பது என்பவை முடிக்கும் சொல் எதனையும் நோக்காமல் (எனவே ஓர் வாக்கிய நிலைமை யிலே யன்றித் தனியாக நின்ற நிலைமையிலே) உண்டல் வினைக் குக் கருத்தாவாகிய ஒருவனையும் ஒரு விலங்கினையும் குறித்தன. 'அவன் ஏறிற்றுக் குதிரை' 'கொலைவர் கொடுமரம் தேய்த்தார்' 'யான் சொன்னவன் இவன்', 'உண்பவைநாழி' என்புழி ஏறுதல்' தேய்த்தல், சொல்லுதல், உண்ணுதல் ஆகிய வினைகளுக்குச் செயப்படுபொருள் யாவையோ அவையே குறிக்கப்பட்டன, ஈண்டு 'ஏறிற்று' 'சொன்னவன்' 'தேய்த்தார்' 'உண்பவை. என்பன வினையாலணையும் பெயர் இலக்கணத்தால் செயப்படு பொருண்மேல் நின்றவாயினும் தொடர்மொழி (வாக்கிய)நிலைமை யிலே முதல் வேற்றுமைக் கருத்தாவாக நிற்றல் காண்க. இனி இவையே உண்பவற்றை உண்பவற்றால் என்றாற்போலப் பிற வேற்றுமை யுருபுகளை யேற்று நிற்கும் நிலையையும் அறிந்து கொள்க.

பிரயோக விவேக நூலார் இவ்வினையாலணையும் பெயராது இலக்கணத்தை நன்குணர்ந்து,

" திருநுதலாய் கருத்தா வாதியாதல் இச்சேர்ந்திறுதல்
ஒருபெயர்ச் சொல்லெனச் சுப்பேறிநீங்கல் உருபுபெறல்
பொருவரும் ஈற்றயற்கே ரூபபேதம் பொருந்தலொடு
வருவினைமுற்றுப் பெயர்தாம் கிருதந்தம் வண்டமிழ்க்கே."

என்னும் காரிகையில் வகைப்படுத்தி யோதினர். இவர் செய் பவன் கருவி நிலஞ்செயல் காலம் என்னும் அறுவகையுள் காலம் ஒன்றனையும் ஒழித்து ஏனை ஐந்தன்மேலும் வினையாலணையும் பெயர் வருமென்பர். அவர் அவற்றிற்கு உதாரணம் காட்டிய வாறு :—

(1) கருத்தாவின்மேல் நின்ற வினைமுற்றுப்பெயர் :—'தார் தாங்கிச் செல்வது தானே' 'வினையே செய்வது.'

(2) செயப்படு பொருண்மேல் நின்றவினைப்பெயர்:—'உடுப்ப தூஉம் உண்பதூஉமின்றிக் கெடும்.' (உடுக்கப்படுவது உண்ணப் படுவது.)

(3) வினைமேல் நின்ற வினைமுற்றுப்பெயர்—'உறங்குவது போலும் சாக்காடுறங்கி விழிப்பது போலும்.' ஈண்டு உறங்கு வது விழிப்பது என்பன கருத்தாவின் மேல்நில்லாது உறங்குதல் விழித்தல் என்னும் வினைமேல் நின்றமை காண்க.

(4) கருவியின்மேல் நின்ற வினைமுற்றுப்பெயர்—'வேலன்று வென்றி தருவது மன்னவன் கோல்.' (தருங்கருவி)

(5) இடத்தின்மேல் நின்ற வினைமுற்றுப் பெயர்—'யாம் இருப்பது உறையூர்.' 'பற்றியார் வெல்வதரண்.' 'ஆற்ற விளை வது நாடு.' (இருக்குமிடம்)

இப் பிரயோக விவேக நூலார் கூறியபடியே இலக்கணக் கொத்து நூலாரும்,

'வினைமுற்றுப் பெயர் விரிக்குங் காலே
வினைமுதல் செயப்படு பொருளே கருவி
இடமே தொழிற்பெயர் இவ்வைந் தன்றியும்
............இன்னும் பலவகையென விளம்பினரே.'

என்னும் சூத்திரத்தில் ஓதினர். இவ்விரு நூலாரும் வடமொழி நூல் வல்லராதலின் அந்நூல் வழக்கில் இவ்வினையாலணையும் பெயரது இயல்பு விரிந்தமைந்தவாறே தமிழ்நூல் வழக்கினும் அமைந்திருத்தலைக் கண்டு இலக்கணம் விரித்து ஓதினர்.

சிவஞானபோதம் சூ. 4-2 திரோதகம் என்னும் வடமொழி மறைத்தலைச் செய்வது என்னும் பொருட்டாய் வினைமுதன்மேல் நின்ற வினைப்பெயர் என்று சிவஞானமுனிவர் கூறியதும் இவ் வரிய இலக்கணம்பற்றியே.

இனி இவ்வரிய இலக்கணப் பாகுபாடுகள் இயல்பாகவே தமிழ் வழக்கில் அமைந்திருப்பதனை அடியில்கண்ட உதாரணங்களாலும் எளிதின் அறிந்துகொள்க.

(1) ஊர்வன, பறப்பன, நீர்வாழ்வன—வினைமுதன்மேல் நின்ற வினையாலணையும் பெயர். 'பழிப்பன பகரேல்' என்பதும் அது.

(2) உண்பன, தின்பன, பருகுவன, நக்குவன—செயப்படுபொருண்மேல் நின்றவினைப்பெயர். 'ஆறுவது சினம்.' 'காப்பது விரதம்' 'கேளாரும் வேட்ப மொழிவதாம் சொல்' என்பதும் அது.

(3) கொட்டுவன, ஊதுவன, எழுப்புவன, எய்வன, எறிவன, வெட்டுவன, குத்துவன—கருவியின்மேல் நின்ற வினையாலணையும் பெயர்.

(4) ஓதுவதொழியேல்—வினைமேல் நின்ற வினையாலணையும் பெயர்.

(5) யாம் விளையாடுவது இச்சோலை—இடத்தின்மேல் நின்ற வினையாலணையும் பெயர். 'நாகமார்த்த நம்பெருமான் மேயது நள்ளாறே' (தேவாரம்) என்பதும் அது.

இனிக் காலத்தின்மேல் நின்ற வினையாலணையும் பெயரும் உண்டெனக் கொள்க. (உதாரணம்) நாழிகை அறுபது கொண்டது ஓர் நாள். வைகறைக்கும் நண்பகற்கும் இடைப்பட்டது எற்பாடு. இத்துணையும் விரிந்தது வினையாலணையும் பெயரது இலக்கணம்—இனி ஆராய்வது, சங்கர நமச்சிவாயர் காட்டிய

'இம்மாடு யான் கொண்டது' என்னும் தொடர்மொழி முடிபு.

இத்தொடர் மொழியில் வந்த, 'கொண்டது' என்னும் சொல் வினையாலணையும் பெயரே வினைமுற்று அன்றென்று முன்னமே குறித்தாம். பெயர்ச்சொற்குப் பொது விலக்கணம்

ஆவன வேற்றுமையுருபேற்றலும் பயனிலை கோடலும் காலந் தோன்றாமையுமாம். வினையாலணையும் பெயர்க்கு உருபேற்ற லும் பயனிலை கோடலும் காலந்தோன்ற நிற்றலும் இலக்கண மாம். 'இம்மாடு யான் கொண்டது' என்புழிக் 'கொண்டது' என்பது சொன்னிலைமையில் செயப்படுபொருண்மேல் நின்றது. தொடர்மொழி நிலைமையில் கருத்தாவாக நின்றது ஐ, முதலிய உருபு ஏலாமல் யான் என்பதும் கருத்தா (எழுவாய்). அது கொண்டது என்னும் வினையாலணையும் பெயருள் கொள் என் னும் வினை முதனிலையோடு முடிந்தது. அப்பால் 'யான் கொண் டது' என்பது ஒரு சொன்னீர்மை எய்தி, தானும் எழுவா யாக நின்று 'இம்மாடு என்னும் அடையடுத்த பெயர்ப் பயனிலை கொண்டுமுடிந்தது.' இவ்வாறன்றி, 'இம்மாடு என்பது எழுவாயாக நின்று 'யான் கொண்டது' என்னும் பெயர்ப் பயனிலை கொண்டு முடிந்தது எனினும் அமையும், 'ஆபல' என்புழிப்போல. அற்றேல், 'யான் கொண்டது' என்புழித் தொகையின்மையின், அஃது ஒரு சொன்னீர்மை எய்துதல் யாண்டையதோவெனின், (வேற்றுமைத் தொகை முதலிய) தொகையல்லாத தொடர்மொழியும் ஒரோவழி 'இரும்பு பொன்னாயிற்று' (பெயர் நிலைக்கிளவி காலந்தோன்ற) என்றாற் போல ஒரு சொன்னீர்மை எய்துதலுடைய வென்று 'எல்லாத் தொகையும் ஒரு சொன்னடைய' வென்னும் சூத்திரவுரையுள் சேனாவரையர் கூறிய வாற்றான் அமையும் என்க. திருக்கோவை யாரில் 'பாயினமேகலை' முதலிய சொற்றொடர்களை ஒரு சொன் னீர்மைப்படுத்தி முடிபு காட்டிய பேராசிரியர்க்கும் இதுவே கருத்துப்போலும்.

இனி, யான் என்னும் எழுவாய்க்கு முடிபு 'கொண்டது' என்னும் வினையாலணையும் பெயர் என்று கொள்ளின் இழுக் கென்னையோ? அதனைக் 'கொள்' என்னும் வினைமுதனிலையோடு முடித்துகாட்டுவ தென்னையோ? வெனின், நன்று வினாயினாய், எழுவாய் வேற்றுமைப் பெயர்க்கு முடிபு கூறிய

'பொருண்மை சுட்டல் வியங்கொள வருதல்
வினைநிலை யுரைத்தல் வினாவிற்கேற்றல்

பண்புகொள வருதல் பெயர்கொள வருதலென்று
அன்றியனைத்தும் பெயர்ப் பயனிலையே.' என்னும்

சூத்திரத்துள், வினையாலணையும் பெயரையும் அடக்கிப் பொது வகையால் 'வினைச்சொற்கோடல்' என்று ஓதாது 'வினைநிலையுரைத்தல்' என்று ஓதியதனால், ஆசிரியர்க்கு இவ்வாறு வினைமுதனிலையோடு முடித்துக் காட்டுதலே கருத்தாம் என்க. 'சாத்தன் காலொடிந்தான்' என்புழிச் 'சாத்தன்' என்பது முதல் எழுவாய். 'கால்' என்பது சினையெழுவாய். ஒடிதல் என்பது சினையின் வினையே; ஆயினும் கால் என்பது ஒடிந்தான் என்னும் முற்றுவினைபைக்கொண்டு முடிந்ததெனப்படாது. ஒடிந்தான் என்பது சாத்தன் என்பதற்குப் பயனிலையாக நிற்பக் கால் என்பது ஒடிந்தான் என்பதனுள் ஒடிதல் வினையோடு முடிந்ததெனவேபடும். 'சாத்தன் கண் பெரியன்' என்புழிக் கண் என்னும் சினையெழுவாய் பெரியன் என்னும் முதலெழுவாயை முடிக்குஞ் சொல்லுள் பெருமை என்னும் பண்பைக்கொண்டு முடிந்ததாம். இக்கருத்தானன்றே அப்'பொருண்மை சுட்டல்' என்னும் சூத்திரத்தில் 'பண்புகொள வருதல்' என்று ஆசிரியர் ஓதுவாராயினர்.

'உடல் சிறியர்' (மூதுரை) 'உறுகால் பிறர்க்கரியோன்' (கோவையார்) 'மனநல்லர்' (குறள்) என்பவற்றின்முடிபும் அது. இவ்வாறு சினையின் வினையென்று வேறுபிரித்து முடிபு கொள்ளாக்கால், இவற்றைச் சினையின் வினைமுதன்மேல் நின்றதென்னும் வழுவமைதி யிலக்கணத்தால் முடிப்பதும் கூடாதாம்.

'சாத்தன் உண்டான்' என்றாற் போலப் பயனிலை விதிவினைமுற்றாக உள்ளவிடத்து மாத்திரம், சாத்தன் என்னும் எழுவாய் உண்டான் என்னும் முற்று வினையைக் கொண்டு முடிந்தது என்னலாம். இதற்குத் தனிவிதி

'அவைதாம், தத்தங்கிளவி அடுக்குந வரினும்
எத்திறத்தானும் பெயர் முடிபினவே.' என்னும்

சூத்திரம். 'சாத்தன் உண்ணான்' என்புழி முற்றிநின்றதென்பதற்குரியதோர் வினையென்பதே இன்மையின், ஈண்டுச்சாத்தன்

என்னும் எழுவாய் 'உண்ணுன்' என்பதனுள் உண்ணுதற்ருெழி லோடு முடிந்ததெனப்படும்.

'வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது'
'வினையெஞ்சு கிளவிக்கு வினையும் குறிப்பும்
நினையத் தோன்றிய முடிபா கும்மே.'

'வினையின் ருெகுதி காலத் தியலும்' என்னும் சூத்திரங்களில் வந்த 'வினை' யென்பதெல்லாம் வினைச்சொல்லின் முதனிலையை குறித்தவாறு சேனாவரையர், சிவஞான முனிவர், பரிமேலழகர், பேராசிரியர், முதலியோர் உரைகளான் அறிக.

'சார்ந்து வரல்மரபின் மூன்றலங் கடையே.' என்பதனுள் சார்ந்து என்னும் வினையெச்சம் 'வரல்' என்னும் தொழிற் பெயரின் 'வா' என்னும் முதனிலையோடு முடிந்தது என்பது சூ. வி. சிவஞானமுனிவர் உரை.

'அலர் நாண ஒல்வதோ' (குறள்) என்புழி நாண என்னும் வினையெச்சம் ஒல்வது என்னும் தொழிற்பெயருள் ஒல்லுதற் ருெழிலோடு முடிந்தது.

'ஆகி-ஆகிய' (பரி-13) ஆகி யென்னும் வினையெச்சம் ஆகிய என்னும் பெயரெச்சத்துள் ஆதலோடு முடிந்தது. எ-து. பரிமேலழகர் உரை.

'நல்வினையுந் நயந்தந்தின்று' (கோவையார்) என்புழித் துப்புற என்னும் வினையெச்சம் தந்தின்று என்பதனுள் தருதல் என்பதனேடு முடிந்தது. எ-து. பேராசிரியர் உரை.

'வினைசார்பின மிடம்மேவி விளங்காப் பலபொருள் ஒரு சொல்' (நன்) என்புழி மேவியென்னும் வினையெச்சம் விளங்கா என்பதன்கண் முதனிலையோடு முடிந்தது. எ-து. சங்க-ர் உரை.

இவ்வாறன்றி எழுவாயை வினையெச்சம் பெயரெச்சம் வினையாலணையும் பெயர் தொழிற்பெயர் இவற்ருேடு முடித்துக் காட்டுவாரும் உளர். அஃதெல்லாம் ஒற்றுமை நயம் பற்றி உபசாரத்தால் கூறியதென்ருெழிக. 'சாத்தன் உண்டு சென்ருன்' என்புழிச் சாத்தன் என்னும் எழுவாயை உண்டு என்னும்

வினையெச்சம் முடிக்காமல், சென்றான் என்னும் வினைமுற்று முடிக்கும், நிலைவேறுபாடும் கண்டுகொள்க. எனவே, 'யான் கொண்டது' என்புழி யான் என்னும் எழுவாய் கொள் என்னும் முதனிலையோடு முடிந்து, அப்பால் 'யான் கொண்டது' ஒரு சொன்னீர்மையெய்தி, வேறோர் பயனிலையை அவாவி நின்றமை காண்க. அப்பயனிலைதான் 'இம்மாடு' என்பது.

'முனைவன் கண்டது முதனூலாகும்' என்பதற்கும் இம் முடிபு ஒக்கும்.

இனி, 'என்னால் கொள்ளப்பட்டது' என்பது 'யான் கொண்டது' எனவும், 'முனைவனால் காணப்பட்டது முதனூல்' என்பது 'முனைவன் கண்டது முதனூல்' எனவும் வரப்பெறுதலை இச்'செயப்படு பொருளைச் செய்ததுபோல' என்னும் சூத்திரத்தின் கருத்தாகக் கொள்ளாமோவெனின், கொள்ளாம். அவ்வாறு கொள்ளுதல் பிரயோக விவேகநூலார் கருத்தாம். அதுவும் பொருந்தாதென்று முன்னமே மறுக்கப்பட்டது. சங்கர நமச்சிவாயர்க்கும் அது கருத்தன்று; ஆகையால் அதுபற்றி ஈண்டு ஆராய்ச்சி வேண்டா.

இனி, சங்கர நமச்சிவாயர் இச்சூத்திரத்திற்குப் பொழிப்புரை கூறியவாறு:—'செயப்படுபொருளைக் கருத்தாவைப்போல வைத்து அதன்மேல் வினைமுதல்வினை யேற்றிக் கூறுதலும் வழக்கின்கண் உரித்தாம்' என்பது. இதுபற்றி ஆராய்வாம். இதுவே நன்னூலார்க்குக் கருத்தாயின், 'செயப்படு பொருளைச் செய்ததன் தொழிற்பட முடித்தனர் கிளத்தலும் வழக்கினுள் உரித்தே' என்று சூத்திரப்பொருள் இனிது விளங்க ஓதுவர். 'செய்ததுபோல' என்று ஓதியதனால் உதாரண வாக்கியத்துள் செய்த வினைமுதல் (சுதந்தர கருத்தா) வாராதென்பது போதரும். 'இம்மாடு யான் கொண்டது' என்புழி கொள்ளுதல் வினைக்குச் சுதந்தர கருத்தாவாகிய யான் என்பது அமைந்துள்ளது. ஆதலின் 'செய்ததுபோல' என்பது பொருத்தமில் கூற்றாம். 'செய்ததுபோல' என்பதற்கு 'கருத்தாவைப்போல வைத்து' எனப்பொருள் கொள்ளினும் 'அதன்மேல் வினைமுதல்

வினையேற்றிக் கூறுதலும்' என்பதற்குச் சூத்திரத்தில் சொல் அமைந்திலது. இனி, 'சாத்தன் கண்ணொந்தான்' என நோதல் ஆகிய சினையின் வினையை முதன்மேல் ஏற்றிக் கூறினாற்போல 'இம்மாடு யான் கொண்டது' என்பதும் முடிந்ததென்று கருதினார்போலும் எனின், அற்றேல், யான் என்னும் உயர்திணைச் சொல்லோடு மாடு என்னும் அஃறிணைச் சொல் ஒருங்குமுடிந்த வழுவமைதியாகும். ஆசிரியர் தொல்காப்பியனார்க்கு 'செயப்படுபொருளைச் செய்ததுபோல' என்னும் சூத்திரத்தால் அவ் வழுவமைப்பது கருத்தாயின், ஏனைவழுவமைப்போதிய கிளவியாக்கத்துள்ளே அச்சூத்திரத்தை வைப்பர். அவ்வாறன்றி அவர் வினையியலுள்ளே அச்சூத்திரத்தைவைத்து ஓதியவதனால் ஒரு வினைச்சொல் வாய்பாட்டாற் கூறவேண்டியதை வேறொரு வாய்பாட்டாற் கூறும் வழக்கு வழுவமைப்பதே அவர்க்குக் கருத்தாம். முதனூலாசிரியர் கருத்து அதுவாக வழி நூலாசிரியர்க்கும் அதுவே கருத்தாம். அதுவன்றியும் 'இல்வாழ்வான் என்பான்' என்றாற்போல வருவனவற்றிற்குச் சங்கர நமச்சிவாயர் இலக்கணவிதி காட்டினாரிலர். ஆதலின் எவ்வாற்றானும் கருமகருத்தா என்பது பற்றி அவர் கூறிய உரையெல்லாம் போலி யுரையென்பதும் சேனாவரையர் முதலியோர் கூறிய உரையே உரையென்பதும் துணிந்துகொள்க.

இனி, அவர் கருவிகருத்தா என்பதற்கு 'இவ்வெழுத்தாணி யான் எழுதியது' என்பதை உதாரணமாகக் காட்டிக் கூறியதும் பிறவும் அவ்வாறே போலியுரை யாதல் அறிக.

இனி, அச்சங்கர நமச்சிவாயர் உரையின்படியே காண்டிகை யுரையெழுதிய ஆறுமுக நாவலர் முதலியோர் உரையும் போலி யுரை யாதல் அறிக.

(தொடரும்.)

# திருந்திய கை எழுத்துக்கள்.



வீ. உலகவூழியன், தலைமைத் தமிழ்ப்பண்டிதர்,
நாட்டாண்மை உயர்கலைக்கழகம், நாமக்கல்.

திருந்திய கையெழுத்துக்கள் என்னும் இச்சொற்ருெடர் அழகிய கையெழுத்துக்கள் எனப்பொருள்படும். ஆயின், அழகிய கையெழுத்துக்கள் என்னும் பெயர் கொடுத்து எழுதலே அமையும். அஃதொழியப் பரிமேலழகர் தம் உரையகத்து எழுதுமாறு போலத் திருந்திய என்னும் சொல்ஒன்று எழுதி, அதற்குப்பொருள் எழுதி விளங்கவைத்தல் வேண்டா என வினவல் வேண்டா; ஏனென்ருல் எழுதத் தொடங்கிய காலத்தே அழகு வாய்க்கப்பெருமல் நாள் ஆக நாள் ஆகப், பழக்கம் கைவரலால் எழுதப்படும் எழுத்திற்குரிய இலக்கணங்கள் அமையச் செயற்கை யழகு பெற்ற எழுத்துக்களின் தன்மையழகினைக் குறித்தலால் அப்பெயர் இடப்படுவதாயிற்று. எனவே அச்சொற்ருெடர் பழக்கத்தால் திருத்தமுற்றமையான் அழகினவாய கை எழுத்துக்கள் எனப்பொருள்படும். அடிப்பட்டவாற்ருனன்றி மெல்ல மெல்ல நல்லொழுக்கத்தை மேற்கொண்டான் ஒருவனைத் திருந்தினுன் எனக் கூறுதலாலும் அறிக. அழகு என்னும் சொல் பொதுமையில் செயற்கை யழகினையும், இயற்கை யழகினையும், புலப்படுத்தி நிற்றல்போல் அன்றித் திருத்தம் என்னும் சொல் இயற்கை யழகினைப் புலப்படுத்துதல் இன்றிச்செயற்கையழகினையே புலப்படுத்திநிற்கும். அச்செயற்கை யழகுள்ளும் முன்னர் நேரிய முறையில் அமையாமற் பின்னர் நேரிய முறையைப்பெற்ற பொருளிடத்துக் காணப்படும் அழகினையே அச்சொல் குறிக்கும் தகுதியுடைத்து. 'நும்மகன் திருந்தினுனே?' என்னும் வழக்கினையும் 'இதனைத் திருத்து' 'திருந்தச்செய்' என்னும் வழக்கினையும் காண்க. திரும்பு என்னும் சொல் சென்ற நெறியின் மாறித் திரும்பு என்று பொருள்படுதலின், அச்சொல் திருந்து என்னுஞ்சொற்கு ஒரு புடையில் இனமாக நிற்றல் நுனித்து உணர்க.

எழுதுகோல் முதலியவற்ருல் எழுதப்படுவன எழுத்துக்களாயினும், கையெழுத்துக்கள் எனக் கூறியதற்குக் காரணம் எழுதுகோல் முதலியவைகளை இயக்கிக் கைஎழுதுவதற்கு வினைமுதலாய் நிற்கும் ஒற்றுமைபற்றி என்க.

சென்ற நூற்ருண்டுகளில் எல்லாம் தமிழர்கள் பனையோலை முதலியவற்றில் எழுத்தாணிகொண்டு எழுதினர். இஞ்ஞான்று எழுத்துக்கள் ஓலையில் எழுதப்படும் வழக்கம் அருகி ஒரோவிடத்துக் காணப்படுகின்றது. அஞ்ஞான்று எழுதப்பட்ட எழுத்துக்களுள் திருத்தமில்லாதனவற்ருல் நூல்களிலும் செய்யுள்களிலும் நேர்ந்த வழுக்களின் மிகுதியையும், அவற்ருல் நேர்ந்த குறைபாடுகளையும் நோக்கியே 'எழுதினுன் ஏட்டைக் கெடுத்தான்' என்னும் பழமொழி வழங்கப் படுவதாயிற்று.

எழுதுதற்குவேண்டிய இயற்கைகள் வாய்க்கப்பெற்ற இக்காலத்தில் எழுத்துக்களைத் திருந்த எழுதாமல் புறக்கணித்தல் பெரியதொரு பிழைபாகும். அழகிற் சிறந்த எழுத்துக்கள், எழுதுவோர்க்கும் படிப்போர்க்கும் மகிழ்ச்சியை உண்டாக்கி அத்தொழில்களைப் புரியுமாறு உள்ளத்து ஊக்கம் அளித்தலால், எழுத்துக்களைத் திருந்த எழுதுதல் சிறப்பாக வேண்டப்படுவதொன்று. மகிழ்ச்சியை உண்டாக்கி ஊக்கி அறிவை வளம்படுத்துவன விழுமிய பொருள்களேயாதலின் எழுத்துக்களைத் திருந்த எழுதுவதால் பெரும் பயன் இன்று எனலாம். அவ்வாறு அன்று. விழுமிய பொருள்கள் அமையப்பெருத சொற்களை இன்னேசை அமையக் கூறியவழி அவையிற்றைக் கேட்போர்க்குச் செவிப்புலன் வாயிலாக அவை உள்ளத்து ஓராற்ருல் மகிழ்ச்சியுண்டாக்கல் போலவும், மக்கட்டன்மைக்குரிய கல்விச் சிறப்பு முதலிய இல்லாரிடத்துக் காணப்படும் புறஅழகு, அவர்தம் கல்வியறிவு முதலிய சிறந்த பண்புகளை அறிதற்கு முன்னர் அவரை நோக்குவார் உள்ளத்துக் கட்புலன் வாயிலாக இனிமை பயந்து ஓராற்ருன் மகிழ்ச்சியூட்டல் போலவும், சிறந்த பொருட்செறிவில்லாத சொற்கள் அமைய எழுதப்படும் திருந்திய கை எழுத்துக்களும் பின்னர் இன்னுவாய்த் தோன்றினும், தோற்ற

மாத்திரையில் நோக்குவாருள்ளத்துக் கட்புலன் வாயிலாக இன்பமும் மகிழ்ச்சியும் அளித்து நிற்கின்றன. சான்றோர் நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழிலும் நலமும் சிறப்புடையன ஆகா என்றார். ஆதலின் நீர்காட்டிய இவ்வுவமைபொருத்தமின்று எனின், நோக்குவாரை அவை முதற்கண் கவர்தலை அவ்வாசிரியர் விலக்கினாரல்லர்; உடன்பட்டனர்; ஆதலால் அக்கவற்சி அவைகட்கு உண்மை, ஒருதலை எனவே எடுத்துக் காட்டிய உவமை பொருத்தமுடையதே என்க. நன்பொருள் சான்ற சொற்களை இன்னா முறையாற் கூறின் அவை கடுஞ்சொற்களாகக் கருதப்பட்டுக் கேட்போர்க்கு இனிமை பயவாவாய் இன்னாமையுறுத்தல் போலத், திருத்தம் வாய்க்கப் பெறாத கை எழுத்துக்களால் ஆக்கப்படும் சொற்கள் பொருட்சிறப்புடைய வேனும் அவை காண்பார்க்கு இன்னாவாம் என்க.

(தொடரும்.)



# தமிழ்ச்செய்திகள்.



கரந்தைத் தமிழ்ச்சங்கம்:—சித்திரைச் சதய நன்னாளாகிய 1934 மே 8 தேதியன்று திருநாவுக்கரசு நாயனாரின் திருவிழா நிகழ்ந்தது. அதுகாலை சென்னை, திருவாளர். வித்துவான் T. P. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் M.A., B.L., அப்பரடிகளின் சமயத்தொண்டின் சிறப்புகளையும், அவர் அருண்மொழிகளின் மாண்புகளையும் அமிழ்தினுமினிய சொற்பொழிவால் விளக்கினார்கள். சைவப்பணியும் தமிழ்ப்பணியுமே தமது வாழ்க்கைப் பயனாகக்கொண்ட கோயமுத்தூர், திருவாளர், C. K. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் B. A., தலைமையிருந்து விழாவைச் சிறப்பித்தனர். இவ்விழாவை நடத்துதற்கான பொருட்செலவில் பெரும் பகுதியைக் கொடுத்துதவிய அன்பர் திரு. M. குமரசாமி பிள்ளை அவர்கட்கு சங்கத்தின் நன்றி உரியதாகும்.



**மேலேச்சிவபுரி சன்மார்க்க சங்கம் :—** தமிழ் நாட்டிலுள்ள தமிழ்ச் சங்கங்கள் யாவற்றினும் இது தலை சிறந்தது. மதுரைத் தமிழ்ச் சங்கத்தினரால் நடத்தப்பெறும், பிரவேசம், பால பண்டிதம், பண்டிதமாகிய தேர்வுகட்கு இக்கலாசாலையினின்றும் ஆண்டுதோறும் மாணவர்கள் அனுப்பப்பெறுகின்றனர். இச் சங்கந் தோன்றுதற்குக் காரணரான திருவாளர். பண்டிதமணி, கதிரேசன் செட்டியார் அவர்கள் இச்சங்கத்தின் உயிர் பேர விருந்து வடமொழி நூல்களாகிய சுக்கிரநீதி, மிருச்சகடிகம் ஆதியவற்றை செவ்விதாக மொழி பெயர்த்து தமிழ்மொழியை அணிபெறச் செய்துவருந் தொண்டு நன்றியுடன் போற்றத் தகுவது, கடந்த இருபத்தைந்தாண்டுகளாக அரும்பணிஆற்றி வரும் இச்சங்கம் 1934 மே 8, 9, 10 தேதிகளில் திருவாளர், மகாமகோபாத்திய, டாக்டர், உ. வே. சாமிநாத ஐயர் அவர்களின் தலைமையில் 'வெள்ளிவிழா' எடுத்துச் சிறப்பித்தது யாம் புகழத் தக்கசெயலாம். தமிழறிஞர்களின் அருமைப் பேருரைகளும், தமிழன்பர்களின் கூட்டமும் அன்பர்களை இன்பத்தில் திளைக்கச் செய்தன. இச்சங்கத்தின் மாண்புற்ற தலைவர். திருவாளர். வ. பழ. சாமிநாதன் செட்டியார் அவர்களும், அவர்களின் த்ம்பிமார்களும் ஊண் உறக்கமும் இன்றி அயராத அன்புடன் விருந்தினரை உபசரித்த சிறப்பும், தனது உடல் பொருள் ஆவி அனைத்தையும் சங்கத்தின் திருப்பணிக்கு உரியதாக்கி கண்ணினைக் காக்கும் இமையினைப் போல் சங்கத்தைப் புரந்துவரும் தலைவரவர்களின் மாண்பும் தமிழுலகு புகழுதற்குரியனவாம்.



**சென்னைப் பல்கலைக் கழகம் :—** இக்கழகத்தினர் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய திராவிட மொழிகளில் மின்சாரம் (Electricity) சுகவழி (Hygiene and Public Health) தாவரத்தின் உயிர் வாழ்க்கை (Plant Life) கிராமம் புதுக்குதல் (Rural reconstruction) தமி இயங்கிகளும், அவற்றூற்கொண்டுய்த்தலும் (Motors and Motor Transport) உடல்நூல் (Physiology) ஆகிய பொருள்களில் ஏதேனும் ஒன்றுபற்றி எழுதப்பெறும் நூல்களில் சிறந்த தொன்றற்கு

மொழியொன்றிற்கு ரூபாய் 750 ஆக இக்கழகத்தின் ஆட்சி சபையினரால் 1937 சனவரி மாதத்தில் பரிசு வழங்கப்பெறும் என்ற விளம்பரம் 1934 ஏப்ரல் 8 தேதி இந்துப்பத்திரிகையில் வெளிவந்திருக்கிறது. பரிசின் நிபந்தனைகளாவன :—

1. பரிசு விரும்புவோர் தமது நூல்கள் ஒவ்வொன்றிற்கும் ஆறு பிரதிகள் வீதம் கழகப்பதிவாளர் (Registrar) இடம் 1936 அக்டோபர் 1 தேதிக்குள் சேர்ப்பிக்க வேண்டும்.

2. பரிசுத் தேதிக்கு ஆறுமாதங்கள் முன்னரே பதிப்பித்து வெளியிடப்பட்ட முற்றுப்பேறடைந்த நூல்களையே பரிசுக்குரியனவாமெனக் கருதப்பெறும்; பதிப்பின் வனப்பும், கட்டழகும் மதிக்கப்பெறும். கலைநூல் வல்லார் ஒருவரும் மொழி வல்லார் ஒருவரும் சேர்ந்து இயற்றிய நூலும் பரிசுக் குரியதாகும்.

3. சென்னைப் பல்கலைக் கழகத்தின் அதிகார எல்லைக் குள்ளிருப்பவர்களே பரிசு பெறுதற்குரியவராவார்.

4. தாம் அனுப்பும் நூல்கள், பரிசுக்கோ பட்டத்திற்கோ தம்மால் முன்னொருகால் எங்கும் அனுப்பப்பட்டனவல்லவென பரிசு விரும்புவோர் உறுதிமொழி அனுப்பவேண்டும்.

5. சிறப்பொப்புமைபற்றி பரிசினைப் பகிர்ந்து கொடுக்கவும், சிறப்பின்மைபற்றி பரிசினை மறுக்கவும் ஆட்சிக் கழகத்தினர்க்கு உரிமை உண்டு.

கலைநூல்களை நாட்டுமொழிகளில் வெளியிடச் செய்விக்கும் எண்ணம் ஒன்றரை நூற்றுண்டுகள் கழிந்த பின் பேனும் இப் பல்கலைக் கழகத்தினர்க்குத் தோன்றியதுபற்றி மகிழ்கின்றேம். ஆனல் பரிசுக்குரிய விதிகளை நோக்க இதுபோலி விளம்பரமெனத் தோற்றுகிறது. ஆட்சிக் கழகத்திலிருப்பவர்கள் பேரறிஞர்களாகையால் வேலையின் அருமை தெரியாதவர்கள் என்பதற்கில்லை. மூன்றுண்டுகட்கு முன்னெழுதி, கண்கவர் வனப்புடன் நூலைப் பதிப்பது எத்துணை அருமை. இதற்காம்

பொருட் செலவென்ன? பரிசு பெற்ருல் பெறலாகும் ஊதியம் என்ன? பெருவிடில் வரும் இழப்பென்ன? இவ்வருமைப் பாடுகளை உய்த்துணரின் கலைவல்லார் எவருமே இப்பணியை மேற்கொள்ளார் என்பது ஒருதலை. இவ்விளம்பரத்தினுல் ஏதேனும் நற்பயன் விளையவேண்டுமென்பது ஆட்சிக்கழகத்தின் கருத்தெனில் நல்ல நூல்களை எழுதச்செய்து அவற்றுள் சிறந்தனவென்று தாம் தேர்ந்துகொள்ளுவனவற்றைப் பல்கலைக் கழகத்தினரே பதிப்பித்துக் கோடல் வேண்டும்.



# மதிப்புரை.



கோங்குமலர் :—இது கோவைத் தமிழ்ச்சங்கத்தின் திங்கள் வெளியீடு. செய்யுட்பகுதி, சரிதப்பகுதி, கலைப்பகுதி, சமயப் பகுதி, ஆராய்ச்சிப்பகுதி என்ற பல பகுதிகளாய் வகுத்து, தமிழ்ப்புலமை மிக்கோரால் எழுதப்பெறும் கட்டுரைகளைக் கொண்டு மிளிர்வது, தமிழ்த்துறையில் அடிப்பட்டு அரிய தொண்டினை ஆற்றிவரும் திருவாளர்கள் C. K. சுப்பிரமணிய முதலியார் B.A., அவர்களும், இராவ்சாகேப் C. M. இராமச் சந்திரஞ்செட்டியார் B. A. B. L., அவர்களும், இதனை நடத்தும் பொறுப்பாளிகளா யிருத்தலே இது வளனுற நிலவுமென் பதற்குரிய சான்றும். தமிழன்பர் அனைவரும் இதனைப் படித்துப் பயனுற வேண்டுமென்ற கருத்தினுல் இதன் ஆண்டுக் கட்டணம் ரூபாய் 1—8—0 ஆக ஏற்படுத்தியிருக்கின்றனர்.



உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத்
திங்கள் வெளியீடு.

துணர்-ம } பவ—வைகாசி. { மலர் - உ.

க. தேம்பாவணி 41
திரு. வித்துவான்
ஔவை. சு. துரைசாமிப்பிள்ளையவர்கள்,
உ. திருந்திய கை எழுத்துக்கள் 49
திரு. வீ. உலகவூழியர்,
ங. பொருளின் அமைப்பு 53
திரு. அ, சீநிவாசாச்சாரியாரவர்கள் B A., L.T.,
ச. 'இலக்கியம்' 'இலக்கணம்' 60
பண்டித, ஞா. தேவநேயப்பாவாணர்,
ரு. அஜந்தாவும் குடைவரைக் கோயில்களும் 71
கோவை. திரு. சி. கு. நாராயணசாமி முதலியார்
சு. சென்னைமாகாணத்தமிழர்மாநாட்டின் அறிக்கை 81
எ. வாழ்த்துப்பா 89
அ. வரவேற்புரை 90
திரு. கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் M.A., M.L.,

பொழிற்றொண்டர், த. வே. உமாமகேசுவரம் பிள்ளை.

தஞ்சைக் கூட்டுறவுப் பதிப்பகம், கரந்தை.



இசைத் தமிழ்ச் செல்வர்,

திருவாளர்,

தீ. இலக்குமணப் பிள்ளையவர்கள் B. A.,

திருவனந்தபுரம்

உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு

| துணர் ம | பவ, வைகாசி | மலர் உ |
|---|---|---|

உ

## தேம்பாவணி.



திரு. வித்துவான். ஔவை. சு. துரைசாமிப் பிள்ளையவர்கள்,
தலைமைத் தமிழாசிரியர், போர்டு உயர்தரக்கலாசாலை, திருவத்திபுரம்.



தேம்பாவணியென்பது தமிழின்கண் விளங்கும் இலக்கிய நூல்களிற் சிறப்புடை நூல்களுள் ஒன்றாகும். இதனை யியற்றியவர் மேனாட்டவருள் தமிழ்ப்புலமை நிறைந்தபெரியார்களுள் ஒருவராகிய வீரமாமுனிவர் என்பவராவர். இவருடைய இயற்பெயர் கான்ஸ்டாண்ட்டினஸ் பெஸ்ச்சி என்பது (Constantinus Beschi), இவர் பதினேழாம் நூற்றாண்டின் பிற்பகுதியினும், பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியினும் வாழ்ந்தவர். இவருக்குத் தைரியநாத சுவாமியென்னும் ஒருபெயருண்டு.

ஒருவர் தம் தாய்மொழியல்லாத பிறமொழிகளைக் கற்பராயின், அவர் அதனைக் கற்குமிடத்து அம்மொழியிலே வழுவற நினைத்தலும், நினைத்தவற்றை வழாது உரைத்தலும் செய்யக் கூடிய அளவில் கற்பதே அக்கல்வியின் பயன் என்று அறிஞர்

கூறுப. அம்மொழியின்கண் உள்ள நூல்கள் பலவற்றையும் படித்தாலும், அந்நினைத்தல் உரைத்தல்களைச் செய்யாவழி, அப்படிப்புபயன் தரும் சிறப்பிற்றன்று என்பதும்தானே போதரும். ஒருசாரார் ஒருவன் எத்துணை மொழிகளைக் கற்பினும், நினைவெழுவது அவன் இளமையிற்கற்ற தாய்மொழிக் கண்ணதேயாம் என்பர். இவர் கூறுவனவும் திண்ணிய பொருள்களை ஏதுவாகக் கொண்டுளவெனினும், முன்னையோர் கூற்றே பலர்க்கும் உடன்பாடென்பது யாவரும் அறிந்தது.

இதற்குச் சான்று பகர்வார் போலே வீரமாமுனிவர் என்னும் மேனாட்டுத் தமிழ்ப்புலவர், தம் முப்பதாம் வயதில் தமிழ் கற்கத் தொடங்கி, ஏறக்குறைய பத்தாண்டுகளில் தமிழ் நூல்கள் பலவுங்கற்று அம்மொழியிலேயே நினைத்தலும் உரைத்தலும் செய்ய வல்லுநராயினர். இச்செய்தி இவர் பாடியுள்ள தேம்பாவணியென்னும் சீரிய நூலுள் மணியெனத் திகழும் பாட்டுக்களால் உணரலாம். இந்நிலையெய்தப்பெறாது, திண்டாடி நிற்பவர் கூற்றுக்களை நாம் பத்திரிகை வாயிலாக நாளும் காண்கின்றோம். முனிவர் தமிழ்மொழிக்கண் மிக்க பயிற்சி பெற்றதன் பயனாகத் தங்குதடையின்றி இழுமெனவிழி தரும் அருவிபோலச் சொல்லொழுக்க முடைய கவிகள் மொழு மொழுவெனப் பாடுகின்றார்.

“முறையி லொலியொடு முரசு முருடொடு
முழவு கடமொடு மொலியெழும்
பறையி னொலியொ டமிரத வுருளொடு
பரிகள் கரியொடு மொலியெழக்
கறையி னொலியொடு முவணியயிலொடு
கதைகள் சிலையொடு சிலைபொழி
புறையி னொலியொடு முகிலினொலியொடு
முவரி யொலிமெலி வனவென” (தேம்-24-41)

எனவரும் செய்யுளால் இவ்வுண்மை நன்கு புலனாகும்.

பிறநாட்டிற் பிறந்தாரொருவர், வேறொரு நாட்டினிடையே தங்கி அந்நாட்டு மக்களோடு உடனிருந்து வாழ்தற்கு ஒத்த

கருவியாவது அந்நாட்டுமக்களின் மொழியறிவேயாகலின், வீரமா முனிவரும் தமிழ் நாட்டிற்குப்போந்து தமிழ் மக்களிடையே வாழ விரும்பினராகலின், தாமும் தமிழ் மொழியை நன்கு கற்கத் தொடங்கி நன்கனம் கற்றுக் கவிபாட வல்ல பெரும் புலமை யெய்தினர். கற்றற்குரிய நூல்களையும் நன்கு கல்லாது பிழையுறக் கற்று வழுமலிந்த பாட்டுக்கள் பாடித் திரியும் கல்லாமாக்கள் போலாது, புலவர் புகழும் புலமையெய்துவான் கற்றலை மேற்கொண்ட இவர் தம் மனப்பான்மை, "உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல்" என்னும் உறுதியும் உரனுமுடைய தென்பது விளங்குகின்றது.

தமிழ் கற்றுவருங்கால் இவர் திருக்குறள், சிந்தாமணி கம்பராமாயணம் முதலிய சீரிய இலக்கியங்களைக் கற்று, அவற்றின் சொற்சுவை பொருட்சுவைகளை யழுந்தி நுகர்ந்து, தாமும் அவற்றை யாக்கினோர்போல நூல் ஒன்றனை ஆக்கவும், அவ் வாக்கத்திடை அவர் கொண்ட முறையினையே கொள்ளவும் கருதி, திருத்தக்க தேவரும் தோலாமொழித் தேவரும் சிந்தாமணி, சூளாமணி முதலிய இலக்கியங்களில் தம் சமயப்பொருள் தழுவிய வரலாறுகளையே யுரைத்தது கண்டு, தாமும் தம் சமய மாகிய கிறித்தவ சமயப்பொருள் தழுவிய கிறித்துவின் வரலாற்றினையே பாடத்தொடங்கி, சிந்தாமணி, சூளாமணி என்றாற் போல, தேம்பாவணியெனப் பெயரிட்டு, இச்சீரிய தொடர்நிலைச் செய்யுளைச் செய்துள்ளார்.

தமிழ் இலக்கியங்களுள் சிறப்புடையதெனக் கருதப்படும் சிந்தாமணியின் சொல்லொழுக்கமும் பொருளமைதியும் கண்டு காமுற்ற இவர், அதனையே பெரும் பான்மையும் தழுவி வருவதோடு, அந்நூலின் சொற்களையும், தொடர்களையும் தம் கவியின் கண் அமைத்துப் பாடுவாராயினர்.

சிந்தாமணியில், அரசு நிலைபெற்ற கட்டியங்காரன் சச்சந்தனைக் கொல்லக் கருதிய கருத்தினைத் தன் அமைச்சரிடத்துக் கூறியவிடத்து, அவர் அதற்குடன்படாது சில பேசியது கண்டு மனம்பொறாது, "என்னலாற் பிறர்கள் யாரே யின்னவை

பொறுக்கும் நீரார், உன்னலாற் பிறர்கள் யாரே யுற்றவற்குறுக சூழ்வார்" (சிந்தா-259.) என்று கூறும் செய்யுளையுட்கொண்டு இவர், தேம்பாவணியில், சித்திரகூடப் படலத்து, ஆணரன் என்பானுக்கு அரசன்கூறும் கூற்றாக,

"உன்னலால் தெய்வமல்லா லுணர்வரும் பயன்கள்சொன்னாய்,
நின்னலால் பிறர்கள்யாரே நிறைந்திவை செலுத்தும்பாலார்,
என்னலால் பிறர்கள்யார்க்கும் இறைவனீ யுலகங்காக்க,
மன்னலா லெவையுந்தந்தேன் வாய்ந்தநூல் வடிவோயென்றான்"

(தேம்-20-98.)

என்று கூறினர். சிந்தாமணியில் அளங்கமா வீணையென்பா ளொருத்தி வனசரிதன்மேல் அன்பு கொண்டொழுக, அவள் காதலன் பவதத்தன் என்பான் அவளைக் காணாளைப் புலம்பக் கண்ட சீவகன், அவற்கு,

"பெண்ணெனப் படுவகேண்மோ பீடில பிறப்புநோக்கா,
வுண்ணிறை யுடையவல்ல வொராயிர மனத்தவாகும்,
எண்ணிப்பத் தங்கையிட்டால் இந்திரன் மகளுமாங்கே,
வெண்ணெய்க் குன்றெரியுற்றாற் போல்மெலிந்து பின்னிற்கு
[மன்றே" (சிந்-1597.)

என்று கூறியதனை யுட்கொண்ட இவ்வீரமா முனிவரும், சஞ் சோன் என்னும் மயிரே யுயிராக்கொண்ட வீரன் (Samson Agonisties) தாலிலையென்பாளொருத்தியின் வயப்பட்டிருக்கு ஞான்று, அவன் பகைஞர் அவள் மனந்திரித்துக் கோறற்கு நெறிநாடிய நிலையை யுரைக்கப் புகுந்து, அவள் அன்பின்மை யுணர்த்துவார்,

"அண்ணிப்பற் றன்பறிந்த
வரிகர்பொற்சால் பளித்தன்னாள்
நண்ணிப்பற் றருந்திறத்தின்
நிலைகேளென்ன நனிகேட்டார்
எண்ணிப்பத்தங் கையிடுமேல்
அவைநட்பு மியற்பிறப்பும்

கண்ணிப் பற்றுதென்னை
கடிதிற்செய்யாள் பெண்பிறந்தாள்''
(தேம்-17-32.)

என்று கூறுகின்றார். இராமாயணத்துக் கம்பர் இராமன் தாடகையைக் கொன்றவிடத்து,

"சொல்லொக்கும் கடியவேகச்
சுடுசரங் கரியசெம்மல்
அல்லொக்கும் நிறத்தினாண்மேல்
விடுதலும் வயிரக்குன்றக்
கல்லொக்கும் நெஞ்சிற்றங்கா
தப்புறங் கழன்றுகல்லாப்
புல்லர்க்கு நல்லோர்சொன்ன
பொருளெனப் போயிற்றன்றே''
(கம்-ரா-பால-தாட-73)

என்று கூறிய செய்யுளில் ஏற்றடிக் கருத்தினை, சேதையோன் வெற்றிப் படலத்து மதியோன் அமலேக் என்பவனைக் கொன்ற செய்தி கூறும்,

"வேனிகர் வடிவைவாளி
வில்விடை யவன்கோர்த்தெய்ய
வானிகர் விலங்கறன்னை
வானுருமறுத்தாற் போலத்
தோனிகர் அமலேக்காகம்
துளைத்த கோலுருவியப்பாற்
கானிகர் மூடர்க்கோதும்
கலையெனப் போயிற்றன்றே'' (தேம்-16-49.)

எனவரும் செய்யுளில் அமைத்துக் கூறுகின்றார்.

இனி, இவர் "தீயினாற் சுட்டபுண்ணுள்ளாறும் ஆறாதே, நாவினாற் சுட்டவடு'' (குறள்-13-9) என்பதனையும், "சுடச்சுடரும் பொன்போலொளி விடுந்துன்பம், சுடச்சுட நோற்கிற்பவர்க்கு'' (குறள்-27-7) என்பதனையும் உட்கொண்டு, "சுட்ட நோயாறினாறுத்துகடரும் தருக்குநீக்க, விட்டநோய் போரா

வேகத் திவன் சுழல் சூரல்" (தேம்-14-34) என்றும், "சுடரப் பொன்சுடுந் தீயெனத் தொன்மறை, படரப் பொங்கி வரும் பகைப் பாசறை" (தேம்-18-53) என்றும், "வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கையெரி முன்னர், வைத்தூறுபோலக்கெடும்" (குறள்-435) என்பதன் உவமை,

" நங்கை நம்பியு நாடிய வன்பென நாட்டிச்
சங்கை யம்பல சாதிநன் முறையெனப் புகுத்தி,
யங்கை யங்கனே பழகினீ யகலினு மரிதுன்
வங்கை யின்புற வன்னிமுன் வையென வழல்வாள் "

(தேம்-23-91) என்ற செய்யுளின்கண் அமைத்தும், " ஒலித்தக் காலென்னு முவரி எலிப்பகை, நாகமுயிர்ப் பக்கெடும்" (குறள்-763) என்பதனை,

" ஒலித்தலா லெவன்செயு முவரி பேயினம்,
கலித்தலா லெவன்செயும் கடவுள் சார்ந்தகால்
சலித்தலா லெவன்செயும் பிணித்த தன்மையின்,
வலித்த நாய் கடிக்குமோ மருவிலாமையே" (தேம்-24-52)

என்பதன்கண் வைத்தும் கூறியிருத்தலால் தமிழ்நடையில் இவர்க்குள்ள கைவன்மை விளக்க முறுகின்றது.

இனி, இவர் வீரமாமுனிவர் என்னும் தன்பெயர்க்கேற்ப, ஆண்மக்களின் வீரம்புலனுமாறு கவிபாடும் வன்மை நோக்குந் தோறும் இன்பம் பயப்பதோடு, போர்த்தொழில் நிகழுங்கால், மேனுட்டார் செய்யும் போர்த்தொழில் நிலையும் உய்த்துணர வைப்பர். வைப்பினும், தமிழ் நெறியிலேயே இவர் மனமும், நினைவும் எழுதலின், தமிழ் வண்ணமே மாசின்றி விளக்கமெய்து கின்றது. ஒன்று கூறுதும், சோசுவன் என்னும் அரசன் பூத வீரரை யழைத்துக்கொண்டு எரிக்கோ என்னும் நகர் நோக்கிச் சென்ற செய்தியைக் கூறுமிடத்து, அந்நாட்டு வளத்தைக் கூறுவார்,

" அமிர்தம்பாய்ந்து மதுப்பாய்ந்தார்
அன்னம்பாய்ந்த வயல்கடந்து

துமிர்தம்பாய்ந்து கயல்பாய்ந்து
துள்ளுங்கமலத் தடநீக்கித்
திமிர்தம்பாய்ந்து நிழல்பாய்ந்த
செழும்பூஞ் சோலைபுடைமருவ
நிமிர்தம்பாய்ந்து முகில்பாய்ந்த
நேரார்வைகு நகர்கண்டார்'' (தேம்-15-13)

என்கின்றார். கண்ட அளவில் வீரர்மனத்தெழுந்த மறத்தை யுற்றுணர்ந்த சோசுவன், படையொன்றும் எந்தற்க எனப் பரமன் பணித்தமொழியுன்னி, அதனை நினைப்பிக்கு முகத்தால், அவர் மனத்தெழுந்த மறத்தீ அவியா வகையில்,

“செல்வேம்செல்வ நகர்தகர்ப்பச்
செல்லச்செல்லு மெல்லைசெலும்
வெல்வேம்வெல்லும் வல்லமையோ
வீரவில்விள் மாரியினோ
டெல்வேல்வல்ல தல்லதென
விறைவன்றான் றன்வலிகாட்டக்
கொல்வேலில்லா திந்நகரைக்
குலையச்சிதைத்தல் காண்மினென்றான்''
(தேம்-ஷை-15)

என்று கூறுதலால், வஞ்சினங்கூறும் வகைமையும், வீரரை யாளும் தலைமக்கள் திறலும் பெறவைத்தார்.

இனிப் போர் நிகழ்ச்சி கூறுமிடத்து, வீழ்வாரையும் வீழ் வனவற்றையும் மிகுத்துக் கூறலுறுவார்,

“மலையிரண்டுமிசை மலையெழுந்ததென
மலிபுயங்கண்மிசை தலையெழ
வுலையிரண்டுமிசை யழலழன்றதென
வுயிரெரிந்த வெரிவிழிவிட
வலையிரண்டுமிசையெழ முழங்குமென
வதிரெழுந்த வுணனொருவனீர்க்
கலையிரண்டுமிசை யமர்நிகர்ந்திருவர்
களநடுங்கவமர் நடவினர்.'' (தேம்-15-94)

என்றும்,

" வண்டுபட்டன விபங்கள்பட்டன
வயங்கள்பட்டன வளர்ந்ததேர்
துண்டுபட்டன கரங்கள்பட்டன
துமிந்துபட்டன பதங்கடிண்
டண்டுபட்டன சிரங்கள்பட்டன
சடங்கள்பட்டன தடிந்தவாள்
கொண்டுபட்டன குணுங்கர்பட்டன
குணுங்குபட்டில நயங்களே" (தேம்-16-37)

என்றும் கூறும் கவிகளால் தமிழ் நாட்டுத் தமிழ்ப்புலவர் பாடும் முறையும் வண்ணமுமே தோன்றப் பாடியிருத்தல் நம்மனோர்க்குப் பெருவியப்பும் மகிழ்ச்சியும் பயக்கின்றது. மேலும், போரில் வெற்றிபெற்ற வீரர் தாம் கைக்கொண்ட அறத்தைப் புகழ்ந்து கூறல் மரபு ஆகலின், அதுதோன்ற இவரும், பீலித் தேயரைப் பொருது வென்றிகொண்ட சஞ்சோன் என்பவன் போர்க்களத்தே வாகைசூடி நின்று, பலருங்கேட்க,

" புறத்துணைகடந் தவல்லோன்
போர்க்களத் தொருவன்நின்று,
திறத்துணைவரைத் தோள்வீங்கித்
திசைதிசை சுளித்துநோக்கி
மறத்துணை துணையென்றுற்ற
வஞ்சகரோ டக்கண்டே
அறத்துணை பெற்றுற்பெற்ற
தழிவுண்டோ விடையிலென்ருன்"(தேம்-17-25)

என்பதனுல் அறத்தின் பெருமை கூறும்பகுதி, இராமர் இராவணனுக்குக் கூறும், "அறத்தினுலன்றி யருஞ்சமம் அமரர்க்குங் கடத்தல், மறத்தினுலரிதென்பது மனத்திடை வலித்தி" என்னும் கூற்றினை நினைப்பிக்கின்றது.

(தொடரும்.)



# திருந்திய கை எழுத்துக்கள்.

வீ. உலகவூழியன், தலைமைத் தமிழ்ப்பண்டிதர்,
நாட்டாண்மை உயர்தரக்கழகம், நாமக்கல்.

(37-ம் பக்கத்தொடர்ச்சி.)

இனித்திருந்திய கையெழுத்துக்களால் சிறந்த பொருளமைய எழுதப்படும் சொற்கள், இன்பத்தால் விருப்பமளித்து நிற்றலையும், இன்னா எழுத்தால் எழுதப்படும் இன்னாப்பொருள் அமைந்த சொற்கள் வெறுப்பு விளைத்து நிற்றலையும் கூறல் வேண்டா. பொருளின் நலத்தினையும் இனிமைச் சிறப்பினையும் காணவல்ல உள்ளம் அவையமைந்த சொற்களைத் துணையாகக் கொண்டு அவற்றை அவற்றை அறிந்து மகிழ்கின்றது. அச்சொற்கள் திருந்திய எழுத்துக்களால் எழுதப்பட்டிருப்பின் சலிப்பிழைப்பின்றி அறிதற்கண் உள்ளம் ஊக்கம்கொள்கின்றது. அச்சொற்கள் திருத்தமில்லாத எழுத்துக்களால் எழுதப்பட்டிருப்பின் அவ்வெழுத்தின் இன்னாமையைநோக்கும் கட்பொறிப் புலன் வாயிலாக உள்ளம் சலிப்படைகின்றது. அச்சலிப்பால் இளைப்புறுகின்றது.

நந்தமிழ் நாட்டுக் கலைநிலையங்களிலும், கல்லூரிகளிலும் பணியாற்றிவரும் ஆசிரியர் பலர் திருந்திய கை எழுத்துக்களைப் புறக்கணிக்கின்றனர். இப்புறக்கணிப்புத் தொற்றுநோய் வழிவழியாக மாணவர்களையும் பிணிக்கின்றது. இப்பிணி நீக்கத்திற்கு மருந்தீவார் அரியராதலின் இப்பிணியால் மாணவரும் தம் கை எழுத்துக்களை நேரிய முறையில் எழுதற்கூடாமற் பாழ்படுகின்றனர். தேர்வுக்காலங்களில் மாணவர் எழுதும் விடைகளை நல்ல எழுத்துக்களால் எழுதாமல் ஒழிகின்றனர். இவ்வாறு எழுதப்பட்ட நூற்றுக்கணக்கான விடைத்தாள்கள் பொருட்செறிவுடையவேனும் அவற்றைத் தொடர்ச்சியாகப் பார்த்து விரைந்து, படித்து, ஆய்ந்து அவைகட்குத்

தக்காங்கு எண் அளிக்கும் ஆசிரியர்கள் சலிப்பும் களைப்பும் உற்றுப் பொருட் சிறப்பினை அறிதற்கு வசதியின்மையின் குறைந்த எண்களையே ஈகின்றனர். திருந்திய எழுத்துக்களால் எழுதப்பட்ட சொற்கள் அத்துணைப் பொருட் சிறப்பிலவாயி னும் திருந்தா எழுத்தின் வடிவங்களை உற்றுநோக்கிச் சலித்த தேர்வாளர்கள் பொருட் சிறப்பின்மையும் கருதாமையால் முன்னவைகட்குச் சில எண்களைக் கூட்டியே தருகின்றனர். எனவே திருந்தா எழுத்துக்களால் அமைந்த விடைத்தாள்கள் அப்பிழையால் தாம் பெறுதற்குரிய அளவிற்குறைந்த எண் களைப் பெறுகின்றன. திருந்திய எழுத்துக்களால் அமைந்த விடைத்தாள்கள் தாம் பெறுதற்குரிய அளனும் மிகுந்த எண் களைப் பெறுகின்றன. தாம் பல நாட்களாக வருந்திக் கற்ற வற்றைச் சில நாழிகைத் தேர்வில் எழுதித் தம் ஆற்றலைக் காட்டித் தேர்தற்போரில் வெற்றிபெற இருக்கும் மாணவர் பட்டபாடுகள் அனைத்தும் பயனிலவாய்க் கொன்னே கழிந் தொழிகின்றன. சென்ற காலமும் தமக்கு வருத்தத்தை இருத்திச் சென்றது; வாராக்காலமும் இனி வருங்காலத்து உள்ளம் வருந்துகின்றது.

புற அழகில் மிகவும் ஈடுபட்டு அதன் பொருட்டுத் தம் ஆடையினையும் தம் குஞ்சி குறைத்த தறிதலையினையும் ஒப்பனை செய்வதில் கண்ணும் கருத்தும் கொண்டு ஒழுகுகின்றனர் பலர். இவ்வொழுக்கம் ஓரளவில் வேண்டப்படுவதே. நன்மை பயப் பதே. புறத் தூய்மையும் அகத் தூய்மைக்கு ஓராற்றால் ஏது வாதல்போலப் புறவழகும் அகவழகிற்கு ஓராற்றால் ஏதுவா கின்றது. இன்னார், தம்சிந்தை நனி மலரவரும் செழுங்கலைகள் உள்ளச் சுருள்நீக்கி மலர்விக்கும் கலைகள் பலவும் பயில்வதற்குச் சிறந்த கருவியாகவும், அக்கலைவகைகளில் இடம்பெறுவதாகவும் அமையும் எழுது முறையைப் புறக்கணித்து ஒதுக்குதல்வனோ?

பெற்றோரின் வாழ்நாளின் பின்னரும் அவர் தம் எச்சமாக உலகத்து நின்று நிலவி அவர் தம் சிறப்பியல்களைப் புலப் படுத்தித் தக்கார் தகவிலர் என உணர்த்துதல் பிள்ளைகளின்

தன்மை என்பர் பெரியோர். ஆதலால் அத்தன்மை எழுத்துகளுக்கும் உண்டு. பெற்ரேரது வாழ்நாளின் பின்னும் எஞ்சி நின்று அவருடைய தகுதி, தகுதியின்மைகளைப் புலப்படுத்தும் தன்மை எச்சமாகிய பிள்ளைகட் கிருத்தல் போல எழுதியவரது வாழ்நாளின் பின்னும் எஞ்சி நின்று அவர்தம் தகுதி தகுதியின்மைகளைப் புலப்படுத்தும் இயல்பு எழுத்துகட்கும் உண்டு. ஏனென்றல் எழுதியவர் விட்டுச்சென்ற எச்சப் பொருள்களுள் எழுத்துகளும் ஒரு பகுதியாய் அடங்குகின்றன. எழுதியவரின் வாழ்நாளில் அவற்றை எழுத்துகள் புலப்படுத்தலைக் கூறவேண்டியதின்று. எனவே திருந்திய எழுத்துகளை எழுதுவோர் ஓராற்ருல் தக்கோர் எனவும் அறிவிற்சிறந்தோர் எனவும் உணரப்படுவர். அல்லார் ஓராற்ருன் அவையுடையரல்லர் எனவும் உணரப்படுவர். ஆதலால் தகுதியுடையோர் என அறிவுடையாரால் சிறப்பித்துக் கூறப்படுவார் மேற்கொண்டொழுகுதற் குரியவற்றுள் திருந்திய கை எழுத்துக்கள் எழுதும் பண்பும் ஒன்ருகும்.

'செயற்கரிய செய்வார் பெரியர்' என்னும் மறைமொழி ஒழுக்கப் பெருந்தகையார் **காந்தியடிகள்** திருந்திய எழுத்துகளின் சிறப்பினைப்பற்றி எழுதிய பகுதியை எடுத்துக்காட்டி இக்கட்டுரையை முடிக்கின்ருேம். அது வருமாறு:—

என் தூண்டுதல் இன்றி என் தந்தையார் தாமே பள்ளிக்கூடம் விட்ட பின்னர் என்னை வீட்டுக்கு அனுப்புமாறு தலைமையாசிரியரை எழுதிக் கேட்டுக் கொண்டமையால் உடற்பயிற்சி விலக்கம் முறையாகக் கிடைக்கப்பெற்றது. உடற்பயிற்சியைப் புறக்கணித்தமையால் யான் பயனற்றேன் அல்லேனயினும், மற்ருெருபயிற்சியைப் புறக்கணித்த பிழைக்காக இன்னும் வருந்துகின்றேன். திருந்திய கையெழுத்துக்கள் எழுதுதல் கல்விக் கலைத்துறைகளுள் ஒன்று அன்று என்னும் கொள்கை என்பால் எவ்வாறு உதித்தது என்பது இதுபொழுது புலனுதலின்று எனினும், இங்கிலாந்துக்குப் போகும் வரையில் திருந்திய கையெழுத்துக்களையே எழுதிவந்தேன். (இங்கிலாந்து சென்ற பின்னர் என் எழுத்துக்கள் பாழ்பட்டன)

பின்னர், தென்னுப்பிரிக்காவில் உறைந்த காலத்து, ஆண்டுப் பிறந்து கல்வி பயின்ற வழக்கறிஞர்களின் திருந்திய கையெழுத்துக்களைக் கண்டேன்; கண்ட காலத்து வெட்குற்றேன்; திருந்திய கையெழுத்துக்களை எழுதும் பழக்கத்தை என் இளமையிற் புறக்கணித்தமைக்குக் கழிவிரக்கங் கொண்டேன். திருந்தாக் கையெழுத்துக்கள் குறைக் கல்வியைப் புலப்படுத்தும் அறிகுறியாம் என்பதனை உணர்ந்தேன். பின்னர் என்னுடைய கையெழுத்துக்களை நலம்பெற எழுத முயன்றேன், எனினும் இளமையிற் புறக் கணிக்கப்பட்ட காலம் இடையிட்டமையின் திருத்தமுறுதல் கூடாதாயிற்று. என்மாட்டு நிகழ்ந்த இவ்வெடுத்துக் காட்டால் ஒவ்வொரு இளைஞனும் மங்கையும் எதிரதாக்காக்க வற்புறுத்தப் படுகின்றனர். அன்னோர் திருந்திய கையெழுத்துக்களை எழுதுதல் கலைத்துறையுள் ஒன்றும் என்பதனை உணர்வாராக. இளங்குழந்தைகள் எழுத்தெழுதப் பழகுதற்கு முன்னரே ஓவியம் எழுதப் பழகுதல்வேண்டும் என்பது என் உள்ளக்கிடக்கை. பூக்கள் பறவைகள் முதலாகிய பல்வகைப் பொருள்களைச் செய்யத் தெரிந்த பின்னர் உற்று நோக்கும் பயிற்சியால் எழுத்துக்களை அறிந்து கற்றல்வேண்டும். பொருள்களின் உருவங்களை எழுத அறிந்த பின்னரே எழுத்துக்களை எழுதப் பழகல்வேண்டும். இவ்வாறு எழுதிப் பழகின குழந்தைகள் அழகிய கையெழுத்துக்களை எழுதுதல் முடியும்.



# பொருளின் அமைப்பு.

திருவாளர், அ. ஸ்ரீநிவாஸாசாரியார் அவர்கள், B.A., L.T.,
ஆசிரியர், உயர்தரக்கல்லூரி, ஸ்ரீவில்லிபுத்தூர்.

## பொருள் வகைகள்.

'நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன'வும், 'அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி' யமைந்தனவுமாய அண்டப் பகுதிகள் அனைத்தும், அவற்றிற் காணப்படும் பொருள்கள் அனைத்தும் ஆக்கப்பட்டிருப்பது சடப்பொருளால் என்ப. மெய் வாய் கண் மூக்கு செவியெனும் ஐம்பொறிகட்கு இலக்காவனவும், அவைகளான் அறியப்படுவனவும் 'பொருள்' எனப்படும். ஐம்பொறிகளின் துணையானன்றி வேறு வழியானும் பொருள்களின் இருப்பினை உணர்தல் ஒரோவழி உள்ளத்திற்கு இயலாதோ எனின், அதனை இயற்கைப் பொருணூல் ஆராய்ச்சியாளர் இதுகாறும் அறிந்திலர் என்பதே விடையாகும். புலன் வாயிலாக (ஒரு பொருளைப் பற்றி) யாம் பெறும் அறிவின் தன்மையை ஆராயுங்கால், அது சில பண்புகளின் தொகுதியாதல் தேற்றம். பொருள்கள் அனைத்திற்கும் பொதுவான சில பண்புகள் உள, அவையாவன :—(1) இடம் அவாவலும் (2) ஒன்றை மற்றொன்று ஊடுருவ இயலாமையும் (3) நிறையுடைமையும் (4) புற ஏதுவின்றித் தானே இயங்கவும் அமரவும் இயலாமையும் (5) துணிபடுகையும் (6) புழையுடைமையும்.

இப்பண்புகளையுடைய பொருள்களாலாயதும், ஒருவரையறைக்கு உட்பட்டதும், சுட்டியறியப்படுதற்குரியதுமான ஒவ்வொன்றும் 'பண்டம்' எனப்படும். மரத்தாலாய ஒரு பலகையும், இரும்பினாலாய ஒரு கத்தியும், மண்ணாலாய ஒருகலமும் 'பண்டங்கள்' எனப்படும். மரமும், இரும்பும், மண்ணும் 'பொருள்கள்' எனப்படும். சற்றே துருவேறிய ஒரு கத்தியில் உள்ளே இரும்பும் வெளியே துருவும் காணப்படுதலின், ஒரு

பண்டம் ஒன்றிற்கு மேற்பட்ட பொருள்களை உடையதாகலாம் ஒரு பித்தளைக் கம்பியை ஆராயுங்கால், அதன்கண் செம்பு நாகம் எனும் இருவேறு பொருள்கள் தென்படுகின்றன. அங்ஙனமே இரும்பினாற் கத்தியும் ஆணியும் சங்கிலியும் இவைபோன்ற பிறவும் ஆக்கப்படக் கூடுமாதலின், **பண்டம்** பலவாயினும் அவைகளில் அமைந்த **பொருள்** ஒன்றாதல் கூடும். ஆதலின் பண்டம் வேறு பொருள் வேறு என்பது பெறப்படும். இப்பண்டங்கள் நிலைவேறுபாட்டால் **திண்பொருள்**, **நெகிழ்பொருள்**, **ஆவிப்பொருள்**, என மூவகைப்படும். கல்லும் மண்ணும திண்ணிலையிலும், நீரும் ரசமும் நெகிழ் நிலையிலும், நம்மைச் சூழும் வளியும் நீராவியும் ஆவிநிலையிலும் உள்ளனவாம். திண்ணிலைக்கும் நெகிழ்நிலைக்கும் இடைப்பட்டதும், நெகிழ் நிலைக்கும் ஆவி நிலைக்கும் இடைப்பட்டதுமான நிலைகளில் பண்டங்கள் உள வெனினும், அவை சிறு பான்மையே யாதல்பற்றி ஒதுக்கப் பட்டன. இம்மூன்று நிலைகளிலும் உள்ள பண்டங்கள் ஒவ்வொன்றும், பிரித்து ஆராயப்படுங்கால், ஒருபடித்தாயோ பல படித்தாயோ இருப்பது புலப்படும். ஒரு படித்தாயிருப்பன தனிப்பொருள்களாலாய பண்டங்களாம்; பல படித்தாயிருப்பன பல்பொருட் கலவையாகிய கலவைப் பொருளாலாய பண்டங்களாம். தனிப்பொருள் ஒவ்வொன்றையும் பிரித்தாராயுங்கால், ஒரோவழி அதுமுறிந்து, ஒன்றிற்கு மேற்பட்ட புதியபொருள்களை நல்கும்; அன்றி, நமது விருப்பப்படிப் பகுக்கவொண்ணாத ஒருபொருளாகும். பகுக்கவொண்ணாத அத்தகைய பொருள் '**மூலப்பொருள்**' எனப்படும்; மூலப்பொருள்கள் பல ஒன்றாக இணைந்து ஒரு தனிப்பொருளாக நிற்குங்கால், அது '**கூட்டுப் பொருள்**' எனப் பெயர்பெறும். நீரைப் பிரிக்குங்கால், அதனின்றும் இரண்டு புதிய பொருள்களைப் பெறக் கூடுமாதலின், அது ஒரு கூட்டுப் பொருளாம்; அவ்விரண்டு பொருள்களையும் மீண்டும் பகுக்க முயலுங்கால், அம்முயற்சி வறிதாவதல்லது வேறு புதிய பொருள்கள் பெறப்படாமையின், அவ்விரண்டும் மூலப்பொருள்களாம். கரியை இதுகாறும் எவரும் பகுத்தறியாராதலின், அதனை ஒரு மூலப் பொருள் என்னல்வேண்டும். உலகத்துள்ள பொருள்கள் யாவும், பிரிவுபடுமிடத்து இறுதியிற்

பல மூலப்பொருள்களாகவே முடிகின்றன. இப்பெற்றித்தாய மூலப் பொருள்கள், இதுகாறும் ஆய்ந்து கண்டவரை, தொண்ணூறுகும் என்ப. ஆக, உலகின்கட் டோன்றும் பொருள்கள் அனைத்தும், மூலப்பொருள்கள், கூட்டுப்பொருள்கள், (அவைகளாலாய) கலவைப் பொருள்கள், எனும் மூன்று பகுதிகளுள் அடங்கும்.

## பொருட் கூறுகள்.

எந்நிலையவாயினும், பொருள்கள் அனைத்தும் துணிபடுகை, புழையுடைமையென்னும் பொதுப்பண்புகளை யுடையன என்று முற்கூறினோம். புழையுடைமையின், பொருள் இடையீடின்றித் தொடர்ந்து பரந்துள்ள தொன்றன்று என்பதும், துணிபடுதலின், பொருள் துண்டுகள் பலவற்றால் ஆயதொன்று என்பதும் பெற்றாம். பொருளைத் துண்டித்துக் கொண்டே செல்லுங்கால், இறுதியில் துணித்தற்கு இடங்கொடாத எண்ணிறந்த பல பகுதிகளை யாம் அடைகிறோம்; அவை அணுக்களெனப் படும். பொருளின் அமைப்பினைக் கூர்த்த நோக்கினால் அறிய முயன்ற கிரேக்கர்கள் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னரே, பொருள் ஒவ்வொன்றும் எண்ணிறந்த நுண்ணிய அணுக்களினால் ஆக்கப்பட்டிருப்பது எனவும், அவ்அணுக்கட்கு இடையிலுள்ள ஊடுவெளிகள் ஆவிப்பொருள்களில் மிக அகன்றும், நெகிழ்பொருள்களில் சற்று சுருங்கியும், திண்பொருள்களில் மிகச் சுருங்கியும் இருப்பன எனவும் கருதி வந்தனர். ஆயினும் இவ் அணுவாதக் கொள்கையை டால்டன் என்பவரே முறைப்படி 1808-ம் ஆண்டில் வரையறுத்துரைத்தார். இக்கொள்கைப்படி பொருள் ஒவ்வொன்றும் மிக நுண்ணிய அணுக்களான் அமைந்ததாகும்; அணுக்கள் எவ்வாற்றானும் பகுக்கப்படாதனவாம்; யாதானும் ஒரு மூலப்பொருளை இயலும்வரை பகுத்துப் பெறும் அணுக்கள் யாவும் ஒரே படித்தாயிருக்குமாயினும்; ஏனைய மூலப்பொருள்களின் அணுக்களினும் அவை நிறையான் வேறுபட்டிருக்கும். பல மூலப்பொருள்களின் அணுக்கள் ஒன்றோடொன்று இணைந்து கூட்டுப்பொருளாக மாறுங்கால், அக்கூட்டுப்பொருளின் மிக நுண்ணிய பகுதி 'நுண்டேள்' எனப்

படும். இந்நுண்டுளில் பல்வேறு வகைப்பட்ட அணுக்கள் அமைந்திருப்பினும், அக்கூட்டுப் பொருளின் சிறப்பியல்புகளை யுடைய அனைத்தினும் சிறிய பகுதி நுண்டுளேயாகும். நீர்த் துளியொன்றை இயன்றவரை பகுத்துவரின், நீரின் பண்புக ளனைத்தையும் உடைய நுண்டுளேயே இறுதியிற் பெறக்கூடும், அந்நுண்டுளையும் பகுக்க முயன்று அதை முறிவு செய்தால், அதன்கண் இரண்டு புதிய ஆவிப்பொருள்களின் அணுக்கள் தோன்றும். ஆக, மூலப்பொருளின் அறுதிப்பகுதி அணு வாகும்; கூட்டுப்பொருளின் இறுதிப்பகுதி நுண்டுளாகும். ஒரு கூட்டுப்பொருளின் நுண்டுள் பலவகைப்பட்ட அணுக்க ளால் அமைந்ததாகும்; ஒரு மூலப்பொருளின் நுண்டுள் பெரும் பான்மை ஒரே வகைப்பட்ட பல அணுக்களானும், சிறு பான்மை ஓரணுவினுலும் அமைந்ததாகும். ஒரு மூலப் பொருள் மற்றொரு மூலப்பொருளோடு இணைந்து ஒரு கூட்டுப் பொருளாகுங்கால், இணைந்தொன்ருவன இருபொருள்களின் அணுக்களே யாதலின், பொருள்களின் இணைவிற்கும் (அவ் வண்ணமே முறிவிற்கும்) ஏதுவாகும் மிகச்சிறிய பொருட்பகுதி களே அணுக்களெனப்படும்; பிறிதொரு சார்பின்றித் தற் சார்ந்து நிற்கும் தகையனவாகும் மிகச் சிறு பொருட்பகுதிகள் நுண்டுள்கள் எனப்படும். பொருளணுக்கள் பல ஒன்ருக இணைந்து பெருங்கொத்தாக அமருங்கால், அக்கொத்து நுண்டுள் எனப்படும். நீர்வாயுவின் அணுக்களும் உயிர்வாயுவின் அணுக் களும் ஒன்ருக இணைந்து நீரின் நுண்டுள்களாகுங்கால், அந் நுண்டுளில் நீர்வாயுவின் அணுக்கள் இரண்டும் உயிர் வாயுவின் அணுவொன்றும் காணப்படுகின்றன. உயிருள்ள பொருள் களிலும் (மனித உடல், வளரும் மரம் போன்றவற்றிலும்) இங் ஙனமே நுண்டுள்களும், அவை யொவ்வொன்றிலும் பலவகைப் பட்ட அணுக்களும் காணப்படுகின்றன. ஆக, உயிருள்ள பண்டங்களிலும் உயிரற்ற பண்டங்களிலும் வாய்ந்துள்ள பொருள்கள் அனைத்தும், தொண்ணூறு வகைப்பட்ட மூலப் பொருள்களுள் ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்களின் அணுக் களினது சேர்க்கையால் வரும் நுண்டுள்களால் ஆக்கப்பட்டுள் ளனவாம்.

ஒரு நுண்டேளின் பருமனைச் சிற்சில எடுத்துக் காட்டுகளால் அறியலாகும். ஒரு ரூபாயினது நிறையின் நூற்றெண்பது கூறுகளில் ஒரு கூறு நிறையுள்ள தங்கத்தை மிக மெல்லிய தகடாக அடிக்குங்கால், இறுதியில் அத்தங்கத் தாளின் கனம் ஓர் அங்குலத்தின் 367000 கூறுகளில் ஒன்றின் கனமேயாகும்; ஆயினும், அத்தாளின் கனத்திடை நுண்டேள்கள் பலவற்றை நிரல்பட அடுக்கலாகும். சவுக்காரத் தண்ணீரில் எழும் குமிழியிற் சில பகுதிகளின் கனம், ஓர் அங்குலத்தை முப்பத்து இலக்கங் கூறுகளாக்குங்கால், ஒரு கூறுக்கு ஏற்படுங் கனமேயாகும். ஆயினும், அனைத்தினும் மிக மெல்லியதான இப் பகுதிகளில் அதன் நுண்டேள்கள் இருபது அல்லது முப்பது அடுக்காயிருக்கும். இதனால் அறியக்கிடப்பது யாதெனின், ஒரு நுண்டேள் ஓரங்குலத்தின் முப்பது இலக்கங் கூறுகளில் ஒரு கூறுக்கும் குறைந்த கனமுடையது என்பதே. ஒரு துளி எண்ணெய் நீரில் மெல்லிய ஏடாகப் பரவுங்கால், அவ் ஏட்டின் கனம் சவுக்கார நீர்க் குமிழியினும் மிக மெல்லியதாகும். ஓர் அங்குலத்தை ஐம்பது இலக்கங் கூறுகளாக்குங்கால் வரும் ஒரு கூறின் கனத்தளவுக்கு எண்ணெய் ஏட்டின் கனத்தைச் சிறுகச் செய்யலுமாகும்; ஆயினும் எண்ணெய் நுண்டேளின் கனம் ஓரங்குலத்தின் ஒரு கோடி கூறுகளில் ஒன்றினும் குறைந்ததாகும். ஒரு ரூபாயின் நிறையில் நூற்றெண்பதில் ஒரு கூறு நிறையுள்ளதான நானத் துண்டொன்று பல ஆண்டுகளாக ஓரறையினுள் நறுமணத்தைப் பரப்பிக் கொண்டிருப்பினும், அதன் நிறையினிற் பத்து இலக்கத்தில் ஒரு கூறும் ஓராண்டினிற் குறைவுபடாதிருக்கும். ஒருபொருள் நன்மணத்தை வீசுங்கால், அதன் நுண்டேள்கள் எங்கணும் பரவுகின்றன. ஒரு சுண்டைக்காயளவு பருமனுடைய காற்றின்கண் மூன்றிலக்கங் கோடாகோடி நுண்டேள்கள் காணப்படுகின்றன. நுண்டேள் இனையதாக, அணு இதனினும் நனி சிறியதாகும். நான்கு தசகோடி அணுக்களைத் தொடர்புபட நேராக வைத்தால், ஓர் அங்குல நீளமேயாகும். நீர்வாயுவின் அணுக்களில் ஐம்பதிலக்கத்தை நேராக நிரல்பட அமைக்கின், அவைகளின் நீளம் ஒரு புள்ளியின் குறுக்களவினதேயாம்.

## நிலைவேறுபாட்டிற்கு ஏது.

மிகச் சிறிய ஒன்றையும் பல்லாயிர மடங்கு பெருக்கிக் காட்டும் கண்ணாடியின் துணையாலும் அணுவினைக் காண்டல் அரிதாம். தலைமயிரின் பருமனில் பத்துலக்கங் கூறுகளில் ஒன்றினும் சிறிய இவ்அணுவே பொருள்களனைத்திற்கும் முதலாவது. ஒரு மாளிகை செங்கல்களால் அமைந்திருப்பதுபோல், ஒரு நுண்டூளும் பல அணுக்களால் ஆக்கப்பட்டிருக்கின்றது. பல செங்கல்களையும் ஒன்றாகப் பிணைக்கச் சாந்து வேண்டியிருத்தல்போல், பல அணுக்களையும் ஒன்றாகப் பிணைக்க ஒரு சத்தி இன்றியமையாதது; அங்ஙனமே பல நுண்டூள்களை ஒன்றாகப் பிணைப்பதற்கும் ஒரு சத்தி வேண்டற்பாலதாகும். பின்னதைப் பிணைப்புச்சத்தியென்போம். இப்பிணைப்புச்சத்தியைக் கொல்வது சூடு. சூடு கூடக்கூட, பிணைப்புச்சத்தி அதற்கியையக்குறைவுபடும். அது குறையவே, திண்பொருள் நெகிழ்பொருளாக, நெகிழ்பொருள் ஆவிப்பொருளாக மாறும். ஓர் ஆவிப்பொளில் நுண்டூள்கள் கட்டுப்பாடின்றித் திரிவனவாய், மிக விரைவாக அங்குமிங்கும் ஓடிக்கொண்டிருக்கும்; ஆதலின் மிக்க குளிரினாலேயே அவைகளை நெகிழ்பொருளாக்க இயலும். எதிர்காலத்தில் ஒருகால் இவ்வுலகினைப் புரக்கும் ஞாயிற்றினிடத்துக் காணும் சூடு வரவரக் குறைவுபட்டு ஆறிவிடுங்கால், இஞ்ஞாநிலத்தின் அனற்பதன், சதகூற்றுஅனற்பதனியின்படி நீரின் உறை நிலைக்கும் இருநூறு கூறுகள் தணிந்ததாகும்; அந்நிலையில் இவ்வையத்தைச் சூழ்ந்து நிற்கும் வாயுமண்டலம், உறைந்து கிடக்கும் உவர்க்கடலின்மீது முப்பத்தைந்தடி ஆழமுள்ள ஒரு நெகிழ்பொருளாக மாறி மிதக்கும். ஒரு நெகிழ்பொருளை மிக்க குளிருக்கு உட்படுத்துங்கால், அது ஒரு திண்பொருளாக மாறும். ஒரு திண்பொருளின் நுண்டூள்கள் மிக நெருங்கினவாய், ஒன்றோடொன்று மிக்கஉறுதியோடும் வன்மையோடும் பிணைக்கப்பட்டிருக்கும்; ஆதலின் பெருந்திறல் அப்பொருளின்மீது தாக்கினாலன்றி, அந்நுண்டூள்கள் பிரிவுபடா. ஓர் அங்குலம் கனமுள்ள இரும்புத் தகட்டில் வைகும் நுண்டூள்களைப் பிரித்தற்கு இருபத்தைந்து 'டன்' அளவுள்ள சத்தி

வேண்டும் என்பர். ஆயினும், எத்துணை நெருக்கமாக நுண்டூள்கள் பிணைக்கப் பட்டிருப்பினும், அவைகளினூடே புழைகள் இருத்தல் சோதனை வாயிலாக நிலை நாட்டப்படுகின்றது. கனத்த ஈயக் குண்டுக்குள் நீரை அடைத்து நன்றாக மூடிய பின்னர், அக்குண்டை, அழுத்தும் பொறியொன்றின் துணையால் மாபேரழுத்தத்திற்கு உள்ளாக்கும்போது, உண்ணின்ற நீர் புறம்பொசிதல் புலனாகின்றது. மிக்க உறுதிவாய்ந்த உருக்கினுள்ளும் கோடிக் கணக்கான வெவ்வேறான நுண்டூள்களும் ஊடுவெளிகளும் காணப்படுகின்றன; அன்றியும், ஒரு திண்பொருளிலுள்ள நுண்டூள்கள் யாவும் பெரும் விரைவொடு அங்குமிங்கும் அசைந்து கொண்டிருத்தலும் அறியப்படுகின்றது. மிக நுண்ணிய துகள்கள் பல மிதக்கப்பெற்ற ஒரு நெகிழ் பொருளை ஓர் இயற்கை நூலறிஞர் நுண்பொருளாடியின் வாயிலாகக் கூர்ந்து நோக்கி யாராய்ந்தபோது, அத்துகள்கள் ஓயாது அசைந்து கொண்டிருந்ததையும், அங்குமிங்கும் உதையுண்டு எறியப்படுதலையும், ஒரு விநாடிக்குள் ஆயிரந்தடவை ஒன்றோடொன்று மோதுதலையும் தெளிவுறக் கண்டனர். காரணத்தை ஆய்ந்தகாலை, நெகிழ்பொருளின் நுண்டூள்களினால் உந்தப்பட்டே அத்தூகள்கள் ஓய்வின்றி ஆடியோடித் திரிகின்றன என்பது புலனாயிற்று. இவ்வண்ணம் ஒருபொருளின் நுண்டூள்கள் விரைந்தாடிக் கொண்டிருத்தலின், அவைகள்பால் பேராற்றல்பொதிந்துகிடத்தல்வெளிப்படை; அணுக்களும் இங்ஙனமே கழிபெரும் விரைவொடு சுழன்று வருதலின், அவைகளும் பேராற்றலுக்கு உறைவிடங்களாகின்றன. ஓர் இரும்புத் துண்டிலும் ஒரு சிறு கல்லிலும் கோடிக் கணக்கான நுண்டூள்கள் சலிப்பின்றி விரைந்தாடிக் கொண்டிருக்கின்றன. ஒரு சிறு கற்கண்டுத் துண்டு நீரிற் கரையும்போதும், ஒரு சிறு நானத்துண்டு நறுமணத்தைப் பரப்பும்போதும், நுண்டூள்களே நீரிலும் வளியிலும் விரைவோடு பாய்ந்து செல்கின்றன. உயிர் வாயுவின் நுண்டூள்கள் ஒரு விநாடிக்கு 1500 அடி வீதம், அதாவது சுமார் கால்மைலுக்கு மேற்பட்டு விரைந்தியங்கும். நீர் வாயுவின் நுண்டூள்கள் ஒரு விநாடிக்கு ஒரு மைல் வீதம் கடுகி

இயக்குவனவாம். நம்மைச் சூழும் வளியின்கண் உள்ள நுண்டூள் ஒவ்வொன்றும் துப்பாக்கியினின்றும் பாயும் குண்டின் விரைவிலும் மிக்க விரைவொடு செல்லும் நீர்மைபதாகி, ஓரங்குலத்தின் இருபதினுயிரத்தில் ஒரு கூறு தொலை செல்லுந்தோறும், பிறிதொரு நுண்டூளோடு மோதி, இவ்வண்ணம் மோதுதலின், ஒரு விநாடிக்கு ஐஞ்ஞூறு கோடி முறை தனது பாதையினின்றும் விலகுகின்றது. நீர்வாயுவின் நுண்டூள்களை ஆடவிடாது அடக்கியாண்டு அவைகள்பால் உறையும் பேராற்றலைப் பயன்படுத்தக் கூடுமாயின், ஒரு ராத்தலில் இரண்டாயிரத்தில் ஒருகூறு நிறையுள்ள நீர் வாயுவில் அடங்கியிருக்கும் சத்தியைக்கொண்டு, 750 ராத்தல் நிறையுள்ள (ஐந்து மனிதரது கனமுள்ள) ஒரு கல்லை மூன்றடி உயரம் உயர்த்திவிடலாம். இதனுல் ஒரு பொருளின் அமைப்புக்கு அடிப்படையான நுண்டூளிலும் அணுவிலும் எத்துணைய பெருவன்மை கரந்துறைகின்றது என்பது ஒருவாறு விளங்கும்.

(தொடரும்.)

---

## 'இலக்கியம்' 'இலக்கணம்'

---

பண்டித ஞா. தேவநேயப்பாவாணர்



வடமொழியும் தென்மொழியும் எனது உனது என்று, எங்குந் தொடர்ந் தெதிர்வழக்காடற் கிடமான எண்ணிறந்த சொற்களுள், 'இலக்கியம்' 'இலக்கணம்' என்பன இரண்டாம்.

உலகில் அடுத்தடுத்து வாழும் மக்கள் தம்முட்கொண்டுங் கொடுத்தும் பொருள்களை மாற்றிக் கொள்வதுபோலும், அடுத்தடுத்து வாழும் வகுப்பார் அல்லது நாட்டார் தம்முட்பழக்க வழக்கங்களை மாற்றிக் கொள்வதுபோலும், அடுத்தடுத்து வழங்கும் மொழிகளும் தம்முட் கொண்டுங் கொடுத்தும் சொற்களை மாற்றிக்கொள்கின்றன.

இனி, உலகமொழிகளெல்லாம் ஒரு தாய்வயிற்றினவென்று மொழிநூல்வல்லார் கண்ட முடிவிற்கேற்ப, அடுத்து வழங்காது நெட்டிடையிட்டு வழங்கும் மொழிகட்கும் ஆயிரக்கணக்கான சொற்கள் பொதுவாயிருத்தலை ஆராய்ச்சியாற்காணலாம். அங்கிலம் ஏறத்தாழ 6000 மைல்கட்கப்பால் வழங்கினும் ஆயிரக்கணக்கான தென்சொற்களைத் தன்னகத்துக் கொண்டுள்ளது. இவற்றின் விரிவையெல்லாம் எமது மொழிநூலுட் (Evolution of Language: Vol 1. The Premitive Language and the Pre-Aryan Tamils) கண்டுகொள்க. உதாரணமாகச் சில சொற்களை ஈண்டுக் காட்டுதும்.

Abba—அப்பன். { Abbot, the father of an abbey. Abbey, a monastery under an abbot.

All—எல்லாம்.

Alum — அளம் = உப்பு    Alone=All—one, ஒன்று.

Along=A+long, ஒழுங்கு=நீளம்.

Angel, அஞ்சல் a divine messenger.

தபாற்காரனை அஞ்சற்காரன் என்பதும் தபால் ஆபிசை அஞ்சல் ஆபீசு என்பதும் நெல்லை வழக்கு.

Amiable, Amicable, amo—அமர்.

Amour அமர். L. Amor, love.

"ஆத்திசூடி அமர்ந்ததேவனை"—ஔவை

"அமர்தல் மேவல்"—தொல்காப்பியம்

Axle—அச்சில்

Bar—பார். a rod, a hindrance, the railing that encloses a space in a court of law.

கட்டப்பார், கட்டப்பார்க்கம்பி, கட்டப்பாறை

"பாவீற்றிருந்தகலை பாரறச் சென்றகேள்வி"

சீவகசிந்தாமணி.

பார்அற—தடையற

Bark—படகு r-d cf. Coorg—குடகு

Battalian—பட்டாளம்    Battery—பட்டறை

Beak—மூக்கு b·m போலி ப—ம

Bear—பொறு Betel—வெற்றிலை
Body—படிவு, படிவம் from the root—படி
Burrough—புரம் from the root—புரி
Bottle—புட்டில், புட்டி
Bull—புல்லம் "ஏறெருது மூரிபுல்லம்"
(சூடாமணி நிகண்டு.)

Bun—பணி, or பண்ணி. பண்ணியம், பணியாரம், பண்ணிகாரம்.

Cash—காசு Chaff—சாவி
Clan—குலன் a family or tribe
Clay—களி Crack—கிறுக்கு, கிறுக்கன்
Crook—கொடுக்கு d-r Cry—கரை
Cumulate—கும்மலிடு Cumulas—கும்மல்
Curl—சுருள் c-s சுருட்டைமுடி
Curry—கறி

இங்ஙனம் இரண்டாயிரத்திற்கு மேற்பட்ட இன்றியமையாத சொற்களை அகராதிமுறையினும், கலைமுறையினும், எமது மொழிநூலுள் எடுத்துக் கூறியிருக்கின்றாம். ஆண்டுக் காண்க.

இச்சொற்கள் எல்லாம் அங்கிலத்தினின்றும் தமிழுக்கு வந்தவையல்ல. அங்கிலம் வருமுன்னரே இவை தமிழில் உள்ளன. ஆறாயிரம் கல்லிடையிட்ட அங்கிலத்திற்கும் தமிழுக்கும் இத்துணைப் பொதுச் சொற்களிருக்குமாயின், ஏறத்தாழ 5000 ஆண்டுகளாக அடுத்தடுத்து வழங்கும் வடமொழிக்கும் தென்மொழிக்கும் எத்துணைப் பொதுச் சொற்களிருத்தல்வேண்டும்? இப்பொதுச் சொற்களெல்லாம் மொழிநூன்முறையிற் கூர்ந்து நோக்குவார்க்குத் தூய தென்சொற்களென்றே தோன்றா நிற்கும். வட மொழிக்கும் தென் மொழிக்கும் பொதுவாயுள்ள சொற்களை, வடசொல்லென்பாரும் தென்சொல்லென்பாருமாம் இருசாரார் மொழிநூலறிஞர். வடமொழியைப் போன்றே தென்மொழியும் சிறந்தவோர் தாய்மொழியாதலின், வடமொழியினின்றும் தென்மொழிக்கு வந்துள்ள சொற்களைப்போலவே தென்மொழியினின்றும் வடமொழிக்குச் சென்றுள்ள சொற்

களும் பன்னூற்றுக்கணக்கின. அவற்றுள் இரண்டு 'இலக்கியம்' 'இலக்கணம்' என்பன.

1. ஆரியர் வட இந்தியாவிற்கு வருமுன்னரே (B.C.3000) தமிழில் இலக்கணமிருந்தமைக்கு,

"களவினுங் கற்பினுங் கலக்க மிலாத்
தலைவனுந் தலைவியும் பிரிந்த காலை
.... .... .... ....
உள்ளுறுத் திறினே யுயர்கழி யானந்தப்
பையு ளென்று பழித்தனர் புலவர்"

(யாப்பருங்கலவிருத்தி மேற்கோள்)

என்று அகத்தியம் வழிநூன் முறைமையில் ஆசிரிய வசனங் கூறுவதே சான்றும். மேலும், எழுத்திலக்கணம், சொல்லிலக்கணம், யாப்பிலக்கணமென்ற மூன்றுமே இலக்கியங்கண்டதற் கிலக்கிணமியம்பலாகத் தமிழ்போலுமோர் செய்யுள் மொழிக்கு முதனூலாசிரியன் தன் நுண்ணறிவால் வகுத்திருத்தல் கூடும். அங்ஙனமின்றி ஏனைமொழிகட்கொல்லாமில்லாத பொருளிலக்கணமும், இசைத்தமிழ் நாடகத் தமிழிலக்கணங்களும், ஆசிரியராகத் தமிழராக ஒருவரே ஒருங்கேயியற்றினர் என்பது எங்ஙன் பொருந்தும்? அகத்தியம் முத்தமிழிலக்கணமன்றே? ஆதலான் முத்தமிழிலக்கணமும் ஒருவரானன்றிப் பலரான் முறையே நெட்டிடையிட்டிட்டே தோன்றியிருத்தல் வேண்டும்.

அகத்தியர் பொதியஞ் சென்றதும், முருகன்பாற் சுவடி பெற்றதுமான புராணக்கதைகளும் தமிழ்நூலின் தொன் முது பழமையை உணர்த்துவனவாகும்.

அகத்தியரும் தொல்காப்பியரும் முதனூலாசிரியரைக் குறிக்குமிடத்து, யாண்டும் பலர்பாலாகவே குறித்துள்ளனர். ஆரியர் வரவிற்குமுன் தமிழிலக்கண மிருந்திருப்பின் அதன் குறியீடுகளும் தமிழிலிருந்திருத்தல் வேண்டும்.

2. தமிழில் இயல் என்னும் சொல் இலக்கணத்தைக் குறிப்பினும், அது அதையே வரையறுத்துச் சுட்டாமையானும், குணம், இயற்கை, எனப் பலபொருள் படுதலானும், இயற்

சொல், இயற்பெயர், இயன்மொழி, இயற்பட மொழிதல் முதலிய குறியீடுகளில் இலக்கணத்தினும் வேறாக வெவ்வேறு பொருள் தருதலானும், முத்தமிழில் ஒவ்வொன்றும் இலக்கணம் இலக்கியமென இருவகைப்படுதலின், அவற்றைக்குறிக்க வேறு சொல்லின்மையானும், இயல் என்பது முத்தமிழில் ஒன்றன் இலக்கணமு மிலக்கியமுமாதலானும் 'இலக்கணம்' 'இலக்கியம்' என்னுங் குறியீடுகள் தமிழுக் கின்றியமையாது வேண்டப்படுவனவாம்.

"கண்ணுதற் பெருங் கடவுளுங் கழகமோடமர்ந்து
பண்ணுறத் தெரிந்தாய்ந் தவிப்பசுந்தமிழேனை
மண்ணிடைச்சில விலக்கண வரம்பிலா மொழிபோல்
எண்ணிடைப் படக்கிடந்ததா எண்ணவும் படுமோ"

என்று தமிழ்ப்புலவர் தருக்குமாறு அத்துணை நிரம்பிய விலக்கணத்தையுடைய தமிழ் மொழியில், இலக்கண விலக்கியங்களைக் குறிக்கச் சொல்லில்லையெனின் அது எட்டுணையும் நம்பற்கிடனாகாது.

வடமொழியில் இலக்கணத்தைக் குறிக்க வியாகரணமென்றோர் தனிச்சொல்லுளது. தென்மொழியில் இலக்கணத்தைத் தவிர வேறொன்றுமிலது. ஏனைமொழிகட்கெல்லா மில்லாத ஐந்திலக்கணமும் நிரம்பிய தனித் தாய்மொழிக்கு இலக்கண விலக்கியங்களைச் சுட்டச் சொல்லில்லா திருக்குமோ?

3. 'இலக்கணம்' 'இலக்கியம்' என்னும் தென் சொற்களும், 'லக்ஷணம்', 'லக்ஷ்யம்' என்னும் வட சொற்களும் முறையே வடிவினும் பொருளினும் ஒத்திருக்கின்றன.

| தமிழ் | | சமஸ்கிருதம் | |
|---|---|---|---|
| இலக்கணம்= | 1. Grammar | லக்ஷணம்= | 1. Grammar |
| | 2. அழகு | | 2. அழகு |
| | 3. Definition | | 3. Definition |
| | 4. குணம் | | 4. குணம் |
| | 5. ஒழுக்கு | | 5. ஒழுக்கு |

| | | | |
|---|---|---|---|
| இலக்கியம் = | 1. Literature | லக்ஷ்யம் = | 1. Literature |
| | 2. திருஷ்டாந்தம் | | 2. திருஷ்டாந் |
| | 3. பொருள் | | 3. பொருள் [தம் |

லக்ஷ்யம் பண்ணவில்லை—பொருட்படுத்தவில்லை

ஆகவே, இச்சொல்லிணைகள் ஒன்றினின்றொன்றே தோன்றி யிருத்தல் வேண்டும். எச்சொல்லினின்றும் எச்சொல்லென் பதே கூடா. இதுகாறும் இலக்கண நூல்களிலெல்லாம், 'இலக்கணம்' 'இலக்கியம்' என்னுமிரண்டும் லக்ஷணம், லக்ஷ்யம் என்பவற்றின் திரிபென்றே கூறப்பட்டு வந்துள்ளன. நூலா சிரியரும் உரையாசிரியருமான பிற்றையிலக்கணிகளுட் பெரும் பாலார் வடநூல் வழியாரதலானும், அக்காலத்து மொழி யாராய்ச்சியின்மையானும், அவர் வடநூல்வழி கூறியதெல்லாம் மறுப்பின்றி வழிவழி வழுவப்பட்டு வந்துள்ளன. வடமொழியி னின்றும் ஏனைமொழிகளெல்லாம் ஏராளமாகவும் தாராளமாக வும் கடன் கொள்ளுமென்றும், அங்ஙனங் கொள்ளாக்கால் வழக்கிற்கும் மொழிபெயர்ப்பிற்கும் போதிய சொன்னிரம்பா வென்றும், வடமொழியொன்றே பிறமொழியினின்று ஒரு சொல்லும் கடன்கொள்ளாது தனித்தியங்கும் ஆற்றலுடைய தென்றும் ஓர்தவறான கொள்கை, இன்றும் சில வடமொழி யாளர்க் கிருந்து வருகின்றது. தமிழ் வடமொழித்துணை சிறிதுமின்றித் தனித்தியங்கும் ஆற்றலுடையதென்று மேனாட் டறிஞருங் கூறியிருப்பவும், அதற்கு மாறாக வடமொழித் துணை யின்றித் தனித்துவழங்கல் தமிழுக்குச் சாலாதென்று வட மொழியாளரன்றிச் சில தமிழ்ப்புலவருங்கூடத் தலைவிரித் தாடு கின்றனர். (வடமொழிவாணர் தம்மைப் புகழக் கருதியோ, அல்லது வடமொழிவாணராகத் தம்மைக் காட்டக் கருதியோ தெரிகிலம்.) தமிழர் மொழிநூலேயறியாரென்றும், சுயமான தென்சொற்கும் வடசொன்மூலங் கற்பிப்பதே அவர்களுக்குப் பெருமையென்றும் கால்டுவெல் கண்காணியார் (Bishop Caldwell) கூறியிருப்பது இன்றும் மெய்யாயிருப்பது பெரிதும் இரங்கத்தக்கதொன்றும். சில தமிழாளர் தென் சொற்களின் னின்னவென்று ஐயந்திரிபற வுணர்ந்திருந்தும் அவற்றை

வெளிப்படுத்தும் உறுதியின்றி, வடமொழியர் வாய்மருட்டிற் கஞ்சி, "விண்பட்ட கொக்கு வல்லூறு கண்டன்ன" விலவிலக் கின்றமையின் அவர்காட்சி ஊமையன்கண்ட கனுப்போல ஒரு சிறிதும் பயன்படாது ஒழிகின்றது.

'இலக்கணம்' 'இலக்கியம்' என்ற சொற்கட்குத் தென் சொல் வடிவமே இயற்கையாகவும் வடசொல் வடிவம் செயற்கை யாகவும் இருக்கின்றன. ஒரு சொல் ஒரு மொழியினின்றும் மற்றோர் மொழிக்குச் சென்றதென்பதற்கு அதன் பகுதிப் பொருள் அல்லது மூலப்பொருளே ஆதாரம். உதாரணமாக வேந்நு என்ற தெலுங்குச் சொற்கு மூலப்பொருளின்மையின் அது வெள்ளை நெய்யெனப் பொருள்படும் வெண்ணெ என்னும் தமிழ்ச் சொல்லின் திரிபெனத் துணியப்படும். ஒரு சொற்கு மூலப்பொருள் பலமொழிகளிலிருப்பின், எம்மொழியில் அது பெருவழக்கோ, எம்மொழியில் அதன் திரிசொற்கள் (Derivatives) பெருந்தொகையனவோ, அம்மொழிக்கே அது உரித் தெனத் துணியப்படும்.

இலக்கணம் இலக்கியம் என்னுஞ் சொற்கட்கு வடமொழி யிற் பகுதிப் பொருளிலது. தென் மொழியிலோ தெளிவா யுளது; யாதோவெனிற் கூறுதும்.

1. இலக்கு என்னுஞ் சொல் முதன்முதல் இலையை உணர்த்தும். ஓரிலக்கு விட்டிருக்கிறது, ஈரிலக்கு விட்டிருக் கிறது என்பது நெல்லை வழக்கு.

2. இரண்டாவது குறியை உணர்த்தும். பண்டைக் காலத்தில், வில்வீரர் ஒரு மரத்திலுள்ள ஓரிலையையே, இலக் காகவைத்து எய்துப் பயின்றிருக்கின்றனர். பாஞ்சாலி மணத் திலும், இலக்கணை மணத்திலும், இலக்காக இடப்பட்ட மச்சம் இலைவடிவாயிருத்தல், காண்க. இக்காலத்தும் கல்லெறிவல்லார் ஓர் மரத்திலுள்ள காய்களையே குறிக்கொள்கின்றனர். அக் காலத்தில் வில்வீரர் இலைகளைக் குறிக்கொண்டமை இதனாலும் அநுமிக்கப்படும். இலையே ஆயினும் சிறிதாயும் நிலையான தாயுமிருத்தல் காண்க.

3. மூன்ருவது குறிக்கப்பட்ட ஓர் இடத்தை உணர்த்தும். அதுகாலை லெக்கு என்று திரியும், இரண்டு, ரெண்டு என்ருற் போல. L. Locus, a place, Local, Locality, Location முதலிய சொற்கள் இதனின்றும் பிறக்கும். லெக்கு என்னுஞ் சொல் தென்னுட்டிற் பெருவழக்காய் வழங்குகின்றது.

4. நான்காவது குறிக்கப்பட்ட உதாரணத்தை உணர்த்தும்.

5. ஐந்தாவது சித்திரத்தை உணர்த்தும். மக்கள் எழுத்தறியுமுன்னரே ஓவியம் அறிந்திருந்தனர். அழகு அனைவர் கண்களையும் கவர்தலின், ஆடை, சுவர் முதலியவற்றில், இலை கொடி முதலிய பலவடிவுகளை யெழுதிவந்தனர்.

"மாடக்குச் சித்திரம்" என்ருர் பவணந்தியார். எத்துணையோ அறிவு வளர்ச்சிபெற்ற இக்காலத்தும் மரநுண்வினை, (Wood Carving) உலோக நுண்வினை, (Engraving) ஓவியம், (Drawing) கண்ணுள்வினை, (Painting) முதலிய சித்திர வேலைகளெல்லாம் மரஞ்செடி, கொடி, இலை, பூ, காய், கனியாகவேயிருத்தல் காண்க. ஆடைகளின் கரைகளெல்லாம் பெரும்பாலும் தாவர வடிவினவே. இதனுற் சித்திரம் இலைத்தொழிலென்றும் கூறப்படும். இலையென்பது ஏனை யுறுப்புகட்கும் இனவிலக்கணம் (உபலக்ஷணம்.) "இலைமுகப்பைம்பூண்" என்ருர் குமரகுருபரர். உலகப்பொருள்களில் தாவரம்போல் கண்கவர் கவின்பெறு காட்சியன வேறெவையுமில்லை. இதனுனேயே கொடி, கொடியிடை, குவிக்கொடி, கொம்பு, கோதை, குலாமாலை, மலர்முகம் என மாதர் புகழப்படுவதும், திருவிழாக்களில் தோரணம் பந்தர் முதலியவை தாவரப்பொருள்களால் புனையப்படுவதுமென்க.

இலங்கும் என்னும்வினை சித்திரத்தையுணர்த்தும் இலக்கு என்னும் பெயரினின்றும் திரிந்ததே.

இலங்குதல் விளங்குதல். இலக்கம் விளக்கம்.

6. ஆருவது சித்திரவெழுத்தை (Hieroglyph or Picture writing)யுணர்த்தும். இதுபோதுள்ள வரியெழுத்தேற்படுமுன்

எல்லா நாடுகளிலும் சித்திரவெழுத்தின் மூலமாயே மக்கள் தத்தம் கருத்தை வெளியிட்டு வந்தனர். ஒரு சித்திரம் ஒரு வாக்கியத்தையாவது ஒருசெய்தியையாவது குறிப்பானுணர்த்து வதாயிருந்தது.

7. ஏழாவது வரியெழுத்தை யுணர்த்தும். சித்திர வெழுத்துத் தோன்றிச் சின்னூற்றாண்டின்பின் வரியெழுத்துத் தோன்றிற்று. அவ்வரியெழுத்தும் கூர்ந்துநோக்கின் தாவர வடிவே தாங்கி நிற்கும். சப்பானியம், சீனமுதலிய மொழி யெழுத்துக்கள் இக்காலத்தும் சித்திர வடிவே பெற்றுள்ளன.

எழுதுதல் என்னும் வினை படம்வரைதலையும் எழுத்தெழுது தலையும் பொதுவாயுணர்த்தும்.

எழுத்து இலக்கு (இலை) வடிவாயிருத்தலின் எழுதுதல் இலக்கித்தலெனப்பட்டது.

"இவ்வுருவு நெஞ்சென்னுங் கிழியின்மே லிருந்திலக்கித்
தவ்வுருவு நினைப்பென்னுந் துகிலிகையால் வருத்தித்து"
(சீவக சிந்தாமணி-180)

என்னுஞ் செய்யுளில் இலக்கித்த என்பது எழுதி என்னும் பொருளில் வந்துள்ளது. இவ்வினையினின்றே லேககன், லேகினி, லிகிதம் முதலிய வடசொற்கள் பிறக்கும்.

இலக்கு, இலக்கி என்பன எழுது எனப்பொருள்படும் வினைப்பகுதிகள் அல்லது ஏவல் வினைகளாம்.

இலக்கு என்பது முதனிலைத்தொழிற்பெயராகவுமிருக்கும்; அது ஆகுபெயராய் எழுத்தை யுணர்த்தும்.

Gr. Logos = a word
a discourse
a treatise
a science

e. g. Theology, Physiology

இலக்கியம் என்பது விகுதி பெற்ற தொழிற் பெயர். இலக்கு பகுதி; இயம் விகுதி.

c. f. கண் + இயம் = கண்ணியம்.
கண்ணுதல் = கருதுதல், மதித்தல்.

இலக்கியம் என்பது தொழிலாகு பெயராய் எழுத்தையும், கருவியாகுபெயராய் நூல்களையும் உணர்த்தும், நூலுணர்த்துழி இருமடியாகுபெயர்.

c. f. Literature from letter.

இலக்கியத்தில் இயம் என்னும் விகுதியைத் தனிச்சொல்லாக்கிச் சாஸ்திரமெனப் பொருள்கூறல் ஈண்டுப் பொருந்தாது.

இனி, இலக்கணம் என்னும் சொல்லும் ஓர் விகுதி பெற்ற தொழிற் பெயரே யாம். இலக்கு பகுதி. அணம் விகுதி.

c. f. கட்டு + அணம் = கட்டணம்.

இலக்கணம் இலக்கியம் என்பன இரண்டும் முதன்முதல், எழுதும் தொழிலை யுணர்த்திப் பின்பு ஆகுபெயராய் எழுத்தை யுணர்த்தும். இலக்கியம் என்பது எழுத்தாலாய நூற்றொகுதியையுணர்த்தினாற்போல, இலக்கணமென்பது எழுத்தாலாய மொழியின் ஒழுங்கை யுணர்த்தும்.

c. f. Grammar from gramnos, (Gr.) a letters.

இனி, இலக்கணமென்பது மற்றோர் விகுதித் தொழிற்பெயர். இலக்கு பகுதி. அம் விகுதி. எண் இலக்க வடிவாய் அதாவது எழுத்து வடிவாயிருத்தலின் இலக்கமெனப்பட்டது.

| உ-ம். | தமிழ் | Latin |
|---|---|---|
| | க—1 | I—1 |
| | உ—2 | V—5 |
| | ரு—5 | X—10 |
| | எ—7 | L—50 |
| | அ—8 | C—100 |
| | ய—10 | D—500 |
| | ள—100 | M—1000 |
| | தூ—1000 | |

இனி என் என்னுஞ்சொல் தருக்கத்தை யுணர்த்துவது போல, அதன் பரியாயப் பெயராகிய இலக்கமென்பதும் தர்க்கத்தை யுணர்த்தும்.

Logic from Logos (Gr)

"ஏரணங்காண் என்பர் எண்ணர் எழுத்தென்பரின் புல்லோர்" என்னுமடியில், என் தருக்கத்தையும் எழுத்து இலக்கியத்தை (Literature) யும் உணர்த்துதல் காண்க.

இதுகாறுங் கூறியவற்றால் இலக்கியம் இலக்கணம் என்னும் இருசொற்களும் இலக்கு என்னும் பகுதியடித் தொழிற்பெயர்களென்றும், அவை ஆகுபெயர் முறையான் முறையே நூற்றொகுதியையும் மொழியொழுங்கையு முணர்த்துமென்றும், இலக்கு என்னுஞ்சொற்கு முதற்பொருள் இலையும் வழிப்பொருள் எழுத்து முதலியனவுமென்றும், இவையெல்லாந் தமிழேயென்றும், ஆரியத்தமிழ்க் கலப்பின் பின் தமிழினின்றும் ஆரியஞ்சென்ற எண்ணிறந்த சொற்களுள் இலக்கியம் இலக்கணம் என்பன இரண்டென்றும், இவை லக்ஷ்யம் லக்ஷணமென ஆண்டுத் திரியுமென்றும், இன்னும் இன்னோரன்ன பிறவும் வெள்ளிடைமலைபோற்றெள்ளிதிற் கண்டுகொள்க.

குதிரை திருடினன் ஒருவன், நீதிபதி முன் குதிரை முகத்தைமூடி இதற்கு எக்கண் குருடென்ற உடையாற்கு, இடக்கண் குருடென்று அகப்பட்டாற் போல, எண்ணிறந்த தென்சொற்களைக் கவர்ந்து கொண்ட வடமொழியாளர், இச்சொற்கு மூலமென்னையென்றோர் தமிழன் கடாவ, இதற்கு மூலமில்லை, இஃதோரிடுகுறியென்றகப்பட்டுக் கொள்கின்றனர்.

இடு குறிப்பெயரே தமிழ்க்கில்லை.

"எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே"

"மொழிப் பொருட் காரணம் விழிப்பத் தோன்றா"

என்பவை தொல்காப்பியம்.

இடுகுறிப் பெயர் வடமொழியில் ஏராளம். பகுதியறியப் படாத தென்சொற்களையெல்லாம் கண்ணை மூடிக்கொண்டு இடுகுறியெனப் பகர்ந்து விடுவர்.

குதிரை திருடினன் குதிரையிடம் சென்றபோது, அது உடையானைக் கண்டாற்போன் மகிழாமைபோல், வடநூலார் சில தென்சொற்குப் பகுதிப்பொருள் கற்பிக்கினும் அது சிறிதும் பொருந்தாதாகின்றது.

ஆகவே மொழி நூலாராய்ச்சி வடசொல்லும் தென் சொல்லும் பகுத்துணர்தற்குச் சிறந்ததோர் கருவியாம். இதனை யறிந்து கடைப்பிடிக்க.



# அஜந்தாவும் குடைவரைக் கோயில்களும்.

(கோவை. திரு. சி. கு. நாராயணசாமி முதலியார் எழுதுவது.)

(மொழிபெயர்ப்பு)

## முற்பகுதி.

வடநாடுகளில் பெரும்பாகம் பௌத்தமதமே பிரபலமாக மக்களால் அநுட்டிக்கப்பட்டுவந்தது. அம்மதத் துறவிகள், நூற்றுக்கணக்காகவும், ஆயிரக்கணக்சாகவும் பெருகி பௌத்த மதத்தின் தத்துவங்களை எங்கும் போதித்திருந்தனர். பௌத்த சந்நியாசிகள் மௌனமாயிருந்து கடவுளை வணங்கித் தொழுவ தற்குத் தகுதியான குகை, வனம், மலையின் உச்சி ஆகியவைகளை விரும்பக் கூடியவர்களா யிருந்தனர். இங்ஙனம் இவர்கள் தவமேற்கொண்டு தியான சமாதியி லிருப்பதற்கு, ஏற்ற யிடங்களை ஆராய்ந்து கொடுப்பது இவர்களது நன் மாணவர்

களது கடமையாயிருந்தது. இம்மாணவர் தத்தம் தகுதி, ஆற்றல்களுக்கேற்ப, தமது ஆசிரியர்கள் இனிது உறைவதற்கு மடங்களையும், சிற்றாலயங்களையும், சிறு குடிசைகளையும் கட்டினார்கள். இவைகள், தமது குருமார்களுடைய ஜீவிய காலத்திற்குப் பின்னர், அவர்களது ஞாபகச்சின்ன நிலயங்களாகவும் செய்யப்பட்டன. தொண்டர்களின் மெய்யன்பு, அவர்களது எண்ணங்களின் சக்திகளை வெளிப்படுத்திக் கொண்டிருந்தன. பக்தன் சங்கித வித்துவானாயிருப்பின், தனது பக்தியை இசைத்துக் காட்டுவான்; நடிக்கின்றவனாயிருப்பின், நடனமுறையில் நடிப்பன்; சிற்பியானால், தனது சிற்பத்திறமையை அழகு நிரம்பிய ஓவியவடிவில் செய்து காட்டுவான். இவற்றிற்குச் சான்றுகள்— திருமாலினது அனந்தகுண கலியாண அமுதங்களைச் செவ்வியபண்களில் தோனே! திரண்ட செங்கரும்பின் தீஞ்சாரோ! செழுங்கனியின் சுவையோ! என்று கூறும்படியான செஞ்சொற்களில், சுருதி, லயம் பிறழாமல், அற்புதக் கீர்த்தனங்களென்று யாவரும் ஒருமுகமாய்ப் புகழ்ந்து பாராட்டும்படியாக திருதியாகராச சுவாமிகளது பக்திக் கீர்த்தனைகளும்; உவமிக்க முடியாததும், வருணனைக்கு அடங்காததும், காட்சிக்குத் தெவிட்டாததுமான சிற்பநல ஓவியங்கள் நிரம்பிய தேவாலயங்களுமேயாம். இவைபோன்றே பௌத்தமாணவர், தமது குருமார்களிடத்து வைத்த மெய்யன்பினால், அவர்கள் வாழ்நாட் காலத்தில் அவர்களது தவத்தின் நலத்தின் பொருட்டும், கீர்த்தி விளங்குவதற்காகவும், ஞாபகச்சின்னத்தை முன்னிட்டும், குகைகள், மடாலயங்கள், விசாலமான இருக்கைகள், ஆலயங்கள், உயர்நிலைக் கோபுரங்கள், இந்திர விமானங்கள் முதலியவற்றைக் கட்டினார்கள். இங்ஙனம் கட்டிய பௌத்தர்களுடன், சைனர்களும், ஆரியர்களும் சேர்ந்திருந்தனர்.

நைசாம் இராச்சியத்தில் அவுரங்கபாத் ரயில்நிலயத்திலிருந்து 16 மைல் தூரத்திலுள்ள 'எல்லோராவில்' 'இந்தியாத்திரிமலை'யின் சரிவுகளில் திறமை மிகுந்த பௌத்த சிற்பிகள், தங்கள் சிற்றுளிகளின் உதவியினால் கடினமான பாறைகளை நீளமாகவும், விரிவாகவும் குடைந்து அற்புதமான கல் மாளிகைகளையும்,

அழகே உருப்பெற்ருலன்ன ஆலயங்களையும், பல மண்டபங்களையும் கட்டியுள்ளார். இவற்றின் தொகை 14. ஆலயங்களில் பெரியது 85 அடி நீளமும், 43 அடி அகலமும், 34 அடி உயரமும் உடையது. உறுதியான நிலத்தின்மீது செங்கல்லும் சுண்ணச் சாந்தும் சேர்த்து இத்தகைய விசாலமான ஆலயத்தைக் கட்டலாமேயன்றி, செங்குத்தான மலையின் வலிய பாறையின்மீது இத்தகைய கற்றளியை, குடைவரைக் கோயிலாகச் சமைப்பது மிகவும் கடினமான செயல். இது பெரிதும் வியக்கத்தக்கது. மற்றும் "கைலாயம்" என்னும் பெயருடன் அதி அற்புதமான சிற்ப சாதுரியத்திற்கு எடுத்துக்காட்டாகத் துலங்கும் அழகிய ஆலயம், கண்பெற்ருர் கண்டு களிக்கக்கூடிய கவினுடையது. மகத்தான பெருமைபுடைய இவ்வாலயத்தைத் தன்னுட்கொண்ட இவ் "வேல்லோரா" உலகத்திலுள்ள அதிசயங்களில் எட்டாவதேன ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்.

மலையின் உச்சியிலிருந்து அடிவரை, நெட்டுக்குத்தலாகவுடையதும், சிற்ப நுட்பங்கள் செறிந்ததும், அழகே ஓர் வடிவு கொண்டதுமான (கைலாயம் எனப் பெயரிய) பெரியதோர் ஆலயத்தை மனிதர்கள் சமைத்திருக்கக் கூடுமா? என்ற ஓர் ஐயமும் அதனை ஏறிட்டு அண்ணுந்து அதன் அழகைக் கண்டு அதிசயிக்கும்போது தோன்றுகிறது. மானிடனுடைய உறுதியான வைராக்கியமும், சுதந்திரயூகமுமேதான் இவ்வரிய சிற்பரத்தினம் சிறப்பாக அமைவதற்கு ஏதுவாக இருந்திருக்க வேண்டுமென்று நாம் துணிந்து கூறுகின்றோம்.

இவ்வுயரிய கோவில், 164 அடி நீளமும், 109 அடி அகலமும், 96 அடி உயரமும் கொண்ட உருவமுடையது. இதற்கு "எங் மஹால்" என்பது மற்றொருபெயர். இப்பெயர்க்கு வர்ணமாளிகை என்பது பொருள்.

எல்லோரா கி. பி. 10 ஆம் நூற்றுண்டில் பிரசித்திபெற்ற யாத்திரைத்தலமாக விருந்ததென்று மசூதி (Mahasudi) என்ற அரபிதேசத்துப் பூகோள சாத்திரியும், கி. பி. 1667-ஆம் ஆண்டில் விளங்கிய பிரஞ்சு யாத்திரீகர் மான்சர்த்தி வினேட் (Mansarthi Vinot) என்பவரும் கூறியிருக்கின்றனர்.

ளொன்ருய், அவற்றுட் சிறந்த வளர்ச்சியும் இயலமைப்பு முடையதாய் இன்னும் நன்கு நின்றுலவுதலின் அப்பண்டை மொழிகளுள் முதன்மையதாய்த் தமிழ்மொழியானது திகழ் கின்றதென்பதும், தமிழ் நெடுங்கணக்கானது பேச்சொலிகளின் மூலங்களினுல் அமைந்ததாய் அவற்றிற்குரிய வரிவடிவும் அவற்ருேடு கலந்து பிற எழுத்தொலிகள் தோன்றுவதற்கு ஏது வாய சார்பெழுத்துக்குள்ள வரிவடிவு முடைமையின், பேச் சொலிகள் பலவற்றையும் எழுதுதற்குரிய எழுத்துக்கள் தமிழிலே யிருப்பதால் பிறமொழியினின்று எழுத்துக்களைத் தமிழின்கண் சேர்த்தல் மிகையாவதுடன் தமிழ்மொழியின் எழுத்துச் சுருக்கத்தையும் சொற் செட்டையும், மூச்சுச்செட் டையும், இயலமைப்பையும் அது ஊறுபடுத்துமென்பதும், தமிழ்மொழியின் எழுத்துக்களைக் குறைத்தல் பேச்சொலியின் மூலங்களை மறைப்பதுடன் சொற்குழப்பத்திற்கும் உணர்ச்சிக் கேட்டிற்கும் மொழிச் சிறப்புக் குன்றுதற்கும் ஏதுவாமென் பதும், தமிழின் தூய்மையையும் சொற்செல்வத்தையும் ஆற் றலையும் பாதுகாத்தற் பொருட்டும் பிறமொழிக் கலப்பினை நீக்குதல் நலமாமென்பதும் பிறமொழிகளைத் தமிழிற் கலப்ப தானுல் தமிழின் இயலமைப்பும் ஓசை நயமும் பழுதுபடா வண்ணம் அவற்றைச் சேர்த்தல் கூடுமாயினும் புதுக் கருத்துக் களுக்குப் புதுச் சொற்களையே பிறநாட்டினர் வகுத்தாள்வது போல அக்கருத்துக்களுக்குப் புதுச்சொற்களை நயம்பெற அமைத்துக்கொள்ளும் ஆற்றல் தமிழுக்கு உண்டென்பதும், அவ்வாற்றலை வளர்த்தற்குத் தமிழறிஞரின் ஒத்துழைப்பும், ஊக்கமுமே வேண்டுமென்பதும், அவை காரணமாகவே இம் மாநாடு கூட்டப்பட்டிருக்கின்றது என்பதும் அறியற்பாலன.

நமது தாய் மொழியாகிய தமிழின் புனிதமும் வனப்பும் வளமுங் குன்ருது என்றுமியங்கும் முதற் பெருமொழியாக உலகில் திகழும் வண்ணம் இம்மாநாடு செய்யும் பெரு முயற்சி யானது முற்றிலுங் கைவருமாறு முழுமுதல் துணைபுரிக.



உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத்
திங்கள் வெளியீடு.

துணர்-ய } பவ—ஆனி. { மலர் - ௩.

க. தமிழகத்து உழவின் நலமும்
வாணிகத்தின் சிறப்பும் 111
திரு. K. சோமசுந்தரம் பிள்ளையவர்கள் B.A., B.L.,

உ. பொருளின் அமைப்பு 119
திரு. அ. சீநிவாசாச்சாரியாரவர்கள் B A., L.T.,

௩. தேம்பாவணி 125
திரு. வித்துவான்
ஔவை. சு. துரைசாமிப்பிள்ளையவர்கள்,

ச. நகைச்சுவையும் புலவர்களும் 133
திரு. S. இராமச்சந்திரன் அவர்கள் B. A.,

ரு. தமிழர் மாநாட்டுத் தலைமைப் பேருரை 142
பொழிற்றொண்டர்

செந்தமிழ்ப்புரவலர்,
த. வே. உமாமகேசுவரம் பிள்ளை, பொழிற்றொண்டர்.

தஞ்சைக் கூட்டுறவுப் பதிப்பகம், கரந்தை.

உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு

| | | |
|---|---|---|
| துணர் ௰ | பவ, ஆனி | மலர் ௩ |


## தமிழகத்து உழவின் நலமும் வாணிகத்தின் சிறப்பும்.

K. சோமசுந்தரம் பிள்ளை, B.A., B.L.,



"வியன்மேவல் விழுச் செல்வத்து
இருவகை யானிசைச் சான்ற
சிறுகுடிப் பெருந் தொழுவர்
குடிகெழீஇய நானில" வராகிய நம் பண்டைத் தமிழ் மக்கள் உழவு வாணிகமாகிய இவ்விரு தொழில்களாலும் வட வேங்கடந் தென்குமரியாயிடை நம் தமிழகத்தை மேம்படுத்தி பெருந்தனிச் செல்வந்தர்களாய் வாழ்ந்து வந்தனரென்பது தமிழறிவார் அறிவர். தமிழ் மக்கள் உழவினை ஓர் சிறந்த தொழிலாகக் கருதி அதனைப் பழங்காலந் தொட்டே ஒழுங்கு படுத்தி வந்தனர். மண்ணில் புதைந்து கிடக்கும் கல்லா லமைத்த கருவிகளும் இரும்பாலமைத்த கருவிகளும் பிறவற் றின் ஆராய்ச்சிவகையில் நம் நிலத்தினில் வதிந்த மக்கள் உழ வினைக் கைக்கொண்டிருந்தரெனத் தெரியவருகிறது. இவ்வுழ வுத்தொழிலைக் கையாண்ட மக்கள் மருத நிலத்தைச் சார்ந்த

வேளாளர் உழவர் ஆவர். வேளாளர்களுக்கு உழவுத்தொழிலே சிறந்ததென தொல்லாணை நல்லாசிரியர் தொல்காப்பியனார் "வேளாண் மாந்தர்க் குழுதூணல்ல, தில்லென மொழிப பிற வகை நிகழ்ச்சி" என்று கூறினதறிக. இவ்வுழவர்கள் ஆற்று நீரினை ஊருணியில் கொணர்ந்துசேர்த்து பின்னர் அம்பியினுதவியாலும் இடாவினுலும் கழனிகளிற் பாய்ச்சி ஐவனநெல், தோரை நெல், கந்தசாலி முதலியவைகளை விளைத்து வந்தனர். தெய்வப் புலமைவாய்ந்த திருவள்ளுவர் உழுதுண்டு வாழ்பவரே வாழ்பவர், மற்றவர் தொழுதுண்டு பின் செல்பவரெனக்கூறி உழவே தலையாய தொழிலென சிறப்பு முகமாய் விளங்கவைத்து, உழவு சிறப்புற பின்வரும் சில சாதனங்களைக் காட்டா நிற்பர்.

(க) தொடிப் புழுதிகஃசா வுணக்கிற் பிடித்தெருவும்
வேண்டாது சாலப்படும்

(உ) ஏரினு நன்றா லெருவிடுதல் கட்டபி
னீரினு நன்றதன் காப்பு

(ங) செல்லான் கிழவ னிருப்பி னிலம்புலந்
தில்லாளி னூடிவிடும்.

நாடுவளம் படுதற்கு இன்றியமையாதது உழவெனவும், வாணிகத்தைவிட உழவே மிகப் சிறப்புற்றதெனவுன்னியே, முடியுடை வேந்தர் மூவரும் உழவுத்தொழிலால் நாட்டை வளம்படுத்துவாராகிய வேளாளரை ஒம்பி வந்தனர். மற்றும் இவர் குலத்துப் பெண் மக்களை மன்றலும் கொள்வாராயினர். உழவினிற்குப் பெருந்துணையாக பல ஆறுகள், அணைகள், நீர் நிலைகள், வாய்க்கால்கள் முதலிய பல அமைத்தும் காந்து படை கட்டியும், ஆற்றினிற்குக் கரைகண்டும் வேளாண்மையினைப் பெருக்கினர். சரித்திர காலத்திற்கு மேம்பட்டானாகிய கரிகாற் சோழ மன்னன் பொன்னிக்குக் கல்லணை கட்டுவித்து உழவரது நலத்தினை நாடினன். மற்றும் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனுக்கு, வெள்ளைக்குடி நாகனார் வேளாண்மையின் பெருமையினையும், வேளாண்மைக்குரிய ஏராளரைக் காப்பதின் பெரு நோக்கத்தினையும் எடுத்து 'கூரிய வேலினையுடைய வளவ! இளைய பனைமரத்தினது துண்டுகள் போன்று வேறுவேறு

கிடக்குமாறு களிற்றுத் திரளைக்கொன்ற இடமகன்ற போர்க் களத்தின்கண் வருகின்ற படையை எதிர்நின்று பொறுத்து, அதுபுறங்கொடுத்தலைக் கண்டு ஆரவாரித்து நினது போர் செய்யும் படை தரும் வெற்றியும் உழுகின்ற படையாகிய கலப்பை நிலத்திலே ஊன்று சாலிடத்து விளைந்த நெல்லினது பயன். இவ்விடமகன்ற உலகம் மழைபெய்யுங் காலத்துப் பெய்யாதொழியினும், விளைவு குன்றினும், இயல்பல்லாதன மக்களது தொழிலே தோன்றினும் காவலரைப் பழித்துரைக் கும். இதனை நன்றாக நீ அறிந்தனையாயின், நீயும் குறளை கூறு வாரது வார்த்தையை மதியாது ஏரைப் பாதுகாப்பாருடைய குடியைப் பாதுகாத்து அக்காவலாலே ஏனைக் குடிகளையும் பாது காப்பாயாயின், நின்பகைவர் நின்னடியைப் போற்றுவர் என்று பொருள்பட

" .... .... .... கூர்வேல் வளவ!
வெளிற்றுப் பனந்துணியின் வீற்றுவீற்றுக் கிடப்பக்
களிற்றுக் கணம்பொருத கண்ணகன் பறந்தலை
வருபடை தாங்கிப் பெயர்புறந் தார்த்துப்
பொருபடை தரூஉங் கொற்றமு முழுபடை
யூன்றுசான் மருங்கி னீன்றதன் பயனே.
மாரி பொய்ப்பினும் வாரி குன்றினு
மியற்கை யல்லன செயற்கையிற் றோன்றினுங்
காவலர்ப் பழிக்குமிக் கண்ணகன் ஞால
மதுநற் கறிந்தனை யாயி னீயு
நொதும லாளர் பொதுமொழி கொள்ளாது
பகடு புறந்தருநர் பார மோம்பிக்
குடிபுறந் தருகுவை யாயினின்
னடிபுறந் தருகு வரடங் காதோரே " [புறம்-35]

செவியறிவுறுத்தியது ஈங்கு அறிதற்பாலது. குடபுலவியனார் எனும் புலவர் உழவுத் தொழிலே சிறந்ததெனவும், அவ்வுழவுத் தொழிலுக்குரிய நீர் நிலைகளைப் பெருக்குதலினாலேயே மன்னர் தம் பெயரை இந்நிலவுலகிலே நிலை நாட்டினவராவர் என்பதனை அறிவுறுத்துவான் வேண்டிப் பாண்டியன் நெடுஞ் செழியனை

நோக்கிப் 'பெரியோய்! நீரை இன்றியமையாத உடம்பிற்கெவ லாம் உணவு கொடுத்தவர் உயிரைக் கொடுத்தவராவர்; உணவை முதலாகவுடைத்து, அவ்வுணவாலுளதாகிய உடம்பு; ஆதலால் உணவென்று சொல்லப்படுவது நிலத்தொடு கூடிய நீர்; அந் நீரையும் நிலத்தையும் ஒருவழிக் கூட்டினவர்கள் இவ்வுலகத்து உடம்பையும் உயிரையும் படைத்தவராவர்; நெல் முதலாய வற்றைவித்தி மழையைப்பார்த்திருக்கும் வன்புலம் இடமகன்ற தாயினும் அது பொருந்தியாளும் மன்னனது முயற்சிக்குப் பயன்படாது; ஆதலான், கொல்லும் போரையுடைய செழிய! இதனைக் கடைப்பிடித்து, விரைந்து, நிலங்குழிந்த இடத்தே நீர் நிலை மிகுமாறு தளைத்தோர் இவ்வுலகத்துத் தன் பெயரை நிலை நிறுத்தினோராவர்; அந்நீரைத் தளையாதார் இவ்வுலகத்துத் தம் பெயரைத் தளையாதோர் என்பதனை

" .... .... .... மிகுதியாள!
நீரின் றமையா யாக்கைக் கெல்லா
முண்டி கொடுத் தோருயிர் கொடுத்தோரே
யுண்டி முதற்றே யுணவின் பிண்ட
முணவெனப் படுவது நிலத் தொடுநீரே
நீரு நிலனும் புணரி யோரீண்
டடம்பு முயிரும் படைத்தி சினோரே
வித்தி வானோக்கும் புன்புலங் கண்ணகன்
வைப்பிற் றாயினு நண்ணி யாளு
மிறை வன்றாட் குதவாதே யதனு
லடுபோர்ச் செழிய! விகழாது வல்லே
நிலனெளி மருங் கினீர் நிலைபெருகத்
தட்டோ ரம்ம விவட்டட் டோரே
தள்ளா தோரி வட்டள் ளாதோரே"

எனக் கூறினர். இதனுன் உழவாலாகிய விளைவே அழியாச் செல்வமெனவும் இதனைப் போற்றுதல் அரசர்க்குரிய தலையாய கடனெனவும் குன்றினிலிட்ட விளக்கம்போல் விளங்குதல் காண்க.

உழவுத் தொழிலான் விளைபொருள்கள் மிகுதியாகப் பெருகியவழி வாணிகமின்றி யமையாததொன்றே 'வைசியன் பெறுமே வாணிக வாழ்க்கை' என்பது தொல்காப்பியமாதலான் வாணிகத் தொழிலை இயற்றுபவர் வணிகரெனவும் வைசியரென வும் படுவர். இவர் வாய்மையின் வழுவார். நெடுநுகத்துப் பகல்போல நடுவு நின்ற நன்னெஞ்சினோர்.' 'வாணிகஞ் செய் வார்க்கு வாணிகம் பேணிப், பிறவும் தம்போற்செயின்' என்ற பொய்யா மொழிக்கேற்ப அறநெறி பிறழாதும், வாணிக வாழ்க் கையின் குறிப்பு ஊதியமேயாயினும் அதன் கண்ணும்,

" வடுவஞ்சி வாய் மொழிந்து
தமவும் பிறவு மொப்பநாடிக்
கொள்வதூஉ மிகை கொளாது
கொடுப்ப தூஉங் குறைபடாது" [பட்டினப்பாலை]

தமிழ் மக்கள் வாணிபத்தை இயற்றினர்கள். இவ்வணிகர் இப்பர், கவிப்பர், பெருங்குடி வணிகரென மூன்று பிரிவினரா யிருந்தனர். இவர்களது தொழிற்றிறத்தினும், வாணிகத் திறத்தினும், கைத்தொழிலாலும் வாணிபத்தாலும் தமிழகம் செழிப்புற்றுச் சிறந்து விளங்கி உலகினிலுள்ள ஏனைய நாட்டினிற்கெல்லாம் ஆரை, நன்முத்து, வைரம், ஏலம், மலைப் பிறந்த மணி, நெல் பிறவற்றைக் கொடுத்துதவியது. மற்றும் இந்நாடு மகோன்னத நிலைமையினை யெய்திடவேண்டி மற் றெல்லா நாடுகளி னிற்கும், தனக்கெனச் செய்து கொண்ட கைவினைப் பொருள்களை தந்துதவுமேயொழிய பிறநாடுகளி லிருந்து பொருள்களை கைக்கொண்டதுமிலை யென்பதை முதற்கண் கண்டுணரத் தக்கது.

மெல்லிய ஆடைகள் நெய்தல் பண்டைத் தமிழருக்கு சிறந்த தொழிலாயிருந்தது. இத்தொழிலில் தமிழர் நன்கு பயின்றிருந்தமைபற்றி யன்றோ மணிவாசகனாரும் உள்ளத்தின் அலைவினுக்கு பாவிடை ஆடும் குழலை 'பாவிடை ஆடு குழல் போல் கரந்து பரந்ததுள்ளம்' என திருவாசகத்தில் உவமை கூறி யருளியது அறியத்தக்கது. அவ்வாடைகள் எத்தன்மைத் தென ஈண்டு நோக்குவாம்.

[க] 'காம்பு சொலித் தன்ன வறுவை'

[உ] 'ஆவியன்ன வவிர் நூற் கலிங்கம்'

[ங] 'பாம்பு பயந்தன்ன வடிவின காம்பின்
கழைபடு சொலியின் இழை யணிவாரா
ஒண் பூங்க லிங்கம்'

[ச] 'பூவடி வமைந்த ஆடை'

[ரு] 'அல்குலின் நெகிழ்நூற் கலிங்கம்'

[சு] .... .... .... 'தூய
கொட்டைக் கரைய பட்டுடை'

[எ] 'பாம்பு விரித்தன்ன வான்பூங் கலிங்கம்'

[அ] 'புகை விரிந்தன்ன பொங்கு துகில்'

[கூ] 'நூலாக் கலிங்கம் வாளரைக் கொளிஇ'

[ய] 'வேரொடு நனைந்து வேற்றிழை நுழைந்த
நுன்னர் சிதாஅர் துவர நீக்கி
நோக்கு நுழைகல்லா நுண்மைய பூக்கனிந்
தாவுரி யன்ன வறுவை.'

இப்பலவகையினைப் பட்ட ஆடைகளின் பெயரினை ஈண்டு கவனிக்கத்தக்கது. அவை, கோசிகம், பீதகம், சுண்ணம், வடகம், இரட்டு, பாடகம், பரியட்டக்காசு, வேதங்கம், புங்காழகம், சில்லிகை, தூரியம், பங்கம், தத்தியம், வண்ணடை, கவற்றுமடி, திருக்கு, தேவாங்கு, பொன்னெழுத்து, குச்சரி, தேவகிரி, காத்தூலம், இலஞ்சி வெண்பொத்தி, செம்பொத்தி, பணிப்பொத்தி என்பனவாம்.

உடம்பிலே அடுத்துப் பொருந்தும் ஆடைகளை பருத்தி நூலாலே பெரும்பாலும் தமிழ் மக்கள் நெய்து வந்தனராதலால் அவர்கள் பருத்தி விளைவினைப் பெரிதும் பேணினர். ஆலத்தூர் கிழார், பொன் முடியாரென்ற செந்தமிழ்ப் புலவர் பலர் குறுமன்னர்களது சீறூரைச் சிறப்பிக்கும் வகையான், அச்சீறூர் பருத்தியாகிய வேலினால் சூழப்பட்டுள்ளதென்று 'பருத்தி

வேலிச் சிறூர் மன்னன் (புறம்) எனவும்; 'பருத்திவேலிக் கருப்பைபார்க்கும், புன்புலந் தழீஇய அங்குடிச் சிறூர்' (புறம்) எனவும் கூறியிருத்தலான், பருத்தி விளைவு எவ்வாறாக தமிழரால் போற்றப்பட்டதென்பதை அறிக. ஆடைகள் பருத்தி நூலாலே யன்றிப் பட்டாலும் மயிராலும் பண்டைத் தமிழர் நெய்தன ரென்பதை 'கொட்டைக் கரைய பட்டுடை நல்கி' என்ற பொருநராற்றுப்படை வரியும், 'உருவம் ஆர்ந்தன உரோமப் பட்டுடுத்து' என்ற சிந்தாமணி வரியும், 'பட்டினும், மயிரினும், பருத்தி நூலினும், கட்டும் நுண் வினைக் காருகர்' என்ற சிலப் பதிகார வரிகளும் தெள்ளிதிற் தெளியப்படுத்தும்.

பண்டு தொட்டே பருத்திநூல், பட்டுநூல் நுண்மையதா யமைத்தாடையாக்கல் * தமிழகத்து ஒவ்வோர் இல்லின்கண் தனிமையாகவே வழங்கப் பட்டுள்ளதென தெரிய வருகின்றது. இஃதுபற்றியன்றோ திவாகரம் 'தனிமையாதல்' யென்னும் தொடரை முதன்மை வைத்து வணிகரது இயற்குணங்களாகிய முனிவில ராதல், இடனறிந்தொழுகல், பொழுதொடு புணர்தல் உறுவது தெரிதல், இறுவதஞ்சாமை, ஈட்டல், படுத்தல், என்ற ஏனைய குணங்களை பின்னர் கூறிற்று. பருத்தி, சணல் முதலிய நுண்ணிய நூலினை நூற்பது பெண்டிரது பனுவல். 'பருத்திப் பெண்டின் பனுவல் அன்ன' என்பது புறம், கணவரையிழந்த பெண்டிர் பெரும்பாலும் இத்தொழிலையேயிபற்றி வருத்தமின்றி வாழ்ந்தன ரென்பதினை,

'ஆள் இல் பெண்டிற் றுளிற் செய்த
நுணங்கு நுண் பனுவல்'

என்ற நற்றிணை வரிகளாலறிக. நுண்ணிய நூலினால் செய்யப் பட்ட தமிழகத்துத் துணிகளை எகுபதி (Egypt) மன்னர்கள் உபயோகித்து வந்தார்களென அவர்களது கோட்டங்களினின்று தெரியவருகிறது.

'கானக் குமிழியின் கனிநிறங் கடுப்பப்
புகழ் வினைப்பொலிந்த பச்சையொடு"

---

* 'நோக்கு நுழை கல்லா நுண்மைய' என்பது பொருநராற்றுப்படை.

என்றதினுன் தமிழ் மக்கள் முன்பு ஆடைகளை சாயத்தினில் நனைத்தல் (Dyeing) ஓர் கைத்தொழிலெனக் கருதி யிருந்தன ரென்று அறியப்படுகிறது. இத்தொழில் அவர்களுக்கு தெரிந் திருந்த காலத்து சாயம் போக்கும் தொழிலினையும் (Bleaching) அவர்கள் அறியாதிரார்.

பண்டு,

> ‘ வடமலைப் பிறந்த மணியும் பொன்னுங்
> குடமலைப் பிறந்த வாரமு மகிலுந்
> தென்கடன் முத்துங் குணகடற் றுகிருங்
> கங்கை வாரியுங் காவிரிப் பயனும் ’

ஆகிய இவைகள் தமிழகத்து உள்நாட்டு வியாபாரச் சரக்கு களாக விளங்கிவந்தன. தமிழ்மக்கள் கொற்கையினில் முத்துக் குளித்து அதனை வியாபாரஞ் செய்து பெரு ஊதிய மடைந் தனர். இந்நன் முத்து பருமணிகளின்மேல் ரோமாபுரிப் பெண் மக்கள் விழுமிய ஆசைகொண்டு தமிழக முத்து வியாபாரத்தினை பெருகச் செய்தனர். ‘கையஸ் கிளாடியஸ்’ (Caius claudius) என்ற மன்னர் மன்னனது இல்லறக் கிழத்தி ‘லொல்லா’ என்பவள் மூவாயிரம் பவுன் விலை மதிப்புள்ள நம் முத்துக் களினுல் தன்னை அலங்கரித்துக் கொண்டு ஊர்வலம் வருவது அவளுக்கு இயற்கையாகவே யிருந்ததாம். ஓர் முத்தின் விலை, அதன் பருமனை விட மூன்று பங்கு பருமனுள்ள சுத்த தங்கக் கட்டியினது விலைக்குச் சமானமெனக் கூறுவர் ‘ஏரியன்’ (Arrian) என்போர்.

(தொடரும்.)



# பொருளின் அமைப்பு.

அ. ஸ்ரீநிவாஸாசாரியார் அவர்கள் B.A.,L.T., ஸ்ரீவில்லிபுத்தூர்

(60-ம் பக்கத்தொடர்ச்சி.)

## அணுக்களைப் பகுத்தல்.

பொருள்களின் வகைகளைக் கூறுமிடத்து, ஒன்றிற்கு மேற்பட்ட புதுப்பொருள்களாக முறிவுபடுத்த நமக்கு இயலுமாயின் அவ்வ கூட்டுப் பொருள்களாம் எனவும், அங்ஙனம் பகுக்க ஒண்ணாத நீர்மையனவாயின் அவை மூலப்பொருள்களாம் எனவும் கூறினோம். ஒரு கூட்டுப் பொருளிலும் ஒரு மூலப் பொருளிலும் பல அணுக்கள் காணப்படினும், ஒரு கூட்டுப் பொருளிற் காணப்படுவன பலவகையினவாயும், ஒரு மூலப் பொருளிற் காணப்படுவன ஓரினத்தவாயும் உள என்பதும் கூறப்பட்ளது. ஒரு பொருளை அணுவரை மேலும் மேலும் பகுத்துவந்த இயைபுநூலறிஞர் [பொருள்கள் ஒன்றோடொன்று இயைந்திருக்கும் முறையை ஆராயுநர் இயைபுநூலறிஞர் Chemists எனப்பட்டனர்.] அணுவினைப் பகுக்கும் வகையை அஞ்ஞான்று அறியாமையின், பகுக்க ஒண்ணாமையையே அணுவின் இலக்கணமாகக் கொள்வாராயினர். இக்கருத்து நிறுவப்பட்ட பின்னர் அறிஞருலகெங்கணும் அதுவே பலப்பல ஆண்டுகளாக வழங்கி வந்ததேனும், நாளடைவில் சில மூலப் பொருள்களின் இயல்புகளை வேறு சில மூலப்பொருள்களின் இயல்புகளோடு ஒப்பிட்டு நோக்கத்தொடங்கிய சில நூலோரது உள்ளத்து அக்கருத்தின் உண்மையைப் பற்றி ஓர் ஐயப்பாடு தோன்றலாயிற்று.

இரண்டு மூலப்பொருள்களின் (Elements) அணுக்கள் ஒன்றோடொன்றிணைந்து ஒரு கூட்டுப் பொருளாக (Compound) மாறுங்கால், ஒரு பொருளின் அணுக்கள் ஒவ்வொன்றும்

மற்றொரு பொருளின் அணுக்களில் ஒன்றோடாயினும் பல வோடாயினும் இணைந்து அக்கூட்டுப் பொருளின் நுண்டுளாதலின், அத்தகைய நுண்டுள்கள் பலவற்றானமைந்ததே அக் கூட்டுப் பொருளாதலின், ஒரு கூட்டுப்பொருளின்கண் அடங்கியுள்ள உட்பகுதிகளின் (ingredients) நிறைவீதம் (proportion by weight) எவ்வாயிலாக அப்பொருளைப் பெறினும், எக் காரணத்தானும் எஞ்ஞான்றும் மாறுபடுவதில்லை. இதற்கொரு சான்றாக நீரை எடுத்துக் கொள்வோம். நீர் எனும் கூட்டுப் பொருளின் இயைபினை இணைவு முறையாலாயினும் (the method of chemical combination) முறிவு முறையாலாயினும் (the method of chemical decomposition) ஆராய்ந்து பார்க்கின், ஒரு மடங்கு நிறையுள்ள நீரய வாயு (hydrogen) எண்மடங்கு நிறையுள்ள உயிரவாயுவொடு (Oxygen) இணைந்திருத்தல் காணப்படுகின்றது. இங்ஙனமே பல்வேறு வகைப்பட்ட மூலப் பொருள்களின் இணைவினாலாய பலப்பல கூட்டுப்பொருள்களின் இயைபினையும் ஆராய்ந்து பார்க்கின்றுழி, ஒரு மூலப்பொருளினது அணுவின் நிறைக்கும் அதனோடு இணைந்து கூட்டுப்பொருள்களாக வல்ல ஏனைய மூலப்பொருள்கள் ஒவ்வொன்றினது அணுவின் நிறைக்கும் உள்ள மாறாத நிறைவீதமும் எளிதில் அறியப்படுகின்றது. அவ்வண்ணம் ஆராயுங்கால், நீரயத்தின் அணுவே ஏனைய எல்லா அணுக்களினும் நொய்வுடையதாகக் காணப்படுகின்றது. இக்காரணம்பற்றி நீரயத்தின் அணு நிறையை என்னும் எண்ணாற் குறிப்பிடின், ஏனைய மூலப் பொருள்களினது அணுக்களின் நிறைகளை வெவ்வேறு எண் களாற் குறிக்கலாகும். இவ்வெண்களே அவ்வப்பொருள்களின் அணுநிறைகள் எனப்படுவன. அணுநிறைகள் நீரயத்திற்குரிய 1 இலிருந்து தொடங்கி ஒளிரியத்திற்குரிய (Uranium) 237 வரை ஏறி வருகின்றன; ஒளிரியத்தின் அணுநிறையிலும் மிக்க தொன்றை இதுகாறும் எவரும் கண்டறிந்திலர்.

மூலப்பொருள்கள் அனைத்தையும் நீரயத்திலிருந்து தொடங்கி அணுநிறையின் ஏற்றமுறையில் வரிசைப்படுத்தி அமைக்குங்கால், முதல் எட்டுப்பொருள்கட்குப் பின்வரும்

அடுத்த எட்டுப்பொருள்கள், முறையே முதல் எட்டுப்பொருள் களைப் பல்வகையாலும் பண்புகளானே ஒத்திருத்தல் புலப்படலாயிற்று. பின்னும், அம்முறைப்படியே அடுக்கி வருங்கால், பதினெண்பான் பொருள்கள் கழிந்தபின் வருவன முறையே முதலெட்டுப் பொருள்களையும் இரண்டாவது எட்டுப்பொருள் களையும் ஒத்திருப்பனவாயின. முதலிரண்டு வரிசைகளில் எட்டெட்டாகவும், பின்னுள்ள வரிசைகளில் பதினெட்டுப் பதினெட்டாகவும் மூலப்பொருள்களை அடுக்கிவருங்கால், ஒவ்வொரு வரிசையிலுமுள்ள முதற்பொருள்கள் ஒருகுலமக்களைப்போன்று பெரும்பான்மை பண்புகளொத்தும், சிறுபான்மை பண்புகள் வேறுபட்டும் இருப்பனவாகின்றன; அங்ஙனமே ஒவ்வொரு வரிசையிலுமுள்ள இரண்டாவது பொருள்களும் ஒரே சாயலையுடையனவாகின்றன; அவ்வாறே மூன்றாவது பொருள்களும் பிறவும். [இவ்வண்ணம் மூலப்பொருள்களை அடுக்குமுறையாக வரிசைப்படுத்துங்கால், வெவ்வேறு குலங்கள் பெறப்படுகின்றன; ஆனால் இடையிடையே சிற்சில காலியிடங்கள் காணப்படுவனவாயினும், அவ்விடங்களை நிரப்பப் புதிய மூலப்பொருள்கள் உளவாதல் வேண்டுமென்றும், வருங்காலத்தேனும் அவை கண்டு பிடிக்கப்படுதல்வேண்டும் என்றும், துணிந்தனர் கலைஞர். அன்னாரது துணிபும் பின்னிகழ்ச்சிகளால் உறுதிப் படுத்தப் படலாயிற்று.] இவ்வாறு பெறப்படும் மூலப்பொருட் குலங்களில் ஒன்றைச் சற்று விரிவாக ஆராய்வாம். பீதகம் (gluorine) பசியம் (chlorine) பூதியம் (Bromine) ஊதாயம் (iodine) என்னும் நான்கு மூலப்பொருள்களும் ஒரு குடிப் பிறந்தனபோல் ஒழுகுகின்றன. இவையனைத்தும் தத்தமக் கெனச் சிறப்பான வண்ணங்களைப் பெற்றுள்ளன. முதலிரண்டும் ஆவிப்பொருள்களாமெனின், பின்னிரண்டும் எளிதே ஆவியாக மாறும் இயல்பினவாம். இவை யொவ்வொன்றும் சில உலோகப் பொருள்களோடு (metals) இணைந்து கூட்டுப் பொருள்களாகின்றன; அன்றியும் அக்கூட்டுப் பொருள்களும் ஒன்றையொன்று ஒத்துள்ளன. உவரியமும் (Sodium) பசியமும் இணைவதினால் எழும் பொருளே நாம் உண்ணும் புற்கையிற்

காணும் உப்பாகும். அது கடலினின்றும் பெறப்படுவதுபோல், உவரியமும் பிறவும் இணைவதினல் தோன்றும் கூட்டுப்பொருள் களும் உப்பை நிகர்லனவாம். இன்னும் இந்நான்கு பொருள் களின் நிலைவழிப் பண்புகளையும் (physical properties) இயல் வழிப் பண்புகளையும் (chemical properties) ஒப்பிட்டு நோக்குங் காலும், உவமம் புலனுகின்றது. இவ்வாறு ஒருகுலஞ் சார்ந்த மூலப்பொருள்கள் அனைத்தும் ஒன்றையொன்று பலவாறு பொருவினும், ஒன்று மற்றொன்ருக மாறுவதில்லை. அவை மாருதிருப்பினும், குலப் பொதுப் பண்புகள் அவையனைத்தின் கண்ணும் ஒக்க அமைந்திருத்தலின், ஒருக்கால் அவை யொவ் வொன்றினது அணுவின் உள்ளமைப்பும் பிறவற்றின் அணுக்க ளது அமைப்பினை ஒரு புடையேனும் ஒத்திருக்குமோ என்ற எண்ணம் தானுக அறிஞரது உள்ளத்து உதிக்கலாயிற்று.

பத்தொன்பதாவது நூற்ருண்டின் இறுதியில் நடைபெற்ற சில சோதனைகளின் பயனுயும் அணுவினைப் பகுக்க இயலும் என்ற கொள்கை உறுதிப் படலாயிற்று. மின்சார சத்தியைக் காற்றொழிந்த ஒரு வறும்பாழிடத்தின் (vacuam) வழியே உய்க்குங்கால், நிகழ்வது யாது என்பதைச் செவ்வனே ஆராயப் புகுந்த காலை, ஆங்குத்தோன்றிய எதிர்பாராத விந்தையான சில காட்சிகளே அக்கொள்கைக்கு ஏதுவாயின். 1879-ம் ஆண்டில் உவில்லியம் குரூக்ஸ் என்பார் ஒரு கண்ணுடிக் குழாயி லுள்ள வாயுவைப் பெரும்பாலும் வெளியேற்றி, அதன் அழுத் தத்தை முன்னிருந்ததற்கு இலக்கத்திற்கு ஒரு கூறுக்கும் குறையச் செய்து, பின்னர் அப்பாழிடத்தின் வழியாக மின்சார சத்தியைப் புகவிட்டார். (ஒரு குழாயிலுள்ள வாயு முழுதையும் மிக அரிதின் முயன்று சிறப்பான முறைகளால் வெளியேற்ற முயலினும், வாயுவின் நுண்டூள்களிற் சிலவாயினும் எஞ்சி யிருத்தல் இன்றியமையாதது.) அவ்வழியே மின்சார சத்தியை உய்த்தபோது பசிய ஒளியொன்று தோன்றி, அக்குழாய் முழுதும் பரவலாயிற்று. இவ் ஒளியைக் கண்ட அவ்அறிஞர் இறும்பூதெய்தி, "ஈதென்ன விந்தை! திண்ணிலை, நெகிழ்நிலை ஆவி நிலையெனும் மூன்று நிலைகளுமல்லாது, பொருளுக்கு நான்

காவது நிலையொன்றும் உளதோ? அந்நிலையே இவ்வொளிர் நிலையோ" என்று கருதலாயினர். அக்கருத்துக்கு இசைவு கூற மாட்டாத அஞ்ஞான்றைய பௌதிக நூலார், மின்சார சத்தி அக்குழாய் வழியாகப் புகுந்து செல்லுங்கால், சில கதிர்கள் காலப்படுவனவாயின என்றும், அக்கதிர்கள் அக்குழா யின் இருமுனைகளுள் மின்சாரப் பெட்டியின் மாற்றுமுனையுடன் தொடர்புற்ற முனையினின்றும் வெளிப் போந்தமையின், அவைகள் மாற்றுமுனைக் கதிர்கள் (cathode rays) என்னலே அமையும் என்றும் உரைத்து வந்தனர். பின்னர் லீனர்டு என்னும் கலைஞர் முற்கூறிய ஆராய்ச்சியைத்தொடுத்து நிகழ்த்து வான் நினைந்து, பாழிடக்குழலின் (இதை அந்நாள் தொட்டுக் குரூக்ஸ் குழல் என்று அழைக்கலாயினர்.) ஒரு முனையில் சீனியம் (Aluminium) என்னும் உலோகத்தாலாய ஒருதகட்டினை அமைத்து, மின்சார சத்தியைப் பாய்ச்சினராக, அப்போது மாற்றுமுனைக் கதிர்கள் திண்பொருளாகிய அத்தகட்டினை ஊடுருவிப் புகுந்து அப்பாற் சென்றதைக் கண்டனர்; அக் காரணம்பற்றி அவைகள் கதிர்களே என்று அவரும் கருதலா யினர். பின்னர் 1895-ம் ஆண்டில் ராண்ட்ஜென் என்பார் குரூக்ஸ் குழலைக்கொண்டு சிலசோதனைகளை நிகழ்த்திவருங்கால், அக்குழலின் உள்ளிருந்து கிளம்பும் கதிர்கள் கல்லையும் மரத் தையும் மனித உடலையும் இவையனைய வேறு ஒளி புகாப் பொருள்களையும் (opaque bodies) ஊடுருவிப் பாய்ந்துசெல்லும் வன்மையனவாதல் கண்டு வியப்படைந்தார். இக்கதிர்களின் இயல்பினை இன்னதென்றறிய ஒண்ணாமையால், அவைகளைப் பிதிர்க்கதிர்கள் (X-rays) என்னும் பெயராலழைத்தனர்; அவை சடப்பொருட் பகுதிகளல்லவென்றும், வான்பொருளின்கண் எழும் குற்றலைகளே என்றும் கூறினர். அதன் பின்னர் 1896-ம் ஆண்டிற் பெக்காரல் என்பார். சில சோதிப் பொருள்களி னின்றும் பிதிர்க் கதிர்களைப்பெற ஒண்ணுமோ என்பதை ஆராயத் தொடங்கினர். வெயிலின்கட் சிறிதுபொழுது வைக்கப் படும் பொருள்கள் சில வெயிலினின்றும் அகற்றப்பட்ட பின்பு நிழலிலும் ஒளியுமிழும் நீர்மையனவாகின்றன; இவைகளே

சோதிப்பொருள்கள் (phosphorescent substances) எனப் பட்டன. அவைகளில் ஒன்ருகிய ஒளிரியக் கூட்டுப் பொருளொன்றை (a compound of Uraniam) வெயிலில் வைக்கக் கருதிய பெக்கால் ஒருக்கால் அதனின்றும் வெளிவருங் கதிர்கள் ஒளிபுகாப் பொருள்களை ஊடுருவியேகுமோ என்பதை அறிய விழைந்து, ஓர் அயத்தகட்டை ஒளிபுகாப் பொருளொன்ருல் மூடி, அதன்கீழ் ஒரு படம் பதியும் கண்ணுடியையும் ஒளிபுகா வண்ணம் ஒரு செப்பிற்குள் இட்டு மறைத்துவிட்டு, வெயிலின் வருகையை எதிர்நோக்கி யிருந்தனர். ஆனல் வெயில் வரு முன்னரே, அயத்தகட்டின் படம் கண்ணுடியிற் பதிந்திருத் தலைக் கண்டனராதலின், சோதியப்பொருள்கள் அனைத்தும் அல்லும் பகலும் அனவரதமும் பிதிர்க் கதிர்களைக் கான்று வருவனவேயென்று முடிவு கட்டலானர். அதன் பின்பு பேராசிரியர் கியூரி என்பவரும் அவரது மனைக்கிழத்தியாரும் ஒருவாறு அம்முடிபின்கண் ஐயுறவெய்தி, ஒளிரியக் கூட்டுப் பொருளின்கண் வேறு யாதேனும் கலந்துளதோ என்பதைச் சோதிக்கப் புகுந்தார். அம்முயற்சியின் பயனய் அதுகாறும் கேட்டிராத புதிய மூலப்பொருளொன்று தென்படுவதாயிற்று. அது ஒளிரியத்தினும் பன்மடங்கு மிளிரும் தன்மையதா யிருந்தது; அதுவே சுடரியம் (Radium) எனும் பெயர்வாய்ந்தது இச்சுடரியம் கண்டு பிடிக்கப்பட்ட நாள் தொட்டே அணு வினையும் பகுக்க இயலும் என்ற கொள்கை வலியுறலாயிற்று.

இதற்கிடையில் குரூக்ஸ் குழலினின்று கிளம்பிய மாற்று முனைக் கதிர்களின் இயல்பினைத் தேர்தற்கு அவாவிய அறிஞர் அவைகளின் வீதிவழியே இடையூறென்றினை நாட்டலும், அவை தடைப்பட்டதுமன்றிக் குழலில் எதிர்ப்புறத்து நேர்மை யான ஒரு நிழலை வீழ்த்தியதனல், அவை அலைகளல்லவென்றும் யாதோ ஒரு நுண்ணிய பகுதித் திரளின் பெருக்கே என்றும், ஒரு நேர் கோட்டின் வழியாக அவை இயங்குவன என்றும், அறிந்தனர். இன்னும், ஒரு காந்தத்தை அக்குழாயினருகே கொணருங்கால், அப்பகுதித்திரள் நேர் நெறியினின்றும் விலகிச் செல்வதாயிற்று; அத்திரளின் நுண்பகுதிகள் ஒவ்

வொன்றும் மின்சார மூட்டப் பெற்றிருப்பதும் நிலைநாட்டப் பட்டது. இவையனைத்தையும் கூர்த்து நோக்கியறிந்த தாம்சன் என்பார் 1897-ம் ஆண்டில், மாற்றுமுனைக் கதிர்கள் அலைகளல்ல என்றும், மின்சார மூட்டப்பெற்ற நுண்பகுதிகளின் வரிசையே என்றும், இப்பகுதிகள் மெல்லிய தகடுகளின் வழியே புகுந்து செல்லும் பண்பினவாதலின் அணுக்களினும் மிகச் சிறியன வாதல் வேண்டும் என்றும் தமது கருத்தைத் தெரிவித்தனர். பின்னர் அவ் அறிஞரே அந்நுண் பகுதிகளொவ்வொன்றின் பருமனையும் அளவிட முயன்றனர். அவரது நுண்மாண் நுழைபுலத்தின் மாட்சியால் அதனையும் ஆராய்ந்த போது, அப்பகுதி யொவ்வொன்றின் நிறை அணுக்களனைத்தினும் மிகச் சிறியதாகிய நீரய அணுவினது நிறையில் இரண்டாயிரத்தில் ஒரு கூறவ்வளவேயாகும் எனத் துணிந்தனர். இத்தகைய அணுப்பகுதிகள் 'மின்னுருக்கள்' (Electrons) எனப்பட்டன. இம்மின்னுருக்கள் எவ்வழியானே எப்பொருளினின்று பெறப்படினும், அனைத்தும் ஓரளவினதாய் இருத்தலும் பிற்றைநாட்களில் நிகழ்த்திய சோதனைகளாற் புலனாயிற்று. இதனால் சடப்பொருள்கள் அனைத்திற்கும் அடிப்படையான மிக நுண்ணிய பகுதிகள் இம்மின்னுருக்களே என்ற கொள்கை இது முதல் எங்கணும் வழங்கி வரலாயிற்று.

(தொடரும்.)

# தேம்பாவணி.

திரு. வித்துவான். ஔவை. சு. துரைசாமிப் பிள்ளையவர்கள்,
தலைமைத் தமிழாசிரியர், போர்டு உயர்தரக்கலாசாலை, திருவத்திபுரம்.

(48-ம் பக்கத் தொடர்ச்சி)

இனி, இவர் நம் நாட்டில் வழங்கும் பொருளுரைகள், பலவற்றைத் தம் நூற்கண் அமைத்துத் தமக்குத் தமிழர் வாழ்வின்கட் டோன்றிய உண்மை உடம்பாடாதலை யுணர்த்துவார்,

"வருடலென யூகவிரு புடையிலுள யாவுமற
வயவிருதர் வீழ்த்த பினர்மீளக்
கருடனகல் வார்புலவு கணையிலவர் மாற்றரசு
கரியிலுறை பேரணி யெதிர்த்தார்
புருடனினும் விஞ்சரிவை யனையவிக லெண்ணமில
பொருநனிவை கண்டு மனநோகக்
குருடனொரு காட்சியுறி னெனவதி சயித்துமலை
குவடதிர வார்த்தசனி யொத்தான்"

(தேம். 15-121)

என்னும் செய்யுளில் கொண்டானின் மிஞ்சியொழுகும் மனைவி வருவது நோக்காது தீமை விளைத்துக் கொள்வள் என்பதனை, "புருடனினும் விஞ்சரிவை யனையவிக லெண்ணமில பொருநன்" என்று கூறுகின்றார்.

பெண்ணிடந்தோன்றிய கருப்பமும், பெண்மக்களிடம் மொழிந்த மறையும் (இரகசியம்), பிறரறியாவகை நில்லாது பலருமறியத் தோன்றும் என்னும் பொருளுரையை உவமை வாயிலாக உணர்த்துவார், சஞ்சோன், தனக்கு உயிர்நிலை தன் தலைமயிரேயெனத் தாவிலையென்பாட் குரைத்த மறை அவன் பகைஞர்க்குப் புலனாக அவர் அவனைப்பற்றித் தலைமயிரை நீக்கி வலி குன்றுவித்த செய்தி கூறுமிடத்து,

"முதிர்சூலும் பெண்காதின் மொழியுநில்லா முறையிலவள்,
கதிர்சூழு முதயத்தன் றென்னார்க்கெல்லாங் காட்டியபின்,
பொதிர்சூழும் பின்னிரவி லின்பத்தன்னுள் பூமடிமே,
லெதிர்சூழும் கேடுணரான் றுஞ்சமயிரீர்த் திமிழ்த்தனரே"

(தேம். 17-34)

என்னுஞ் செய்யுளால் விளக்கினர். இப்பொருளுரை எல்லா நாட்டு மகளிர்க்கும் ஒப்ப முடிந்த தோரியல்பென்பார், "முதிர் சூலும் பெண்காதின் மொழியுநில்லா முறை" என்கின்றார். எனினும், "காதலநாத லறியாமை யுய்க்கிற்பின், ஏதில ஏதிலார் நூல்" என்னுந் திருக்குறண் மணியினை இச்செய்யுட் பணியி லமைத்திருப்பாராயின், இது, மேலும் பேரொளி திகழ்ந்திலங்கு மன்றோ!

நற்குணமும் நற்செய்கையுமில்லாத கயவர்மனம் இருள் சூழ்ந்து நிற்குமென்னும் பொருளுரையினை, யூதர் சேனைகளை யழைத்துச் சென்ற மோயீசனென்பான், மலையுச்சியடைந்து ஊணும் உறக்கமுமின்றி நின்ற வளவில், யாண்டும் இருள் மண்டிநின்ற நிலையை விளக்குமிடத்து,

"கோணிகந்தாள் வானிறைவ னேவல்கொண்ட குலக்கோமான்
சேணிகந்தான் சேண்சென்ற குன்றத்துச்சி செல்லுகின்றான்,
ஊணிகந்தான் றுயிலிகந்தான் வானோரோத்தாங் குறைந்தன
மாணிகந்தார் மனம்போல விருண்டியாவு மருண்டனவே" [சான்
(தேம். 18-13.)

என்புழி, "மாணிகந்தார் மனம்போல இருண்டு" என விளக்குகின்றார்.

உலகவாழ்க்கை மின்போல் தோன்றி யழியும் மாலையது என்னும் பொருண்மொழியினை,

"தனத்தெழுதி வைத்ததென வுறுதிஞானத் தகுதியினான்,
மனத்தெழுதி வைத்தமறை மறையத்தீமை மல்கியதால்,
கனத்தெழுதி வைத்தமின லொத்தவாழ்க்கை காதலித்துப்,
புனத்தெழுதி வைத்தபொரு ளொத்தவ்வேதம் புறத்தொழிந்
(தேம். 18-19) [தார்.

என்னும் செய்யுளில் "கனத்தெழுதிவைத்த மினலொத்த வாழ்க்கை என வமைத்தும், இவ்வாழ்க்கையைக் காதலித்துப் பொருளீட்டினர், அதனைப் புதைத்து யாற்று மணலிலெழுதி வைத்துப்பின் இழந்து அலமருவர் என்னும் அறநெறியினை "காதலித்து புனத்தெழுதி வைத்த பொருளொத்தவ்வேதம் புறத்தொழிந்தார்" என, பரமன் ஞானப்பொருளை மக்கள் மனத்தே எழுதிவைத்திருப்பவும், அதனையுணராது அவர் தீவினையீட்டினமையின், அப்பொருள் மறைந்தமைக்கு உவமித்தார். இவ்வாறு, பொருண்மொழி நிறைந்த பாக்கள் பலவுள வாகலின், இம்மட்டில் நிறுத்தி, ஆடவரொப்பப் பிறக் திறந் துழலுதலின், மகளிரை இழித்துரைத்தல் நம்நாட்டவரியல்பே என்னும் சிலர் தலைமடங்க, இஃது எந்நாட்டவர்க்கும் ஒருகாலத்

துளதாயிற்றென்பார்போல், மேனாட்டவர்க்கும் இவ்வியல்பு உண்டென்பார்,

"சிலைவல்லார்களும் சிறப்பெழு நெடும்புகழ் திளைநாற்
கலைவல்லார்களுங் கடிநிதித் திருக்கொடு பெருங்கோ
னிலைவல்லார்களு நிறுவிய மற்றவல் லாரும்
முலைவல்லார்களின் முயலினுன் முரிவியா ருண்டோ"

எனவும், (தேம். 23-84)

"போர்முகத்து நிகரின்றிப் பொலிந்தவெற்றி புனைந்துயர்ந் [தோன்
கார்முகத்து மணிக்கூந்தல் வலைப்பட்டோர் பூங்கவினல்லாள்
ஏர்முகத்து வயங்குழையச் சிதைந்ததன்மை யினிக்கேட்டார்
பார்முகத்துப் பெண்மையினோர் பழியுங்கேடு மிலையென்பார்"

எனவும், (தேம். 17-29)

"கடம்புனைந்த வளையுருட்டும் பெருஞ்சீர்ச்செங்கோற்கடிவளமும்
சடம்புனைந்து பெண்ணுசைச் சழக்கிற்கோலு மென்றுணரான்"

எனவும், (தேம். 17-30)

தீய்வயி ருர்ந்தகாலும் செஞ்சுடர்க் கதிருஞ்செந்தீ
மேய்வயி ருர்ந்துவேகும் விரிமணற் பரப்புந்தீயாய்
நோய்வயி ருர்ந்தகானம் நுடைநல மாதர்வஞ்சம்
காய்வயி ருர்ந்தவாயுங் கண்களுமனமும் போன்றே"

(தேம். 19-9)

எனவும் வரும் பாட்டுக்களாலும் பிறவற்றாலும் பெண்மையின் கொடுமையும், மனநிறையின்மையும் பிறவும் சுட்டி இழித்துக் கூறுவர். கூறினும், நம்நாட்டுப்புலவர் பெருமக்களுட் சிலரைப் போல் பெண்களின் உறுப்புக்களுள் முலையினையும் அல்குலினை யும் விதந்து கூறும் இயல்பு கண்டுளாராயினும், அவர்நெறி கைப்பற்றாது அவையிரண்டும் விலக்கிப்பாடும் நேர்மை நம் மனோர்க்கு மகிழ்ச்சி தருகின்றது. எனக்குக் கிடைத்த தேம்பா வணிப் பிரதி இரண்டாம் காண்டமே யாகலின், அதன்கண் அடங்கியுள்ள 830 செய்யுட்களினும் "முலைவல்லார்" (23-84) என்னும் ஒரு சொற்றொடர் இருசெய்யுட்களினன்றி யாண்டுங் கிடைத்திலது.

இனி, இவர் வருணித்துக் கூறும் பகுதிகள், ஆங்கிலக் கவிஞர் கூறும் திறம்போலாது, தனித் தமிழ்ப்புலவர் பாடுவன போலத் தமிழ் மணம் கமழ்ந்து நிற்கின்றன.

யேசுகிறித்து குழவியா யிருந்தகாலத்து அவர் பெற்றோர் அவரை வேறுநாட்டிற்கு எடுத்தேகுங்கால், அவரது துன்பநிலை கண்டு இரங்குவனபோல,

“ கறுகறுவெனக் கானடகை லுழ்ந்தன
ஞெறுஞெறுவெனத் தோகைகள் நைந்தழும்
புறுகுறுவுத லோடிவர் போதலால்
அறுநறுப் பொழிலா ரழுமோதையே” (தேம். 13-34)

என்றும்,

“ அலையலைந் தலர்கூப்பிய தாமரை
இலையலைந் தலைமீதெழுந் தாடலந்
நிலையடைந் தனர்நீங்கிலிர் நின்மினென்
றுலைவடைந் துகைகூப்பிய தொத்தவே” (தேம். 13-27)

என்றும், நம் நாட்டுப் புலவர் பெருமக்கள் போலவே, கோழி சிறகராற் புடைத்துக் கூக்குரலிடுதலை,

“ ஆரணந்தரு மாண்டகை யாகுலக்
காரணந் தருகட்புனல் கண்டிடார்
பூரணந் தருமார்பு புடைத்தெலா
வாரணந் தரும்வானுறக் கூக்குரல்” (தேம். 13-32)

என்றும் கூறுவர். சோலை முதலியவற்றின் அழகினைக் கூறப் புகுந்தவர். “ இருநிலமடந்தை ” (சீவக 720) என்னும் சிந்தாமணியைக் கருத்திற்கொண்டு, பூமகளை நற்றாயாகவும், மரங்களை மக்களாகவும், மழையினைக் கைத்தாயாகவும் உவமித்து

“ பார்கெழு மடந்தை யீன்ற
படர்தருகைத் தாயாம்வான்
கார்கெழு முலைத்தழீஇய
கரமெனச் சினைகனிட்டி

நீர்கெழு பாலுண்டப்பால்
நிழன்றுதன் தாயைக்காக்க
வேர்கெழுகைத் தாய்நோக
விகன்றெளி பொளிக்குங்காவே'' (தேம். 18·26)

என அழகுறப் பாடுகின்ருர். பிறிதொரு செய்யுளில், சோலையில், கொடியும் கொம்பும் பின்னி நிற்றலையும், நெடியவாய் ஓங்கி நிற்றலையும், உயரத்தே அசைந்தாடுதலையும், இருள் படப் பொதுளி யிருத்தலையும், பறவை முதலியவற்ருலும், அசைவினுலுமுண்டாகும் ஒலியினையும் தனித்தனி யுவமித்துச் சதுரப் பாடமைய,

" சிலைவளர் நாணிற்கையின்
சேர்ந்தடர்ந் திறுகப்பின்னிக்
கலைவளருணர் வினேங்கிக்
கள்ளுண்டார் தலையினுடி
விலைவளர் மகளிர்நெஞ்சின்
வெயிற்பக விருளிற்ருகி
யலைவள ரொலியினர்க்கு
மலர்முகத்த லர்ந்தகாவே'' (தேம். 18-27)

எனப்பாடியுள்ளார். வேருேர் செய்யுளில்,

" பூவிடையளிகள் துஞ்சப்
பொதும்பிடை மயில்கள் துஞ்சக்
கோவிடை யன்னந்துஞ்சக்
கொம்பிடைக் குயில்கள் துஞ்ச
மாவிடை முசுகள் துஞ்ச
மருளிடை யிரவுதுஞ்ச
நாவிடை யுரைகள் துஞ்ச
நலமெலாந் துஞ்சுங்காவே '' (தேம். 18-28)

எனக் காவின் இயற்கையைக் கிடந்தாங்கு நவின்று செல்கின்ருர்.

இனி, யேசுகிறித்துவாகிய குழந்தையைக் கொண்டேகும் பெற்ருேர், தண்ணிய பொழிலும் பூங்காவும் கடந்து கடுஞ்சுரம்

புகுந்தேகுதலைக் கூறத்தொடங்கி, சுரத்தின் வெம்மையை யுணர்த்தப் புகுந்து,

“ துயிலென விரிபூங்காத் தும்பிகள் குழலாகக்
குயிலின முழவாகக் குளிர்பொழி லரங்காக
மயிலின நடமாடு மதுவழி யதுநீக்கி
யயிலென வழல்வீசு மருஞ்சுர நெறிபோனர்” (தேம்.19-3)

என்று சோலையின் தட்பமும் அழகும் காட்டிப் பின் சுரத்தின் கொடுமையைப் புலப்படுத்தி, புண்ணியப் பொருளாயுள்ள யேசு கிறித்துவின் மென்மையும், சுரத்தின் வெம்மையும் கண்டு ஆற்றுவாய்,

“ பூவிடை யழவண்டு பொதும்பிடை யழமஞ்ஞை
காவிடை யழவம்பூக் கடிமலர் தவழ்யாறு
தாவிடை யழவந்தோ தகாதென வழயாவும்
கோவிடை யரசாள்வோர் கொடுவன மருகுற்றூர்” (தேம்.19-5)

எனப் படிப்போர்க்கு அவலத்தை மெய்ப்படுத்தி,

“ காட்டிய விரலைத்தீக்கக் கண்டகண் விழியைத்தீக்கச்
சூட்டிய கொடியகானம் சுடுமெனிலெனும் வாய்தீக்க
வீட்டிய வழலையெண்ணி லெண்ணிய மனத்தைத்தீக்கக்
கோட்டிய மனத்திற்றீக்கும் கொடியதோர் சுரமதன்றே”
(தேம். 19-7)

எனக் கூறும் பாட்டுக்கள் சுரத்தின் தன்மையை நன்கு நவிலுமாறு அமைக்கின்றூர்.

இனி, இவர் ஏனைப்புலவர்களைப் போலப் பொய்யின் இயல்பும், நாணத்தின் நடையும் பிறவும் கூறுதற்குப் பின்னிடுகின்றூரில்லை. ஒருவன் ஒரு பொய் கூறியவிடத்து, அதனை மறைப்பான் பல கூறுதலின் அது பல்குமென்னு முண்மையினை,

“ பொய்செலச் செல்லும்வாயிற் பொலிவொடு பெருகும்போல
மைசெலச் செல்லும்வாரி மருளிவந் தளவிற்பொங்கி
மெய்செலச் செல்லும்நன்றூத் தெக்கணும் வினைவுய்த்தோடிப்
பைசெலச் செல்லும்நாகப் பரிசெனச் செல்லுமாறே” என்பர்.
(தேம். 21-2)

என்பதன் கண்ணும்,

“பொய்யெழு வழியெனப் போதல் கண்டுளி” (தேம். 19-37)

என்புழியும், காதலிருவர் கருத்தொருமித்து வாழ்வு நடாத்துகையில், ஒரு பொருள் கருதிப் பிணங்கினராயினும், அவர் மாட்டு அன்பு குன்றாதே மிகும் என்னும் உண்மையினை,

“நம்பியோ டெழில்நன்மணத் துணைவியுந் தம்முள்,
வெம்பியோர் பகைவிளைந்த கால்காமமும் விளைவாம்;
தும்பிசூழலர்த் தொற்கொழு கொம்பிழந் தடுத்த
கொம்பிலேறிய கொழுங்கொடி போல்வது காண்பாய்”
(தேம். 23-95)

என்பதன் கண்ணும், குற்றமாவன கூறுவாரும் கேட்பாரும் கூடுமிடத்து ஒருவர் குற்றத்தை வெறுப்பவராயின், ஆண்டு நாணந்தோன்றித் தகைக்குமென்றும், அதனையவர் பலகாலும் கூறுவாராயின், அவர் தம் நாணம் வெல்லப் பட்டழியுமென்றும் கூறி, கொடிதேயாயினும் புலி பழகியவிடத்துச் சிறுவரும் அதனையஞ்சார் என்னும் உண்மையினை யமைத்து,

“ஒருவருஞ் செயிருரைப்பவும் கேட்பவும் செய்தால்
இருவருஞ் செயிரின்றியு நாணமே வெல்வாய்
மருவரும்புகர் பழகவே வழங்கிய முறையாம்
தெருவரும்புலி சீறினும் சிறுவரும் வெருவார்” (தேம். 23-93)

என்பதன் கண்ணும், தாம் செய்யும் நல்வினைப் பயனாய்ப் புகழெய்தப் பெற்று மகிழும் பெரியார், அதற்கு மறுதலையாய இகழ்ச்சி பயக்கும் வினைகள் தங்கண் நிகழாவகையில் தம்மைக் காப்பர் என்னும் நன்னெறிப்பொருளை,

‘புகழ்ச்சி வந்துற்ற காற்பொலிந்த மாண்பினர்
இகழ்ச்சி வந்துதிக்குமென் றெண்ணிப் போற்றுவார்
நிகழ்ச்சிவந் துதிப்பது நினைக்கிலாத பேய்
மகிழ்ச்சி வந்துவந்தன கடையின் மாழ்கவே’(தேம்.23-124)

என்பதன் கண்ணும் அமைத்துக் கூறுகின்றார்.

(தொடரும்.)

# நகைச்சுவையும் புலவர்களும்.



S. இராமச்சந்திரன் B.A.,
மௌனசுவாமிகள் மடம், கும்பகோணம்.

நமது நாட்டுப் பண்டையத் தமிழ்ப் புலவர்கள் கவிபாடுந் திறமையில் மட்டுமல்லாது சமயோசிதமாக நகைச்சுவை பெருக்கும் வசன சாதுரியத்திலும் எத்துணையோ சிறப்புற்று விளங்கினர். பிறர்முன் பேசும்பொழுது இருபொருள் பயக்குஞ் சொற்களாய் இடத்திற்கேற்ற தகுதியனவாய் முன் பின் நினைத்துவைத்துச் சொல்லாது அவ்வப்போது உடனுக்குடன் நயம்படப் பேசிய அறிவுடை மறுமொழிகள் எண்ணிறந்தன. அவைகள் கேட்போருக்கின்பம் பயப்பதோ டமையாது அறிவைக் கூராக்கவும் வல்லனவாதலின் ஈண்டு சிலவற்றைக் குறிக்கலானேன்.

எட்டையபுரத்து ஆத்தான வித்துவானாக இருந்த கடிகை, முத்துப்புலவர் ஒருநாள் தம் மனைவியின் திவசத்திற்காகக் கடையில் சில பண்டங்களை வாங்கி அவைகளை மூட்டையாகக் கட்டித் தலையிற் சுமந்து வீடு நோக்கிச் சென்று கொண்டிருந்தார். அச்சமயம் எட்டைய புரத்தரசன் புலவரை அந்நிலையில் தற்செயலாய்க் காணவே மனமிரங்கி புலவரே! என்ன மூட்டை சுமந்துகொண்டு போகிறீர்? என்று கேட்டார். புலவரோ சற்றுந் தயங்காது "அரசே! என் தலைவிதி வசம்". என்று இப் பண்டங்கள் தலைவி திவசத்திற்காக என்றும், இம்மூட்டையை இவ்வாறு சுமப்பது தலைவிதி வசம் என்றும் இருள்பொருள் பட்டு நகை விளக்கும்படி பதிலளித்தார். அரசன் புலவரின் வாக்கு நயத்தைக் கண்டு பெரிதும் வியந்ததுடன் அன்று முதல் புலவர்க்கு ஏவலாளன் ஒருவனையும் அமைத்துக் கொடுத்தாராம்.

இப்புலவர் பெருமான் நோய் வாய்ப்பட்டு மரணப்படுக்கையில் கிடக்கும்போது இவர் மகள் பாலைத் தவறுதலாக

அழுக்குத்துணியில் நனைத்து புலவர் வாயில் பிழியவே, அப்பால் அழுக்கு நாற்றம் வீசிய துணர்ந்து உட்கொள்ளாது வெளியில் துப்பினர். அதைக்கண்ட மகள், தன் தந்தைக்குப் பால் கசப்பது மரணக்குறி என்று நினைத்து, "அப்பா! பாலுங் கசக்குதோ?" என்று கண்ணீர் பெருகக் கேட்டாள். அதற்குப் புலவர் "பாலுங் கசக்கவில்லை, துணியுங் கசக்கவில்லை," என்று பதிலளித்தாராம். ஈண்டு தன் மகள் செய்த தவறுதலை நகைச் சுவை பயக்க புலவர் எடுத்துக் காட்டியது எத்துணை வியப்பு!

புலவர் உயிர் பிரியுந் தருணங்கண்டு அவர் தம் மக்கள் அப்பா! எங்களை விட்டுப் போகிறீர்களே; எங்களுக்கு இனி யார் துணை? என்று கதறினர்கள். அப்போதும் புலவர் தம் மக்களை நோக்கி, "உங்களுக்கு எட்டப்பன் இருக்கும்போது நான் ஒரு அப்பன் போனல் என்ன? அழாதீர்கள்." என்று கூறி வருத்தத்தில் ஆழ்ந்திருந்த சுற்றத்தார் அனைவரையும் அங்கும் வயிறுகுலுங்க நகைக்கவைத்தாராம். எட்டப்பன் என்பது எட்டு அப்பனையும் இவரை ஆதரித்து வந்த எட்டய புரத்து அரசனுகிய "எட்டப்பனையும்." குறிப்பது காண்க.

இராமநாதபுரம் சமஸ்தானம் அருங்கலை விநோதரும் பெருங் கொடை வள்ளலுமாகிய பொன்னுச்சாமி தேவரால் பெரிதும் போற்றப்பட்டு "சம்பிரம வளம்பெருகு தென்முகவையம்பதி தழைக்கவரு சந்த்ரோதயம்" என்று புகழ்ப்பெற்று பொலிந்து மிளிர்ந்த மாம்பழக் கவிச்சிங்க நாவலர் ஒருநாள் தேவரைக்காண அவர் வீற்றிருந்த மண்டபத்திற்குச் சென்றார். புலவர் அந்தகரானமையால் மண்டபத்தின் படியில் மெல்ல மெல்ல ஏறிச்சென்றார். அதுகண்ட தேவர். கவிராயரே! என்ன படி தட்டுதோ? என்று வேடிக்கையாகக் கேட்டார். புலவர், குலத்தில் ஆசாரியானமையால் தன் குலத்தொழிலாகிய படிதட்டுதலைக் குறிப்பது கருதி நாவலர் சற்றும் தயங்காது "இருந்தாலும் மரப்படிதானே" என்று இடையின ரகரத்தைச் சற்று அழுத்தி மறப்படி என்னும் ஓசைதரும்படி பதிலிறுத்து தேவரின் குலமாகிய மறவர் குலத்தைச் சுட்டிக்காட்டவே,

தேவர் சரேலெனத் தம் இருக்கையை விட்டெழுந்து கைலாகு தந்து புலவரைத் தம் பக்கத்தில் அமர்த்திக்கொண்டு ஆனந்தித் தாராம். என்னே புலமையின் மாண்பு!

மற்றொருநாள் கவிராயர் தேவரைக்காண விரும்பினார். அப்போது தேவர் நெற்களத்திற்குச் சென்றிருந்தமையால் கவிராயர் அங்குச் செல்ல வேண்டியதாயிற்று. தேவர் அப்போது நெற்பயிர்களை அறுவடைசெய்து கட்டாகக் கட்டுவதை மேற்பார்த்துக் கொண்டிருந்தார். அறுவடையான வயல்களைக் கடந்து செல்லும்போது பயிரின் அடிக்கட்டைகள் பாதத்தை உறுத்தியதால் கவிராயர் காலைத் தூக்கித் தூக்கி வைத்து மெதுவாகச் சென்றார். இதைக்கண்ட தேவர் நகைத்து "என்ன, கவிராயரே! விலைமகள்போலும் நடிக்கிறீர்" என்று பரிகசித் தாராம். உடனே கவிராயர் "அங்கு என்ன அறுத்துக் கட்டுதோ?" என்று சிரித்துக்கொண்டே கேட்டாராம். அம்மொழி கேட்ட தேவர் நல்லிசைப் புலவரின் வல்லமையை வியந்து புலவரை மார்புறத் தழுவிக் கொண்டாராம்.

அறத்துக் கட்டுதல் என்பது நெற்பயிரை அறுவடை செய்து கட்டாகக் கட்டுதல் என்பதொரு பொருளையும் கைம்பெண்களை மறுமணம் புரிதல் என்பதொரு பொருளையும் தந்து நிற்றல் காண்க.

---

போடி நாயக்கனூர் சமீன்தாரைக் காணச்சென்ற சில வித்துவான் தங்கள் வரவை சொல்லி அனுப்பி உத்தரவுபெற்று உள்ளே சென்றார்கள். அவர்களைக்கண்ட சமீன்தார் வாருங்கள் கவிக் கூட்டங்களே என்று வரவேற்றார். கவிக் கூட்டம் என்ற தொடர், கவிஞர் கூட்டம் என்றும் குரங்குக் கூட்டம் என்றும் கவர்பொருள்பட இருத்தலை யறிந்த அவ்வித்துவான்களில் ஒருவரான திருமலைக்கொழுந்து கவிராயர் "பிரபுவே தாங்கள் தருப் போலிருத்தலால் இங்குதானே கவிகளெல்லாம் வரவேண்டும்" என்று கவிஞர் கூட்டம் என்பதற் கேற்ப 'கற்பகதரு' என்றும்

குரங்குக் கூட்டம் என்பதற்கேற்ப 'மரம்' என்றும் இரு பொருள்பட மறுமொழி கூறினாராம். சமீன்தார் கவிராயரின் புலமைத் திறமையைப் பெரிதும் கொண்டாடி பரிசில் தந்து உபசரித்தனுப்பினாராம். கற்றாரைக் கற்றாரன்றோ காமுறுவர்!

---

ஒரு மடாதிபதியைக் கண்டு பரிசில்பெற புலவர் ஒருவர் சென்றார். புலவரைக் கண்டதும் மடாதிபதி 'வாரும் கல்விக் கிரகமே' என்று வரவேற்றார். புலவர் மடாதிபதியின் குறும்பை யறிந்துத் தானும் அதற்கேற்ப 'வந்தேன் மடத்தடிகளே' என்றாராம். மடாதிபதி புலவரின் சமயோசித சொல்லுக்குப்பெரிதும் மெச்சி தக்க பரிசில் தந்தனுப்பினாராம். "கல்விக் கிரகம்" என்ற சொல் கல்விக் + கிரகம் (படிப்பிற் கிருப்பிடம்) என்றும், கல் + விக்கிரகம் (கற்சிலை) என்றும் இருபொருள் படுதல் போல் "மடத்தடிகள்" என்ற சொல் மடத்து + அடிகள் என்றும் மட + தடிகள் என்றும் இருபொருள் படுதல் காண்க. முற்றுறக் கற்றோரின் பெற்றிதான் என்னே!

---

விறலிவிடுதூது கூளப்ப நாயக்கன் காதல் என்னும் அழியாப் புகழ்படைத்த அரும்பெருந் தமிழ்நூல்களை இயற்றியவரும், ஒன்பதூர் சமீன் சமத்தான வித்துவானுமாகிய சுப்பிரதீபக் கவிராயர் ஒருநாள் பலபட்டடைச் சொக்கநாதமுதலியார் வீட்டிற்குச் சென்றார். அப்பொழுது முதலியார் படித்துக் கொண்டிருந்தார். கவிராயரைக் கண்டதும் சொக்கலிங்க முதலியார் 'கவிராயரே! வாரும் இரும்படியும்' என்று இரும் படியும் என்ற இருசொல்லையும் சேர்த்து புலவர் என்பதற்கேற்ப இரும் படியும் என்ற உபசரணைப் பொருளும் புலவர் ஆசாரியரானமையால் அக்குலத்திற்கான கருமாரத் தொழிலாகிய இரும்பு அடியும் என்ற பொருளும்பட வேடிக்கையாக வரவேற்றார். சுப்பிரதீபக் கவிராயரா இலேசில் விட்டுவிடக் கூடியவர். அதற்கேற்ப, "பட்டடைச் சொக்கா! குறட்டைச்

சிக்கெனப் பிடி'' என்று சுடச்சுட பதிலிறுக்கவே முதலியார் கவிராயரின் கூரிய புத்தி நுட்பத்தையும் சொல்வன்மையையும் பெரிதும் போற்றிக் கொண்டாடினராம்.

"இரும் படியும்'' என்ற உபசரணைப் பொருளுக்கேற்ப நான் படிக்க ஆரம்பித்தால் உன் புலமை என் முன் நிற்கமாட்டாது ஆகையால் நீ குறட்டை விட்டுச் சட்டென்று தூங்க வேண்டியது தான் என்றும், "இரும்பு அடியும்,'' என்ற பொருளுக்கேற்ப "பட்டடைப் பையனாகிய சொக்க! நான் இரும்பு அடிக்கும்போது நீ குறட்டால் இரும்பைக் கெட்டியாகப் பிடித்துக்கொள்'' என்றும் பொருள் தோன்றும் வியப்பைக் காண்க.

---

இராசபாளையம் சங்கரமூர்த்திக் கவிராயர் என்னும் அருங் கவிப்புலவர் ஒருவர் கன்னிவாடியிற் சென்றிருந்தபோது ஒரு நாளிரவு கன்னிவாடி சமீன்தாராகிய தோட்ட மலையாண்டியப்பைய சாமிநாபக்கர் புலவரைக்காணவேண்டி கவிராயரிருந்த வீட்டுள் நுழைந்தார். அப்போது புலவர் கூடையைக் கவிழ்த்து அதன்மேல் ஒரு விளக்கை வைத்து அவ்வெளிச்சத்தில் படித்துக் கொண்டிருந்தார். இதைக் கண்ட சமீன்தார். "இதென்ன கூடை விளக்கு?'' என்றார். அதற்குப் புலவர் "தங்கள் அரண்மனையில் தங்களுக்குமுன் ஒரு குத்துவிளக்கு வைக்கப்பட்டிருக்கும், என் வீட்டிலோ நான் ஒரு கூடை விளக்கு வைத்திருக்கிறேன்'' என்று நகைச் சுவைபெருக பதிலுரைத்தாராம். இதுவும் புலமையின் விளைவன்றோ? (குத்து என்பது ஒரு பிடியளவு அதாவது சிறிய அளவு.)

---

சிவகங்கை அரசர் ஒருநாள் தன் வாயில் வித்துவானாகிய ஜவாது கவிராயருடனும் மற்றும் பல புலவர்களுடனும் அளவளாவிக் கொண்டிருந்தார். அது சமயம் அவ்வரசனைக் காண வந்த புலிக்குட்டிக் கவிராயர் வாசலில் நின்றுகொண்டு 'புலி வரு

கின்றது, என்று அரசனுக்குச் சொல்லி அனுப்பினர். இச் செய்தியைக் கேட்ட அரசன் புன்னகை பூத்து "அப்படியா இங்கு 'வேல்' இருக்கிறது; தைரியமிருந்தால் 'புலி'வரட்டுமே" என்ருராம், புலிக்குட்டிக் கவிராயர் வருகிருர் என்பதற்கேற்ப இங்கு அவரை எதிர்த்து நிற்கக்கூடிய வேற்கவிராயர் இருக்கிருர் என்றும் புலிவந்தால் அதை ஒறுக்கக்கூடிய வேல் இங்கு இருக்கிறதென்றும் பொருள் படுதல் கண்டு, அங்குக் குழுமியிருந்த புலவர்கள் கைகொட்டி நகைத்து அரசனைப் புகழ்ந்தார்களாம்.

---

ஒருநாள் புலிக்குட்டி கவிராயர் சிங்கவனம் சமீன்தாரைக் காணச் சென்ருர். அப்போது அவ்வூர் ஆத்தான வித்துவான் இவரைப்பார்த்து 'தாங்கள் யார்' என்று கேட்டார், கவிராயர் வெகு இறுமாப்புடன், "நாம் புலிக்குட்டிக் கவிராயர்" என்ருர். உடனே அவ்வாத்தான வித்துவான் 'ஓகோ! அப்படியா, சிங்கவனத்தில் புலிக்குட்டி உலாவ வந்துளதோ' என்று கூறி கவிராயரின் இறுமாப்பொடுங்க நகைத்தாராம். சிங்கம் உலாவும் வனத்தில் புலிக்குட்டிக்குப் பெருமை இல்லை என்ற குறிப்பு தோன்றுதல் காண்க. மாமிக்கோர் மாமியுண்டு, வாணருக்கோர் வாணருண்டு, சாமிக்குமேல் தகப்பன் சாமியுமொன்றுண்டன்றே!

---

கல்போதி ஜமீன் ஆத்தான வித்துவாளுக இருந்த பெரிய தம்பி ஆசாரியார் ஒருநாள் இரட்டியார் சாதிப் புலவர் ஒருவருடன் பேசிக்கொண்டே வயல் பக்கமாகச் சென்ருராம். அப்போது அவ்விரட்டியார் பெரிய தம்பி ஆசாரியாரைநோக்கி, "என்ன புலவரே தட்டான் பயிர் நன்ருகக் காய்த்திருக்கிறதா, பாரும்?" என்ருராம்.

உடனே பெரிய தம்பிப் புலவர், "ஆகா! இரட்டி உழவானதால் காய்க்கத் தடையென்ன ?" என்று மறுமொழியளித்தாராம். இரட்டி உழவு என்பது இரண்டுமுறை உழவு செய்த நில

மென்று ஒருபொருளும் உழவுசெய்த குடியானவர் இரட்டியார் என்று மற்ருெரு பொருளும் தந்து நிற்கும் விந்தையைக் காண்க.

ஒருநாள் இப்புலவரும் அச்சமீன்தாஞதிபதியின் பிள்ளையாகிய வேளாளர்ஒருவரும் மழைபெய்து ஓய்ந்தசமயம் புன்செய் பக்கமாக வந்து சேர்ந்தார்கள். அப்பொழுது ஒரு தட்டாரப் பூச்சி அதன் குஞ்சுடன் பறந்து சென்றது. அதைக் கண்ட தாஞதிபதிப்பிள்ளை புலவரை நோக்கி "அதோ தட்டான் பறக்கிறதைப் பாருமையா" என்று பரிகாசமாகச் சொன்ஞர். அதற்குப் பெரிய தம்பிப் புலவர் சிரித்துக்கொண்டே "பிள்ளையும் கூடப் பறக்கிற பறப்பை பாருமையா" என்று பரிகசித்தாராம். இஃதன்ருே பொருத்தமுள்ள பொருணயம்!

---

தேவகோட்டை வித்துவான் வன்ருெண்டச் செட்டியார் தன்னுடன் ஒரு சாலை மாணவராகப் பயின்ற திருவாவடுதுறை ஆதீனம் சின்னப் பண்டாரச் சந்நிதி ஸ்ரீலஸ்ரீ நமசிவாய தேசிகரைக் கண்டு நீண்ட நாளாகிவிட்டபடியால் அவரைக் காணச் சென்ருர். தேசிகர் செட்டியாரை வரவேற்று அளவளாவிக் கொண்டிருக்கும்போது செட்டியாரின் கல்வித் திறமையை வியந்து மிகவும் புகழ்ந்து பேசிஞர். அதற்குச் செட்டியார் சிரித்துக்கொண்டே "நான் சந்நிதானத்திற்குக் குறையப் படித்திருந்தாலும் கூடப் படித்தவன் என்பதுபற்றி சந்நிதானம் இவ்வாறு அருளியதுபோலும்" என்று நயம்பட மாற்றுரை கூறிஞராம். அதன் பொருள்நயத்தைக் கண்டு அங்கிருந்தோர் அனைவரும் செட்டியாரைப் பெரிதும் பாராட்டிஞர்களாம். கூடப்படித்தவன் என்பது அதிகமாகப் படித்தவன் என்றும் ஒருசாலை மாணவஞக உடன்பயின்றவன் என்றும் இருபொருள் தருவது அருமை யன்ருே!

---

புலவரொருவர் தல யாத்திரையாகச் சென்றபோது ஒரு சிவத்தலத்தில் தங்கிஞர். அச்சமயம் பசியெழவே புலவர்

அக்கோயில் அதிகாரியைக் கண்டு "ததியோதனமாவது புளியோதனமாவது கொஞ்சம் கிடைக்குமோ?" என்று கேட்டார். அக்கோயில் அதிகாரி இவர் பேசிய வசனத்தால் புலவரென்றறிந்து உடனே மடப்பள்ளிக்காரனை விளித்து புலவர்க்கு வேண்டிய அளவு அவ்விரண்டு சாதங்களையும் கொடுக்கும்படி உத்தரவிட்டார். புலவர் அவற்றை வாங்கி யுண்ணும்போது கல்லும் நெல்லுமாக இருக்கக்கண்டு உண்ணமுடியாமல் தயங்கிக் கொண்டிருந்தார். அதுகண்ட அதிகாரி "சாப்பாடு எப்படி இருக்கிறது?" என்று கேட்டார். அதற்குப் புலவர் "ஐயா! தாங்கள் உத்தரவிட்ட ததியோதனமும் புளியோதனமும் எள்ளோதனமாக இருக்கின்றன" என்று நகைச் சுவை தரக் கூறினாராம். எள்ளோதனம் (எள் + ஓதனம்) என்பது எள் சாதம் என்றும் எள்ளும் அதாவது இகழப்படும் சாதம் என்றும் இருள்பொருள்படும். அதிகாரியும் அறிஞரானமையால் இச் சிலேடைப் பொருளையுணர்ந்து "அன்னம் அறியாதவருக்கு இவ்வளவு போதாதோ" என்று மறுமாற்றஞ்சொல்லி, அக்கோயில் சிவன்கோவில் ஆதல் பற்றியும் சுவாமியும் சிவபெருமான் ஆதல் பற்றியும் அவர் அன்னம் அறியாதவர்—உணவு கொள்ளாதவர் என்றும் பிரமனாகிய அன்னத்தால் அறியப்படாதவர் என்றும் உட்பொருள் தோன்ற மறுமொழி தந்து புலவரைக் களிப்பித்து உபசரித்து அனுப்பினாராம். 'அன்னமறியா ரெடுப்பதையமோ அம்மானை' என்ற அருணைக் கலம்பக அம்மானை அடி ஈண்டு சிந்திக்கத்தக்கது.

---

ஒரு புலவர், கற்றோரும் மற்றோரும் விரும்பிக் கற்கும் காவடிச் சிந்தெனும் துறைபடுத்த நறுந்தமிழ்நூலை உலகிற்களித்த சென்னிகுளம் வித்துவான் அண்ணாமலை இரட்டியாரைக் காணச்சென்று அவரைக் கருவைநல்லூரில் சந்தித்தார். இருவரும் அளாவளாவிக்கொண்டே கோயிலுக்குள் சுவாமி தெரிசனத்திற்குச் சென்றார்கள். அப்போது "இவ்வூர் சாமி களவாண்டவரோ? என்று புலவர் நகைச் சுவையுடன் கவர் பொருள்பட இரட்டியாரை வினவினர். உடனே இரட்டியார்,

"அதனால்தான் அவர் மறைவாய் இருக்கிறார்." என்று பதிலளிக்கவே புலவர் இரட்டியாரின் இரட்டிப்பான புத்தியை வியந்து கொண்டாடினராம்.

களவாண்டவர் என்பதை களா + ஆண்டவர் என்றும் களவு + ஆண்டவர் என்று இருவகையாகப் பிரிக்கலாம். கருவநல்லூர்த் தலவிருட்சம் களாமரம் ஆகும். அதனடியில் சிவபெருமான் எழுந்தருளியிருப்பதால் களா ஆண்டவர் என்பதற்கு களாமரத்தினடியில் வீற்றிருப்பவர் என்று பொருள்படும். களவு + ஆண்டவர் என்று பிரிக்குமிடத்து திருட்டைக் கைக்கொண்டவர் என்று பொருள்படும். இதற்கேற்ப மறைவாய் இருக்கிறார் என்ற சொல் வேதப்பொருளாய் வேதத்தினிடத்தே (மறை + வாய்) இருக்கிறார் என்றும் ஒளிந்துகொண்டு மறைவாய் இருக்கிறார் என்றும் இருபொருள்தரும். இதுவன்றோ இன்னிசைப் புலவரின் பொன்மொழிப் பொலிவு! (களவு என்பதற்கு களாமரம் என்ற பொருளும் உண்டு.)

---

திருப்பனந்தாள் தம்பிரான் ஸ்ரீலஸ்ரீ சொக்கலிங்கசுவாமி தமது இளம்பிராயத்தில் திருவாவடுதுறை ஆதீனம் பண்டார சந்நிதி ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகரிடத்தில் பாடங்கேட்டு வந்தார். அம்பலவாண தேசிகர் பாடஞ் சொல்லிக் கொடுக்குங் காலத்தில் மடக்கி உட்கார்ந்த கால்களை இடையில் பிரித்து மடக்காமல் உட்கார்ந்த வண்ணமாகவே பாடஞ் சொல்லிக் கொடுப்பது வழக்கம். ஒருநாள் அதிக நேரம் ஆகிவிட்டதால் காலில் சிறிது வலி ஏற்படவே மடக்கி ஆசன மிட்டிருந்த கால்களைப் பிரித்து மாற்றி மடக்கிக் கொண்டு உட்கார்ந்தார். இதை எதிரில் உட்கார்ந்து பாடங் கேட்டுக் கொண்டிருந்த சொக்கலிங்க சுவாமி என்றுங் காணாத காட்சியென வியப்படைந்து "அம்பலவாணனும் கால்மாறினனே!" என்று கூறினர். அதற்கு அம்பலவாண தேசிகர் சற்றும் தயங்காமல் "அதுவும் சொக்கலிங்கத்திற்கு முன்பு தானே, குற்றமில்லை" என்று நகைச்சுவை ததும்பப் பதிலுரைத்தாராம்.

கால் மாறியது என்பது மதுரையில் சொக்கலிங்கப் பெருமான் கோயில் வெள்ளியம்பலத்தில் அம்பலவாணன் "கான்மாறி யாடின திருவிளையாடலைக்" குறிக்கும். இங்கேயும் சொக்கலிங்கத் தம்பிரான் முன்னிலையில் அம்பலவாணதேசிகர் கால் மாறி மடக்கி உட்கார்ந்ததாகக் கூறிய பொன்மொழியின் பொருத்தம் பெரிதும் பாராட்டற் பாலதன்றோ!

இம்மாதிரி நகைச்சுவை பெருக்கும் பற்பல பொருள்கள் ஏட்டில் எழுத்தில் காண முடியாமல் கர்ன பரம்பரையாய் நமது தமிழ் நாட்டில் மிளிர்கின்றன. அக்காலத்தைப்போல் கற்றவர்களை ஆதரிக்கும் கொற்றவர்களின்மையால் செந்தமிழ்ப் புலவர்கள் மேன்மேலும் விருத்தியடையாமல் அருகி விட்டனர் என்பதை எண்ணுமிடத்து யார்தான் கண்ணீர் விடாமலிருக்க முடியும்.

செந்தமிழ்ப் புலமைத் திருநா டொளிர
அந்தமில் சோதி அருள்வது கடனே.

---

## சென்னை மாகாணத் தமிழர் மாநாடு திருநெல்வேலி.

திரு. த. வே. உமாமகேசுவரம்பிள்ளை நிகழ்த்திய

# தலைமைப் பேருரை.

ஓங்க விடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத் திருள்கடியும்—ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிரோன் றேனையது
தன்னே ரிலாத தமிழ்.

சென்னை மாகாணத் தமிழர் மாநாட்டின் தலைமையை யான் பெற்றது, இம்மையில் மனிதன் பெறத்தகும் பேறுகள் யாவற்றினும் சிறந்தது என மதிக்கின்றேன். அறிஞர்களின் கூட்டத்திருந்து அவர்கள் நடுவினும் அறிவுரைகளைக் கேட்பதினும் சிறந்த ஊதியமில்லை; உயர்தனிச் செம்மொழியெனக் கற்றறிந்தோர் போற்றும் தமிழ்மொழியின் ஆக்கத்தைப்புரியும் தொண்டினும் சிறந்ததொரு தொண்டுமில்லை. எனது எளிமையைத்

தெரிந்துவைத்தும், இச்சீரிய பணிக்கு என்னை ஆளாக்கியது, கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின்பால் தாங்கள் வைத்திருக்கும் நன்மதிப்பின் பொருட்டெனத் தெரிந்து, எனது நன்றியைத் தங்கட்கு உரிமையாக்குகின்றேன்.

இரண்டாயிரம் ஆண்டுகளின் முன்னர் இந்திய நாட்டின் நிலையினையும், பிறநாடுகளின் நிலையினையும் ஒப்புநோக்குவோர் பிறநாடுகள் இருளடர்ந்திருக்கவும், தமிழ்நாடு மட்டும் நாகரிகச் சுடர் பரப்பி, செல்வமும் கொற்றமுங்கொண்டு, தலை நிமிர்ந்திருக்கவும் காண்பர். சேர சோழ பாண்டியராய முடியுடை மூவேந்தரும் செந்தமிழ்ப் புலவர்களைத் தமது துணைவராகவும், தோழராகவும் நட்புக்கொண்டு கொடை மடம் பட்ட வள்ளன்மையால் அவர்களைப் பேணிப் புரந்து வந்தனர். மன்னர் முதல் ஊழியர் ஈறாகப்பல நிலையிலுள்ளவர்களும், ஆண்பாலரேயன்றிப் பெண்பாலரும் புலமையிற் சிறந்த கலைவாணராய்த் திகழ்ந்தனர். கல்வி, பிழைப்பிற்கு வழியாய்க் கருதி இற்றை நாளில் பயிலப்படுவதுபோல் பண்டை நாளில் பயிலப்பட்டதில்லை; பல்கலைக் கழகத்தினர் வழங்கும் பட்டங்களைக் கலைவாணர் பெறுவதும், பெற்ற பின்னர் ஊழியங்களைத்தேடி அலைவதும், அலைந்து திரிந்து பதவிகளில் அமர்ந்த பின்னர், தாம் அரிதிற் கற்றுத்தேர்ந்த கலைகளின் பயிற்சியை நெகிழவிட்டு ஊதியம் ஒன்றனையே கருதுவதும்போல் அற்றை நாளிற் கருதினரில்லை. அவிச்சுவையினும் கவிச்சுவையே அயராத இன்பத்தை அளிக்கும் பெற்றியதெனத் தெரிந்து, நுண்மாண் நுழைபுலன்கொண்டு ஆய்ந்து கலையின்பத்தில் மாந்தர் திளைத்தனர். அறிவுடை யொருவனை அரசனும் விரும்பிப் போற்றிய படியால் தமிழ் நாடு கலைமலிந்த நாடாய்த் திகழ்ந்தது. இயல், இசை, நாடகம் எனுங் கலைகளே யன்றி ஓவியம் ஆதிய கவின் கலையும் சிற்பம் ஆதிய தொழிற்கலையும் ஆய கலைகள் அறுபத்து நான்கும் செழித்து வளர்ந்தன. கலையின் நுண்பொருள்களைக் கூறுதற்கான குறியீட்டுச் சொற்கள் தமிழில் இல்லையே எனப் பண்டைக் காலத்துத் தயங்கினரில்லை. திரிசொற்களைப்பெய்து நூலெழுதுவதும், இருநூற்றின் மேற்பட்ட எழுத்துக்கள்

தமிழ் நெடுங்கணக்கில் இருப்பதும். வேற்றுமொழிகளின் ஒலிக்குறிகளுக்கேற்ப தமிழில் சில பல எழுத்துக்கள் இல்லா திருப்பதும் கலைவளர்ச்சியைத் தகைசெய்யும் இடர்களெனத் தமிழர் பழிதூற்றியதில்லை. பழந்தமிழ்க் காலமுதல் வடசொற் களும் திசைச்சொற்களும் தமிழில் இன்றியமையாத விடத்து வழங்கி வந்திருக்கின்றன. ஆனல் பிறமொழிகள் தமிழுலகில் நுழைந்து பணிசெய்ய நேருங்கால் அவைகள் தமிழியலுக்கு ஏற்ப உருமாறித் தொழில்புரிய வேண்டுமென்பது ஆன்றோர் வகுத்த தமிழ் மரபு.

"வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே".

என்பது சூத்திரம். வடவெழுத்துக்களில் பல உரப்பியும், எடுத்தும், கனைத்தும் கூறவேண்டுதலின் அவை தமிழியலுக்கு முரண்படுதல்பற்றி அவ்வடவெழுத்துக்களை நீக்கி எழுதுவதே முறையென மூதறிஞர் கண்டனர். வடசொற்கள் தமிழில் பெரிதும் வழங்கத் தலைப்பட்ட பிற்காலத்திலும் இவ்வியலுக்கு மாறுபடா வண்ணம் வடமொழி ஆக்கத்திற்குச் சில விதிகளும் நன்னூலார் வகுத்தனர். சங்ககாலமுதல் இதுகாறும் தோன்றி வரும் சிறந்த நூல்கள் யாவும் இம்மொழிமரவு வழுவாமல் பாது காத்து வருகின்றன.

இற்றை நாளில் தமிழை வளம்படுத்துவேமெனத் தலைப் படும் ஒரு சிலர் தமிழ் எழுத்திலக்கணத்தில் குறைபாடுகள் மலிந்திருப்பதாகவும், அவற்றை அகற்றுதல் மொழி வளர்ச் சிக்கு இன்றியமையாததெனவும் கூறுகின்றனர். நூல் வழக்கி லிருக்கும் மொழிகளையும் அவற்றின் எழுத்திலக்கணங்களையும் இக்கொள்கையினர் நடுநின்று ஆய்வரெனில், பிறமொழிகளிற் காணும் குறைபாடுகள் சொல்லிறந்தனவென்றும், தமிழ் மொழியில் அத்துணை குறைபாடுகள் இல்லை என்றும் காண்பர். LORD CROMER என்ற அங்கிலப்புலவர் தம் மொழியின் எழுத் திலக்கணத்திற் காணப்பெறும் குறைகள் சிலவற்றைத் தொகுத்து, அவை புலனுமாறு இக்கவியில் விளக்குகின்றனர்:—

"In the English tongue we speak,
Why is "break" not rhymed with "freak"?
Well you tell me why it is true,
We say 'sew' but likewise 'Jew'?
"Beard" sounds not the same as "heard"
"Cord" is different from "word".
And since 'pay' is rhymed with "say"
Why not 'paid' with 'said,' I pray?
'Cow' is cow, but 'low' is low.
'Shoe' is never rhymed with 'foe'.
And in short it seems to me
Sound and letter disagree.

இன்னோரன்ன குறைபாடுகள் எண்ணிறந்தனவாய் மலிந்திருந்தும் அங்கில மொழியின் வளர்ச்சி குன்றினதாவென உன்னிப் பாருங்கள். கலைபயில் தெளிவும் கட்டுரை வன்மையும் ஒருங்கே உடைய அங்கிலப் புலவர்கள் தமது எழுத்திலக்கணத்தைச் சீர் திருத்த முற்பட்டனரா? அங்கில எழுத்திலக்கணத்தில் சீர் திருத்தம்புரிய முற்பட்டவர் தாமும் எய்திய பயன் ஏதேனுமுளதா? MASON OLCOTT எனும் துரைமகனார் தமிழ்கற்பதில் ஆர்வந்தழைக்கின்றார்; தமிழ் இலக்கியங்களைக் கற்பதற்கான அளவு தம் தமிழறிவை வளர்க்க ஒல்லாதெனக்கண்டு, தம்நிலைக்குத் தமிழைக் கொணர்வதே சாலுமென விழைந்து, இன்றியமையாதவை எனத் தாம் கண்ட சீர்திருத்தங்கள் சிலவற்றைச் செய்தித் தாள்களில் விளம்பரம் செய்துவிட்டனர். இந்திய நாடு முற்றுமே பயிலக்கூடியவாறு நாகரி, உருது போன்றதொரு பொதுவெழுத்தால் தமிழ் நூல்களை எழுதவேண்டுமெனவும், உலகெங்கணும் பயிலுதற்பொருட்டு உரோமன் எழுத்தாலாவது உலகப்பொதுவான ஒலிக்குறி எழுத்தாலாவது (International Phonetic Alphabet) எழுதவேண்டுமெனவும் கருதுகின்றனர். இலக்கிய நூல்களிற் காணும் செந்தமிழ் வழக்கை யொழித்துப் பேச்சு வழக்கிலுள்ள கொச்சைமொழியில் நூல்கள் எழுதப் படவேண்டுமெனத் துணிகின்றனர். ஆகார, ஐகார, ஒகர,

ஒகாரங்கள் ஏறிய மெய்யெழுத்துக்கள் அனைத்தையும் ஒருபடித்தாய் எழுதாது ணகர, னகர, றகர, லகர, ளகாரங்களுக்கு மட்டும் மாறுபட்ட குறியீடு எற்றுக்கோவெனவும், தந்நகர, றன்னகரங்கள் மிகைபட்டவை எனவும் கூறுகின்றனர். அச்சுக் கோப்போரின் துன்பத்திற்கிரங்கி, மற்றுஞ்சிலர் இருநூற்றின் மேற்பட்ட எழுத்துக்களில் சிலவற்றை அகற்றிவிட விரும்புகின்றனர்; வேறு சிலர் 'f' என்னும் அங்கில எழுத்தையும் அதுபோன்று தமிழில் இல்லாது பிறமொழிகளிற் காணும் புதிய எழுத்துக்களையும் தமிழ் நெடுங்கணக்கில் சேர்க்கவேண்டுமெனவும் கருதுகின்றனர். இக்கூறிய கொள்கைகள் நாகரிக உலகில் எம்மொழியாளரும் கைக்கொள்ளாதவை என்பது வெளிப்படை. பிறமொழிகளுக்குரிய சிறப்பெழுத்துக்களை நாடொறும் தமிழ் நெடுங்கணக்கில் சேர்த்துக்கொள்ளுவதானால், என்றும் முற்றுப்பேறடையாததாய்த் தமிழ் நெடுங்கணக்கு, தன் பெயரினை யொப்ப நீள நீண்டுகொண்டே வரும். கன்னித் தமிழெனப் போற்றப்பெறும் உயர்தனிச் செம்மொழியின் எழில் நலமும் இயல்நலமுங் குன்றிக் கேடுற்றுத் தன்னுருவே மாறிவிடும். தமிழின் எழுத்தியல், இப்போதுள்ளவாறே, பல்லாயிரம் ஆண்டுகளாக இருந்துவந்தும் மொழிப் பயிற்சிக்கோ, மொழிவளர்ச்சிக்கோ இது தடைசெய்வதெனக் கூறினாரில்லையே. வீரமாமுனிவர், போப்பையர் ஆகிய அயல் நாட்டவரும் எளிதில் தமிழ்ப்புலமை எய்தி, தமிழரும் புகழத்தகும் இலக்கிய இலக்கண நூல்களை இயற்றித் தமிழ் மொழியின் மாட்சிகளை வியந்து போற்றினரேயன்றி இக்கூறிய திருத்தங்கள் தேவையெனக் கருதினாரில்லை. ஆரியமும் தென்றமிழும் நன்குணர்ந்த நமது சமயகுரவர்கள் திருமுறைகளை அருளிச்செய்யவும், நமது ஞான குரவர்கள் ஒப்புயர்வற்ற ஞானப்பனுவல்களை இயற்றவும் தமிழ்மொழி வளஞ்சுரக்கவில்லையா? வடகலையும் தென்கலையும் நிலைகண்டுணர்ந்த நச்சினார்க்கினியர், பரிமேலழகர் ஆகிய உரையாசிரியர்கள் வடநூலார் கொள்கையில் அடிப்பட்டிருந்தும் தமிழ் மரபு இழுக்காவண்ணம் உரைநூல்கள் இயற்றினாரன்றே! வடவெழுத்தைத் தமிழில் பெய்து எழுதும் கொள்கை இன்றி

யமையாதென இவ்வுரையாசிரியர் காணவில்லையே? தமிழன்பர் என்றும், தமிழ்ப்புலவர் என்றும் தமிழை வளம்பெறச்செய் வார் போலவும், தமிழுக்குப் புத்துயிர் அளிப்பார் போலவும், வாய்ப்பறை சாற்றி அங்கிலம் வடமொழி ஆகிய பிறமொழி களில் தமக்குள்ள பெருமதிப்பினுல் தமிழ்மொழி மேல் குறை களை ஏறிட்டுக்கூறியும் தமிழ் மொழியின் சீரினை இழித்துக் கூறியும், மனம்போனவாறெல்லாம் சீர்திருத்தம் பேசத் தலைப் படுகின்றவர் போலித்தமிழரல்லவா? அங்கிலம், வடமொழி ஆகிய மொழிகளில் இக்கூறிய கொள்கைகளின்படி சீர்திருத்தங் களைப் புரிய நிரம்ப இடமிருந்தும் அவற்றைத் திருத்தத் துணி யாது, மொழியியல் தானும் தாம் உணர்ந்தறியாத தமிழ்மொழி யைத் திருத்துவோமென்பது பேதைமதியன்றோ? இத்தமி ழன்பர்களின் சீர்திருத்த முயற்சியால், தமிழன்னையின் எழில் நலம் மறுப்படாவண்ணம் பாதுகாப்பது தமிழரின் முதன்மை யான கடன் என எண்ணுகின்றேன்.

கலை நூல்கள் தமிழில் எழுதப்பெறாதது பெருங்குறை யென எல்லோராலும் கருதப்பெறுகிறது. கலைநூல்களைத் தேடுவோரில்லாதபடியால் அவை வெளிவரவில்லை என்பார் ஒரு சாரர். நூலில்லாமையால் பயில்வோரில்லை என்பர் மற்றொரு சாரர். தமிழில் எழுதப்பெறும் கலைநூல்களுக்கு உண்மை யான தேவை நாட்டில் இருந்தால், நூல்கள் ஒன்று பலவாகத் தோன்றிவிடுமென்பது எனது நம்பிக்கை. இது எவ்வாறாயினும் கலைநூல்களை எழுதுவதற்கு ஏற்ற முறை யாது என்பதுபற்றிப் பெரியதோர் ஆராய்ச்சி நிகழ்ந்து வருகின்றது. கலைநூல்களில் வழங்கும் குறியீட்டுச் சொற்களுக்கு ஏற்ற தமிழ்ச் சொற்கள் படைப்பது எவ்வாறு? அங்கிலமாதிய மேனுட்டு நூல்களில் வழங்கும் சொற்களையே எடுத்துக்கொள்ளுவதா, வடசொற்க ளால் படைத்துக்கொள்ளுவதா, அல்லது தமிழ்ச்சொற்களால் ஆக்கிக்கொள்ளுவதா என்பதுபற்றி அறிஞர்கள் கலாம் நிகழ்த்துகின்றனர். ஏற்ற தமிழ்ச் சொற்க்ள் நூலிலோ வழக்கிலோ கிடைக்குமெனின் அவற்றைப் பயன் படுத்த வேண்டும்; இல்லாதவழி தமிழில் படைத்துகோடல் வேண்டும்;

இதுவும் முடியாவிடில் பிறமொழிக் குறியீட்டுச் சொற்களைத் தமிழ்மரபிற் கேற்பத் திரித்து அமைத்துக்கோடல் வேண்டும். இதுவே பண்டையோர் கொண்ட முறை. பழைய இலக்கியங் களில் பயிலும் வடசொற்களும், திசைச் சொற்களும் பெரும் பான்மையாகத் தற்சம, தற்பவ மொழிகளாய்த் தமிழ் எழுத் தால் எழுதப்படுதலும், தமிழ்ச் சொற்களையே இணைத்து வேற்றுமொழிச் சொல்லின் பொருளைத்தருமாறு படைத்துக் கொள்ளுதலும் வழக்கமாயிருந்து வந்திருக்கின்றன. பிறமொழி யாளர்கள் கையாளும் முறைகளும் இவையே யாகும். "சார்பு நதம்" என்பதை 'நாவலம் பெயரிய பொலம்' என வழங்கினர். (நாவாய்) என்ற தமிழ்மொழியை Navy என யவனர் திரித்துக் கொண்டனர். இதுபோலவே அங்கிலேயரும் அரிசி, இஞ்சி என்பவற்றை rice, ginger என ஆக்கிக்கொண்டனர். கலை நூல்களிற் காணும் நுண்பொருள்களையும், கருவிகளையும் உணர்த்துதற்கு நாள்தொறும் புதிது புதிதாகச் சொற்கள் மேனாட்டினரால் படைக்கப்படுகின்றன. இச்சொற்களை நுனித்து ஆய்ந்தால், தாம் சுட்டும் பொருளை விளக்கும் சொற்கள் மிகச்சில; அச்சொற்களில் பல, அவை உணர்த்தும் பொருளைக் கண்ட அறிஞரின் பெயராலாதல் இடுகுறிப்பெயரா லாதல் ஆக்கப்பட்டிருத்தலைக் காணலாம். இங்ஙனம் ஆக்கப் பெறும் சொற்களை ஒருமொழியினின்றும் பிறிதோர் மொழி யில் வழங்குங்கால் தத்தம் மொழிக்குரிய எழுத்துக்களில் திரித்து எழுதிக்கொள்ளுதலும், சொற்பொருள் விளங்குமாறு தம்மொழியில் சொற்கள் படைத்துக்கொள்ளுதலும் மேனாட்டி னர் கொள்ளும் முறைகளாம். சர்மனி நாட்டினர் கலைத்திறன் மிக்க நாடுகளில் முதலிடம் பெற்றுத் திகழ்பவர் என்பதை எவரும் மறுக்கத் துணியார். அறிவுநூற் பொருள்களைக் குறிப் பதற்கான சொற்களைப் பொருள் விளங்குமாறு சர்மனியர் தம் மொழியால் ஆக்கிக்கொள்ளுகின்றனர். அவர்கள் மொழிவள மேனும் கலைத்திறமேனும் குன்றினதில்லை. இச்சீரிய முறையை என் தமிழர் கொள்ளக்கூடாது? கலைநூல்களிற் காணும் நுண் பொருள்களைக் குறிப்பதற்குத் தமிழில் சொல்லாற்றலும்

சொல்வளனும் இல்லை என்பார், தமது அறியாமையை மொழியின் மேலேற்றி ஏதம்புரிபவர் என விடுக்க. தருக்க நூல், அணி இலக்கணம், யோகநூல், ஞானநூல் முதலியவற்றில் வடசொற்கள் பலவற்றைத் தமிழில் செவ்வனே மொழிபெயர்த்திருக்கக் காணலாம்; பல வடசொற்களைத் தமிழ்ச் சொற்களாகத் திருத்தி அமைத்திருக்கவுங் காணலாம். இற்றைநாளிலோ, அங்கிலத்துறையில் கற்றுத் தேர்ந்த பட்டதாரிகள் பள்ளிச்சிறார்கள் பயிலுதற்பொருட்டு, மேனாட்டுக் கலைகளைப் பாடப் புத்தகங்களாகத் தமிழில் எழுதி வெளியிடுகின்றனர். இந்நூலாசிரியர்களிற் பெரும்பாலர் தமிழ்நூற்பயிற்சி மிகமிகக் குறைந்தவர்; தமதுள்ளக் கருத்தைத் தெள்ளிதிற் கூற வாயில்லாது விழிப்பவர்; பொருள் விளக்கமற்ற, வாய்வழங்காத, சில வடசொற்களைக் கரடுமுருடாக முடைந்து குறியீட்டுச் சொற்களெனக் கருதித் தாம் எழுதும் கலை நூல்களில் அவற்றைப் பெய்து வெளியிடுகின்றனர். மாணவர்க்கும், ஆசிரியர்க்கும் இந்நூல்கள் விளைத்துவரும் ஏதங்கள் மிகப்பல. தமிழறிவு நிரம்பாத ஆசிரியர்கள் எழுதும் கலைநூல்களாலும், பள்ளிப் படிப்பினாலும் கலைவளர்ச்சி பெருகுமென்றும், நாட்டுமொழி வளம்பெறுமென்றும் நினைப்பது பேதமையாகும். இம்மட்டோ! தமிழ் மொழியை வளப்படுத்தும் கருத்துடன், கலை நூல்களிற்காணும் நுண்பொருள்களைக் கூற, தமிழறிவு இல்லாத கலைவாணரின் உதவிகொண்டு அரசியலார் வெளியிட்டிருக்கும் குறியீட்டுச் சொற்களின் அட்டவணைகள் பல்லாற்றானும் பிழை மலிந்திருத்தலால் தமிழ் நாட்டின் நன்மதிப்பை இழந்து வழக்கற்றிருக்கின்றன. வடமொழியாளரும், அரசியலாரும் படைத்திருக்கும் குறியீட்டுச் சொற்கள் உலகர் அனைவர்க்கும் பொருள் விளங்குமாறு அமைக்கப்பெற்றிருப்பதாகக் கருதலாகுமா? தமிழ்ச் சொற்களால் குறியீட்டு மொழிகளை ஆக்கிக்கொள்ளுவதால் விளையுங் கேடுதான் என்னை? திருவாளர் பா. வே. மாணிக்க நாயக்கர் அவர்கள் மிகச்சிறந்த முறையில் கலைப்பொருள்களுக்கு ஏற்ற குறியீட்டுச் சொற்களைத் தமிழில் ஆக்கினரன்றோ? திருவாளர் மறைமலையடிகள், திருவாளர் கா. சுப்பிர

மணிய பிள்ளை அவர்கள் M.A., M.L., திருவாளர் A. சீனிவாசாச் சாரியார் அவர்கள் B.A., L.T., திருவாளர் பண்டிதமணி கதிரேசன் செட்டியார் அவர்கள் முதலாயினோர் விழுமிய நடையில் எழுதிவரும் உரைநூல்களையும், அன்னோர் புதுக் கருத்துக்களை மிக எளிதாகத் தமிழில் எழுதுவதைக் கண்டும், தமிழ்மொழி வளங்குன்றியதெனப் பழிதூற்றும் வன்கண்ணர்களின் அறியாமைக்கு இரங்குகின்றேம்.

பள்ளியிற் பயில்வோர், அங்கிலமொழிந்த ஏனைய பாடங்களைத் தமிழில் கற்றுத்தேர்வது நாட்டிற்கும் நமக்கும் நலம் பயக்குமென்ற கொள்கை நாளடைவில் நிலைபெற்று வருகிறது. பள்ளியிறுதித்தேர்வி (S. S. L. C.) லுங்கூட கலைநூற்பொருள் பற்றிய வினாக்களுக்குத் தமிழில் விடை பகரலாமெனும் உரிமை வழங்கப்பெற்றுமிருக்கிறது. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தே, கலைநூற்பயிற்சி தமிழில் நடப்பதே தமது முடிந்த நோக்கமென்று நடுத்தரத் தேர்வு (Intermediate) க்கான தருக்க நூலொன்றும், பிறநூல்களும் தமிழில் இயற்றத் தொடங்கி இருக்கின்றனர். என்றாலும், கல்லூரித் தலைவர்கட்கும், பல்கலைக்கழகத் தலைவர்கட்கும், கல்வித்துறைகளை ஆட்சிபுரியும் அரசியற்றலைவர்கட்கும், கலைகளைக் கற்பிக்கும் ஆசிரியர்கட்கும் இக்கொள்கையில் முழு நம்பிக்கையில்லை; உறுதியில்லை; ஊக்கமுமில்லை; தமிழில் கற்பிக்கும் ஆற்றலுமில்லை. இன்னபல காரணங்களால் தாய்மொழியில் கல்வியைக் கற்பித்தல் என்பது பேச்சளவில் இருக்கிறது. இன்னும் ஆட்சியில் வரவில்லை. தங் குற்றங் காணமாட்டாத ஆசிரியர், புதுவதான கலைப்பொருளைத் தமிழில் மொழிவதற்குச் சொல்வளமில்லையெனவும், கலை நூல்கள் எழுதுவாரில்லை யெனவும் பொய்க்கரிகூறி வீணே காலங் கழிக்கின்றனர். இப்பொருள்பற்றி, உசுமானிப் பல்கலைக் கழகப் பேரவையில் நவாபு மாடியார் சங்கு பகதூர் அவர்கள் M. A., 8—2—1934-ல் நிகழ்த்திய பேருரையைத் தமிழ்நாட்டுத் தலைவர்கள் பல்காலும் படித்துத் தெளிவுறுவாராக. அப்பொன்னுரையின் சுருக்கம் வருமாறு:—எங்கள் மொழித்திறனில் முழு நம்பிக்கை வைத்தோம். புதுக் கலை-

களின் கருத்தை உணர்த்த அயல்நாட்டு மொழியே இன்றியமையாத கருவி என்றும், தாய்மொழி இதற்கு ஏலாத கருவி என்றும் கொண்டிருந்த பழங்கொள்கையால் இந்தியர்கள் பழிக்கு ஆளானதுமன்றிக் கீழ் நிலையும் எய்தினர் எனக் கண்டோம். வேற்றுமொழியைக் கற்றுப் புலமை பெறவும், அதன் வாயிலாய்க் கலையறிவு பெறவும் நாம் மேற்கொள்ளும் முயற்சிகளால் இக்கொள்கைக்கு அடிமை ஆகிறோம் என்பதை நன்கு உணர்ந்தோம். வேற்றுமொழியாலன்றிக் கலையறிவும், உயர்நிலையும் எய்தவொண்ணாது நுண்மதிமழுங்கி, ஆயுந்திறனழிந்து, பாடப் புத்தகங்களை உருவேற்றி ஒப்புவிக்கும் கருவிகளாயினேம் எனத் தெளிந்தோம். தாய்மொழி தாழ்ந்த தரத்தது, கலைக்கருத்துக்களைத் தன்னகப்படுத்தவோ பிறர் உணருமாறு கூறவோ முடியாதது என்ற எண்ணங்கள் மனிதனின் ஆய்புலத்தையும், தன்முயற்சியையும் மழுங்கச்செய்யும் மனநிலையை விளைத்து விட்டன. தாய்மொழி இழிதகவுடையதெனும் கொள்கையை மறுக்கத் துணிந்தவர் சென்ற ஒரு நூற்றாண்டாக வெளிவரவில்லை. இந்திய மக்கள் கல்வியில் தேர்ச்சியடைதற்கு அங்கிலமே ஏற்ற கருவியென மக்காலே துரைமகனார் அறிக்கை விடுத்த காலந்தொட்டு, அனைவர்க்கும் தாய்மொழியில் நம்பிக்கை ஒழிந்துவிட்டது. எமது தாய் மொழியில் கல்வி வழங்குவம் எனப் பல்கலைக் கழகம் கூறிய ஞான்று பல்வகைத்தான எதிர்ப்புக்கள் இங்குத் தோன்றின. சிசுக் கொலைபுரிவோர் சிலர் கழகத்தின் கழுத்தை உடனே முறித்துவிட எண்ணினர்; சிலர் சொல்வளம் நிரம்பாத இந்துத்தானிமொழி புதுக் கருத்துக்களைக் கூறமுடியாது தடுமாற்றமுறுமெனவும், அம்மொழியைக் கருவியாகக்கொண்டு கற்பிக்குமுயலும் கலைக்கழகமும் உறுப்படாது மாய்ந்தொழியுமெனவும் கூறினர்; மற்றுஞ்சிலர் அங்கில நாட்டிலுள்ள கலைக்கழகங்களின் நன்மதிப்பைப் பெற மாட்டாதென நினைத்தனர்; யானோ இக்கலைக் கழகத்தாரின் புதுக் கொள்கையில் முழுநம்பிக்கை வைத்தவன்; கழகந் தொடங்கியவர்களின் மதிநுட்பத்தை மிகவும் மெச்சினேன்; துணிபுடன் செயல் புரிந்ததை மகிழ்ச்சியுடன் பாராட்டினேன்.

தாய்மொழிப் பயிற்சியில் தமக்குள்ள குறைவினை உன்னி, சொல்லாற்றல் இல்லையே எனக் கணக்காயர் முதலில் பயங்கினர். இதுபோது கழகந்தொடங்கிப் பத்து ஆண்டுகள் ஆயின. இந்துத்தானி மொழி புதுத் தேவைகளுக்கேற்றவாறு விளங்குவதையும், கலைநூற்பொருள்களை எளிதே கூறுதற்கு ஏற்ற கருவியாய் இருப்பதையும், உள்ளக்கருத்துக்களை முட்டின்றி மொழிவதற்குத் தம் சொல்வளம் பல்கியதையும் அக்கணக்காயரே கண்டு இன்புறுகின்றனர். இலக்கியங்களும், கணிதமாதிய கலைகளும் இயல்பிலே வந்த தாய்மொழியில் இசைவுடன் அமைந்துவிட்டன. சுருங்கக்கூறின், கழகந்தோன்றிய காலத்தே பலர் உள்ளத்தும் விளைந்த ஐயப்பாடுகள் யாவும் அகன்றொழிந்தன. புதுக்கலைகள் எல்லாம் மிக எளிதில் தாய்மொழியிலே கற்பிக்கப்படுகின்றன. இக்கழகத்தே தேர்ச்சி பெறுபவர் இந்தியாவிலும் இங்கிலாந்திலும் உள்ள கலைக்கழகங்களின் தேர்வுகட்கு எவ்வாற்றானும் தாழ்வில்லையென மதிக்கப் பெறுகின்றனர். நீதிக்கலை, மருத்துவக்கலை, சிற்பக்கலை, உழவுக்கலை ஆதிய தொழிற்கலைக் கல்லூரிகளும் சீரிய முறையில் வளர்க்கப் பெறுகின்றன."

செயற்கரிய கருமமெனத் தமிழர் கருதும் செயல்களை, உசுமானிக் கலைக்கழகத்தினர் பத்தாண்டுகளில் மிக எளிதில் இயற்றியதன் பொருட்டென்னை? உண்மையான மொழிப்பற்றும் தன்னம்பிக்கையும், எண்ணிய கருமத்தை எவ்வாற்றானும் இயற்றுவேமெனும் மனத்திண்மையுமல்லவா? தமிழன்பர் என மகுடமிட்டுக் கொள்பவரிடத்து இத்தகைய பெற்றிமைகள் காணப்படுகின்றனவா? இவர்மாட்டுத் தன்னம்பிக்கையில்லை; தாய்மொழியின் எழில் நலங்களையும், சொற்சுவை, பொருட்சுவைகளையும் காண்பதற்குரிய தமிழறிவில்லை; ஆதலால் புதுக் கருத்துக்களைப் பேசுதற்குச் சொல்லில்லையெனவும், எழுதுதற்கு எழுத்தில்லையெனவும் பழிதூற்றி அயல்மொழிகட்கு அடிமைகளாயிருக்கின்றனர். சென்னை மாகாணத்தில், கல்வித்துறையிலும் அரசியல் நெறியிலும் உயர்பதவியிலிருப்பவர்கள் அங்கில மொழியில் மதிப்பும் வடமொழியில் பற்றும் உடையவர்களாய்

அவற்றை வளர்ப்பதில் கருத்துடையவர்களா யிருக்கின்றனர். சில காலமாய் நிகழ்ந்துவரும் நாட்டுமொழிக் கிளர்ச்சியின் பலனும், சென்னைப் பல்கலைக் கழகத்தினர் F. A. B. A. தேர்வு கட்குத் தமிழைக் கட்டாயப் பாடமாக வைத்தும், தமிழாராய்ச்சிக்கழகம் நிறுவியும், தமிழகராதி வெளியிட்டும், தமிழில் B. A. Honours ஏற்படுத்தத் தீர்மானித்தும், சிறந்த தமிழ்ப்பணி ஆற்றியதாகக் கருதுகின்றனர். சற்றே ஆராய்ந்து பார்த்தால் இவையெல்லாம் வெளிமயக்கு என்பது தேற்றமாகும். B. A. தமிழ்த்தேர்விற்கு வசதிதரும் உயர்தரக் கல்லூரி சென்னை நகரத்தில் ஒன்றுதானுமில்லை; வெளிநகரங்களில் கும்பகோணம் தவிர்ந்த பிறவிடங்களில் இல்லை. தமிழ் வித்துவான் தேர்விற்கு வசதிதரும் கல்லூரி திருவையாறு அல்லாத பிறவிடங்களில் இல்லை. அங்கில மொழியையும் வடமொழியையும் வளர்க்காத கல்லூரியும், பல்கலைக் கழகமும் சென்னை மாகாணத்தில் இல்லவேவே இல்லை. சென்னைப் பல்கலைக் கழகத்தினர் முடிவு செய்த வண்ணம் தமிழ் Honours வகுப்புகள் என்றைக்கேனும் உருவாகுமோவென ஐயுற வேண்டியிருக்கின்றது. சென்னைப் பல்கலைக்கழக ஆராய்ச்சியாளர் வெளியிட்டிருக்கும் நூல்களையும், அவர்கள் செலவிட்ட தொகைகளையும் ஒப்புநோக்குமிடத்து, கழகத்தின் வேலை நன்மதிப்பிற்குரியதாயில்லை.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தார் தொடங்கிய தமிழ் வேலை சென்னைக்கழகத்து வேலையினும் சிறிதளவு சிறந்ததெனக் கூறலாம். தமிழ் மொழிக்குத் தனித்தலைமை கொடுத்துச் சீரிய முறையில் வளர்க்கும் கடப்பாடுடைய இக்கழகத்தும் ஏனைய கழகங்களை யொப்பவே தமிழுக்கு ஓர் ஒதுக்கிடமே கொடுக்கப்பட்டிருக்கிறது. மற்றக் கழகங்களில் செய்யும் வேலைகளையெல்லாம் செய்யத் தலைப்பட்டுப் பணமில்லாமை கண்டு, தமிழைச் சிறந்த முறையில் பேண வழியில்லையென மயங்குகின்றனர். தமிழில் கலைநூல்கள் எழுதுதற்குப் போதிய அளவு தொகைகள் தருவதில்லை; தமிழ் ஆராய்ச்சி வேலைக்கும், தமிழ் Honours தேர்வுக்கும், தமிழ் வித்துவான் படிப்பிற்கும் வருகின்ற மாணவர்களை ஊக்குதற் பொருட்டுப்

போதிய அளவு உதவிச் சம்பளங்கள் கொடுப்பதில்லை. தமிழ் நாட்டில் அருகிக் காணப்பெறும் நல்லாசிரியர்களைத் தேடிக் கொணர்ந்து பேணியும் போற்றியும் வைத்துக்கொள்ளுவதில்லை; வடமொழிப் பிரிவில் பல்வகைத்தாய சிரோமணி வகுப்புக்களை நிறுவத் துணிந்தவர்கள், தமிழில் வித்துவான் வகுப்பு மட்டும் வைத்து சிரோமணிப் பிரிவுகளையொத்த தமிழ்ப்பிரிவுகள் ஏற்படுத்தாதிருக்கின்றனர். இசைக் கல்லூரியில் தமிழ்க்கல்விக்கு இடந்தராமலும், தமிழிசையை வளர்ப்பதற்குரிய வழிகளை அமைக்காமலும், தமிழ்ப்பற்றுடைய மாணவர்களைச் சேர்க்காமலும் வன்கண்மை புரிகின்றனர். இப்பல்கலைக் கழகத்தின் ஆட்சிக் கழகத்தில், தமிழ் மொழிக்கும் இப்பல்கலைக் கழகத்திற்கும் சிறந்த தொடர்பு இருப்பதாகச் சட்டத்தில் புலனாகவில்லையே என வாது புரிபவர்களைச் சேர்த்திருப்பதால், அவர்களால் விளையும் தடுமாற்றங்கட்கு அளவுதானுமில்லை. பல்கலைக் கழகங்களில் உயர்பதவிகளில் இருப்பவர்களில் பெரும்பாலர் தமிழ்ப்பற்றும் தமிழறிவும் இல்லாதவர்கள். ஆதலால், இக் கழகங்களின் அமைப்பு மாறினலன்றித் தமிழ்மொழி கீழ் நிலையில் வைக்கப்படுமென்பது ஒருதலை. ஆட்சிக் கழகத்திலும் (Syndicate), கலைக்குழுவிலும் (Acadamic Council) இடம் பெறுபவர் தமிழ்ப்பற்றில்லாத மேனாட்டுக் கலையறிஞர். இவர்களால் தமிழ் வளர்க்கப்பெறுமென எண்ணுவது ஏமாற்றத்திற் கிடமாகும்.

வங்காளியர், மராட்டியர், ஆந்திரர் ஆகிய இந்தியர்கள் மிகுந்த மொழிப்பற்றுடையவர்களாய்க் காணப்பெறுகின்றனர். ஆங்கிலத்திலும், மேனாட்டுக் கலைகளிலும் புலமை நிரம்பியவர்களும் தம் தாய்மொழியில் பற்றுடையாராய்த் திகழ்கின்றனர். செல்வம் படைத்தவர் மொழிவளர்ச்சிக்கான கருமங்களிற் செலவிடுதற்பொருட்டுப் பெருந்தொகைகளைத் தருகின்றனர். தாம் கற்ற கலைநூற் பொருள்களைத் தம்மவர் எளிதில் கற்பதற்குரிய நூல்களைத் தம் தாய்மொழியில் இயற்றுகின்றனர். தமிழ் நாட்டினர் தாய்மொழி வளர்ச்சிக்காக யாது செய்கின்றனர்? தமிழ்ப் பற்றுடையவர்கள் ஒரு சிலர் ஆங்காங்கு நடாத்தி

வருகிற தமிழ்க் கலாசாலைகளையன்றி, சிறந்த முறையில் விரிவான ஏற்பாடுகளுடன் நடத்தப்பெறும் உயர்தரத் தமிழ்க் கல்லூரி ஒன்றேனும் தமிழ் நாட்டின் எல்லைக்குள் காண்பதற்கில்லை. தமிழ் வளர்ச்சிக்குச் செய்யப்பெறும் சிறு முயற்சிகள் நாடெங்கும் சிதறிக்கிடக்கின்றமையாலும், இவை சிறந்த குறிக்கோள் ஒன்றனை எய்தும் கருத்துடன் நடத்தப்பெறாமையாலும் மதிக்கத்தக்கதான பலன் இவற்றால் விளைவதில்லை. தமிழ் நாட்டிலுள்ள குறுநில மன்னர், நிலக்கிழவர்கள், செல்வர்கள் ஆதிய பெருமக்களில் பெரும் பாலர் தமிழ்மொழியிடத்து அன்பில்லாதிருக்கின்றனர்; செவியிற்சுவை புணரமாட்டாது, வாயுணர்வில் திளைப்பவராயிருக்கின்றனர். இவர்களுடைய அரண் வாய்ந்த மாளிகைகளில் கண் முதலிய புலன்களைக் கவரும் பொருள்கள் சேமித்திருப்பதன்றி, அறிவையும் மனதையும் கவரும் தமிழ் நூல்களைக் காண்பது அரிதினும் அரிதாகின்றது. நாட்டின் தலைவர்களது நிலை இதுவானால், பொது மக்களின் நிலைமையைப் பேசவும் வேண்டுமோ? சினிமா, நாடகமாதிய காட்சிகளும், கிராமபோன் பாடல்களும், 'காபி' ஆதிய உண்டாட்டுக்களும், சமயவாதங்களும், சாதிக்கலகங்களும், அரசியற்போர்களும், இன்னபலவும் அளவிறந்த இன்னல்களை விளைப்பனவாயிருந்தும், அவைகளே மக்களின் உள்ளத்தை ஈர்த்து அயராது ஊக்கி வருகின்றன. நல்ல நூல்களைக் கற்பதும், கற்றவர்கள் வாயிலாய்க் கேட்பதும் வழக்காறற்று வருகின்றன. தமிழ் நாட்டின் நகரங்களிலுள்ள புத்தகக் கடைகளில் ஆங்கிலப் பள்ளிக்கூடங்களிற் பயிலும் பாடப் புத்தகங்களையன்றி நல்ல தமிழ் நூல்களை விற்பது அரிதாகிவிட்டது. செய்தித் தாள்களையும், நொடிப்பும், நகையும் மலிந்த விகடத்தாள்களையும், காதல், களவு முதலிய சிறுமைகளை விளங்கக்கூறி அறியாமாக்களை இன்புறுத்தும் நாவல்களையுமே தமிழ்மக்கள் பேணுகின்றனர். ஞானசாகரம், ஞாயிறு, செந்தமிழ்ச் செல்வி, கலாநிலயம், தமிழ்ப்பொழில் போன்ற மாதத்தாள்களை ஆதரிப்பார் மிக மிகக் குறைந்து வருகின்றனர். சுருங்கக்கூறின், தமிழரிற் பெரும்பாலர் சிறு தொழில்களையும் சின்னீரவாகிய

இன்பத்தினையும் நாடுபவர்களாய், வாழ்க்கையின் சிறந்த குறிக்கோள்களை அறியாதவர்களாய்க் கீழ்நிலையை எய்தி இருக்கின்றனர். உலகர் போற்றிப்புகழும் உச்ச நிலையில் இருந்த தமிழ் மக்கள் ஆற்றல் குன்றி, அறிவிழந்து, கல்லாமாக்களாய் ஆனதன்பொருட்டு என்னை? தாய்மொழிப் பயிற்சியை நெகிழவிட்டோம்; தமிழ் மூதறிஞர் கூறிய உறுதிப்பொருள்களை மறந்தோம்; அன்னியரின் நடை, உடை பாவனைகட்கும், அன்னிய மொழிகட்கும் அடிமைப்பட்டோம். இதனாலன்றோ "கல்லாது நிற்பார் பிறரின்மையின் கல்விமுற்ற—வல்லாருமில்லையவை வல்லார் அல்லாருமில்லை" எனக்கூறமுடியாது நம்மவரில் 100-க்கு 95 பேர்கள் கல்லாமாந்தர் எனக் கணக்கிடலாயிற்று.

இக்குறைகளைத் தீர்ப்பதற்குரிய வழிதுறைகளை அமைப்பது கடன் எனக்கண்ட தமிழறிஞர், எவ்வகையான முன்னேற்றிற்கும் கல்வியே சிறந்த கருவி எனத்தெரிந்து ஆங்காங்கே மாநாடுகள் கூடத்தொடங்கி இருக்கின்றனர். சில ஆண்டுகளின் முன்னர்த் துறையூரிலும், சின்னாளின் முன்னர்ச் சென்னையிலும் கூட்டங்கள் நிகழ்ந்தன. ஆரவாரங்கள் மிக்கிருந்தனவேயன்றி விளைந்த பயன் யாதொன்றுமில்லை. அக்கூட்டங்கள் வீணே கூடிக் கலைந்ததன் காரணம் யாதென ஆராய்ந்து, அத்தகைய இடர்ப்பாடுகள் இங்கு விளையாது நாம் பாதுகாத்துக்கொள்ள வேண்டும். சமயத்திருத்தம், சாதித்திருத்தம் பற்றிய முடிபுகளைக் கருதத்தொடங்கினால் கலாம் விளையுமேயன்றி, நலம் காணமுடியாது. அரசியலாரும், பிறரும் செய்யவேண்டிய கருமங்கள் இவை யிவையென முடிவுகள் செய்வது அவலமாய் முடிகின்றன. மொழி வளர்ச்சிக்கு அடிப்படையான கருமங்கள் எவையென அறுதியிட்டு, அவற்றுள் சிலவற்றையேனும் நாமே நிறைவேற்ற வேண்டுமெனும் மனவுறுதியுடன் முடிபுகள்செய்ய வேண்டும். தீர்மானிக்கப்படும் முடிபுகளை ஆட்சியில்கொணர்ந்து காரியங்களை முட்டின்றி முடிப்பதற்குரியதோர் சங்கத்தை நிறுவவேண்டும். உண்மைத் தமிழ்ப்பற்றும், பிறருடன் தோழமைகொண்டுழைக்கும் ஒருமைப்பாடும் உடைய தமிழன்பர்களையே அச்சங்கத்தில் உறுப்பினராய்ச் சேர்க்கவேண்டும்.

அறிவுக்கலை, அழகுக்கலை, தொழிற்கலை ஆகிய கலைகள் அனைத்தையும் செவ்விய தமிழில் தக்கார் துணைகொண்டு இயற்ற வேண்டும்; இவ்வாறு இயற்றப்படும் நூல்களைப் பயில்வதற்குத் தொடக்கக் கல்லூரிகளையும், நடுத்தரக் கல்லூரிகளையும், உயர்தரக் கல்லூரிகளையும் நாடெங்கும் நிறுவவேண்டும்; நல்ல நூல் நிலையங்களை நாட்டவும், பொதுமக்கள் அவற்றைப் பயன்படுத்தவும் மிக மிக வசதிகள் இயற்றவேண்டும். இச்சங்கத்தின் கொள்கைகளை ஆங்காங்கு பரவச்செய்வது தமது தலையாய கடமை எனக்கருதித் தமிழ்ப்பண்டிதர் அனைவரும் இத்தமிழ்ப் பணியை மேற்கொள்ளவேண்டும். தமிழ் நாட்டிலுள்ள தமிழ்ச் சங்கங்கள் யாவும் ஒரு நோக்குடன் செயல்புரியும் பொருட்டு அவற்றை இச்சங்கத்துடன் இணைத்துக்கொள்ள வேண்டும். தமிழ்ச் சங்கங்கள், ஆண்டு விழாக்கள் நடத்துவதோடமையாது, இயல்பிற்கேற்றபடி தமிழ்க் கலாசாலையும், நூல் நிலையமும் நடத்தவும், சார்ந்துள்ள மக்கள் காவிய நலன்களை நுகரவும், கலை அறிவில் வேட்கையுறவும் வசதிகள் அமைக்கவும், தமிழில் வெளிவரும் சிறந்த நூல்களை அவ்வப்போது வாங்கவும் முன் வரவேண்டும். அரசியலாரின் துணையையோ, ஆங்கிலக்கல்லூரிகளின் ஆதரவையோ எதிர்பாராது, தமது வாழ்க்கையை நன் மதிப்புடன் நடத்திக்கொள்ளுமாறு மருத்துவம், சோதிடம், இசை நாடகம் போன்ற சில தொழிற்கலைகளையும் வித்துவான் படிப்பிற்குப் பாடமாக அமைத்துச் சிறந்த முறையில் உயர்தரக் கல்லூரி நாட்டவேண்டும். இவ்வாறன்றி, தமிழ் இலக்கிய இலக்கணங்களைமட்டும் பயின்றால் எவ்வண்ணம் B. A. முதலிய பட்டதாரிகள் பிழைக்கும் வழிதெரியாது, வேலையில்லாது விழிக்கின்றார்களோ அவ்வண்ணமே தமிழில் புலமை பெறுவோரும் தவிக்க நேரும். இசைத்தமிழ் நாடகத் தமிழ், மருத்துவக்கலை, ஓவியக்கலை, சிற்பக்கலை ஆதிய கவின் கலைகளில் தமிழ்ப்புலவர்கள் திறனடைந்தால் இக்கலைகள் வளர்ந்தோங்கும்; தமிழ்ப்புலவர் வளம்பெறுவர்; நாடும் நலனுறும். இது தமிழ்ப்பித்தனுடைய வெறுங்கனவன்று. உண்மையில் தமிழ்ப்பற்றுடைய அறிஞர்கள் ஒருங்கு சேர்ந்து, ஆங்காங்குள்ள அன்பர்களின் துணைகொண்டு

சிறிது சிறிதாகப் பொருள் ஈட்டித் தமிழ்த் தொண்டுபுரியத் தலைப்பட்டால் இவை மிக எளிதில் நிறைவேறும். தன்னம்பிக்கையும், உலையாத ஊக்கமும், தளராத முயற்சியும், கருத்து வேறுபாடு விளையக்கூடிய கருமங்களினின்றும் விலகுதலும், ஒருமைப்பாடும் கொண்டு உழைப்பவர் இத்தமிழ்த்தொண்டை மேற்கொள்ளவேண்டும். தமிழ் நாட்டின் எல்லைக்குள் அங்கிலக் கல்லூரிகள் எத்தனை, வடமொழிக் கல்லூரிகள் எத்தனை வளனுற விளங்குகின்றன! இதுகாலை அரசியற்பித்தினால் இந்திமொழியும் இந்திப் பிரசாரகரும் தமிழ்நாட்டில் பெற்றிருக்கும் ஆக்கத்தின் பொருட்டு என்ன? பிறமொழிகள் வளர்தற்கும், தமிழ்மொழி வளங்குன்றுதற்கும் காரணமாவது தமிழரின் முயற்றின்மையே யாகும். அரசியலாரையும், நாட்டின் தலைவர்களையும், மடங்களின் தலைவர்களையும், பெருஞ் செல்வரையும் பழிதூற்றுவதில் பயனில்லை.

'உழப்பின் வாரா வுறுதிகளுளவோ
கழப்பின் வாராக் கையறவுளவோ.'

என்ற பொய்யாமொழியினைக் கடைப்பிடித்துத் தமிழறிஞர் ஊக்கத்துடன் முயலவேண்டும்.

தமிழ்நாட்டின் நிலை பல்லாற்றானும் தளர்வுற்றிருக்கின்றது. நூற்றுக்கணக்கான அங்கிலக் கல்லூரிகளும், இரண்டு பல்கலைக் கழகங்களும் தமிழ்நாட்டின் எல்லைக்குள்ளிருந்தும், தமிழரிற் பெரும்பாலர் கல்லா மாக்களெனக் கருதப்படுகின்றனர். அங்கிலக் கல்லூரிகளிலிருந்து கற்றுத்தேறி வெளி வருபவர் புதுக் கொள்கைகட்கு அடிப்பட்டு, பிறர்மாட்டு அன்பும் அருளுங் கொண்டு தொண்டு புரியுமாறறியாத ஊமராய்த் தனிச்சாதியினரா யிருக்கின்றனர். அறியாமை அகலவும், நாடு நலஞ் சிறக்கவும் தமிழ்க் கல்வியே சிறந்த கருவி. தமிழ் மொழியின் ஆக்கம் பெருகுதற்குரிய வழிகளை நாடித் தமிழறிஞர் நாட்டைப் புரப்பாராக.

"எண்ணிய எண்ணியாங்கெய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்."

நலம்.



உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத்
திங்கள் வெளியீடு.

துணர்-ம் } பவ—ஆடி. { மலர் - ௪.


| | | |
|---|---|---|
| க. | கருதலளவைப் பகுதி<br>திரு. த. இராமநாத பிள்ளை அவர்கள், | 159 |
| உ. | பத்துப்பாட்டு<br>திரு. மி. பொ. இராமநாதஞ்செட்டியார் அவர்கள், | 167 |
| ௩. | தேம்பாவணி<br>திரு. வித்துவான்<br>ஔவை. சு. துரைசாமிப்பிள்ளையவர்கள், | 172 |
| ௪. | சிலசொற்களின் பொருள்<br>திரு. வே. வேங்கடாசலு ரெட்டியார் அவர்கள், | 176 |
| ரு. | நற்றிணை<br>திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள், | 183 |
| சு. | சென்னை மாகாணத் தமிழர் மாநாடு<br>திரு. கா. நமச்சிவாய முதலியாரவர்கள் M.R.A.S., | 195 |


செந்தமிழ்ப்புரவலர்,
த. வே. உமாமகேசுவரம் பிள்ளை, பொழிற்றொண்டர்.

தஞ்சைக் கூட்டுறவுப் பதிப்பகம், கரந்தை.



திரு. ம. கண்ணுசாமிப் பிள்ளை அவர்கள்,
கரந்தைத் தமிழ்ச் சங்க இலவச மருத்துவக் கூடத் தொண்டர்.

உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு

| துணர் ௰ | பவ, ஆடி | மலர் ௪ |
| --- | --- | --- |

உ

## கருதலளவைப் பகுதி I.

திரு. த. இராமநாதபிள்ளை அவர்கள், சாவகச்சேரி, இலங்கை.



### 1-ம் அதிகாரம்.



### யூகம். (Judgment)

மொழிகளின்றிச் சிந்திக்க வியலாது என்போர் கூற்று உண்மையாயின், உலகில் மொழிகள் ஆக்கப்படுமுன் மனிதர் சிந்திக்கவில்லை என முடியும். ஆதியில் சொல் இல்லையாயின் சிந்திக்கவியலாது. சிந்திக்கத் தெரியாத மக்கள் சொற்களையும் வசனங்களையும் செய்யுள்களையும் மொழிகளையும் ஆக்க ஆற்றல் இல்லாதவர்களாய் விலங்குகள் போல இன்றும் வாழ்தல் வேண்டும். அவ்வாறின்றி மக்கள் மொழிகளை ஆக்கி அறிவைப் பெருக்குகிறார்கள் என்பதை அறிவோம். விலங்குகள் ஒலிக் குறிப்பால் தம் சிந்தனைகளை உணர்த்துதலை அறிவோம். கற்கால மனிதர் சைகைப் பாஷையாலும் ஒலிக் குறிப்பாலும்

தம்மெண்ணங்களை ஒருவருக்கொருவர் உணர்த்தினர் என்பதை யும் அறிவோம். இத்தகைய இயற்கைப் பாஷை உண்டென்பது மொழிநூல் வல்லுநரின் துணிபு. பேசத் தெரியாத குழந்தை களும் சிந்திக்கின்றனவென்பது உளநூற் கொள்கையாகலின் சிந்தனைப் பொருள்களை உணர்த்துதற்கே மொழிகள் ஆக்கப் பட்டன. சொன்மூலமாக எம்முடைய எண்ணங்களைப் பிறர்க்கு அறிவித்துப் பழகினேமாகையால், சிந்திக்கும்போது எல்லாச் சொற்களையும் நினைத்தே சிந்திக்கிறோம். உருவத்தால் ஒத்த இருவரை அவர்கள் அணியும் ஆடை மூலமாக வேறாக அறிகின்றோம். அதுபோல எண்ணங்களையும் மொழிகளால் வரையறுத்துப் பிரித்தறிகின்றோமெனலாம். சிந்தனை வேறு, மொழி வேறு.

சிந்தனை எழும் வழிகளைச் சிறிது ஆராய்வாம். சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐபறிவுடைய மக்கள் தம் பகுத்தறியுமாற்றலால் பூதப்பொருள் தம்முணர்வில் தோன்றும் போதெல்லாம் வாயில்கள் மூலமாக அப்பொருளின் குணங்களை உணர்கின்றனர். ஒவ்வொரு குணமும் ஒரு வாயி லுணர்ச்சியாகும். வாயிலுணர்ச்சிகளை ஒலிக் குறிப்பால் நம் முன்னோர்கள் உணர்த்தியிருக்கலாம். இவ்வொலிகளே மொழி களாயின. குதிரை என்னும் ஒலியே குதிரை என்னும் மொழி யாகிற்று. மா போன்ற ஓரெழுத்துமொழிகள் எல்லாம் இயற்கை மொழிகளென மொழிநூல் செப்புகின்றது. ஒலிக் குறிப்பால் பொருட்களை ஒன்றினின்று ஒன்றாகப் பிரித் துணர்ந்து பெயர் சாதி குணமுடையவாகச் சிந்தித்தல் மனசின் காட்சியெனப்படும். ஒருபொருள் வாயிற்காட்சியாம்போது அதை நாம் முன்னறிந்தபொருள்களோடு ஒப்பிட்டு வேற்றுமை நோக்கி அப்பொருளுக்குப் பெயரிடுவோம். இஃதேமானதக் காட்சி; மனத்தினது காட்சியென விரியும். வாயிற் காட்சியைப் புலன்களால் உணர்வோம். மானதக் காட்சியை உள்ளத்தினல் உணர்வோம். மானதக் காட்சியெனினும் உளக்காட்சி யெனினும் ஒக்கும். காட்சிப் பொருளை விடயம் என்பர் உள நூலார். விடயப் பொருள்களை மானதக் காட்சியினல்

உணர்ந்து அதற்குப் பெயரிடுகிறோம். முன்னிலைப் பொருட்களைச் சுட்டி யறிதற்கு மொழி வேண்டப்படுமாதலின் மொழியும் சிந்தனையும் ஒன்றனை ஒன்றுபற்றி நீக்கமின்றி நிற்குமென்பர். ஒரு குதிரை விடயமானால் உள்ளம் நான் ஒரு குதிரையை அறிகிறேனெனச் சிந்திக்கும். குதிரை கட்புலனாகும்போது பொறியுணர்ச்சியாகி வாயிற்காட்சி மாத்திரையாகத் தோன்றிப் பின்னர் மனம் சித்தம் புத்தி அகங்காரம் என்னும் அகக்கருவிகளின் தொழிலால் மானதக் காட்சியாக நிலைக்கும். குதிரையை விடயிக்கும்போது இது ஒரு குதிரை என்றும் நான் ஒரு குதிரையைக் காண்கிறேன் என்றும் குதிரை ஒரு நாற்கால் மிருகமென்றும் ஒன்று முதலாகப் பல சிந்தனைகள் உதிக்கும். இது ஒரு குதிரை என்றாற் போன்ற சிந்தனை யூகமெனப்படும். சிந்தனைகளை ஒவ்வொன்றாய் மொழிகின்றது யூகமாகையால், யூகம் சிந்தனையின் அளவைத்திட்டமெனப் படும். ஒரு தனி யெண்ணம் யூகமாகுமென்பதை யறிக. சிந்தனை யுலகில் யூகங்கள் தொடையலாகவே யிருக்கும்.

ஒரு யூகத்தைப் பிறர்க்கு உணர்த்தும்போது வசனமாக மொழிகிறோம். வசனத்தைத் தருக்க முறையாகக் கூறின் தாட்டாந்தம் எனப்படும். மனிதன் ஒரு பிராணி என்னும் யூகத்தைப்பற்றி ஆலோசிப்போம். மனிதன் ஒரு மானதக் காட்சி என்றும் பிராணி ஒரு மானதக் காட்சியென்றும் இவ்விரு காட்சிகளைப் புணர்த்தியே மனிதன் ஒரு பிராணி என்னும் யூகத்தை பெறுகிறோமென ஒருசாரார் கூறுப. இம்மதம் அடாது. இம்மதத்தை இக்காலத்து அளவை நூலோரும் உள நூலோரும் கண்டிக்கிறார்கள். மனம் ஒரு காரணமுமின்றி இருகாட்சிகளை ஒத்து ஒருங்கு சிந்தியாது. யாதேனும் ஒரு நினைவு காரணமாகவே இருகாட்சிகளை ஒருங்கு சிந்திக்கும். யூகத்தின் பொருளை உணர்ந்த பின்னரே மானதக் காட்சி ஒன்றைப் பெறுவோம். மானதக் காட்சி என்பதென்ன? நிகழும் ஓர் வாயிற் காட்சியை எமது பழைய அறிவுடன்சேர்த்து அறிவின் அங்கமாக்குதலே. உதாரணமாகக் குதிரையொன்று கட்புலனானால் அது ஒருவிடயமாகும். விடயமாம்போது முதன்

முதல் அது ஒரு வாயிற்காட்சியே. இவ்வாயிற் காட்சி பெயர், சாதி, குணம் முதலியன அறியப்படாத பொருளைக் காட்டலின் நிருவிகற்பக்காட்சியாகவே இருக்கும். விடயம் குதிரையோ குற்றியோவென நிருவிகற்ப நிலையில் தெரியாது. நிருவிகற்ப வுணர்வால் பல ஐயங்கள் மனசின்கண் எழும் ஐயங்களை நீக்கு தற்கு மனம் அந்தக்கரணங்களை அதிட்டித்து இந்த நிருவிகற்ப வுருவைப் பெயர், சாதி, குணம் முதலியவற்றான் நிச்சயித்து சவிகற்பமாய் உணரும். சவிகற்ப வுணர்வாகும் நிலையில் மானதக் காட்சி ஒன்று நிகழும். ஒரு பொருளுள் வாயிற் காட்சியாகப் புலப்பட்டு மானதக் காட்சியாகுந்துணையும் நிகழும் தொழில்கள் எல்லாம் விடயித்தல் என்னும் ஒரு சொல் லால் கூறப்படும். முன்னறிந்த மானதக் காட்சிகளோடு இந்தக் குதிரை என்னும் மானதக் காட்சியை நோக்கி குதிரை கருப் பையில் தோன்றும் விலங்கென்றும் நாட்டு விலங்கென்றும் புதிய அறிவை அடைவோம். குதிரை என்னும் இப்புதிய உணர்வை மாடு ஆடு முதலிய பழைய அறிவினும் வேறாய் உணர்ந்து பழைய அறிவின் ஒரு உறுப்பாக்கலே சவிகற்ப உணர்வு. இச்சவிகற்ப உணர்வு ஒரு உள்ளக்காட்சியே; இவ் வுணர்வை யூகமொன்றால் மொழிகின்றோம் இவற்றை விரித் துரைத்தல் மற்றொன்று உரைத்தலாகும். உளநூற்குரிய தாகலின் ஆண்டு ஆராய்க.

மனிதன் ஒருபிராணி என்னும் யூகத்தை எல்லா மனிதரும் பிராணிகளென்னும் தாட்டாந்தமாக உரைக்கலாம். தாட்டாந் தம் இருபதங்கள் உடையது. மனிதன் ஒரு பிராணி என்புழி மனிதன் எழுவாய் பிராணி பயனிலை; ஈண்டு மனிதனை ஒரு உள் பொருளாகவும் பிராணியை அப்பொருளின் குணமாகவும் கொள்வோம். தாட்டாந்தங்கள் பதார்த்தத்திற்கும் பதார்த்த குணங்களுக்குமுள்ள தொடர்பையேமொழிகின்றன. ஒருபொரு ளுக்கும் அதன் பண்புகளில் ஒன்றுக்குமுள்ள தொடர்பைத் திட்டாந்தம் மொழியும். மனிதன் பிராணி என்புழி மனிதன் பிராணித்தன்மையுடையவன் என்பது பொருள். மனிதன் ஒரு உள்பொருள் பிராணித்தன்மை அப்பொருளின் ஒரு பண்பு.

அளவைநூலார் பொருளைப் பண்பாகவும் கொள்வர். பொருளைப் பண்பியென அழைப்போம். பண்பை யுடையது பண்பி. உலகப்பொருட்கள் பண்புகளையுடையன. இனி இப் பண்பு களே பண்புகளையுடையன. காட்டாக, மனிதன் ஒருபொருள், நடத்தல் அதன் ஒரு பண்பு. நடத்தல் விரைவாக நடத்தல் மெதுவாக நடத்தல் என்றாற்போலப் பல பண்புகளுடையது. நடத்தல் என்னும் மொழி மனிதனை நோக்கப் பண்பாதலையும் வேகத்தை நோக்கப் பண்பியாதலையும் அறிக. அறங்கள் நல்லொழுக்கங்கள் என்புழி அறம் ஒரு பொருளாகச் சிந்திக்கப் பட்டது. இலக்கணத்தில் முதல் சினைகளுக்குள்ள தொடர்பு ஈண்டு நோக்கற்பாலது. மனிதனை நோக்கக் கை சினையாதலும் விரலை நோக்கக் கை முதலாதலும் யாவருக்கும் உடம்பாடே, பொருள்களையும் பண்புகளையும் குணகுணிமாத்திரையாக தாட்டாந்தங்களில் மொழிகின்றனர். குணியென்பது குணத்தை யுடையது. மக்கள் பிராணிகள் என்புழி மக்கள்குணம் பிராணித் தன்மை குணம். தாட்டாந்தம் இருபதங்களை உடையது. இலக்கணத்தில் உபயோகப்படும் மொழிகள் எல்லாம் பதங்க ளாகா. இடைச்சொற்கள் உரிச்சொற்கள் வினையெச்சம் பெய ரெச்சம் எனவெச்சம் முதலியன ஒரு பொருளைச் சுட்டாவாகை யால் தனியே நின்று பதமாகா. இனிப் பலசொற்கள் ஒருங்கு நின்று ஒரு பதமாகலாம்.

இலக்கண வசனத்தில் எழுவாயும் பயனிலையும் இருப்பது போல தாட்டாந்தத்தில் எழுவாயும் பயனிலையும் உண்டு. ஒரு-உள்பொருளை (பதார்த்தத்தை) ஒரு சொல்லாலேனும் பல சொல்லாலேனும் உணர்த்தும் மொழி எழுவாய் எனப்படும். எழுவாய் ஒருமொழியாகவும் தொடர்மொழியாகவும் இருக்கும். இலக்கண எழுவாயும் அதன் விசேடணங்களும் சேர்ந்து தருக் கத்தில் எழுவாயாகும். தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் வந்தான், என்புழி தலையாலங் கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் என்பது எழுவாய். பயனிலை ஒரு எழுவாயின் பண்பை உணர்த்தும். பயனிலை பெயர்வினை இடை உரி என்னும் நால்வகைச் சொற்

களையுடையதாக இருத்தல் கூடும். மாடு இரை மீட்கும் மிருகம், என்புழி இரை மீட்கும் மிருகம் பயனிலை. இலக்கண வசனம் தாட்டந்தமாக மாறுதலடையும்போது விகற்பமடையும். வாலுள்ள குரங்குகளெல்லாம் நாலுகாலால் நடக்கும் விலங்கினத்தைச் சேர்ந்தவை. எல்லா (வாலுள்ள குரங்கு களும்) :—எழுவாய் (நாற்கால் விலங்குகள்) :—பயனிலை. மலை தீயுடையது என்பது எல்லா மலைகளும் தீயுடையபொருட்கள் என விகற்பிக்கும். யாண்டு மலை ஆண்டுத்தீ எனினும் ஒக்கும்.

2. பொருட்பதம், பண்புப்பதம் (Concrete and abstract):- உயர்திணை அஃறிணைப் பெயர்கள் எல்லாம் பொருட் பதங்கள். உயிராகிய பொருளும் உயிரல்லாத பொருளுமெனப் பொருள் இருவகைத்து. பண்புகளுடையதாக ஒரு பொருளைச் சிந்திக்கும் போது அப்பொருளை உணர்த்தும் பெயர் பொருட்பதமெனப் படும். பொருட்பெயர் இடப்பெயர் காலப்பெயர் சினைப்பெயர் முதற்பெயர் என்பன தருக்கத்தில் பொருட்பதமாகும். இயற் பெயராகிய மக்கட்பெயர்களும் பொருட்பதமாகும். சாத்தன் என்றாற்போல, பொருட்பத உதாரணங்கள் மரம் இம்மலை; குறிஞ்சி நிலத்தன் இந்நாட்டான்; திருவோணத்தான், முதற் சங்க காலத்தான்; தலை, வேல்நெடுங்கண்; கந்தன், ஆசிரியர் நச்சினார்க்கினியர். ஒரு பண்பை அதனோடு சம்பந்தமாகிய பொருளினின்று பிரித்துச் சிந்தித்தால் அப்பண்பு பண்புப் பத மாகும். குணப்பெயர் தொழிற்பெயர்கள் பண்புப் பதங்க ளென வழங்கப்பெறும். உதாரணங்கள் வெம்மை வட்டம் சருச்சரை நடத்தல், நட்பு தவறிழைக்குந் தன்மை. குழுப்பெயர் என்னும் தொகுதிப்பெயர் (collective noun) பொருளைக் கருதும்போது பொருட்பதமாகவும் பண்பைக் கருதும்போது பண்புப்பதமாகவும் உரைக்கப்படும். உதாரணம் படை, பட்டி கூட்டம், சனசமூகம் மந்தை திரள் சபை. உலகத்துத் தோற்றங்கள் எல்லாம் பொருளென்றும் பொருட் குணங்களென்றும் இருபெரும் பிரிவாகும். இவ்வுண்மை தத்துவ நூலோரால் நிலை நிறுத்தப் படுகிறதாகையால் ஈண்டு அதை உரையாகக் கொள்வோம்.

3. பொதுப்பெயர் சிறப்புப்பெயர் General Term: singular Term: பூதப்பொருள்களின் ஒப்புநோக்கி பொருட்களை வகுப்புக்களாக்குகிறோம். சிற்சில குணங்களால் ஒப்பாகி ஒரு வகுப்பைச் சேர்ந்திருக்கும் பொருட்கள் ஒருபொதுப்பெயரான் வழங்கப்படும். உதாரணம் மரம், புத்தகம், ஆராய்ச்சிநூல் முக்கோணம் மாடு. புத்தகமென்புழி பலவகைக்கலை ஆராய்ச்சி நூல்களையும் (Science) வித்தைப் பயிற்சி நூல்களையும் Arts குறிக்கும். மரமென்புழி பனை தென்னை ஆல் அரசு என எம் மரத்தையும் பொதுவாய்க் குறிக்கும். இப்பொது வகுப்பைச் சேர்ந்த ஒரு பொருளை தனிப்பொருளாக வெடுத்துப் பெய ரிட்டுச் சொல்லும்போது அதன் பெயர் சிறப்புப் பதமாகும். உதாரணம் இந்தப் புத்தகம், இந்த மரம், சாத்தன், ஆலமரம் எப்பொதுப் பெயரும் சுட்டுப்பெறின் சிறப்பாகும். இயற் பெயர்கள் சிறப்புப் பெயராகும். இந்தச் சனசமுகம் இந்தப் படை என்றால் சிறப்பு. நிலப்படை கூலிப்படை பகைப்படை எனக் கருதும்போது படையென்னும் பொதுப் பதம் அடை படுத்து சுட்டாகும். சனசமுகம் என்புழி வகுப்பைக் கருது மாயின் பொதுப் பெயராகும். இந்தச்சன சமுகமென ஒன்றைச் சுட்டுமாயின் சிறப்பாகும். பொதுச்சிறப்பு என்பன பொருட் குணங்களல்ல. பொருட்களைப் பற்றிச் சிந்திப்போர் தத்தம் நோக்கத்திற்கேற்க பெயர்களைப் பொதுவாகவும் சிறப் பாகவும் வழங்குவர். ஆல் என்பது மரத்தை நோக்க சிறப்பு; பல ஆலமரங்களையும் குறிக்கு மாதலான் ஆல் ஒருபொதுப் பெயரென மொழியலாம்.

பொருட் பதங்களை பொருட்பொதுப்பதம், சிறப்புப் பொருட்பதம் எனப் பிரிக்கலாம். மரம் இலக்கியம் பொதுப் பொருட் பதங்கள். அவற்றின் சிறப்பு வேம்பு திருக்குறள் என்றாற் போல்வன. சிலர் பண்புப் பதங்களை பொதுப்பண்பு சிறப்புப் பண்பு எனப் பிரிக்க வியலாதென்பர். பண்பென்பது ஒரு நிலையே. கருமையென்னும் பண்பு ஒன்றே. பல கருமை யில்லையாகலான் கருமையென்னும் பொதுவகுப்பு இல்லை, இது நிற்க. பண்புகளைப் பண்பிகளோடு சேர்த்துச் சிந்தித்தால்

பொதுப் பண்பு சிறப்புப் பண்பெனப் பிரிக்கலாம். யாங்ஙன மெனில் பண்பிகள் பொருட்களே. ஆனல் அவ்வாறு பண்பின் இலக்கணத்திற்குமாருக சிந்திக்கக் கூடாது. சிலர் பண்புப் பெயரிலும் பொது சிறப்பு நோக்குகிருர்கள். பொதுப் பண்பு நிறம், ஓசை. சிறப்புப்பண்பு—வெண்மை கருமை பொன்மை இன்னிசை. நிறமென்னும் பண்பு வெண்மை கருமை முதலிய வற்றின் பொதுவென்பர். பொதுப் பண்பு இல்லையென்னும் மதத்தார் நிறம் வெண்மையாகவேனும் கருமையாகவேனும் பிறிதாகவேனும், இருக்குமெனமொழிந்து நிறமென ஒருபொதுப் பண்பு இல்லையென மறுப்பர். இவரது மதம் சரியாயின் மா மெனப் பொதுப்பெயர் இல்லையென முடியும். பொருட் பெயருக்கு பொது உண்டாயின் பண்புப் பெயருக்கும் பொது வுண்டு. என்னே? ஓசையை தூங்கலோசை துள்ளலோசை செப்பலோசை அகவலோசை என வகுக்கிருேமல்லவா? ஈண்டு ஓசையென்னும் பண்பு ஒரு வகுப்பாகச் சிந்திக்கப்படுதலான் அது ஒரு பொதுப் பதமாகும்.

4. உடன்பாட்டுப் பதம் எதிர்மறைப்பதம். இனி மொழிகளை உடன்பாட்டுப்பெயர் எதிர்மறைப் பெயரெனப் பிரிக்கலாம். உதாரணம்,

| உடன்பாடு | எதிர்மறை |
|---|---|
| இன்பம் | துன்பம் |
| சூடு | குளிர் |
| இருள் | வெளிச்சம் |
| அறிவு | அறியாமை |

இன்பம உடம்பாடாயின் துன்பம் எதிர்மறை; துன்பம் உடன் பாடாயின் இன்பம் எதிர்மறை. ஒருவனுக்கு இன்பமானது பிறருக்குத் துன்பமாகும். ஒருபொருளை ஒரு அமையத்தில் ஒருவன் சூடாயிருக்கிறதென்றும் பிறிதோர் அமையத்தில் குளிராயிருக்கிறதென்றும் மொழிவதைக் காண்டாமன்றே! குளிர் என்பது எத்தனை பாகைக் குறைந்தது சூடு எத்தனை பாகைக் கூடியதென ஒருவராலும் சொல்லவியலாது. குளிர் சூடு என்பன வரையறுக்கப் பட்ட பதங்களல்ல. உடன் பாட்டுப் பதங்களும் எதிர்மறைப் பதங்களும்; ஒன்று ஒன் றற்கு மறுதலை அல்லவாகலின், உடன்பாடு எதிர்மறைப் பெயர் களை விரோதப் பதங்கள் என்போம். (தொடரும்.)

# பத்துப்பாட்டு.

## பொருநராற்றுப்படை.



திரு. மி. போ. இராமநாதஞ்செட்டியார் அவர்கள்,
மாபூஸ்கான்பேட்டை சோழவரம் போஸ்டு, சென்னை.

'அமிழ்தினிற் சிறந்த தமிழெனுமடந்தை கந்தரத்தணி மணிக் கலனரசென்ன உத்தமர் புகழுமிப் பத்துப்பாட்டாவது' கடைச்சங்கப் புலவர் பெருமக்களாகிய நக்கீரர் முதலிய பதின்மரால் பாடப்பெற்று அவர்கள் காலத்திலேயே ஒரு நூலாகத் தொகுக்கப்பட்டது. அப்பாட்டின் பெயர்களை,

முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
பெருகு வளமதுரைக் காஞ்சி—மருவினிய
கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்
பாலை கடாத்தொடும் பத்து.

என்னும் வெண்பாவானறிக.

இப்பாக்கள் ஒவ்வொன்றும் மிகப்பல அடிகளால் மேம்பட இயற்றப்பட்டு ஆற்றொழுக்கின்றி யரும் கொண்டுகூட்டுடையவாய், புதிதாகக் கற்பார்மனத்தைத் துன்புறுத்தும் பண்புடையதாதலின், அக்கற்பார் தமக்கோர் பொற்பாயிருக்குமெனக்கருதி உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினிய ருரையைத்தழுவி வசன நடையில் எழுதத்துணிந்தேன். அவற்றுள் திருமுருகாற்றுப்படையைச் சிலர் முன்னமே எழுதி இருத்தலைக்கருதி முதலில் பொருநராற்றுப் படையைப் பொறித்தேனாயினும் இது முடிந்தபின் முருகாற்றுப்படையையும் அதன்பின் சிறுபாணாற்றுப்படை முதலியவற்றையும் முறையே எழுதுவல். இவ்வுரை நடையின் இடை யிடையே குறித்திருக்கும் எண்களெல்லாம் அவ்வப் பாக்களின் அடியெண்களைக் காட்டுவனவாகும். பொருநராற்றுப்படையாவது பரிசில் பெற்றானொரு

* பொருநன் பரிசில் பெறக்கருதிய பொருநனை இளஞ்சேட்சென்னி புதல்வனுகிய கரிகாற்பெருவளத்தானிடத்தே ஆற்றுப்படுத்தியதாக அக்கரிகாற்பெருவளத்தானை முடத்தாமக்கண்ணியார் பாடியது.

(1-3) இடையறாத புதிய செல்வ வருவாயினையும் பரந்த இடத்தையுமுடைய பெரிய ஊர்களிடத்துத் திருவிழா நடந்தேறிய பின்னுட்களில் அவ்விடத்துப் பெறும் உணவை விரும்பாது விழாநடக்கும் வேற்றூர்களைக் கருதிச்செல்கின்ற ** தடாரிப்பறையை வாசிக்கும் உபாயங்களை யறிந்த பொருநனே! (56-57) மிடற்றுப்பாடலைப் பொருந்திப் பயன்களைத் தன்னிடத்தே யுடைத்தாகிய யாழையுடைய கூத்தர்க்குத்தலைவனே! பிறர்மனத்துக்கொண்ட பொருளைக்குறிப்பாலறிய வல்லவனே! (60) புறத்தார் புகழை அரச சபைகளில் மேம்படுத்த வல்லவனே! (63) குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்னும் ஏழிசைகளையுடைய நரம்பேழின் கண்ணும் உரிமை யுடையவனே! (25-42) யாற்றின்கண் கருமணலையொக்குங் கூந்தலினையும், பிறைச்சந்திரனைப்போன்ற அழகினையுடைய நெற்றியினையும், கொலைத்தொழிலைச் செய்யும் வில்லைப் பொருவும் வளைந்த புருவத்தினையும், அழகிய கடையினையுடைய குளிர்ச்சியையுடைய கண்ணினையும், இலவினது இதழையொக்கும் இனிய மொழியையுடைய செம்மையையுடைத்தாகிய வாயினையும், பலவாய் ஒழுங்குற்ற முத்துக்களை யொத்த குற்றந்தீர்ந்த வெள்ளிய பல்லினையும், மயிரை வெட்டுங் கத்தரிகையினுடைய மாட்சிமைப்பட்ட வளையத்தை யொத்த பொலிவமைந்த மகரக்குழையினது அசைவினைப் பொறுத்தல் சான்ற காதினையும், நாண் வருத்துதலாற் பிற ஆடவரை நோக்காது கவிழ்ந்த நன்மை விளங்குகின்ற கழுத்தினையும், காற்றடித்தலால் அசைகின்ற மூங்கிலை யொத்த பருத்த தோளினையும்,

* பொருநர் ஏர்க்களம் பாடுவோர் போர்க்களம் பாடுவோர் பாணிபாடுவோரெனப் பலராவர் அவருள் இவன் போர்க்களம் பாடுவோன்.

** இவன்தடாரிப்பறை வாசிக்கும்பொருந னென்பதை இப்பாட்டின். 70-73 ஆம் அடிகளாற் காண்க.

மெல்லிய மயிரினையுடைய முன்னங்கையினையும், நீண்ட மலையின் மேலுள்ளனவாகிய காந்தள்போலும் மெல்லிய விரலினையும், கிளியினது வாயோடு ஒப்பினையுடைய ஒளிவிடுகின்ற பெருமையை யுடைத்தாகிய நகத்தினையும், கண்டார்க்கு வருத்தமெனத் தோன்றின தேமலையணிந்த மார்பிடத்தே ஈர்க்கும் இடையே நுழையமுடியாத எழுச்சியையும் இளமையையும் அழகையுமுடைய முலையினையும், நீரின் கண்ணே தோற்றுகின்ற சுழிபோலும் உத்தம இலக்கணங்கள் நிறைந்த உந்தியினையும், கண்டார் உண்டென்று கருதமுடியாத வருந்துமிடையினையும், பலவண்டினங்களின் இருப்பையொத்த பல மணிகள் கோர்த்த சரங்களையுடைய மேகலையை யணிந்த அல்குலையும், பெரிய பெண்யானையினுடைய துதிக்கையைப்போலத் தம்மில் நெருங்கித்திரண்டதுடையினையும், கணைக்காலுக்கு இலக்கணமென்றற்குப் பொருந்திய மயிரொழுங்குபட்ட ஏனையிலக்கணங்களுந் திருந்தின கணைக்காலுக்குப் பொருந்த பெருமைதக்கிருக்கும் ஓடியிளைத்த நாயினது நாப்போலச் சிறிய அடியினையும், பெண் மயிலருகு நின்ற ஆண்மயில் போலுஞ் சாயலினையுமுடைய கல்விப் பெருமை தக்கிருக்கின்ற பாடினியானவள்; (43) சாதிலிங்கத்தை உருக்கின தன்மையை யொத்த சிவந்த நிலத்தே நடத்தலினாலே (42) அப்பாடினியது பாதங்கள் (44) * சுக்கான் கல்லாகிய பகையாலே வருந்தின நோயோடே பொருந்தி (45) மரல் பழுத்தாற் போன்ற துளும்புகின்ற நீரையுடைய கொப்புளத்தால் தனக்குவந்த (50) வருத்தத்தைத் தாங்கி (46) நன்றாகிய உச்சிக்காலமான சந்தியிலே நடத்தலை நடுவே தவிர்ந்து (48-49) நாள்தோறும் யானைகள் செல்லும் வழியையுடைய சாட்டிடத்தே (50-51) இலையில்லாத மராமரத்தினிடத்தவாகிய வலையை மேலே கட்டினாலொத்த மெல்லிய நிழலினிடத்தே (49) தங்கி; (4-22) மான்குளம்பு அழுத்திய இடத்தையொத்த இரண்டுபக்கமுந்தாழ்ந்து நடுவே யுயர்ந்த பத்தலினையும், வெளிப்படையாகக் காணப்படாத இளஞ்சூலையுடைய செந்நிற முடையாளது அழகிய வயிற்றின் அழகிய மயிர் ஒழுங்குபடக் கிடந்த

* தொண்டை நாட்டின் ஒருபகுதியில் இக்காலத்தார் பருக்கைக்கல்லெனவழங்குவார்.

காட்சியைப்போல இரண்டு பக்கமுஞ் சேர்த்துத்தைத்த விளக்கினது எரிகின்ற நிறத்தையுடைய வலித்துப் போர்த்த லுற்ற தோலாகிய யாழ்க்கோட்டை மூடிய போர்வையினையும், வளையிலேவசிக்கும் நண்டினது கண்ணைக்கண்டாலொத்த இரண்டு பத்தலையும் இணைத்தற்குத்திறந்த துளைகளின்வாய் மறைதற்குக்காரணமாகிய திருவுதலமைந்த ஆணியினையும், பூர்வபக்கத்து எட்டாம்நாள் தோன்றும் சந்திரனது வடிவத்தை யொத்த வடிவை யுடைத்தாய் உண்ணாக்கில்லாத இலக்கண மமைந்த திறந்த வாயினையும், பாம்பு நிமிர்ந்தாலொத்த உயர்ந்த கரிய தண்டினையும், கருநிறமுடையாளது முன்னங்கையின் அழகிய வளையையொப்ப ஒன்றோடொன்று நெருங்கின இருப்பினையும் திண்ணிய பிணிப்பினையுமுடைய வார்க்கட்டினை யும், அழகிய தினையரிசியிற் குத்தலரிசியையொத்த குற்றம் நீங்கிய விரலாற்றடவி வாசிக்கும் நரம்பினையுடைய இசை முற்றுப்பெற்ற நீண்ட விசித்தலையுடைய தொடர்ச்சியினையும், கலியாணஞ் செய்தமை விளங்குகின்ற பெண்களை அலங்கரித் தாலொத்த யாழிற்குரிய மாதங்கி என்னுந் தெய்வம் தன் னிடத்தே நின்ற இலக்கணம் பொருந்துதல்வரும் அழகினையு முடைய வழிகண் செல்வாரை வருத்துங் கள்வர் தங்கையிற் கொண்ட படைக்கலங்களைக் கைவிடும் வண்ணம் அருளினது மாறுகிய மறத்தை அவர்களிடத்து நின்று நீக்கும் இனிமை மருவியபாலையாழை (23) நரம்புகளைக்கூடத்தழுவியும் உருவியும், தெறித்தும், ஒன்றைவிட்டு ஒன்றைத் தெறித்தும் வாசித்துப் (48) பாடின தாளத்திற்குப் பொருந்த (24) தாளவறுதியை யுடைத்தாகிய (உபலக்கணத்தால் தாள எடுப்பும் தாளநிகழ்வும் உடைத்தாகிய) தேவபாணிகளை (தேவரைவாழ்த்துவது) நீர்மை யுடன் பரக்கப்பாடிக் (52) காட்டின்கண் வசிக்கும் தெய்வத் திற்கு மனமகிழ்ச்சியாகச் செய்யும் முறைமையாகிய தடாரியை வாசித்தலைச் செய்துவிட்டபின்பு (58-59) வழியறியாமையினாலே இவ்வழியைத் தவிர்ந்து வேறொரு வழியிற் போகாதே இவ் வழியிலே என்னைக்கண்டதும் நீ முன்பிற்செய்த நல்வினைப் பயனே; (60) யான் கூறுகின்றவற்றை விரும்பிக்கேட்பாயாக.

(61-63) அடுகின்ற பசியாலே வருந்தின நின்னுடைய கரிய பெரிய சுற்றத்தோடே நெடுங்காலமாய் வருகின்றபசி நின்னை விட்டு நீங்குதல் விரும்புவையாயின் நீட்டித்தலின்றி எழுந்திருப்பாயாக. நீ வாழ்வாயாக. (64-90) இதுபொழுது செல்வமடைந்த யானும் முன்பு பழுமரத்தை நினைத்துச் செல்லும் பறவையை (வெளவாலை)ப் போல அவனுடைய இழுமென்றெழும் ஓசையினுடைய அகலமுடைத்தாகிய மதிலில் விரும்பி வந்தார்க்குத் தடையில்லாத நன்றாகிய பெரிய கோபுரவாயிலின் கண்ணே வாயில் காப்பாளனுக்குச் சொல்லேனுப் புகுந்து என்னுடைய வறுமை நீங்குதல் காரணமாக முன்பு இளைத்த உடம்பையுடைய யான் அவ்வாயிற்குள்ளே சென்றகளிப்பால் பின்பு இளைப்புத் தீர்ந்து படம்விரித்த பாம்பினது பொறியை யொப்பக் கையினது வடுப்பட்டுக்கிடந்த எனது கண்ணகன்ற உடுக்கையில் எழுப்பின இரட்டைத்தாளத்திற்குப் பொருந்த ஒருபாட்டினையான் விரும்பிப் பாடுதற்குமுன்னே விரிகின்ற கிரணங்களையுடைய வெள்ளி முளைத்த செறிந்த இருளையுடைய விடியற்காலத்தே முன்பே தன்னோடு பொருந்திய நட்டாரைப் போல என்னுடன் உறவுகொள்ளுதலை விரும்பித்தான் உபகாரஞ் செய்தற்கு வழியாகிய இரத்தலையே யான் எப்பொழுதும் விரும்பும்வண்ணம் உபசாரவார்த்தைகளைக் கூறித் தன் கண்ணாலே காணும்வண்ணம் தனக்கு அண்ணிதான இடத்திலே என்னை இருக்கச்செய்து தன்னைக் கண்ணுற் பருகுந் தன்மையை யொத்த கெடாதபார்வையாலே எலும்பை, உருகும் மெழுகு முதலிய பொருள்களைப்போல நெகிழும்படிக் குளிர்ச்சியைப் பொருத்தி; ஈரும் பேனும் கூடியிருந்து அரசாண்டு வேர்வையாலே நனைந்து வேறுநூல் உள்ளே நுழைதற்குக்காரணமாகிய தைத்தற்றொழிலையுடையனவாகிய கிழிந்த ஆடையை என்னிடத்தினின்றும் நீக்கிக் கண்ணிற் பார்வையானது, இஃது இழைபோன வழியென்று குறித்துப் பார்க்கவாராத நுண்மையை யுடையவாய்ப் பூத்தொழில் முற்றுப்பெற்ற தன்மையாற் பாம்பினது தோலையொத்த ஆடையை மிகுதியாகக் கொடுத்து, அவனை (அரசனை)ச் சேவித்து நிற்கின்றவர்

களும் நக்குலத்திலுள்ளோருமாகிய ஆபரணங்களை யணிந்த அழகினை யுடைய பாட்டாலும் கூத்தாலும் வார்த்தையாலும் அரசனுக்கு இனிய மகிழ்ச்சியைச்செய்யு மகளிர் ஒட்டமற்ற பொன்னாற்செய்த கிண்ணம் நிறைய உண்டார் மயங்குதலைச் செய்யுங்கள்ளை மழையென்று சொல்லும் வண்ணம் மாடத்திடத்தே பல்காலும் மிகுதியாக வார்த்துத்தரத்தர வழிநடந்த வருத்தம் நீங்கும் வண்ணம் நிறைய உண்டு கள்ளுண்ணப் பெறுகிலேமென்று நெஞ்சிற்கிடந்த பெரிய வருத்தத்தையும் போக்கி மகிழ்ச்சியுடனே நான்நின்ற அந்திக்காலத்தே இங்ஙனம் வறுமை தீர்ந்தபின்பு அவனுடைய செல்வம் விளங்குகின்ற அரண்மனையில் ஒருபக்கத்தே தங்கி

(தொடரும்.)



# தேம்பாவணி.



திரு. வித்துவான். ஒளவை. சு. துரைசாமிப் பிள்ளையவர்கள்,
தலைமைத் தமிழாசிரியர், போர்டு உயர்தரக்கலாசாலை, திருவத்திபுரம்.



(132-ம் பக்கத் தொடர்ச்சி)

இனி, நூனெறியும், நூலுணர் புலவரியல்பும் தேவர், கம்பர் முதலிய சிறப்புடைத் தொடர் நிலைச்செய்யுள் செய்யும் ஆசிரியர்போல, "கவிஞர், நூல்கலந்த வாய் நனித்ததேன் எனத்தகும் காமம்" (தேம். 23-92.) என்றும், "நூல்வழி புரைத்த தீஞ்சொல் தொய்யிதழவிழ்ந்த தேன்போல், வேல்வழி மின்கை வேந்தன் வியப்பினோடிமிழிற்கேட்டு" (தேம். 20-97) என்றும்,

"பால்வழி சுவையெனப் படத்தைத் தீட்டிய
கோல்வழி யழகெனக் குறையிற் கேள்விசெய்
நூல்வழி புகழென நுழையன்னோர் புடை
மேல்வழி வளமெலாம் விளையப் புக்கனர்" (தேம். 22-31)

என்றும், "பாமுகத்தில், சொல்வதற் கருந்தொடையெனத் தொடர்வன துகளே" (தேம். 23-90) என்றும் கூறுமாற்றால் உணரப்படும்.

இனி,

"ஈரேழு வகுப்பிற் றேர்ந்த வினமணி நல்யாழ் வாங்கி
யோரேழு குரலி னோதை யுரிக்கிளை தளிர்ப்பப் பாகின்
நேரேழு மிடற்றி னோதை நெறிகள் மூன்றியக்கிக் கூட்டிப்
பாரேழு நடங்கள் வாட்டப் பாடினர் சிறப்பின் வானோர்"
(தேம்.19-16)

எனவரும் பாட்டு இவர்க்குள்ள இசை நூலுணர் வினை வெளிப்படுத்துகின்றது.

இனி, இவர் பெண்களின் நாணத்தைக் கூறுமிடத்து, அஃது அவர்கட்கு உயிரினும் சிறந்ததென்னும் விதியினை யுட்கொண்டு, "பெண்மையின் காணியாம் நாணம்" (தேம். 20-71) என்றும் "பெண்ணணங் காணியும் பெருமையும் பேரொளிப் பிறப்பும்" (தேம். 23-96) என்றும், உடையின் மென்மை கூறுமிடத்து * "தூங்கெழு நுரையம் பூந்துகில்" (தேம். 20-66) என்றும், "மணி நிறத்தவெழின் மைந்தனொடு, மணிநிறத்த நுரையந் துகிலாடை" (தேம். 21-20) என்றும் "பால்வழி நுரையம் பைம்பூப் பழித்த பொற்றுகிலைப் போர்த்து" (தேம். 20-97) என்றும் கூறுவர்.

இனி, உலகினர்க்கு நீதி கூறுவார்போன்று கூறிய பாட்டுக்கள் பலவுள. அவற்றுள்,"மடநடைபெண்மை நட்பென வுரைத்தார் வளருணர் வுயரிய நீரார்" (தேம். 20-80) என்றும்,

---

* இவ்வுவமையும் "இன்னுரைக்கலிங்கம்" (சீவக-697.) என்றும், "நுரைகிழித்தனைய நொய்ம்மை நுண்டுகில்" (சீவக-699) என்றும் வருவதனையுட் கொண்டது.

"மலிந்த வாண்டினி லீட்டலும் மற்றவை
மெலிந்த வாண்டில் வருத்தலு மிக்குறும்
பொலிந்த வாண்மை பொருந்திடத் தேருதி
வலிந்த நாட்டயிரா யமன்னு என்றான்" (தேம். 20-96)

என்றும்,

"ஏரணி வலியின்னீதி யிறையவன் முனிந்தகாலை
நீரணி யரணமாகா நெடுமதி லரணமாகா
சீரணி யரணமாகா சேண்வரை யரணமாகா
பேரணி யரணமாகாப் பெற்றநல் வினையிலார்க்கே"

என்றும் கூறுவன பல. (தேம். 14-110)

இனி, இவர் ஆங்காங்கு எடுத்துக் காட்டும் உவமைகள் இடத்துக் கேற்பவமைந்து இவர் தம் புலமை நலத்தைச் சிறப்பிக்கின்றன. பேயினம் திரண்டுவரினும் நம்மைப் பற்றலாகாமையின், தீங்கில்லையென்பார், "பிணித்த தன்மையின், வலித்த நாய் கடிக்குமோ மருவிலாமையே" (தேம். 24-52) என்றும், காமங் கலந்த பாடல்களைப் பாடலும், பாடக்கேட்டலும் செய்தவிடத்து, அதுபற்று தொழில் இல்லையென்றற்கு, "பால்கலந்த கால் பருகிய நஞ்சுமீட் பரிதே" (தேம். 23-92) என்றும், குற்றமே செய்து பயின்றவர் பாவத்துக் கஞ்சார் என்றற்குப் "பழகவே வழங்கிய முறையாங், தெருவரும் புலி சீறினும் சிறுவரும் வெருவார்" (தேம். 23-93) என்றும், கற்பும் பெருமையும், குடிப்பிறப்பும், வாழ்வும் கெடுமென்றுணராது தீ நெறிக்கிணங்குவராயின், மகளிர்க்குத் தீங்கெய்துதல் ஒருதலை யென்பார், "தண்ணம் வேர்கெடிற் றருவெலாஞ் சாய்தலுமரிதோ" (தேம். 23-96) என்றும் வருவனவற்றால் இது விளங்கும்.

இன்னணம், பெரும் புலவர்க்குள்ள அமைதி முற்றும் பெற்ற வீரமாமுனிவர், பிறிதொடுபடாஅன் தன்மதங்கொளல் என்னும் உத்திபற்றிக் கூறுவனவற்றை விலக்கி நோக்கின், அவர்க்கு "உரன் என்னும் தோட்டியான் ஓரைந்தும்" காக்கும் திறமே சிறந்த கருத்தாதல்,

"செம்பொறிச் சினத்தபோர்ச் செறுநர்க் கஞ்சலாற்
பைம்பொறி யெயிலின் வாய்ப்படியப் பூட்டியுள்
வெஃபொறி விழத்தமை வெட்டி வீழ்த்தெனு
ஐம்பொறி யடக்கியுள் அவாக்கொண்டா லென்பார்"

"கோலமே வீணடா குளித்தல் வீணடா
சூலமே வீணடா துறவு வீணடா
காலமே மந்திரம் கதைத்தல் வீணடா
சீலமே கெடநசை செகுத்திலா லென்பார்"

(தேம். 20-125, 126)

என்றற்றொடக்கத்துச் செய்யுட்களாலுணரலாம்.

இங்ஙனம் சீரிய முறையில், தொடர்நிலைச் செய்யுட் செய்தற்குரிய புலமைபெற்ற இவர், விரைந்து கவி பலபாடும் திறத்தால் வித்தாரகவியாய் விளங்குகின்றாராயினும், திருந்திய முறையிற்சொல்லாடல் பயின்ற பாக்கள் இவர் நூற்கண் காணப் பெற்றில. பெற்றோர்கள் தம் மக்களை மகிழ்ச்சியால் வாழ்த்துதலே நம் நாட்டு மரபாகவின், இவர், பாட்டுடைத் தலைமகனை அவன் பெற்றோர் வணங்கிப் பரவினரெனக் கூறுதல் தமிழ் மக்கட்கு நல்லொழுக்கமாகத் தோன்றாது. மேலும், கவிகளின் கீழ்வகுத்துள்ள பொழிப்புரைகளுள் நூற்புணர்ப்புக்காகாவென விலக்கப்பட்ட வழக்குச்சொற்களைத் தொடுத்தெழுதுதல் குற்றமாயினும், இவர் கூறிய தொன்னூல் என்னும் நூற்கியையவமைந்து தோன்றுகிறது. அது தமிழ் நெறிக்குப் பொருந்தாமையின், குற்றமாதல்பற்றியே ஆசிரியர் இரேனியஸ் (Rev. C. T. E. Rhenius) என்பாரும் இவர் இலக்கண நெறிக்கண், அதற்காகாச் சொற்களைப். புணர்த்தமைத்தல் குற்றம், எனத் தாமெழுதிய நூற்கட் கூறுவாராயினர். ஆயினும், இத்தொடர்நிலைச்செய்யுளின் சொல்லொழுக்கமும் பொருளமைதியும் படிப்பார் மனத்தே பேரின்பம் பயக்கும் தகையவாய் விளங்குதல் ஒருதலை. திராவிடமொழிகளை நன்கனமாராய்ந்த புலவரான ஆசிரியர் கால்டுவெல் என்பாரும், "சிந்தாமணியின் நடையால் தொடர்ந்தெழுதப்பெற்றுத்திகழும் தேம்பாவணி, தமிழ்

நடையும், ஒழுக்கமும் நிற்கும் நிலையில் நின்று நோக்குமிடத்து, திருந்தியதாய், அணிநலஞ் சிறந்ததாய் விளங்குதலின், இந் நூலாசிரியரைத் தமிழ்ப்புலவர் வரிசையுள் முதற்கண் நிறுத் தற்குத் தமிழாராய்ச்சியாளர் யாவரும் ஒருங்குநேர்வர் என்னும் பொருளமைய, Thembavani of Beschi: "It is a long and highly wrought religious epic in the style of Chintamani and is so cxcellent—from the point of view of Hindu ideas of excellence; that it is so elaborately correct, so highly ornamented, so invariably harmonious—that I have no doubt he may fairly claim to be placed by the Votes of impartial native critics themselves in the very first rank of Tamil poets" என்று கூறுவாரா யினர். கிறித்தவர்க்கே யன்றித் தமிழ் கற்பார்க்கும் கற்ற வர்க்கும் விருந்துசெய்யும் மேன்மைத் தாம் என்று கூறியமை கின்றேன். மன்மதன் விரகநோய் விளைத்தற்பொருட்டு மலர்க் கணையெய்வன் என்பதும், சந்திரகிரகணத்தின் போது திங் களைப் பாம்புகொள்ளுகின்றதென்பதும் போன்ற கருத்துக்களை யிவ்வாசிரியர் நேர்ந்து தம் நூற்கண் அமைத்துப் பாடுதல் முதலியன விரிவஞ்சி விடுக்கப்பட்டன.

---

# சிலசொற்களின் பொருள்.

திரு. வே. வேங்கடராசலு ரெட்டியார் அவர்கள்,
பல்கலைக்கழகம், சென்னை.

அட்டை.

'தமிழ் லெக்ஸிகன்' என்னும் அகராதியில், இச்சொற்கு; 1 நீர்ச்செந்துவகை, 2 செருப்பின் தோலட்டை, 3 காகித அட்டை, 4 புத்தகமேலுறை, 5 திராவி என்று ஐந்து பொருள் கொடுக்கப் பட்டுள்ளன. 'அட்டையாடல்' என்ப தற்கு, அவ்வகராதியில், 'உடல் துண்டிக்கப்பட்ட விடத்தும் அட்டைபோல வீரனுடல் வீரச்செயல் காட்டியாடுகை' என்று பொருள் எழுதப்பட்டுள்ளது.

'கணையும் வேலுந் துணையுற மொய்த்தலிற்
சென்ற வுயிரி னின்ற யாக்கை
இருநிலந் தீண்டா வருநிலை வகையோ
டிருபாற் பட்ட வொருசிறப் பின்றே' (தொல். புறத். 16.)

என்னுஞ் சூத்திரத்தின் உரையில், ஆசிரியர் நச்சினார்க்கினியர், 'அட்டை அற்றுழியும் ஊருமாறுபோல் அலிகனிற அற்றுழியும் உடம்பாடுதலின், அட்டையாடல் எனவும் இதனைக் கூறுப்' என்று எழுதியுள்ளார். இப்பொருளே 'தமிழ்லெக்ஸிக'னிற் சுருக்கி எழுதப்பட்டுளது, இவற்றால், 'அட்டையாடல்' என்பது, அட்டைபோல் ஆடுதல் என்னும் பொருளதாகின்றது.

அட்டை என்னுஞ்சொல், கன்னடத்திலும் தெலுங்கிலும் முறையே 'அட்டெ,' 'அட்ட' என்று வழங்குகின்றது. அதற்கு 'தலையற்ற உடல்' என்னும் பொருள் அவ்விரண்டு மொழிகளிலும் உளது. தமிழிலும், அட்டையாடல் என்னுஞ்சொல்லில் இப்பொருள் நன்கு அமைகின்றது. அஃதாவது, தலையற்ற உடல் ஆடுதல் என்பதாம். இதனைக் கவந்தமாடுதல் என்ப.

'பர்பநெத்தரகடல் குணிபட்டெகள்' (ஆஸ்வாஸம் 9-57.)
கன்னட மொழியிலுள்ள பம்ப பாரதத்தில்,

என்று வந்துளது. 'குணிப அட்டெகள்'— கூத்தாடும் அட்டைகள் என்பதாம். இதனால், * அட்டை என்பது கவந்தம் என்னும் பொருளது என்று அறிதல்கூடும்.

சொன்றி.

இது தென்பாண்டி நாட்டில் வழங்குவதொரு திசைச்சொல் என்று உதாரணங்காட்டுவர் உரையாசிரியர்கள். இச்சொல், சொல் என்பது அடியாகப் பிறந்தது. சொல் + ன் + து + இ = சொன்றி. சொல் = நெல். 'சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் தோற்றம் போல்' என்னுமிடத்து, சொல் என்பது நெல் என்னும் பொருளில் வந்துளது காண்க. இதனால், சொன்றி

---

* அட்டை என்பது அடு என்னும் பகுதியடியிற் பிறந்தது; அடப்பட்டது என்பது பொருள்.

என்பது செல்லாலாயது என்னும் பொருளுடையதாதல் அறியப்படும். நன்றி, வென்றி, பன்றி என்பனவும் இவ்வாறே பிரித்துப் பொருள் கூறத் தகுவன, பன்றி என்பது பல்லையுடையது என்றும் பொருளது என்றார் † கால்ட்வெல் பாதிரியாரும். இனி, சோறு என்பதும் சொல் என்பது அடியாகப் பிறந்ததே. சொல்+து=சோறு; சொல்லாலாயது என்பதே பொருள்.

**நாக்கு.**

நாக்கு என்னுஞ்சொல், தெலுங்கில் நால்க என்றும், கன்னடத்தில் நாலகே என்றும் உளது. இவ்விரண்டு மொழிகளிலும் நால் என்னும் பகுதி காணுதலானும், தமிழில் * நாற்கு என்பது மருவி நாக்கு என்றாதல் கூடுமாகலானும், நாக்கு என்பது நால் என்பது அடியாகப் பிறந்தது எனவும், நால்வது என்னும் பொருளுடையதாகலாம் எனவும் தோன்றுகின்றது. நால்வது அசைவது, நக்குவது நாக்கு என்று ‡ கால்ட்வெல் பாதிரியார் கூறினது அமைவுடையதெனத் தோன்றவில்லை.

**வெற்றிலை.**

வெற்றிலை என்பது வெறுமை+இலை என்பவற்றாலான சொல் எனக்கொண்டு, வெறுமையிலை எனப்பொருள் கூறி, இலைமட்டுமே பயன்படுதலின், இப்பெயர் பெற்றது என்கின்றனர். ஆழ்ந்து நோக்கின், இது பொருந்துவதன்று எனத் தெரிகின்றது.

வெற்றிலை என்பது வெள்ளிலை எனவுஞ் செய்யுட்களில் வழங்கும்.

'பாளை மென்கமு கின்பழ மெல்லிலை' (சீவக சிந்தா. 132) என்னுஞ் செய்யுளின் உரையில், ஆசிரியர் நச்சினார்க்கினியர், 'வெள்ளிலை பாடமாயின், கொம்பிலே வெளுத்ததாம்' என்று எழுதியிருத்தலானும் வெள்ளிலை என்னும் வழக்கு உண்மை அறியப்படும். இனி, வெற்றிலை என்பது வெளிதாகிய இலை

† கால்ட்வெல் இலக்கணம்—பக்கம், 194.
* நற்கீரர் என்பது நக்கீரர் என மருவினது ஈண்டு நினைக்கத்தகும்.
‡ கால்ட்வெல் இலக்கணம், பக்கம், 194.

எனப் பொருள்படும். வெள்+து+இலை=வெற்றிலை என்று அமைந்துள்ளன. ஆயின் இவை, வெட்டிலை என்றன்றே வருதல் வேண்டும் எனின், ளகாரம் டகாரமாதலேயன்றி றகாரமாதலும் உளது என்க.

* தெற்றென என்பது, தெளிவாக என்னும் பொருளில் வழங்குகின்றது. இதனை, தெறு+என—என்று பிரித்தால் இப்பொருள் வாராது. ஆகலின், தெள்+து+என=தெற்றென என்றாயிற்று என்றே கொள்ளுதல்வேண்டும். தெற்றென என்பது **தேள்** என்னும் பகுதியடியாகப் பிறந்திலதாயின், அதற்கு, தெளிவாக என்னும் பொருளைக் கூறுதல் யாங்கனம்? இனி, செல்+தல்—சேறல் என்றாதல்போல, தெள்+தல்—தேறல் என்றாயிருக்கின்றது. தேறல் என்பது தெளிதல், தெளிவு, தெளிந்தது என்னும் பொருள் தருதல் அறிக. இவற்றால், தகாரம் வந்தவழி ளகாரம் றகாரமாதலும் உண்டு என்பது அறியப்படும்.

இத்துணையுங் கூறியவாற்றால், வெற்றிலை என்பது, வெளிதாகிய இலை என்னும் பொருளதே என்பதும், வெள்+து+இலை—வெற்றிலை என்றாதலும் அமையும் என்பதும் தெளிவாகும்.

**ஊசல்.**

இஃது உஞ்சல் என்னுஞ் சொல்லின் திரிபு என்று கருதித் தமிழ்லெக்ஸிகனிற் குறிக்கப்பட்டதெனத் தோன்றுகின்றது. உஞ்சல் என்னுஞ் சொல் உந்து என்னும் பகுதியடியாகப் பிறந்தது என்று அவ்வகராதியில் காட்டப்பட்டுளது. ஊஞ்சல் என்னுஞ் சொல்லும் உஞ்சல் என்னுஞ் சொல்லின் திரிபெனக் கருதிக் குறிக்கப்பட்டுளது. இவற்றால், உஞ்சல், ஊஞ்சல், ஊசல் என்னுஞ் சொற்களெல்லாம் உந்து என்னும் பகுதியடியாகப் பிறந்தவை என்பது போதரும்.

உந்து என்பது அல்விகுதி சேரப்பெறின், உந்தல் என்றாகும். உந்தல் என்பது உஞ்சல் எனத்திரியாது. இகர

---

* தெளிவானது என—என்பது சொற்பொருள்.

ஈகார ஐகாரவுயிர்களின் முன்னும் யகரமெய்யின் முன்னும் நிற்கும் ந்த என்னும் ஒலி ஞ்ச என்றும், த்த என்பது ச்ச என்றும் ஒலிக்கும்; ஏகாரத்தின் முன்னும் இவ்வாறு திரிதல் உண்டு * இவையே யல்லாமல் ஏனை யெழுத்துக்களின் முன் ந்த, த்த என்பவை திரிதல் இல்லை. இவ்வாறு திரிந்தவை மரூஉமொழி எனப்படும்.

கிழிந்தது—கிழிஞ்சது
நீந்தினன்—நீஞ்சினன்
அலைந்தான்—அலைஞ்சான்
மேய்ந்தது—மேஞ்சது
கிழித்தான்—கிழிச்சான்
நீத்தும் நிலையும்—நீச்சும் நிலையும்
அடைத்தான்—அடைச்சான்
† மேய்த்து—மேச்சி

என்பன போல்பவை வழக்கில் வழங்குதலை அனைவரும் அறிவர். யகரத்தின் முன்னின்ற ந்த, த்த இவை திரிந்தவழி அவ்யகரம் கெட்டுளது காண்க. இவ்வாறே, உய்ந்தனென் என்பது உய்ஞ்சனென் என்றும், மய்ந்தன் என்பது மஞ்சன் என்றும் செய்யுட்களிலும் வழங்குகின்றது.

இனி, மேற்கூறிய இ, ஈ முதலிய எழுத்துக்களின் முன் மட்டும் ந்த, த்த என்பவை, ஞ்ச, ச்ச எனத் திரிதல் ஏன் என்று நோக்குதும்;

இ ஈ எ ஏ ஐ இவ்வெழுத்துக்கள் இடை யண்ணத்தில் (தாலுவினிடத்தில்) பிறப்பவை. இவை தாலுவினிற் பிறப்பன வாகலின் இவற்றை வடநூலார் 'தாலவ்யம்' என்பர். சகர ஞகர மும் ‡ யகரமும் தாலுவினிற் பிறப்பனவாகலின், அவையும்

---

* இவற்றின் முன், ககாரமும் சகாரமாதல் உண்டு.

† இவ்வெழுத்துக்களின் தகாரம் சகாரமாகவும், நகாரம் ஞகாரமாகவும் திரிதல் உண்டு. அவை கண்டு கொள்க.

‡ 'தாலௌ ஜிஹ்வாமத்யாந்தாப்யாம் யகாரே'
(தைத்ரீயப்ராதி பாக்கியம் 2-40)

என்பது அறிக. இதனைக்குறித்து நன்னூலார்கூறியது பொருந்துவதன்று. அதனை இலக்கணவிளக்க நூலார் மறுத்துள்ளார்.

தாலவ்யமே. தகார நகாரங்கள் பல்லினடியிற் பிறப்பவை. ஆகலின் அவை 'தந்த்யம்' எனப்படும். தாலவ்யங்களாகிய இ ஈ எ ஐ காரங்கட்குமுன் தந்த்யங்களாகிய தகார நகாரங்கள் நிற்பின், அவை, மேல்நின்ற எழுத்துக்களின் சார்பினால் தாலவ்யங்களாகின்றன, யகாரத்தின் முன்னும் இவ்வாறேயாம். இடையண்ணத்திற் பிறக்கும் எழுத்துக்களோடு பல்லினடியிற் பிறக்கும் எழுத்துக்களை ஒருங்கே யொலித்தல் சிறிது அருமையாதலும், அவற்றையும் அவ்விடையண்ணத்தில் ஒலித்தல் பெரிதும் எளிமையாதலும் உணர்க. இத்துணையுங் கூறியவற்றால் தகார நகாரங்கள் திரிதலின் காரணம் அறியப்படும், நிற்க.

மேற்கூறியவற்றால், உய்ந்தல் என்பது உஞ்சல் என்று வருமேயன்றி, உந்தல் என்பது உஞ்சல் என வாராது என்பது நன்கு தெளியப்படும். ஆகவே, ஊசல் ஊஞ்சல் உஞ்சல் என்பவற்றிற்கு உந்து என்பது முதனிலையாதல் அமையாது. இனி இவற்றின் முதனிலைதான் யாது என நோக்குதும்.

ஊசல் என்பது கன்னடமொழியில் உய்யல் என்றும், தெலுங்குமொழியில் உய்யல, ஊயல என்றும் வழங்குகின்றது. இவற்றை நோக்கின், தமிழிலும் ஊயல் என்பதுவே இயல்பான சொல்லாகும் எனத்தோன்றும். யகாரம் சகாரமாதல் இயல்பு. நயம்—நசம்; நேயம்—நேசம் என்பன போல்வன காண்க.

தமிழ்மொழியில் வினைப்பகுதிகளும் பெயர்களும் குறில் முதலவாயும் நெடில் முதலவாயும் அமைந்துள்ளன காணலாம். விழு—வீழ்; முழுகு—மூழ்கு; பொழுது—போழ்து; கொவ்வை—கோவை; துவ்வாமை—தூவாமை செய்யன்—சேயன் என்பவை போல்வன பல. சில பகுதிகள் தமிழில் குறில் முதலவாயிருப்பவை பிறமொழியில் நெடில் முதலவாயும், தமிழில் நெடில் முதலவாயிருப்பவை பிறமொழியில் குறில் முதலவாயும் காண்கின்றன.

| தமிழ் | தெலுங்கு | கன்னடம் |
|---|---|---|
| வனை | வானு | .... |
| நனை | நானு | .... |
| தோய் | .... | தோய் |

என்பவை போல்வன பல. இவற்றால் திராவிட மொழிகளைப் பொதுவாக நோக்குமிடத்துப் பகுதிகள் குறில் முதலவாயும் நெடில் முதலவாயும் அமைந்திருக்கும் என்பது தெளிவாகும்.

இம்முறையில், தமிழில் **உய்** என்றுள்ள பகுதியே ஊய் என்றும் வருதல்கூடும். **ஊய்தல்** என்பதுவே யகரமெய்கெட்டும், தகரம் சகரமாத் திரிந்தும் ஊசல் என்றாயிருக்கலாம். † வாய்தில் என்பது வாசல் என்று வழங்குதல் ஈண்டைக்கு ஒப்பிடத்தகும்.

'வாய்தலிற் கதவை நீக்கி வள்ளியைக் கொடுசென் றுய்த்தாள்'
(கந்தபு. வள்ளி. 164.)

என்னுமிடத்து, **வாய்தல்** என்று வந்திருத்தல் காண்க.

இனி, **உய்** என்பது செலுத்து என்னும் பொருளுடையதாயிருத்தலின், **ஊய்** என்பதும் அப்பொருளதேயாகும். ஆகவே ஊய்தல் (ஊசல்) என்பது செலுத்துதல் என்னும் பொருள் தருதல் அறிக. **உய்தல்** என்பது, **உய்** என்னும் பகுதியையடுத்து நகர மெய் தோன்றப்பெற்று, உய்ந்தல் என்றாகும். இதன் திரிபே உந்தல், உஞ்சல் என்பன. ஊய்தல் என்பதும் நகாரம் தோன்றப்பெற்று ஊய்ந்தல் என்றாகலாம். அதன் திரிபே ஊஞ்சல் என்பது. ஊசல், காலால் தள்ளிச் செலுத்தப் படுதலின் அப்பெயர் பெற்றது. இனி, உய் என்னும் பகுதிக்குச்செலுத்துதல், கொண்டுபோதல் என்னும் பொருள் கன்னட

---

† வாய்தில் என்பது வாய் + து + இல் எனப்பிரிந்து, இல்லின் வாயாயிருப்பது எனப்பொருள் படும், முன்றில் என்பது போல, முன்றில் என்பது, முன் + து + இல் எனப்பிரிந்து, இல்லின் முன்னதாயிருப்பது எனப்பொருள் தருதல் அறிக. மலையாளத்தில், வாதில் என்று வழங்குகின்றது.

மொழியினும் உளது. ஆதலின் அம்மொழியில், உய்யல் என்பது இப்பொருளே தருதல் அறியத்தகும். தெலுங்கு மொழியில், இச்சொல், உய்யல ஊயல என்று உயிரீற்றதாய்க் காண்கின்றதே எனின் தமிழில் மெய்யீறாய் வழங்குஞ் சொல் தெலுங்கில் உயிரீறாய் வழங்குதல் உண்டு என்க.

கோல்—கோல (அம்பு)
வான்—வான
நாண்—நான (வெட்கம்)
கடல்—கடலி

என்பன போல்பவை பல.

இத்துணையுங் கூறியவற்றால், ஊசல் என்பது ஊய்தல் என்பதன் திரிபு என்பதும், உய், ஊய் என்பவை ஒரு பொருளனவே யாமாதலின், ஊய்தல் என்பது செலுத்தப்படுதல் என்னும் பொருளதாகலாம் என்பதும் அறியப்படும். இன்னும் இதனை விளக்கப்புகின் மிக விரியுமாகலின் இவ்வளவில் விடுக்கின்றேன்.

---

# நற்றிணை.

ச. தண்டபாணி தேசிகன், நாகை

செந்தமிழ் அன்னையின் திருவருள் துணைக்கொண்டு நந்தமிழன்னையின் அணிவளங்களையாராய்ந்து புலந்திருத்தல் புதல்வர் கடமை யாதலின் நற்றிணை என்னும் தொகை நூலைப் பற்றிச் சிறிது ஆராய்வேன்.

பெயர்க்காரணம் :— நூல்களுக்கு முதனூல் கருத்தன் முதலாகப் பெயரிடுதற் காரணம் பலவற்றுள் இப்பெயர் பொருளாற் பெறப்பட்டது எனலாம். திணை என்பது ஒழுக்கத்தையும், ஒழுக்கங்கள் நிகழ்தற்கிடனாகிய குறிஞ்சி முதலான

நிலங்களையும் உணர்த்தும் ,பொதுச்சொல்லாம். ஆகவே ஒழுக்கங்களை அடிப்படையாகக்கொண்டு நிலவியல்பை நன்கு விளக்குவதாகிய இந்நூலுக்கு 'நற்றிணை' எனப்பெயர்வைக்கப் பெற்றது. இந்நூல் நானூறு அகவற் பாக்களையுடையது. இதற்கு நற்றிணை நானூறு எனவும் பெயர் வழங்கும்.

நூலமைப்பு :— இந்நூலின் செய்யுட்கள் ஒன்பதடிச் சிறுமையும் பன்னிரண்டடிப் பெருமையுங்கொண்ட அகவற்பாக் களால் ஆகியவை. ஒவ்வொரு பாக்களும் பண்டைய வழக்கங் களோடு பொருளியல்பை இயற்கை வனப்பென்னும் உடலினுள் உள்ளுறை உவமம் என்னும் உயிர்நிலைபெற நன்கு விளக்குவன. இந்நூல் ௱௧ ஆம் செய்யுள்மட்டும் அடிஎல்லையைக்கடந்து ௰௩ அடி கொண்டதாக இருக்கிறது. இத்தொகை நூலின் முறைவைப்பு இப்படிப்பட்டது என ஒரு வகையானும் உணரக் கூடியதாய் இல்லை. ஆனால் பெரும்பான்மையும் குறிஞ்சித்திணையைக் கூறும் பாடலை அடுத்துப் பாலை வைக்கப்பெற்றுள்ளது. மற்றத்திணை ஏற்றபெற்றிக் கோக்கப்பெற்றுள்ளன. ஆனால் மருதத்திணை யைக்கூறும் செய்யுட்கள்மட்டும் முதல்நூறு செய்யுட்களுக்குள் 20, 30, 40, முதலாக பப்பத்து செய்யுட்களுக்கு ஒன்றாக வைக்கப்பெற்றுள்ளது. உ ஆம் நூற்றில் இம்முறை சிலபிறழ்ந்து 120, 150, 170, 180, 200, என ஐந்தே செய்யுட்கள் காணப் பெறுகின்றன. மூன்றாம்நூற்றிற் பெரும்பான்மையும் நான்காம் நூற்றில் முழுதும் பப்பத்து செய்யுட்களுக்கு ஒன்றாகத் தவறாது கோக்கப்பெற்றிருப்பது ஒருமுறை என்னலாம். இந்நூலில் குறிஞ்சித்திணையை விளக்குவனவாக நூற்றுமுப்பது செய்யுட்களும், பாலைத்திணைக்கு நூற்றாறு செய்யுட்களும், நெய்தலுக்கு நூற்று மூன்று செய்யுட்களும், மருதத்திற்கு முப்பத்திரண்டு செய்யுட்களும் முல்லைக்கு இருபத்தெட்டு செய் யுட்களும் ஆக முந்நூற்றுத் தொண்ணூற்றொன்பது செய்யுட்கள் உள்ளன. கிடைத்த ஏடுகள் யாவற்றினும் 234ஆம் பாடலும், 385ஆம் பாடலின் பிற்பகுதியும் சிதைந்திருந்ததாகப் பதிப் பாசிரியரும் உரையியற்றியவரும் ஆகிய பின்னத்தூர், நாராயண சாமிஐயரவர்களால் குறிக்கப்பெறுகிறது. இந்நூல் குறிஞ்சியிற்

ருெடங்கி மருதத்தில் முடிகிறது. இந்நூலின் அகவற் பாக்கள் யாவும் நேரிசை அகவற் பாக்களே. இந்நூல், நிலமுதலான ஐம்பெரும் பூதங்களையும் இருபெருஞ்சுடரையும் மூவகையுலகை யும் தமது திருமேனியாகக் கொண்டு எல்லாவுயிர்களிடத்தும் தாம்பொருந்தி இருந்து அருள்புரியும் திருமால் வணக்கத்தைக் கடவுள் வாழ்த்தாகப் பெற்றுள்ளது. இதுவும் ஏனைய தொகை நூல்களிற் போலப் பாரதம் பாடிய பெருந்தேவனாரால் இயற்றப்பெற்றதே. பதிப்பாசிரியர் 'இந்நற்றிணையின்காப்புச் செய்யுள் "பூமிகால்கள்" என்னும் தொடக்கத்தையுடைய விட்டுணு சகச்சிரநாம தியான சுலோகத்தின் மொழிபெயர்ப்பே யாம் எனத் தேற்றேகாரங்கொடுத்து, இரண்டன் கருத் தொருமை நோக்கிக் கூறியுள்ளார்கள். அதனை யாதாரமாக வைத்து இக்காப்புச் செய்யுளிலும் ஏதோசில அடிகள் குறைவுற்றிருக்கலாம் எனவும் கூறியுள்ளார்கள். இப்பெருந் தேவனாரால் இயற்றப்பெற்ற கடவுள் வாழ்த்துச் செய்யுட்கள் அகநானூறு, புறநானூறு, குறுந்தொகை, ஐங்குறுநூறுஎன்னும் நான்கு தொகைநூல்களிலும் காணப்படுகின்றன. அவையாவும் சிவபெருமானையே வாழ்த்துகின்றன. இவ்வொன்றுமட்டும் திருமாலை வாழ்த்துவதா யமைந்திருத்தல் ஆராய்தற்பாலது. இச்செய்புளில் ஈற்றடி யொழிந்தன இறைவன் பொதுத் தன்மையையே விளக்குவன. ஈற்றடியில் "தீதற விளங்கிய திகிரியோனே" என்ற சொற்றொடர் மட்டும் வெளிப்படையில் திருமாலை விளக்குவதாயுள்ளது. எல்லாவற்றிற்கும் சிவ பெருமான் வாழ்த்துச் சேர்த்த இவர் இந்நூலுக்குத் திருமால் வாழ்த்துச் சேர்க்கக்காரணம் என்னை? என்பது ஆராய்தற் குரியதாகும். இச் செய்புளுக்கு வேறுவுரை யொன்று கூற லாமோ என்ற ஐயமுண்டாகிறது. அதனைத் தனியே ஆராய்வேன்.

மக்களியல்பு :— இது மக்கட்பிரிவுவகை, உணவு, உடை, இருப்பிடம், பழக்க வழக்கங்களும் தொழிலும், கடவுட் பராவு முறையும் உறுதியும், பொழுதுபோக்கு அல்லது விளையாட்டு என்னும் ஆறுவகையான் ஆராயப்பெறும்.

இந்நூலான், பார்ப்பார், குயவன், பாணர் என்ற பிரிவு களும் திணைமக்களுக்குள் குறவர், மறவர், மள்ளர், பரதவர், இடையர் என்ற பிரிவுவகைகளும் அறியப்பெறுகின்றன. மக்களைத், திணைமக்கள் எனவும் வருணமக்கள் எனவும் இருவகை யாகப்பிரித்து நச்சினார்க்கினியர் கூறுவார். திணைமக்களாவார் ஐவகைநிலத்திலும் வதியும் முற்கூறிய குறவர்முதலிய ஐவரு மாவர். வருணமக்களாவார் அந்தணர், அரசர் வணிகர், வேளார் என்ற நால்வருமாவர். அவ்ருள் அந்தணர் அகப்பொருட் பகுதியில் தலைவனுக்குப் பாங்கனாக இருந்து காமநிலையுரைத்தல் முதலிய கூற்றுக்களை நிகழ்த்துவர் என்று (தொல் பொருள் 177) கூறப்பெறுகிறது. புறப்பொருளில் ஓதல்முதலிய அறுவகைத் தொழில் புரிபவர்எனக் கூறப்பெறுகின்றது. பார்ப்பாரும் களவித்தலைவனாக வரலாம்என நச்சினார்க்கினியர் கூறுவர். அரசர்கள் அகம்புறமாகிய இருபகுதியிலும் தலைவராகவருஞ் சிறப்புடையர். அரசர்கள் ஓதல் முதலிய ஐவகைத் தொழி லுடையர் எனவும் வாணிபர்களும் வேளாளரும் முறையே சிறப்பாக வேட்டல், வழிபடுதல் என்ற தொழிலையும், பொது வாக ஓதலீதல் முதலிய ஐந்தொழில்களையும் உடையவர் எனவும் உரைகாரர் கூறுவார். இப்பாகுபாட்டினால் வணிகரும் வேளாரும் பெரும்பான்மையும் தமக்குள் வேற்றுமையில ராகவே காணப்பெறுகின்றனர். அன்றியும் வேளாளருள் உழுவித்துண்ணும் வேளாளர் அரசர்களுக்குப் பெண்கொடுத் தற்கு உரியர்எனக் கூறுவதால் இக்காலத்துப்போல வருணப் பிரிவினை அவ்வளவு உறுதியாகக் கடைப்பிடிக்கப் பட்டிலது எனத்தெரிகிறது. அன்றியும் உழுதுண்ணும் வேளாளருக்கு வழிபாடு செய்தல் உரியதென்றும் உழுவித்துண்பார்க்கு வழிபாடு வேண்டாம் எனவும் கூறுவதினின்று செல்வத்தையும் தொழிலையும் பொறுத்தே உயர்வு தாழ்வு கருதப்பெற்றது என்பது புலனாகிறது. பாணர்கள் பழந்தமிழ்க்குடிகளாகத் தொழில்பற்றித் தீண்டத்தகாதவராகக் கருதப்பெறினும் தலைவனைப் பிரிக்கவும் புணர்த்தவும் வல்லவராக நெருங்கிப் பழகுதலாலும் புறத்தில் அரசர்கள் அவர்கள் தலையில்தொட்டு

வெள்ளிப்பூச் சூட்டியதாகக் கூறப்பெறுதலாலும் அவர்கள் ஒதுக்கிவைக்கப் பெற்றவர்கள் அல்லர் என்பது புலனாகிறது. இதுநிற்க.

திணைமக்கள் அவ்வவர் நிலங்களுக்கு ஏற்ற உணவை உண்டனர் எனக் கூறப்பெறுகின்றது. மக்கள் தங்களைப்புனைந்து கொள்ள ஆடையணி, மலர் முதலியவற்றை அணிவர். இந் நூலில் குறவர்கள் மரல் நாராலாகிய உடையை உடுத்தனர் என்பதை மரனார் உடுக்கை மலையுறை குறவர் " என்ற (64) அடி விளக்கும். மகளிர் சந்தனம் குறிஞ்சி வேங்கை இவற்றின் தழைகளைப் பிணைத்து உடுத்தனர் என்பதும் அவற்றின் பூக்களை அணிபெறச்சூடினர் என்பதும் கூறப்பெறுகின்றது. நெய்தல் நிலத்து மக்கள் ஞாழல் தழையையணிந்தனர் என்றும் (54) நெய்தற்பூவைச் சூடுவர் என்றும், கூறப் பெறுகின்றது. "பறிப்புறத்திட்ட பானாடை யிடையன்" என்னும் பகுதி யால் இடையர் படுக்கவும் போர்க்கவுமாகப் பனை யோலையால் முடைந்தபாயை முதுகில் எப்போதும் கட்டிக்கொண்டிருப்பர் என்பதும் குராமலரையணிவர் (266) என்பதும், மருதநிலத்துப் பெண்கள் ஆம்பல் தழையை உடுத்துவர் என்பதும். தாமரை குவளை முதலிய பூக்களைச் சூடுவர் என்பதும், சுரிதகம் (திருகுப்பூ) குழை, வளை முதலியன அவரணியும் அணிகள் என்பதும் விளக்கப்பெறுகின்றன. பாலைநிலத்து மறவர்கள் துவராடையையே உடுத்துவர் என்பது "துவர் செய்யாடைச் செந்தொடை மறவர்" என்றபகுதியான் அறியப்பெறும்.

இருப்பிடம் :— எளியமக்கள் பனை யோலைகளாலும், தென்னங்கீற்றாலும் இலையாலும் வேயப்பெற்ற குடில்களிலும், செல்வர்கள் மாளிகைகளிலும் வசித்து வந்தமை "குரையிலை போகிய விரவு மணற் பந்தர் (40) அட்டிலோலை தொட்டனை நின்மே (300) என்ற அடிகளாலும், வீடுகளைச் சுற்றிலும் பனை மட்டைகளாலும் முட்களாலும் வேலியிட்டிருந்தமை 354, 38 செய்யுட்களாலும், குறிக்கப்பெறுகின்றன. இவற்றால் பெரும் பான்மையான மக்கள் சிக்கன முறையில் இயற்கைப்பொருளைக்

கொண்டு செப்பனிடப்பெற்ற இல்லங்களில் தங்கள் வாழ்நாளைக் கழித்தனர் என்பது புலனும்.

**பழக்கங்கள் :—** " அணங்கறிகழங்கிற் கோட்டங்காட்டி " என்பது கழங்குமெய் நிறுத்தல் என்னும் வழக்கத்தை விளக்குகிறது. இதன் செயல்முறையாவும் அகநானூற்றுள் குறிக்கப்பெறுகிறன. குறிஞ்சி நிலத்து மக்கள் தம் உணவுக்காக ஈயலைப் பிடிப்பதும் உடும்பைப்பிடிப்பதும் உண்டு எனவும் அவை பிடிக்கு முறையும் மிக அழகாகக் கூறப்பெறுகின்றன. இந்நூல் 59ஆம் செய்யுளில் உடும்பிருக்குமிடத்தைச் சுற்றி மெல்லிய ஆடையை விரித்து வளையக்கட்டி புதருள் புகுந்து உடும்பைக் கலைப்பார்கள். அது தப்பியோடமுயன்று வெளிவரும்போது அதன் கூறியநகங்கள் ஆடையிற் சிக்க விழுந்துவிடும். உடனே குறவர்கள் அதன் அடிப்புறத்து ஈட்டியாற் குத்திக் கொன்றுவிடுவார்கள் என்பதும், புற்றில் புகையை மூட்டிப் பானையைக்கவிழ்த்து ஈயலைப் பிடிப்பார்கள் என்பதும் குறிக்கப்பெறுகிறது.

முல்லை நிலத்து மக்கள் தயிர்த்தாழிகளின் தயிர்மொச்சை நாற்றம் நீங்க விளாம்பழத்தை யிட்டுவைப்பார்கள் என்பது "விளம்பழங் கமழுங் கமஞ்சூற்குழிசி" என்ற பகுதியாலும், நெய்தல் நிலத்து மக்கள் திமிங்கிலம் போன்ற பெரிய மீனினங்களை வேட்டையாட நீண்ட கயிற்றின் நுனியில் எறிஉளிகளைக் கட்டி அதனை வீசி எறிந்து மீனுடலிற்பதியுமாறு செய்து வேட்டையாடுவர் என்பது 'நோன்புரி, கயிறு கடைபாத்த கடுநடை யெறியுளித், திண்டிமிற்பரதவர்' என்ற (388) பகுதியாலும், கடற்கரையில் இராக்காலத்துப் பரதவர்கள் மீன் கொழுப்பைக் கிளிஞ்சிலில் ஊற்றி விளக்கெரித்தனர் என்பது "மீனெய் அட்டிக்கிளிஞ்சில் பொத்திய, சிறு தீ விளக்கில் துஞ்சும்" என்ற பகுதியாலும் விளங்குதல் காண்க. பொதுப் பழக்கங்களாக ஊர்க்காவலர் மணியடித்துக்கொண்டு தெருக்கள் தோறும் சென்று எழுப்பி வாயிலைக் காத்துக்கொள்ளுங்கள் எனக் கூவுதலும், குழந்தைகளுக்குத் தன் தந்தையின் பெயரிடுதலும் (40) சப்தரிஷி நட்சத்திரங்களை வணங்குதலும் கூறப்பெறுகின்றன.

தலைவன் புறத்தொழுக்கம் நிகழ்த்திச் சாந்தம், பூமணம் முதலியன கலையாது தன்வீடுவந்து தலைவியின் அன்புபெற விழைகின்றான். அவள்கடிந்து கூறுவதாக வரும்,

"தொல்கவின் தொலையினும் தொலைக சார
விடேஎன் விடுக்குவெனாயின் கடைஇ
கவவுக்கை தாங்கு மதுகையங் குவவுமுலை
சாடிய சாந்தினை வாடிய கோதையை
ஆகில் கலங் கழீஇ யற்றும்.
வாரல் வாழிய கவைஇநின் றோளே"

என்ற செய்யுளில் தலைவி தலைவனை நோக்கித் "தலைவனே நீ பரத்தையிற் பிரிந்த குறியோடு வந்திருப்பதால் உன்னைத் தீண்டுதல், கழித்தபானை முதலியவற்றைத் தீண்டுதல், போலாகும்" எனக் கூறுவதால் நெடுநாட்பழகித் 'தீண்டல்' பெற்ற தாழி முதலியவற்றைப் புனிதக்காலை நீத்தலும், அவற்றைத் தீண்டல் கூடாதென்பதும் குறிக்கப் பெறுகின்றன. "பலிகளார்கைப் பார்முது குரவன், இடுபலிநுவலும் அகன்றலை மன்றத்து, விழவுத்தலைக் கொண்ட பழவிறன்மூதூர்" என்ற (293) பகுதியால் குயவர்கள் அணங்குகளையும் காக்கைகளையும் அழைத்துப் பலியிட்டுப் பூசை செய்தலும் விழாக் கொண்டாடுதலும் மரபு என்பது அறியப்பெறுகிறது. ஊரில்நடக்கும் விழாக்களைக் குடிகளுக்கு அறிவித்தலும் இவர்கள் கடமையே யாகும். இக்காலத்தும் கிராம தேவதைகளுக்குப் பூசாரிகளாய் இருப்பவர்கள் இவ்வகையார்களே என்பது இக்கருத்தை வலியுறுப்பதாகும். நெய்தனிலத்துப் புன்னையடியையும் பனையடியையும் பொதுக்கூடிப் பேசுமிடங்களாக வைத்திருந்தார்கள் என்பது மன்றப்பெண்ணை மன்றப்புன்னை என்ற சொல் வழக்கால் அறியலாம். மற்றும். தலைமகன்வந்து களவொழுக்கம் வேண்டிச் சிறைப்புறத்து நிற்கத் தலைவி அவனியற்பழித்து உடன்போக்கு நிகழ்த்தியாவது அவனை யடைவோமா? எனத் தோழியிடம் வினவுவதாகவரும்

" அருங்கடி யன்னை காவனீவிப்
பெருங்கடை யிறந்து மன்றம் போகிப்

பகலே பலருங் காண வாய்விட்டு
அகல் வயற் படப்பை அவனூர் வினவிச்
சென்மோ வாழிதோழி ''

என்னுஞ் செய்யுளால் தலைவி 'நமது தலைவன் நம்மைச் சரிவரத் தலையளி செய்யாமையால் தாயின் காவலைக் கடந்து நாணத்தை விட்டு மன்றம் சென்று அவனூரை வினவிச் செல்வோமா' என வினவுகின்றாள். இதனால் பக்கத்து ஊர்களிலுள்ள சிறந்த மக்களது பெயரும் ஊரும் செல்லும் வழிகளும் அறிந்து கொள்ளுதற்கேற்ற சாதனம் அக்காலத்து மன்றங்களில் இருந்தமை புலனாகின்றது.

" குழையன் கோதையன் குறும்பைந் தொடியன்
விழவயர் துணங்கை தழூஉகஞ் செல்ல ''

இப்பகுதி ஆடவர்களும் மகளிர் வேடந்தாங்கிப் பரத்தையர் கூட்டத்துக் கலந்து நின்றாடுதல் வழக்கம் என்பதும் அது 'துணங்கைக்கூத்து' என்றழைக்கப்பெறும் என்பதும் குறிப்பிக்கப்பெறுகின்றன. மகளிர்கள் நோன்பின் பயனடைய தைத்திங்களின் விடியற்காலையில் ஆயத்தாரோடு நீராடுதல் மரபு என்பது " ஆயமொடு........தைத்திங்கள் தண்கயம்படியும், பெருந்தோட்குறுமகள் '' என்னும் பகுதியாலும், மார்கழி முற்றும் நோன்பிருந்து முற்றிய தவசியர் தைமாதப்பிறப்பில் நீராடி உணவுண்டல் வழக்கம் என்பது " நோன்பியர், தையூண் இருக்கையிற்றோன்றும்'' என்ற உவமையாலும், புன்கந் தளிரை மார்பிலப்பிக்கொள்ளுதல் " எழிற்றகையொண்முறி, சுணங்கணி வனமுலை யணங்குகொளத் திமிரி '' என்ற பகுதியாலும் அறியப் பெறுவனவாம். பனங்குருத்தை மெல்லியதாகக் கழித்து முல்லைமலரைக்கட்டி அணிதலும், நெய்தனிலத்துத் தோணிசெய்து கடலிற்செலுத்தும்போது வருத்துந்தெய்வங்கள் தீண்டாதிருத்தற்காக புகைகாட்டிச் செலுத்துதலும், பகைவர்களைவென்று அவர்கள் பல்லைப்பிடுங்கித் தம் கோட்டைவாயிலில் வைத்தழுத்துதலும் சிறந்த வழக்கங்களாம். சில நோய்களுக்குத் தண்ணீரே இயற்கை வைத்திய முறைப்படி பருந்தாதலை " விருந்திற்றீநீர் மருந்துமாகும் '' என்றபகுதியும்,

கள்ளுண்டு களிப்பார்க்குக் கள்ளில்லாவிடின் வேறுபாடு தோன்றுதலை "மகிழ்ந்தோர் கட்கழி செருக்கத்தன்ன" என்ற வுவமையும் அறிவுறுக்கின்றன. புகர்வையரிசிப் பொம்மற் பெருஞ்சோறு, கவர்படுகையை கழுமமாந்தி" என்ற அடிகளில் 'நீரிடப்பெற்ற சோற்றை மயக்கம் வரும்படி உண்டு' என்று கூறுவதால் பழையமுதுண்டால் மயக்கம் வரும் என்பது உணரப்பெறும்.

கடவுள் பராவும் முறை :— இந்நூலுள், முருகன், திருமால், பலராமன் என்ற தெய்வங்களின் பெயர்கள் குறிக்கப் பெறுகின்றன. அல்லாமலும் பழங்காலத்துக் கடவுளர்க்கென்று இப்போது உள்ளனபோலப் பெரிய கோயில்கள் இல்லையென்பதும், அவர்கள் தங்களுக்கு அண்மையான பொது மன்றங்களில் கடவுளை நிலைபெறுவித்து வழிபாடியற்றினர் என்பதும் ஆராய்ச்சியாளர் துணிபு. அதனை ஒத்து இந்நூலுள் கடவுளை ஆலமரத்திலும், பனைமரத்திலும், நீர்த்துறைகளிலுள்ள மரங்களிலும் வைத்து வழிபட்டு வந்தனர் என்பது குறிக்கப்பெறுகின்றது. இது,

"நெடுவீழிட்ட கடவுளாலம்" (343)
"தொன்றுறை கடவுள் சேர்ந்த பராரை
மன்றப் பெண்ணை" (303)
"ஒண்துறை தடைஇய கடவுள் முதுமரம்"

என்ற பகுதிகளான் அறியப்பெறும். கடவுளருக்கு ஆடு முதலியன பலியிடுதலேயன்றிச் சோற்றுத் திரளோடு கருனைக் கிழங்கைக் கூட்டி யுருட்டிப் பலியிடுதலும் உண்டு. இதனை "கருங்கட் கருனைச் செந்நெல் வெண்சோறு, சூருடைப்பலி" எனவரும் அடி வலியுறுக்கும்.

குறிஞ்சிநிலத்துக் குறவர்கள் மழை குளிரப் பெய்யாவிட்டால் தெய்வத்தின் வீறுதணியாதென்றும் அதுதணிய வேண்டி மழைபெய்விக்குமாறு கடவுளை வேண்டிக்கொள்ளுதலும் உண்டு என்பது 165ம் செய்யுட்பகுதியால் விளங்கும். காட்டுப்பசுவின்மேல் எய்த கணை குறிதவறுதல் தெய்வத்தின்

குறை உண்டென்பதற்கு அடையாளமாக எண்ணப்பெற்றது. கடவுள் எழுந்தருளியிருக்கு மரங்களிற் கோட்டான் குடியிருக்கும் என்பது (83) விளக்கப்பெறுகிறது.

" ஒண்குரல் நொச்சித் தெரியல் சூடி
யாறுகிடந் தன்ன அகனெடுந் தெருவின்
சாறெ னநுவலும் முதுவாய் குயவ "

என்னும் செய்யுட்பகுதி குயவர்கள் நொச்சிமாலை சூடித் தெருக்கடோறும் சென்று விழாவைத் தெரிவிக்குந் தொழிலினர் என்பதும் மற்றப் பொதுக்காரியங்களையுந் தெரிவிக்கும் கடப்பாட்டாளர்கள் என்பதும் அறிவிக்கப்பெறுகின்றன.

வேலன் வெறியாடுகின்றதுபோது தலைவியை முன்னிறுத்தி அவள் தலையிற் சூடியுள்ள பூவை யெடுத்து எறிந்து விடுவன். பின்பே தெய்வத்திற்குப் பரவுக்கடன் கொடுப்பன்.

இது " மின்னு நிமிர்ந்தன்ன வேலன் வந்தெனப்
பின்னுவிடு முச்சி அளிப்பானுதே " (51) எனவருவதால்

அறியலாம். இதனை

" நெடுவே லேந்திய நீயெமக் கியாஅர்
தொடுத லோம்பென அரற்றலு மரற்றும் " என்ற தொல்காப்பியக் களவியற் சூத்திரத்து மேற்கோட் செய்யுளும் வலியுறுக்கும்.

விளையாட்டு:—நெய்தனிலத்துச் சிறுவர்கள் நண்டை வளைத்து வளைத்துத் துரத்தியும் (363) கடலலையைக் காலாலெற்றியும் (354) அந்நிலத்து மகளிர் வண்டலாடியும், அடும்புக் கொடியின் மலர் கொய்தும் விளையாடுதல் வழக்கம். மருத நிலத்துச் சிறுவர்கள் எருமைமாட்டை மேய்க்கக்கொண்டு செல்லும்போது அதன்மேல் ஏறியுட்கார்ந்து செல்கின்றார்கள் என்னும் பொருட்படவரும்,

" காரான், இன்றீம்பாற் பயங்கொண்மார் கன்றுவிட்டு
ஊர்க்குறு மாக்கள் மேற்கொண்டு கழியும் " என்னும்

பகுதி நாம் காணும் இயற்கையோடு ஒத்து நகைப் பொருளையும் விளக்கின்றது

இன்னும், அவர்கள் நெல்லிக் காய்களைக்கொண்டு வட்டாடுதலும், செல்வர் வீட்டு மக்கள் சிறு தேருருட்டுதலும், குறிஞ்சி நிலத்துச் சிறுவர்கள் தேனைப்பிழிந்து நக்கியும் ஈசலைப் பிடித்துப் பறக்கவிட்டும் விளையாடுதலும் கூறப்பெறுகின்றன. சிறந்தனவற்றுட் சிறந்ததாக வரும் இப்பகுதி விளையாட்டுத் துறையில் தமிழ்மகளுக்கு இருந்தவற்றத்தை விளக்குவதாகும். தலைவி உடன்போக்கு நிகழ்த்துங் காலத்து இடைச்சுரத்துக் கண்டோர் அவள் தாயிடம் கூறுவதாக வரும் "செல்வத்தந்தை இடனுடை வரைப்பின், ஆடுபந்துருட்டுநள்போல ஓடி" என வரும் செய்யுளில் தலைவி பாலையின் கொடுமை தாங்கற்கில்லாது தந்தைவீட்டிற் பந்துருட்டுபவள்போல விரைந்து செல்கின்றாள் என்றபொருள் விளக்கப்பெறுகின்றது. இதனால் அக்காலத்து விளையாட்டுக்களில் காற்பந்து ( Foot ball ) ஆடுதலும் உண்டு என்பது அறியப்பெறும்.

"விளவின், ஆட்டொழி பந்திற்கோட்டு மூக்கிறுபு;
கம்பலத்தன்ன பைம்பயிர்த்தாம், வெள்ளில் வல்சி"

எனவரும் உவமையால் பசிய பயிர்களின் மேல்விழுந்த விளாம் பழங்கள் கம்பளத்தின்மேல் ஆடுதல் ஒழிந்துகிடக்கும் பந்துகளைப் போற்கிடந்தன என்றபொருள் கூறப்பெறுகின்றது இதனால் பலகைப் பந்தாட்டம் (Cricket) போன்று பச்சைக் கம்பளங்களை விரித்துப் பந்தாடுதல் உண்டு என்பது உணரலாகும்.

நில வியற்கை:— பாலை யென்பது தனி நில மன்று. முல்லையுங் குறிஞ்சியும் முறைமையிற் றிரிந்தது எனக் கூறப்பெறுகின்றது. இந்நூலுள் பாலைநிலமானது "உறைதுறந் திருந்த புறவு" என அழைக்கப்பெறுகிறது. அஃதாவது மழைத்துளி மறந்திருந்த முல்லை நிலம் என்பதாம். இதனால் முல்லைதிரிந்து பாலையாதல் கருதப்பெற்றது. இதனியற்கை.

துகில் விரித்தன்ன வெயிலவிர் உருப்பின்
என்றூழ் நீடிய குன்றத்துக் கவான்
ஒப்பசிச் செந்நாய் உயங்கு மரை தொலைச்சி
ஆர்ந்தன ஒழிந்த மிச்சில் சேய்நாட்டு
அருஞ்சுரஞ் செல்வோர்க்கு வல்சியாகும்''

என்ற அடிகளால் நன்குவிளக்கப் பெறுகின்றது. வெள்ளிய ஆடையைச் சூழ விரித்தாற்போன்ற வெயில் எரிக்கின்ற வெப்பமிக்க கோடையால் வெதும்பிய மலையில் மிகுந்தபசியை யுடைய செந்நாய் வருந்திய மரைமானைக் கொன்று உண்ட மிகுதியை வழிப்போவார் வேறுணவு கிடைக்கப்பெறுமையால் அதனை உண்கின்றார்கள் என்பது பொருளாம். இதனால் பாலை யின் கொடுமை படமெடுத்தாற் போலக்காட்டப்பெறுகிறது.

"மழை தொழிலுலந்து" என்னும் 333ஆம் செய்யுளால் 'மழை தன்பெய்தற் றொழிலையே வறந்து விட்டதால் மூங்கில் கள் தம்மழகு கெட்டு வாடி நிற்கின்றன. பருக்கைக் கற்கள் நிரம்பிய பள்ளத்தாக்குகளில் அருகிநிற்குநீரை வேட்கைமிகுதி யால் யானையும் புலியும் ஒன்றேடொன்று சண்டையிட்டு உண்கின்றன' என்ற இயற்கைகள் அழகாக விளக்கப் பெறு கின்றன.

"பெயினே, விடுமான் உழையினம் வெறுப்பத் தோன்றி
யிருங்கதிர் நெல்லின் யாண ரஃதே
வறப்பின், மாநீர் முண்டகந் தாஅய்ச் சேறுபுலர்ந்து
இருங்கழிச் செறுவின் வெள்ளுப்பு விளையும்" என்ற (311)

செய்யுளால் நெய்தனிலத் தியற்கை விளக்கப் பெறுகின்றது. 'மழை பெய்தால் மான் கூட்டங்களும் உண்டு தெவிட்டக்கூடிய நெல் விளையும். பெய்யாவிட்டாலும் உப்பங்கழிகளில் நீர்வற்றி அறுசுவையுட் சிறந்த அமுதம் (உப்பு) விளையும். ஆதலால் நெய்தலுக்கு மழை பெய்வதும் ஒழிவதும் ஒரு தன்மையனவே. ஒருபோதும் அந்நிலம் குறைபாடிலது என்பது விளக்கப் பெறு கின்றது. நான்மணிக்கடிகையில் "மழையின்றி மாநிலத்தார்க் கில்லை" எனக் கூறப்பெறினும் ஏனை நிலத்திற்கன்றி நெய்த

ணிலத்திற்கு இவ்விலக்கு இல்லை எனபது அறியப்பெறுகின்றது.

"பெருங்கடல், இரவுத்தலை மண்டிலம் பெயர்ந்தென உரவுத்
திரை, எறிவனபோல" என்பதால் தண்ணென் கதிர்

வரலாற் பொங்கும் கடல் என்பது குறிக்கப் பெறுகின்றது. இவ்வாறே குறிஞ்சி மருத மிவற்றினியற்கைகளும் நன்கு விளக்கப் பெற்றுள்ளன.

(தொடரும்.)

---

# சென்னை மாகாணத் தமிழர் மாநாடு.

## புலவர் மாநாடு (11—6—1934.)

* திரு. கா. நமச்சிவாய முதலியாரவர்கள் M. R. A. S.

சேந்தமிழ்ப் புலவீர்,

சென்னை மாகாணத் தமிழர் மாநாட்டின் சார்பாக நாம் அனைவரும் இங்குக் குழுமி யிருக்கின்றோம். அரும்புலவராகிய நீவிரனைவரும் ஈண்டு ஒருங்கெய்தி யிருப்பது எனக்கு மிக்க உவகையைத் தருகின்றது. உங்களைக் காணுந்தோறும் கூடலிற் கூடியிருந்த சங்கப் புலவர்களைக் கண்டதே போல் களிப்புத் ததும்புகின்றது. அன்று கூடியிருந்த அப்புலவர் பெருமக்களைப் போலவே இன்று கூடியிருக்கின்ற நீவிரும் தமிழ் வளர்ச்சிக்கான

---

* திரு. முதலியாரவர்கள் புலவர் மாநாட்டைத் திறந்துவைக்க இசைந்து இவ்வுரையை அனுப்பினார்கள். சில காரணங்களால் அவர்கள் வர முடியாமை நேர்ந்தமையால் இது வெளியிடப்படுகிறது.

அரிய பணிகளை இயற்றுதல்வேண்டும். இந்நாளில் பலப்பல கொள்கைகள் பரவி வருகின்றன. அவையனைத்தையும் ஒருவாறு ஆராய்ந்து முடிவு கட்டுதலே உங்களுக்குற்ற முதற் கடமையாகும். அவை பின் வருவனவாம்.

1. ஒருமொழி முன்னேற்றம் அடைவதற்குச் சொல் வளர்ச்சியே முதன்மையானதாம். இதனைப்பற்றி அறிஞர் பலர் பலவாறு நினைக்கின்றனர். தமிழ்மொழியின்கண் வேறு மொழிச்சொற்கள் கலத்தல் கூடாது, எனுங் கொள்கையினர் ஒரு சாரார். வேறுமொழிச் சொற்கள் கலந்து வருதலே மொழி வளர்ச்சிக்கு ஏற்றது என்னுங் கருத்துடையார் ஒரு சாரார். எளிமையாகப் பொருள் விளங்குதற்கேற்ற எந்த மொழியையும் கலந்து எழுததலே தக்கது என்னுங் கருத்துடையார் ஒரு சாரார். இவ்வெல்லாவற்றுள்ளும் உண்மையுளது. இம்மாநாட்டினர் மேற்கொண்டுள்ளதுபோலப் பண்டைத் தமிழ் நூல்களை ஆராய்ந்து அவற்றிற்கான தமிழ்ச் சொற்களைத் தேர்ந்தெடுத்து முதற்கண் அமைத்துக்கொள்ளலாம். பின்னர் தமிழிலேயே மொழிகளைப் படைத்துக்கொள்ளலாம் என்னுங் கருத்துச் சாலச் சிறந்ததே. இக்கருத்து சமய நூல்களை எழுதுங்காலத்தும் பள்ளிப்பிள்ளைகளுக்குப் பாடங்கள் வரையுங் காலத்தும் நிலை நிற்காது. 'யோகஞ் செய்தான்' என்பதைத் தமிழ்மொழியில் சொன்னால் அப்பொருள் விளங்குமா? ஏரோபிளேன் என்பதைத் தமிழில் சொல்வது எப்படி? இவற்றையெல்லாம் ஆராய்ந்து முடிவுகட்டுதல் பெரும் புலவராகிய உங்கள் கடமை ஆகும்.

2. தமிழ் மொழியில் வேண்டப்படாத எழுத்துக்கள் சில காண்கின்றன; வேண்டப்படும் எழுத்துக்கள் பல காண்கின்றில. ஆகலின் தமிழ்மொழியின் எழுத்துக்களை இந்நாளில் வேண்டியபடியாக திருத்தி யமைத்துக்கொள்ளவேண்டும், என்கின்றனர் ஒரு சாரார். சீர்திருத்த வழிகளில் முற்பட்டு நிற்பவராகிய மேல்நாட்டாரும் தம்மொழியின் எழுத்துக்களைக் கூட்டவோ குறைக்கவோ முற்படுகின்றாரில்லை. உள்ள எழுத்துக்களைச்

கொண்டே குறியீடுகளை அமைத்துக் கொண்டு உலகிலுள்ள மொழிகளை எல்லாம் எழுதி விடுகின்றனர். வேண்டுமாயின் அவ்வாறு நாம் செய்து கொள்ளுதல் தகுமேயன்றி எழுத்துக்களைக் கூட்டவோ குறைக்கவோ செய்தல் கூடாது; அவ்வாறு செய்தால் தொல்காப்பியம் முதலிய பண்டைய நூல்களெல்லாம் பழுது பட்டுப் பாழாய்ப் போய்விடு மன்றோ?

3. மற்றும், சொற்களின் மயக்க நிலையும், னகர, நகர வேறுபாடும், றகர ரகர வேறுபாடும் வேண்டா என்கின்றனர். அரசியலார் குற்றியலுகரங்களையும் பிரித்தே பதிப்பிடு கின்றனர். இவையனைத்தும் புலமை நிரம்பாதார் செய்கையாகும். இந்நாளில் சிறுவர் தம் தலை முடியைத் தம் உளம் போனவாறு கத்தரித்துக் கொள்ளுதல் போலத் தமிழறியாதாரும் தமிழைச் சீர் திருத்துவதே போல் தமது கருத்தை வலியுறுத்துகின்றனர். அந்தோ, நமது தமிழ்மொழி இவ்வாறு அல்லற்படுவதோ! இவற்றையெல்லாம் அடக்கியாள அறிஞர் இலரோ! இங்குக் குழுமியிருக்கும் அறிஞராகிய நீவிரே இவற்றிற்கெல்லாம் முடிவு கட்டுதல் வேண்டும். இவை நிற்க. உரை நடைக்கும் செய்யுள் நடைக்கும் வேற்றுமைகள் பெரிதுங் காணப்படுதல் வேண்டும். உரை நடையில் அத்துணை 'மயக்க நிலை' வேண்டா; செய்யுள் நடையிலும் அடிகளின் தொடக்கத்திலும் மோனை வருமிடங்களிலும் பிரித்தெழுதுதல் சாலச் சிறந்தது. உரைநடைக் கான இயல்கள் செப்பமாக அமைய வேண்டும். திரிசொற்களை உரைநடையில் அமைத்தெழுதல் ஆகாது.

இந்நாளில் ஆராய்ச்சி நூல்கள் பல்கி வருகின்றன. நம்மவருட் சிலர் ஆராய்ச்சியென்றால் காதைப் பொத்திக்கொள்வர். ஆராய்ச்சியில்லாத மொழி அழிவடையும்; ஆராயாத நூல் பாழடையும். ஆகவே, ஆராய்ச்சி நூல்கள் பெரும்பாலனவாக

வெளிவருதல் வேண்டும். ஒவ்வொருவர் ஒவ்வொரு கருத்துக் கொண்டு பல்வேறு நூல்களை எழுதுகின்றனர். அதனால் பொது மக்கள் உண்மை புணராது மயங்குகின்றனர். இத்தகைய புலவர் கூட்டத்தில் அரியசெப்திகளை ஆராய்ந்து ஒரு முடிவுக்கு வரின் பெருநலன் விளையுமன்றே?

இவையனைத்தினும், நாமனைவரும் இங்குக் கூடியதனால் பெரியதோர் நன்மை ஏற்படும். நம்முடைய நாட்டில் இனங்கள் பல; கோட்பாடுகள் பல. இந்நிலையில் நமக்குள் ஒற்றுமை எற்படுதல் ஒரு நாளும் இல்லை. தமிழ்மொழி ஒன்றினாலேயே —தமிழர் என்னும் எண்ணம் ஒன்றினாலேயே—ஒற்றுமை ஏற் படுதல் திண்ணம். ஆதலின், தமிழர் என்னுங் கொள்கைபற்றி அனைவரும் ஒருளத்தினராய்த் தமிழ்த் தாய்க்குத் தொண்டு புரியும் வண்ணம் இப்புலவர் மாநாட்டைத் திறந்து வைக்கின்றேன். தமிழ்மொழி வாழ்க. தமிழ்ப் புலவர் வாழ்க. தமிழ் நாடு வாழ்க.



உ

# நமது மருத்துவப் பெரியாரின் மறைவு.

நமது சங்கத்தின் உறுப்பினரும், நம் சங்க மருத்துவக் கூடத்திற்கு ஓர் அச்சாணியாயிருந்தவரும் பிறர்நலங் பேணுப வரும் ஆய, திருவாளர். மருத்துவர், ம. கண்ணுசாமிப் பிள்ளை யவர்கள், நம்மைப் பிரிந்து இறைவன் இணையடிக்கமல நீழலில் இன்று இன்பந்துய்த்து மிளிர்கின்றார். இவர் விபவ ஆண்டு சித்திரைத் திங்கள் ௰உ-ஆம் நாளன்று தஞ்சையின் தென்பா லாகும் வல்லத்தில் திரு. மருதையாபிள்ளை என்பவருக்கும் சுப்பம்மையாருக்கும் திருமகனாய்த் தோன்றினார். இவர் தனது இளமைப்பருவத்திலேயே, ஆண்டிருந்த ஒரு சிறு திண்ணைப் பள்ளியிற் பயின்று சிறிது ஆங்கிலமுங் கற்றார். கல்வியையே வளம்படக் கொள்ளும் பேரவாவிருந்தும் தனக் குற்ற வறுமையின் காரணத்தால் ஏதேனும் ஒருதொழில்புரிய வேண்டும் எனுஞ் சிந்தையராய் தஞ்சை அரசாங்க மருத்துவப் பெருமன்றின் (Hospital) மருந்துவினைஞர் (Compounder) தொழிலிலீடுபட்டு அஃதை நன்கு பயின்றார். பின்னர், மருந்து வினைஞராக மன்னார்குடி மருத்துவ மன்றிலிருந்தபோது ஆண்டி ருந்த பெருமருத்துவர், 'தேவிசிங்கு' என்பவரிடம் தொழிலின் நுட்பங்கள் யாவுமுணர்ந்தார். பின்னர் தஞ்சை சில்லாவின் பலவிடங்களிலும் தொண்டு செய்து இறுதியில் தஞ்சைக்கு மாற்றப்பட்டு கடைசிவரையிலும் இங்குள்ள மக்களுக்கே பணி யாற்றி வந்தார்.

இவர் கடந்த எட்டு ஆண்டுகட்கு முன்னமே வேலையினின் றும் நீங்கி உதவிவூதியம் பெற்றும், பெரும்பாலானவர்களைப் போன்று நடைப் பிணமாகத் திரியாது 'என்கடன் பணிசெய்து கிடப்பதே' என்னும் அமுத மொழிக் கிணங்க, கரந்தைத் தமிழ்ச் சங்கத் தலைவர் திருவாளர். த. வே. உமாமகேசுவரம் பிள்ளையவர்களின் துணையினால், தனது வாழ்க்கை வீணாகப் போகாதவாறு ஒரு சிறு மருத்துவக் கூடத்தைச் சங்க ஆதரவில் தோற்றுவித்து அதில் தொண்டாற்றத் தொடங்கினார். இன்று நாளொன்றுக்கு ஐம்பதின்மருக்குக் குறையாது இலவசமாக மருத்துவவுதவிசெய்வதினின்றும் அவரது உழைப்பின்பெருமை தெற்றெனவிளங்கும். மேலும், இவர் தனது வாழ்க்கையை மிக்க எளிமையாகவே வைத்திருந்தது மக்கள் பலராலும்செய்தற்கிய லாத செயல் ஆகும். இவர், எளியாரிடத்தும் அருள் நிறைந்த

நோக்கமும், சிவபெருமானையே சிந்தித்து வணங்கும் நெஞ்சமும், எத்தகைய இடுக்கண்வரினும் திருக்கோயில் வழிபாடியற்றாது உண்ணாத விரதமும், பச்சிளங் குழந்தை முதல் பல்விற்று விழுந்த கிழவர் வரையில் எத்தகையராயினும் அவரிடத்து உறவுகொள்ளும் பண்பும், பெற்றிருந்தமையை யறியாதவர் இவண் எவரும் இலராவர். இவர் தனக்கு ஆசாரியனாக, பலகலைகளையும் உணர்ந்து ஒழுக்கமும் சிறப்பும் ஓங்கப்பெற்று அருளாசிரியனாயிருந்த தஞ்சை திரு. குப்புசாமி ராசு எனும் பிர்மானந்த அடிகளைக் கொண்டு, அவரது அடி இணைகளையே நாளும் உள்ளத்திற்சூடி மகிழ்ந்தார்.

இவர், தனக்கு இளமையிற்கிடைத்த 'அகத்தியர் நயனவிதி ஆயிரம்' எனும் கண்மருத்துவ நூலைக்கொண்டு, கடைசி நாட்களில் ஓய்வு இன்றி ஆராய்ந்து அதனினும் தான் கண்ட சிறந்த முறைகளால் கண்ணிற்கு உற்ற கொடிய நோய்களை எளிதிற் போக்குதற்கு ஆய நெறிகளை எல்லாம் அறிந்து அவற்றால் மக்களுக்கு உதவிபுரிந்து வந்தார். இவர் அந்நூலை நன்கு ஆராய்ந்து எல்லா மருத்துவர்கட்கும் பயன்படுமாறு செப்பனிட்டு வெளியிடுதற்குப்பெரிதும் உளங்கொண்டிருந்தார். இவ்வெண்ணத்தை இவரது அருமைமக்களாகிய திரு. க. தியாகராசனவர்களும் திரு. க. அருணாசலம்அவர்களும் மேற்கொண்டு முற்றுவிப்பார்களெனக் கருதப்படுகிறது. இன்னும் இவரது செயல்கள் விரிப்பிற்பெருகும்.

இத்தகைய பலகுணநலங்களும் ஒருங்கே அமையப்பெற்ற பெரியார் திடீரென நோய்வாய்ப்பட்டு, பவ ஆண்டு ஆனித் திங்கள் உ௰௭ (10—7—34) ஆம் நாள் நடுப்பகல் மணி ௨க்கு தனது அறுபத்தாறும் யாண்டில் தனது பொய்யுடம்பை மண்மகட் கீந்து புகழ் உடம்புடன் விண்ணாடு சென்றார். அவரது இன்னுயிர் இறைபடி நிழலில் இன்பம் பெற்றுய்யுமாக. இப்பெரியாரது பிரிவாற்றாமைக்கு இரங்கும் இவரது மக்கள், மின்சாரப் பொறிவலாளர் திருவாளர்கள் க. தியாகராசன் B.A., அவர்கட்கும், க. அருணாசலம் அவர்கட்கும் இச்சங்கம் தங்களது வருத்தத்தைத் தெரிவிக்கின்றது.

வாழ்வாவது மாயம்இது மண்ணாவது திண்ணம்
பாழ்போவது பிறவிக்கடல் பசிநோய்செய் தபறிதான்
தாழாதறம் செய்மின்! தடம்கண்ணான் மலரோனும்
கீழ்மேலுற நின்றான் திருக்கேதார மெனீரே.

உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத்

திங்கள் வெளியீடு.

துணர்-ய } பவ—ஆவணி. { மலர் - ரு.

க. கருதலளவைப் பகுதி 201

திரு. த. இராமநாத பிள்ளை அவர்கள்,

உ. தம்பிரான் தோழர் தேவாரம் 212

திரு. துடிசைகிழார், அ. சிதம்பரனார் அவர்கள்,

ஙூ. இலக்கணமும் இலக்கியமும் 221

திரு. நல்லூர், சுவாமி ஞானப்பிரகாசர் அவர்கள்,

ச. பொருளின் அமைப்பு 226

திரு. சீனிவாசாச்சாரியாரவர்கள் B.A., L.T.,

ரு. சொல்லதிகாரமறுப்பின் தடையும் விடையும் 231

திரு. ம. நா. சோமசுந்தரம் பிள்ளையவர்கள்,

சூ. ஒரு பெரு மகிழ்ச்சி 237

எ. வாழ்த்துப்பாக்கள் 238

திரு. நீ. கந்தசாமி பிள்ளை அவர்கள்.

அ. மதிப்புரை 240

செந்தமிழ்ப்புரவலர்,

த. வே. உமாமகேசுவரம் பிள்ளை, பொழிற்றொண்டர்.

தஞ்சைக் கூட்டுறவுப் பதிப்பகம், கரந்தை.



இராவ்பகதூர், A. T. பன்னீர்செல்வம் அவர்கள், Bar-at-law
சென்னை அரசாங்க அகமந்திர நாயகர்.

உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு

| துணர் ய | பவ, ஆவணி | மலர் ரு |
|---|---|---|

உ

## கருதலளவைப் பகுதி. I.

திரு. த. இராமநாதபிள்ளை அவர்கள், சாவகச்சேரி, இலங்கை.



### 1-ம் அதிகாரம்.

(166-ம் பக்கத் தொடர்ச்சி)



### யூகம். (Judgment)

5. விரோதப்பதம், மாறுகோட்பதம். (Contrary and Contradictory). விரோதமான இருபதங்கள் ஒன்று ஒன்றற்கு மாறுகோளல்ல. வெளிச்சத்தின் மாறுகோள் இருளன்று. இருளும் வெளிச்சமும் ஒருங்கு நிகழ்தலைக் காண்கின்றோம். இருளென்பது வெளிச்சத்தின் இன்மை (அபாவம்) அல்லவெனச் சிவஞான முனிவர் சிவஞானபாடியத்து உரைத்தனர். இருள் ஒரு உள்பொருளாகலான் உடன்பாட்டுப்பொருளே; இருளினது மாறுகோள் இருளின்மை. மனிதனின் மாறுகோள் மனிதன் அல்லாதது. மனிதனல்லாதது என ஒருபொருள் இன்றெனின் அது மூக்கும். மனிதன் அல்லாதது பொருளில்லாப்பெயர்

(Nomen Indefinitarer) அது வாயிற் காட்சிப் பொருளன்று. மனிதனல்லாதது இந் நிலவுலகத்து எப்பொருளையும் குறிக்கும். புல் பூண்டு விலங்கு ஏடு கருமை வன்மை துன்பம் குரங்குக் குட்டி வெஃகாமை பேதைமை என்றாற்போல எதனையும் உணர்த்தும். இப்பொருளில்லாப் பெயரால் பயனில்லை யென்றும் ஒரு பொருளினது இன்மையை உணர்த்துதலால் இப்பெயரும் கருத்துடையதாகும் எனவும் கூறுப. ஒரு பொருளினது இன்மையாராய்ச்சியை அப்பொருள் உலகிலே ஒழிய அப்பொருளுக்குப் பிறிதாகிய உலகில் செய்யப்படாது. கருமையின்மையை ஒளியுலகில் ஒழிய ஓசையுலகுபோன்ற பிற வுலகில் ஆராயப்படாது. கருமையின் இன்மை (அபாவம்) நிறம் என்னும் உலகத்திலே தான் உண்டு, கருமையில்லாதது மனிதனென்றால் பயனில் கூற்றாகும். கருமை யில்லாதது வெண்மை, பொன்மை முதலிய ஒளியுலகப் பொருட்களே. ஒரு உலகத்துப்பொருளை வேறொருவுலகில் தேடுதலில் பயனில்லை. ஒளியுலகப்பொருளை ஓசையுலகில் தேடுதல் குற்றம் உடைத்து, சுத்த உலகம் அசுத்த உலகம் ஓசை யுலகம் (நாத உலகம்) ஒளி உலகம் எனப்பல உலகங்களுண்டு. விரும்பியவாறெல்லாம் உலகங்களை நாம் படைக்கலாம்.

6. அளவை நூல்களில் சிலேடை இரட்டு மொழிதல் பெருங் குற்றமுமாகும். சிலேடைப் பதங்கள் இருபொருள் களைக் குறிக்கும். வீடு இல்லத்தையும் பாச நீக்கத்தையும் கருதுகிறது. வரை, எழுது என ஏவல் வினையாகவும், மூங்கில் மலையென்னும் பெயர்ச் சொல்லாகவும் வழங்கப்படுகிறது. இப் பதங்கள் வரிவடிவில் ஒரு சொல்லாகினும் உண்மையில் இரு வேறு சொற்கள். தமிழ்மொழியில் இரட்டுறமொழிதல் உண்டு, வேங்கை. வேகும் கை, என்றும் புலியென்றும், பொருள் தரும். இரட்டுறமொழியும் பதங்களை ஒரேபொருளில் ஒரு வாதத்தில் உபயோகிக்கவேண்டும். அங்ஙனமின்றேல் தருக்கப் போலிக்கு இடனாகும்.

7. இனப்பெயர். தனிப்பெயர். (Relative and Absolute Terms) இனிச் சிலர் பதங்களை இனப்பதம் தனிப்பதமெனப்

பிரிக்கின்றனர். இம்முறை முக்கியமானதன்று. தந்தை மகன் என்னும் முறைப்பெயர்கள் இனப்பதமாகும். பிரசை வேந்தன் என நினைவுத்தொடர்புடைய பெயர்களும் இனப்பெயராகும், நினைவு நோக்கின் எல்லாப் பெயர்களும் இனப்பெயர்களென மொழியலாம். உலக வழக்கில் நினைவு காரணமாக ஒரு பெயரைச் சிந்திக்க வேறோர் பெயர் உடன் தோன்றாதாயின் அப் பெயரை இனமில்லாத தனிப்பெயரென்போம். தனிப்பெயர் குறிக்கும் பொருள் தனியினப் பொருளாகவே இருக்கும். ஆய்தவெழுத்து உயிரில்லாததாய் மெய்யல்லாததாய் உயிர்மெய் யல்லாததாய் தன்னிலையின் நிற்றலால் தனிநிலையெனப்பட்டது. கடவுளென்னும் மொழியும் ஒரு தனிப்பதம். கடவுள் சகுணனும் நிற்குணனும் அருவாயும் உருவாயும் அருவுருவாயும் சிறந்ததோர் நிலையில் நிற்றலால் கடவுள் தன்னினம். (தற்பரம்) (Sin geniris) தனியினமாக நிற்கும் பொருள்களையும் ஒரு இனத்துள்ளடக்க இயலாதென்பர். தனியினப் பெயர்களை இனம் நோக்கி பல இனங்களில் அடக்கினும் குற்றமாகாது. கடவுள் பல வினங்களுக்கும் பரமாகிய இனமாகையால் பல இனங்களின் இனமாகும். ஓசையுலகில் ஓம் என்னும் நாததத்துவனும், ஒளியுலகில் பேரொளியாயும், அருளுலகில் பேரருளாயும், ஆற்றல் உலகில் சர்வவல்லவராயும், பலவினமாதல் காண்க. பேதமாயும் அபேதமாயும் பேதாபேதமாயும் இவையல்லவாகவும் நிற்கும் கடவுள் தனிநிலையே.

8. குணவிரி. பொருள்விரி. (Connotation and denotation) சிலர் பதங்களை குணவிரியுள்ள பதங்களென்றும் குணவிரியில்லாத பதங்களென்றும் பிரிக்கின்றனர். எம்மொழியும் ஒரு பொருளைக் குறிப்பதால் இம்முறை விலக்கற்பாலது. கருத்தில்லாப் பெயர், பெயரில்லாத பெயர், என்றாற்போல் முரணை கூற்றாகும். கருத்துக்கள் எழுதப்படாதன இடைச்சொற்களாகும். ஒருமொழியின் கருத்தே அதன் குணவிரி. ஒரு பொருளின் பண்புகளின் தொகுதியே அப்பொருளின் குணவிரியென்பர். ஒருபொருளின் குணவிரி முழுவதையும் ஒருவராலும் சொல்ல முடியாது. முற்று முணர்ந்த முதல்வனால் மாத்திரம்

சொல்ல முடியும். எனினும் ஒரு பதத்தின் கருத்தை அகராதி களில் நாம் வாசித்தறியலாம். சிற்சில பண்புகள் ஒருபொருளின் குணவிரியை உணர்த்தும். செவ்வந்தியென்ருல் நறுநாற்றமுள்ள ஒரு பூ என்பதே அதன் குணவிரி. அதன் சொரூபத்தை உணர்த்தும் இன்றியமையாப் பண்புகளை உரைத்து அதன் முழுக் குணவிரியை மொழியலாம். அர்த்தம் இல்லாத பெயர்கள் இல்லையாகலான் குணவிரியில்லாத பதங்கள் இல்லை யெனலாம். தமிழிலக்கண நூலாரும் மொழிகள் இடுகுறியாகவும் காரணம் கருதியுங் பெயர் பெற்றவையென விளம்பினர். காரண முடைய பெயர்கள் எல்லாம் குணவிரி யுடையன. இடு குறிப் பெயர்களும் தத்தம் பொருளின் குணவிரியை உடையன. ஒரு பதம் சுட்டும் பொருட்களின் தொகை பொருள்விரியெனப் படும். இந்துக்கள் என்னும் மொழி இந்து சமயக் கொள்கைகளை அனுசரிக்கும் யாவரையும் சுட்டுதலால் அதன் பொருள்விரி ஏறக்குறைய முன்னூறு கோடியாகும். சேரர் வேற்படை யென்புழி சேரனுடைய வீரர்களின் கூட்டுத்தொகை அதன் பொருள் விரியாகும். பொருட் பெயர்களெல்லாம் குணவிரி பொருள்விரி உடையவென்பது தெற்றென விளங்கும். பொருள் விரியெனினும் பொருட்களின் எண்ணெனினும் பொருந்தும். ஒரு வகுப்பிற்குரிய பொருட்களின் எண் அவ்வகுப்பின்பொருள் விரியாகும். அளவைநூல் ஏடுகளின் எண் அளவை நூலின் பொருள்விரி எனப்படும்.

குணவிரியில்லாத பதங்கள். (Non-Connotative Terms.) ஜே. எஸ். மில் (J. S. Mill) என்னும், தருக்கவாசிரியர் இயற் பெயரெனப்படும் மக்கட் பெயர்களுக்கு குணவிரி இல்லை என்ருர். சாத்தனைப் பிறமக்களினின்று பிரித்து வேருக அறி தற்காகவே சாத்தனுக்கு சாத்தனெனப் பெயரிடப் பட்டது. யாதேனும் ஒரு காரணமுமின்றி இடுகுறியாகவே சாத்தனெனப் பெயரிடப்பட்டது. சாத்தனெனப் பெயரிட்டபோது வேருேர் பெயரையும் இட்டிருக்கலாம். சாத்தன் என ஒருவனைச் சுட்டு தற்காகவே பெயரிடப்பட்டதாகையால் அப்பெயருக்குக் கருத் தில்லையென்பர். இஃதொரு புடை ஒக்குமெனினும் மில்லின்

மதம் இழுக்குடையது. இடுகுறிப் பெயரெல்லாம் குறித்த தோர் மனிதனையோ காலத்தையோ இடத்தையோ சுட்டும். சாத்தனென்னும் பெயர் சாத்தனென்னும் மனிதனின் குண விரியை ஏற்கும். தொல்காப்பியன் என்புழி அப்பெயரின் கருத்தை நாம் சிந்திக்கிறேமா? இல்லை. இலக்கண நூலாசிரிய ராகிய ஒரு மனிதனைப் பற்றியே சிந்திக்கின்றேம். நினைவு முறையின் காரணமாய் தொல்காப்பியமென்னும் நூலைப்பற்றிப் பெரும்பாலும் சிந்திக்கிறேம். அதற்குப் பலவுரைகள் உண் டென்றும் அது மிகப் பழைய நூலென்றும் சிந்திக்கிறேம். இடுகுறிப் பெயர்கள் தம்மோடு சம்பந்தப்பட்ட பொருள்களை உணர்த்துகின்றன. ஆகையால் இடுகுறிப் பெயர்களுக்குச் சம்பந்தக் குணவிரியுண்டு. சாத்தன் என்ற பெயருக்கு சாத்தன் என்பானுடைய குணங்கள் குணவிரியாகும். மில்லென்பவர் நினைவுலகப் பொருள்களாகிய யாளி காராம்பசு கின்னரர் கிம் புருடர் நீரரமகளிர் வரையரமகளிர் முதலியவற்றிற்குப் பொருள் விரியில்லையென மொழிவர். இவை நினைவுலகப் பொருள்களாகையால் அவ்வுலகில் பொருள் விரியுண்டு. வட்டம் சதுரம் முதலிய வடிவக்கணிதப் பொருட்களும் நினைவுலகப் பொருள்கள். நினைவுலகப்பொருட்களில் பொருள்விரி மிகப்பெரி தாகும். நினைவுலகப்பொருளுக்கு பொருள்விரியில்லையாகின், அப்பொருள் அவ்வுலகிலுமில்லையாகும். நிலவுலகளவு நினை வுலகும் உண்மையென்பது ஈண்டு உணர்தற்பாலது. புலவ னொருவன் தனது புலமைகொண்டு பல நினைவுலகப் பொருட் களைப் புனைந்துரைப்பானாயினும் அப்பொருள்களின் தொகை பொருள்விரி யெனப்படும்.

ஒரு சாரார் பண்புப் பொருள்களுக்குப் பொருள் விரியுண்டு குணவிரியில்லையெனக் கூறுப. கருமையென்னும் பண்பு ஒரே ஒரு பண்பே; ஆதலின் அதன்பொருள்விரி ஒன்று ஒரு பண்பைப்பற்றி யாம் ஒன்றுஞ் சொல்ல வியலாது. கருமை யைக் குருடனுக்கு விளக்க இயலாது. பண்பின் தன்மை உய்த்துணர்தற்பாலது. இனிப் பண்புப் பெயர் யாதானும் ஓர் பண்பைச் சுட்டிக் குறிப்பதால் அதன் பொருள்விரி

யொன்றே. இது மில்லின் மதம். இதைப் பௌலர் (Fowler) அடாம்சன் (Adamson) முதலியோர் மறுக்கின்றனர். ஒரு சாரார் பண்புப் பெயர்களுக்கு பொருள்விரி யில்லை குணவிரி யுண்டெனக் கூறுப. ஒரு பண்பு வாயில் ஒன்றுக்கு விடயமாம் போது, யாதோ ஒரு உணர்வு நிகழ்கின்றது. அவ்வுணர்வே அப்பண்பின் குணவிரி. பொருட் பதத்தின் பண்புகளை ஒவ் வொன்றாய் அறிகிறோம். பண்புப் பதத்தின் குணவிரியை ஒரே அமையத்தில் ஒரு பண்பாக உணர்கிறோம். கருமை என்னும் பண்பை எடுத்து இந்தக் கருமை அந்தக்கருமையென எண்ணவியலா தாகையால், பண்புப் பதத்திற்கும் பொருள் விரியில்லை. பண்பைப் பண்பியோடு ஒருங்கு சிந்திக்கிறோ மாகையால் இந்த மயக்கம் உண்டாகின்றது. பண்பை அதன் பண்பியோடு சிந்திக்கில் பண்புப் பெயர்களுக்கு குணவிரி பொருள்விரி இரண்டும் உண்டு. கருமையிற் பல கருமை உண் டென்பது யாவருக்கும் உடன் பாடாகும். பண்புப் பெயரைப் பண்பியினின்றும் பிரித்துப் பண்பாகச் சிந்திக்கும்போது அப் பண்பாகுந் தன்மையில் அதன்பொருள்விரி ஒன்றென்பர்.

9. குணவிரி பொருள்விரி மிகுதலும் குறைதலும்:—

பொருட்களின் பண்புகள் முழுவதையும் மனிதன் தன் சிற்றறிவினல் அறியாணுகையால், பொருட்களின் குணவிரி மிகுதலும் குறைதலும் உண்டு. கட்டில் என்னும் பதத்தின் குணவிரியைக் கூறுவாம். கட்டிலைப்பற்றி மக்கள் தம் அறிவிற் கேற்பப் பல்வேறு அபிப்பிராயங்களையுடையர். அவ்வபிப் பிராயங்கள் வேற்றுமையாகவே யிருக்கும். தச்சன் கட்டிலைப் பார்த்து இது தேக்க மரத்தாற் செய்யப்பட்டது, ஒழுங்காகச் செய்யப்பட்டதென்று தச்ச உலகின் குணங்களையே சிந்திப் பான். அரசன் இது வேந்தற்குரிய கட்டிலோ அன்றிக் கீழ் மக்களுக்குரிய கட்டிலோவென ஐயுறுவான். சிற்றின்பமே இன்பமென வாதிக்கும் உலகாயுத மதத்தோன் கட்டிலுக்கேற்ற மெத்தையைக் காணமல் துன்புறுவான். புலவன் இக்கட்டிலின் கண் எத்தனை எத்தனை பெரியோர் இருந்து உபதேசங்கேட்டுப் பரகதியடைந்தார்களென்று பலவாறு புகல்வான். ஒருவர் மொழியுங் குணவிரி வேறொருவர் மொழியுங் குணவிரியோடு வேற்றுமையாதலை உணர்க. அகராதிகளில் பதங்களின்

கருத்து எழுதப் பட்டிருக்கும். ஒவ்வொரு பதத்தின் குண விரியும் அங்ஙனம் வரையறுக்கப் படவேண்டும். மக்களுடைய அறிவு பெருகப் பெருக குணவிரியும் பெருகும். இது நிற்க ஒரு பொருளின் குணவிரி பெருக அதன் பொருள்விரி சுருங்கு தல் இயல்பே. ஒரு வகுப்பைச் சேர்ந்த பொருள்களின் எண்ணே அவ்வகுப்புப் பொருள் ஒன்றின் பொருள்விரி. பல பொதுப் பண்புகளையுடைய பொருள்களை ஒரு வகுப்பாக்கினுல் அவ்வகுப்புக் குரிய பொருட்கள் மிகக் குறைவாகவே யிருக்கும். இரண்டொரு பொதுப் பண்புகளையுடையவற்றை ஒரு வகுப் பாக்கினுல் அவ்வகுப்புப் பொருட்களின் பொருள்விரி பெரி தாகும். குணவிரி ஒடுங்கப் பொருள்விரி ஒடுங்கப் பொருள்விரி பெருகுதலையும் காண்க. குணவிரியும் பொருள்விரியும் மறை யேற்றத் தாழ்ச்சியாக மாறுதலடையும். உதாரண முகத்தான் விளக்குதும் போர்பிரி (Porphyery) எடுத்துக் காட்டிய மாறு கோட் பிரிதற்கோடு.

உள்பொருள் உளதாகும் தன்மையென ஒரேயொரு குண முடையதாதலால் அதன் குணவிரி மிகக் குறைவு. எந்தப் பொருளையும் குறிக்கு மாகையால் அதன் பொருள்விரி மிக்கப் பெரிது.

உள்பொருள் (பதார்த்தம்).




இம்மனிதன் என்பதன் குணவிரி கழிபெரிது பொருள்விரி தனி சுருங்கி ஒன்ருயிற்று.

வடிவக் கணித நூலின் பிரித்தல் ஒன்றை எடுத்துக் காட்டுவாம்.

உருவம் (வடிவம்).

முக்கோணம். நாற்கோணம். ஐங்கோணம். அறுகோணம்.

சற்சதுரம். நீள்சதுரம். சார்புச்சதுரம். சமன்சார்புச்சதுரம்.

இப்பொருள்விரி குணவிரி மிகுதலும் குறைதலும் கணித ஏற்றத் தாழ்ச்சி முறைகளோடு ஒக்குமெனினும் அவ்வேற்றத் தாழ்ச்சி மாற்றத்திற்கு அளவுத் திட்டமில்லை. ஒரு குணத்தான் குணவிரி பெருகப் பொருள்விரி இத்தனை மடங்கு குறையுமென ஒரு பிரமாணமில்லை. ஒரு பண்பைக் கூட்ட குணியின் பொருள்விரி மிகக் குறைதலும் வேறோர் பண்பைக் கூட்டச் சொற்பமாகக் குறைதலும் உண்டு. பகுத்தறிவுடைய மக்கள் என்புழி பலகோடி மக்களைச் சுட்டும். சைவசித்தாந்த மக்கள் என்புழி பொருள்விரி குறைகின்றது. இந்தச் சைவசித்தாந்தி என்புழி பொருள்விரி நனி குறையும்.

மரக்கலம் என்னும் பெயர் கட்டுமரத்தையும் ஓடத்தையும் மச்சுவாயையும் பாய்க்கப்பலையும் படகையும் யுத்தக் கப்பலையும் உணர்த்தும். மரக்கலத்தின் பொருள்விரி மிகப் பெரிதென்பது வெளிப்படை. மரக்கலத்திற்குப் பாய்க்கப்பலென ஒரு பண்பைக் கூட்ட அதன் பொருள்விரி குறைகின்றது. புகைக்கப்பலெனப் பொருள்விரி குறைகின்றது. யுத்தப் புகைக்கப்பல் என்புழி பொருள்விரி மிகக் குறைகின்றது. பொருள்விரி குறையக் குணவிரி மிகும் என்பதில் மிகுதலுக்கு ஒருவரையறையான கணக்கில்லை.

10 சிந்தனை நியமங்கள். (Principles of Thought). பகுத்தறிவுள்ள மக்களுடைய சிந்தனை முறைகளுக்கு ஆதாரமாய் மூன்று பிரமாணங்கள் உண்டு. அவை நிலையியல் நியமம், மாறுகோணியமம், நடுநீக்கு நியமம். இம்மூன்று பிரமாணங்களுக்கும் உடன்பட்டே வழியளவை முதலிய சிந்தனைப் பிரமாணங்களைக் கற்பிக்கிறோம். இம்மூன்று பிரமாணங்களையும்

நிரூபிக்க இயலாது. இம்மூன்று பிரமாணங்களுக்கும் இயற்கையாக அமைந்தே யாவரும் சிந்திக்கிறார்களாகையால் இவற்றினை நியமங்கள் என்போம். இம்மூன்று நியமங்களும் அளவை நூலுக்கு ஆதாரமான முழுமுதற்பிரமாணங்களாகும். இயற்கையிலுள்ள நியமங்களை நிரூபிக்க ஒருவராலும் முடியாது. நியமங்களை நிரூபிக்க அவசியமுமில்லை. அளவைநூல் நியமங்கள் கற்றோருக்கும் கல்லாதோருக்கும் இலகுவாய் விளங்கும் உரைகள். இந்நியமங்களின் உண்மையை ஆசங்கிப்பாரில்லை. குழந்தைகளும் அறிவுடைய பிராணிகள் யாவும் நியமங்களை மொழி மூலமாக அறியாவிடினும் அவற்றிற்கு அமைந்தே சிந்திக்கிறார்கள். இம்மூன்று சிந்தனை நியமங்களுக்கு மீறியொழுகுவோர் பித்தராவர். சிந்தனை நியமங்கள் மூன்றும் இயற்கையில் உள்ளவை யாகவே யாவராலும் மேற்கொள்ளப்படுகிறவையாகலால் நியமங்கள் எனப்படும். அளவைநூலே சிந்தனைப் பிரமாணங்களை ஆராய்ந்து நிச்சயித்து நிரூபித்தற்கு உரித்துடையதாகையால் ஈண்டு அவற்றினை ஆராய்வாம். இந் நியமங்கள் அளவைநூற் பிரமாணங்களாகி ஏனைய நூல்களுக்கும் பிரமாணமாகும்.

11 உளது உண்டு என்னும் முதலாவது நியமம் நிலையியல் நியமம் எனப்படும். அது உள்ளது உளதாகவே இருக்கும் என்னும் தத்துவவுண்மையை வலியுறுத்துகின்றது. உளநூலார் இந்நியமம் உள்ளத்தில் இயற்கையாகவே அமைந்துளதென்பர். ஒருபொருள் தன் தன்மையில் மாறுதலடையாமல் ஒரே நிலையில் இருக்குமென்பது நிலையியல் நியமம். ஒரு பொருளை அப்பொருளாகவே யாண்டும் உணருகிறோம். 'எ யாண்டும் எ' என்னும் உரையால் யவனவாசிரியர் அரிஸ்தாதில் (Aristotle) இவ்நியமத்தை விளக்கினர். ஒருபொருள் பிறிதொன்றாகாது என்பது யாவருக்கும் ஒப்பமுடிந்த உண்மை. எ' யாண்டும் என்னும் உரையால் ஒரு பயனும் இல்லை எனச்சிலர் ஆசங்கித்தனர். இவ்வாசங்கையை நீக்குதற்குச்சிலர் பின் வருமாறு உரை செய்தனர். எ யாண்டும் எ என்பது கூறியது கூறல் அன்று. முதல் எ கரமும் இரண்டாம் எ காமும்

ஒன்றல்ல. எ—எ ஆகுமென்புழி இரண்டு எ கரங்களும் இருவேறு பொருட்களைக் குறிக்கும்.

இரண்டற்குமுள்ள பொதுத் தன்மையை எ—எ யாகும் என்னும் யூகத்தான் உணர்த்துகிறோம். இவ்யூகத்தை எ—ப என மொழிந்தாலும் இழுக்கில்லை. எகரத்தின் ஒரு பண்பு பகரப்பண்பு என்பதேபொருள். பயனிலை உணர்த்தும் பண்பும் எழுவாயின் ஒருபண்பு ஒன்றென்பதை இவ்யூகம் உணர்த்திற்று. ஒருபதம் அப்பதமாகவே உபயோகிக்கப்படவேண்டும், என்றும் ஒரு தாட்டாந்தப் பொருள் விகற்பமடையாமல் இருத்தல் வேண்டுமென்றும் நிலையியல் நியமம் வற்புறுத்துகின்றது. பதங்களை வரையறுத்துத் தாட்டாந்தங்களில் உபயோகித்தற்கு இந் நியமம் அவசியம் வேண்டப்படும். நிலையியல் நியமத்திற்கு யாவரும் உடம்பட்டே மொழிகளை ஆக்கிச் சனசமுக வாழ்க்கையைச் சிறப்பிக்கின்றனர்.

12 மறுதலை நியமம் எனினும் மாறுகோணியம் மாறுகோட் பிரமாணமெனினும் மாறுகோளின்மைப் பிரமாணமெனினும் மறுதலை நியமத்தையே கருதுகிறோம். ஒருபொருள் இலதாயும் உளதாயுமிராது என்பது நியமம். இருதாட்டாந்தங்கள் ஒன்றற்கொன்று மாறுகோளாயின் இரண்டும் உண்மையாகா. ஒரு சம்பவத்தை ஒரு யூகம் உண்மையென நாட்ட அதன் மாறுகோள் யூகம் அதை மறுக்குமாயின் இருயூகங்களும் உண்மையாகா. அரிஸ்தாதில் கூறியவாறு எ—வி யாகும் என்னும் தாட்டாந்தமும் எ—வி யல்லாததாகும் என்னுந்தாட்டாந்தமும் ஒரு சமயத்தில் உண்மையாகா. ஒருபொருளுக்கு ஒருபண்பு உண்டென்றும் அப்பொருளுக்கு அப்பண்பு இல்லையென்றும் சொல்லவியலாது. ஒரு உரையும் அதன் எதிர்மறையும் உண்மையாகாவென்பது யாவருக்கும் ஒப்ப முடிந்த உண்மை. ஒரு பொருள் உளதாயும் இலதாயும் இராது என்னும் தத்துவவுண்மை ஈண்டு நோக்கற்பாலது.

இவ்நியமம் உடன் கருதலுக்கும் மாறுகோணிலை மாற்றலுக்கும் ஆதாரமென்பதை அறிக. இப்பிரமாணத்திற்கு உடன்

படாதோரை மலடிக்கு மகன் உண்டென்பார் என்று மறுக்க. இனி இம்மறுதலை நியமம் ஒரு நிலை நியமத்தில் அடங்கியுள்ளது என்னை? ஒருபொருள் அப்பொருளாகவே இருக்குமெனின் அப்பொருளின் மறுதலையாவது யாங்ஙனம்!

தத்துவநூலார் ஆன்மாவைச் சித்துந்தான் அசித்துந்தான் என்பது ஆராயற்பாலது. ஒரே நேரத்தில் ஒரே தன்மையில் ஆன்மா அறியுந்தன்மையுளது என்றும் இலதென்றும்மொழிதல் முரணான கூற்றாகும். ஆன்மாதானே அறியுந்தன்மை இல்லாத தாசலான், அசித்தெனஅழைக்கப்படும். உணர்த்த உணர்தலான் ஆன்மா சித்தென அழைக்கப்படும். ஆதலினன்றே ஆன்மா சித்த சித்தென வரையப்பட்டது. ஈண்டுச் சித்து அசித்து என்பன மாறுகோட்ப் பதங்களல்ல. அநாதி முத்த சித்துருவாகிய முதல்வனை ஒப்பிட்டு முற்று முணராத ஆன்மாவை அசித்தென்போம். சடப்பொருளாகிய பாசத்தை நோக்க ஆன்மாசித்தே. மாயாமலத்தின் காரியங்களாகிய நிலம் நீர் தீ வான் வளி என்பவற்றோடு நோக்க ஆன்மாசித்தென்பது புலப்படும் மலங்களோடு ஒப்பிடும்போது ஆன்மாவைச் சித்துந்தான் அசித்துந்தான் எனமொழியவியலாது ஒரேபொருளில் ஆன்மாசித்து அசித்தென்பது மாறுகோளுரையாகும்.

நடு நீக்கு நியமம் (Lan of Exclurded Middle) ஒரு பொருள் உளது அல்லது இலது என்பது நியமம். இருமாறு கோளான உரைகளின் ஒன்று உண்மையாகின், மற்றதுபோலி என நடு நீக்கு நியமம் வற்புறுத்துகின்றது. அரிஸ்தாதில் கூறியவாறு எ—வி என்பது உண்மைத் தாட்டாந்தமாகின் எ—வியல்லாதது என்பது போலியாகும். ஒரு பொருளுக்கு ஒரு பண்பு உண்டென அறிவோமானால் அப்பொருளுக்கு அப்பண்பின்மை இல்லை என்பதை அறிவோம். உண்டுந்தான் இல்லையுந்தான் என்பது பொருந்தாது. ஒன்றன் உண்மையேனும் அதன் இன்மையேனும் மெய் என்பதை அறிதல் அத்தியாவசியம். உண்டுந்தான் இல்லையுந்தான் என்னும் ஒரு நடு இல்லை என்பதை நடு நீக்கு நியமம் விளம்புகின்றது இம்மடுத்தீ உடையது என்னும் யூகம் உண்மை என்றால் இம்மடுத்தீயிலது என்னும்

யூகம் பொய். நடுநீக்கு நியமம் மறுதலை நியமத்தை ஆதார மாக வுடையது. நடு நீக்கு நியமமும் மறுதலை நியமும் நிலை யியல் நியமத்தை ஆதாரமாக வுடையன. ஒன்று பிறிதொன் ளுகாது என்பது பிரமாணமாகின் அது அதன் மாறுகோளாவது யாங்ஙனம்! நடுநீக்கு நியமமும் உடன் கருதலின் ஆதாரமாகும்.

இம்மூன்று பிரமாணங்களோடு நான்காவதாகப் போதிய வேதப்பிரமாணம் ஒன்று உண்டென்பது சிலர் கொள்கை. போதிய நியாயம் கூறியவழி யாவரும் உடன்படுவர். போதிய நியாயம் என்பது வரையறை யில்லாத மொழியாகலானும். ஒருவர் போதியதென்பதை மற்றொருவர் அன்றென மறுத் தலைக் காண்கிறோமாகலானும் போதிய வேதப்பிரமாணம். (நிலையில் நியமம்) நியமம் போல ஒரு நியமமாகாது. ஒருவர் எடுத்தோதும் ஏதுவைத் தகுந்ததென உரையாக நிருபிக்க வல் லோர் யாவர்? ஒருவன் இது தகுந்த ஏது அன்றெனின் என் செய்யலாம்? மேனாட்டு அளவை நூலார் போதிய வேதுப் பிரமாணத்தை நியமமெனக் கோடல் இழுக்குடைத்தென்று உரைக்கின்றனர். மேற் கூறிய மூன்று நியமங்கட்கும் உடன் படுவோரே இந்நூலின் தருக்க முறைகளைக் கற்றற்குரியர். இந்நூலின்கட் சாற்றிய முக்கிய அளவைகளாகிய காண்டல் கருதல் என்பன. இம்மூன்று நியமங்களையும் புணையாகக் கொள்வன என்பது அளவைநூல் கற்போருக்கு இனிது புலப் படும்.

## தம்பிரான் தோழர் தேவாரம்.

துடிசைகிழார், அ. சிதம்பரனார்.

தமிழ்ப்பொழில் துணர் 9 மலர் 5-ல்

"தம்பிரான்றோழர் தேவாரம் திருவினையகன்......."

என்ற பாசுரத்திற்கு பொருள் எழுதுவான்புக்கு, சிவபெருமான் அடியார்களைக் காப்பாற்றும் பொருட்டு இதுவரை வேடுவ உருவம் தாங்கினது இரண்டு தடவையாகும்—ஒன்று விசயற்கு

அருள்செய்யும் பொருட்டு, மற்றொன்று திருத்துடிசைபம்பதிக் காடுகளில் வழிதப்பிப்போன சுந்திரமூர்த்திகளுக்கு வழி காட்டும் பொருட்டு—என எழுதினும்.

அதனை மறுத்து துணர் 7-ல் திருவாளர். இ. மு. சுப்பிர மணியபிள்ளை அவர்கள் சிவபெருமான் வேடுவ உருவந் தாங்கி னது ஒரே தடவை தான்; சுந்தரமூர்த்தி நாயனாருக்காக வேடு ருவம் தாங்கினது இல்லை; விசயற்கு அருள் செய்யச் சுவாமியும் அம்மனும் வேடுருவந்தாங்கிச் சென்றபோது, ஆலாலசுந்தரரும் கூடச்சென்றார், ஆலால சுந்தரரே இப்போது சுந்திரமூர்த்தி களாகத் திரு அவதாரஞ் செய்ததினால், முன் பிறப்பில் நடந்த செய்திபை நினைத்து இப்போது பாடியிருக்கிறார், ஆகையால், "என்னொடும் செங்கண் வேடனாய்ச் செருவில் ஏந்தி வந்து ஓர் கேழற்பின் சென்று, விசயற்கருள் செய்வான் மருவினான்றனை" என்று அன்வயப் படுத்திக் கொள்ள வேண்டும் என்கிறார்.

இவ்வுரை எவ்வளவு பொருத்தம் என்று காண்பதே இப் போது யாம் எடுத்துக்கொண்டது.

சமயாசாரிகள் நால்வருடைய முன் பிறப்புக்கள் முறையே அடியில் வருமாறு :—

(1) திருஞானசம்பந்தர்—குமாரக்கடவுள்
(2) திருநாவுக்கரசு—வாகீசமுனிவர்
(3) சுந்தரமூர்த்திகள்—ஆலாலசுந்தரர்
(4) திருவாதவூரர்—நந்தீஸ்வரர்

என்று புராணங்கள் கூறுகின்றன.

ஒருவராவது தங்களுடைய முன்பிறப்பில் நடந்த செய்தி களை இப்பிறப்பில் தன்மையில் வைத்துப் பாடக்காணோம்.

அப்படிப் பாடுவதும் மரபு அன்று. அப்படியிருக்க சுந்தர மூர்த்தி சுவாமிகள் இந்த ஒரு செய்தியை மாத்திரம் அவ்வாறு பாடினார் என்று கூறுவது பொருந்தாது.

ஆலால சுந்தரர் என்று பேர் வந்ததற்கே, ஆலகால விடத் தைத் திருப்பாற் கடலினின்றும் திரட்டிக்கொண்டு வந்து சிவ பெருமானுடைய கரத்தில் கொடுத்ததே காரணம் ஆகும்.

அந்தச் செய்தியையே தம்முடைய தேவாரப்பதிகங்களில், "தாம் கைலையினின்றும் திருப்பாற் கடலுக்குச் சென்றபோது, சிவபெருமான் தம்மோடு கூட வந்து, தேவர்களுக்கு அருள் செய்தார் என்று" எங்கும் தன்மையில் வைத்துப் பாடக் காணேம். இந்த முக்கியமான சொந்தச் செய்தியையே தன்மையில் வைத்துப்பாட விட்டுவிட்டவர், அர்ச்சுனற்கு அருள்செய்த செய்தியைத்தானா தன்னேடு வந்ததாகப் பாடுவார். ஆகையால் சுந்தரமூர்த்திகளுக்கு அது கருத்தன்றெனவிடுக்க.

இனி, இவர் கூறும் தடைகளில் முக்கியமானது என்னவென்ருல் அவிநாசியைவிட்டு சுந்திரமூர்த்திகள் மலைநாட்டுக்குப் போய் அங்கிருந்தே சேரமானுடன் கைலைக்குச் சென்ருர், ஆகையால் திருத்துடிசையம்பதியில் வேட உருவமாய்க் காட்சி கொடுத்ததை திருவாழ்கொளிப்புத்தூர் தேவாரத்தில் பாடியிருக்க முடியாது என்பதே. இதனை ஆராய்வாம் :—

சரித்திரவாராய்ச்சிக்கு நமக்குப் பெரிய புராணமே முக்கியமானது.

மற்றப் புராணக்காரர்கள், அதாவது திருத்துடிசை, அவிநாசி, திருமுருகன்பூண்டி, பேரூர் முதலிய புராணக்காரர்கள் சரித்திரத்தைச் சரிவர அறிந்து கொள்ளாமல் கர்ண பரம்பரையான செய்திகளைக் கேட்டுப் புராணம் பாடி இருக்கிருர்கள். ஆகையால், அவைகளில் சரித்திர ஒழுங்கு இல்லாமற் போன போதிலும், காலத்தை முன் பின்ஞகக் கூறியிருந்த போதிலும் சங்கதி பொய்யல்ல என்பது வெளிப்படை. சுந்திரமூர்த்தி சுவாமிகள் அவிநாசியில் முதலைவாய்ப் பிள்ளை அழைத்ததும், திருமுருகன்பூண்டியில் பறிகொடுத்ததும், திருத்துடிசையம்பதியில் அவருக்கு சுவாமி வேடர் உருவமாகக் காட்சி கொடுத்ததும், பேரூர் என்னும் பட்டீச்சுரத்தில் அவருக்குப் பள்ளனும் பள்ளச்சியுமாகக் காட்சி கொடுத்ததும் உண்மையே.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் கொங்கு நாட்டிற்கு மூன்று தடவை வந்திருக்கிருர்கள். முதல் தடவையில் திருப்பாண்டிக் கொடுமுடியைத் தரிசித்துவிட்டு, மற்றும் பல கொங்கு நாட்டுத்

தலங்களைத் தரிசித்துப் பின்பு திருப்பேரூரை அடைந்து, அங்கே தேவாரம்பாடிப் பின் வெஞ்சமாக் கூடலைத் தரிசித்துப் பின் சோழ நாட்டுச் சிதம்பரம் நண்ணினூர்.

இரண்டாம் தடவையில் சுந்தர மூர்த்திகளும் சேரமான் பெருமாள் நாயனூரும் இருவரும் திருவாரூரை விட்டுப் புறப் பட்டுக் கொங்கு நாட்டை அடைந்து கொடுங்கோளூர் சென் ருர்கள். பிறகு சுந்தர மூர்த்திகள் சேரமான் பெருமாள் கொடுத்த பொருளைப் பெற்றுக்கொண்டு திருமுருகன்பூண்டி வழியாகச் செல்ல, வேடுவர் வழிப்பறி செய்தனர். பிறகு திருமுருகன்பூண்டியில் சிவபெருமானைத் தரிசித்து பறித்த பொருள்களை மீட்டும் பெற்று திருவாரூரை அடைந்தார்.

இனி மூன்ரும் தடவையில் சுந்தரமூர்த்திகள் சோழ நாட்டைவிட்டு திருவவிநாசிக்கு வந்து முதலை வாய்ப்பட்ட பிள்ளையை அழைத்துக் கொடுத்துவிட்டு, கொங்கு நாடு நீங்கிக் குடபுலம் சென்று சிலகாலம் இருந்து சேரமான் பெருமாளுடன் திருக்கைலை நண்ணினூர்.

பெரிய புராணத்தில் திருத்துடிசையம்பதியின் பெயர் இல்லை. ஆனல், சேக்கிழார் ஏயர்கோன் கலிக்காம நாயனூர் புராணத்தில் 88-வது பாட்டில்

உலகெலாமுய்ய உறுதியாம் பதிகமுரைத்து மெய்யுணர்வுரு [வொருமை
நிலவிய சிந்தையுடன் திருவருளால் நீங்குவார் பாங்கு நற்பதிகள்
பலவுமுன்பணிந்து பரமர்தாள் போற்றிப் போந்துதண் பனி [மலர்ப் படப்பை
குலவுமக்கொங்கில் காஞ்சிவாய்ப்பேரூர் குறுகினூர் முறுகுமாதர [வால்

என்றதால் சுந்தரமூர்த்திகள் திருப்பாண்டிக் கொடுமுடியைக் கடந்து, கொங்குநாட்டில் பாங்கு நற்பதிகள் பல பணிந்து பின் பேரூர் குறுகினூர்என்ருர். இதற்கப்புரம்தான் சுந்தரமூர்த்திகள் திருவாழ்கொளிப்புத்தூரைத் தரிசித்தது.

கொடுமுடிக்கும் பேரூருக்கும் இடையில் தான் திருத்துடிசை யம்பதி இருக்கிறது. ஆகையால், சுந்தரமூர்த்திகள் முதல்தடவை

கொங்கு நாட்டிற்கு வந்தபோது திருத்துடிசையைத் தரிசிக்கவில்லை என்று சொல்ல முடியாது.

ஆகையால், பேரூர்க்கு முன் திருத்துடிசைக் கேகி அங்கே சிவபெருமான் வேடுவராகக் காட்சி கொடுத்து ஆலயத்துக்கு அழைத்துக் கொண்டுபோகத் தரிசித்துவிட்டு அங்கேயே கணேச ரால் இடப்பட்ட விருந்தும் சாப்பிட்டுவிட்டு பேரூர் சென்றார் என்பது பொருத்தம்.

அல்லாமலும் "திருவிளையகன்" என்ற தேவாரத்திலுள்ள "சென்றும்" "வந்தும்" என்ற வினையெச்சங்களோ (அல்லது "சென்று" "வந்து" என்ற வினையெச்சங்களோ எவை ஆனாலும்) அவைகளே வேறு வேறு இடத்தையும் வேறு வேறு காலத்தையும் குறிக்கின்றன என்பது இலக்கண வழக்காலும் உலக வழக்காலும் உறுதிப்படுகின்றது.

சிவபெருமான் சுந்தரர்க்கு விருந்தளித்த செய்தியைப் பற்றிப் புராணத்தில் உண்டோ? இல்லையோ? என்று நண்பர் பிள்ளை அவர்கள் ஐயுறுகின்றார். அப்புராணப் பாட்டுக்களை ஈண்டு அவர் ஐயப்படாமைப் பொருட்டுக் குறிப்பாம்:—

"என்று பற்பல வின்றுதி கூறுபு
நின்று சித்தநெகிழ் சுந்தரர் தமை
அன்று மெச்சிய திர்குரன் மும்மதக்
குன்று ரித்தவெங் கோனிஃ துணர்த்தினன்

தென்னிசைந்த செழுந்தமிழ்ச் சுந்தர
நின்னினன்பரிங் கீனிலத் தில்லையால்
அன்னமுண் டிங்கயர்வுயர்த் தன்னதின்
பின்னர்நின் செயல்பேணுகென் றோதியே

அருள்வழங்கலு மத்தமிழ்ச் சுந்தரர்
இருபுயம் புளகெய்த மனங்களித்
தருகு மன்பினுறைந்தன ரும்பர்சூழ்
தருமரன் திருச்சன்னிதி முன்னரோ

அருளிநம்பன தன்பினருகு சூழ்
தருகணங் கடமைவிளித் திவ்வயின்

மருவுசுந்தர னுதிமற்றி யாவர்க்கும்
திருவிருந் தவைசெய்க வென்றேவினன்
நன்றுநன்றென ஞான கனுதிபர்
மன்றுளாடிய மலர்ப்பதந் தாழ்ந்தெழீ இச்
சென்று மற்றவன் சீரருளான்மயல்
வென்றுளாற்கு விருந்திடன் மேயினர்

ததிபொழிந்தன சர்க்கரை பெய்தன
முதிரைதந்தன முற்றிழுதுய்த்தன
கொதிநறும்பயங் கூட்டிச்சமைத்தன
வெதிரிகந்தன வெண்ணில வன்னமே.

என்ற பாட்டுக்களால் அறியலாம்.

மேலும், சுந்தரமூர்த்திநாயனர் திருத்துடிசையம்பதியைத் தரிசித்து, அங்கே விருந்துண்ட சங்கதியைக் கோங்குமண்டல சதகத்தில் ஜைனப் புலவரான கார்மேகக் கவிஞர் :—

"வேட்டுவே வேடமெடுத்து வழித்துணை மேவியிளங்
காட்டு முருங்கையிலை காய்நெய்பெய்து கறிசமைத்துப்
பாட்டுமுழக்கு வன்றொண்டருக்கு அன்னம் படைத்துநரை
மாட்டுதிப்போன் றுடிசையம்பதியும் கொங்கு மண்டலமே"

என்று பாடி இருப்பதையாவது நண்பர் பிள்ளை அவர்கள் கவனிப்பாராக.

நான் தான் ஊர்ப்பற்று மிகுதியால் இல்லாததொன்றை உள்ளதாகக் கூற வந்ததாக நண்பர் பிள்ளை அவர்கள் கருதுகிறார்கள். ஆனல் கொங்குமண்டல சதகக்காரராகிய ஜைனப் புலவர் எந்தப்பற்றின் பேரில் கூறினர் என்பது விளங்கவில்லை. பிள்ளை அவர்களே கூறுவார்களாக.

திருவவிநாசிப் புராணத்திலும்,

"நெட்டிசையின் தமிழ்முனி பூசனை
உகந்து துடிசையில்வாழ் நிமலர்போற்றி
அட்டில் வினைப்புன முருங்கை யடகவிரல்
லமுது விருந்தளிக்க உண்டார்"

என்று கூறப்பட்டிருக்கிறது. சுந்தரமூர்த்திக்கு விருந்திட்ட காரணத்தால் அக்காலந்தொட்டுச் சுவாமிக்கு "விருந்தீச்சுரர்" என்று பெயர் ஏற்பட்டது. இன்றும் அப்பெயரே வழங்கக் காண்கிறோம்.

திருத்துடிசையம்பதியான துபழையசிவதலம்.சூரபன்மன் காலத்தில் இருந்த அகத்தியர் வடநாட்டில் இருந்து குடகுமலை வழியாக நீலகிரியைத்தாண்டி கொங்கு நாட்டிற்கு வரும்போது, குடகுமலை அடவிகளில் வசித்துவந்த வில்வலன், வாதாபி என்னும் இரண்டு அசுரர்களைக் கொன்றார் என்பது கந்தப் புராணத்தால் அறியலாம். அப்படி அவர் அவ்வசுரர்களைக் கொன்றதால் பிரம்மகத்தி தோடத்தால் பீடிக்கப்பட்டார். அந்தப் பாபத்தை இத்துடிசையம்பதியில்தான் சிவபெருமானை வழிபட்டு நீக்கிக் கொண்டார்.

இதனைக் கந்தப்புராணம் காவிரி நீங்கு படலத்தில்,

"செங்கை தூங்கிய தீர்த்த நீரொடும்
கொங்கின் பாற்செலக் குறீஇய மாமுனி
மங்குகின்ற வம்மைந்தர் நேருறு
அங்கண் மேவின ரருந்தவத் தர்போல்

ஆசில் கோங்கினுக் கணித்தினே ரிடை
வாசமீதென மகிழ்ந்து வீற்றிடும்
ஈசனார்தமை இலிங்க மேனியில்
நேசநெஞ்சினால் நினைந்து தாபித்தான்

மங்கைபாகனை மற்றும் பிற்பகல்
சிங்கலின்றியே சிறந்த பூசைசெய்(து)
அங்கண் மேவின னவன்கணுகிய
துங்கவெம்பவம் தொலைந்து போயதே.

துடிசைப் புராணத்திலும், அகத்தியர் பூசனைப் படலத்தில்,

தவநெறி யிடைவிடாச் சரதமாமுனி
பவமறு துடிசையம்பதிபுக் காங்கமர்
சிவபெருமானையும் தேவி தன்னையும்
உவகையி னொடுதொழு தொருங்குற்றனரோ"

என்றும் கந்தப் புராணச் சுருக்கம், அசுர காண்டத்திலும்,

மூடிவான கொடியோர்கள் தவமேவு
துருவாசமுனி மைந்தரான முறையில்
படியோர்கள் புகழ்கும்ப முனிபின்பு முனிவோர்கள்
படிவங்கள் கொண்டு தொடரா
இடிபோலிரைப்ப வுயர்கோங்குக் கணித்தா
யிருந்தோ ரிலிங்க மதனில்
அடியார்மனத்தனை யருச்சனை புரிந்தங்
ககன்று னவர்க்கொல் பவமே''

என்று கூறப்பட்டிருக்கிறது.

திருத்துடிசையம்பதியானது சூரபன்மன் காலம் முதற் கொண்டு, அதாவது 78000 B. C. முதற்கொண்டு சிறப்புற்று விளங்குகிற ஒரு சிவதலம். அகத்திய முனிவருக்குக் கொலைப் பாவத்தைப் போக்கி அருள்கள் செய்த இடம்.

சுந்தரமூர்த்திகள் காலமாகிய கி. பி. எழாம் நூற்றுண்டிலும் சிவராமன் என்ற கங்க அரசன் (669—726 A. D.) கொங்கு நாட்டை ஆண்ட காலத்தில் திருத்துடிசைச் சிவாலயத்திற்கு அநேக நிபந்தங்களை ஏற்பாடு செய்திருக்கிறுன்.

ஆகையால், சுந்தரமூர்த்திகள் காலத்திலேயே சிறப்புற்று விளங்கிய பழய தலமாகிய திருத்துடிசையைச் சுந்தரமூர்த்திகள் தரிசிக்கவில்லை என்றும், பெரிய புராணத்தில் திருத்துடிசையம் பதியைப்பற்றிக் கூறப்படாததால் ஒப்புக்கொள்ள முடியா தென்றும், பிள்ளை அவர்கள் கூறுவாராஞல், ''பாங்கு நற்பதிகள் பலவும் முன்பணிந்து'' என்ற தெய்வச் சேக்கிழார் வாக்குக்குப் பிள்ளை அவர்கள் என்ன பொருள் கூறுவாரோ அறியோம்.

ஆகையால், திருப்பாண்டிக் கொடுமுடியினின்றும் சுந்தர மூர்த்திகள் புறப்பட்டு திருப்பேரூரை அடைவதற்கு முன்னம் இடையிலுள்ள கொங்கு நாட்டுத் தலங்கள் பலவற்றை வணங் கிச்சென்றுர் என்பதும், அப்பல தலங்களில் திருத்துடிசையும் ஒன்று என்பதும், மேலே காட்டிய ஏயர்கோன் கலிக்காம நாயனுர் புராணச் செய்யுள் ௪௭வது பாட்டால் அறிகிறோம்.

இந்தச் சங்கதியைத் தான் பின்னால் அவர் திருவாழ் கொளிப்புத்தூர் தேவாரத்தில் வைத்துப் பாடினார்.

ஆகையால், இதுவரை கூறியவாற்றால் சுந்தரர் கொங்கு நாட்டிற்கு மூன்று தடவைகள் வந்துள்ளார் என்றும், முதல் தடவையிலேயே திருப்பாண்டிக் கொடுமுடி, திருத்துடிசை, திருப்பேரூர் என்னும் பல தலங்களைத் தரிசித்தாரென்றும் ;

இரண்டாம் தடவையில், சுந்தர மூர்த்திகளும் சேரமான் பெருமாள் நாயனாரும் இருவருமாக சோழ நாட்டை விட்டுக் கொங்கு நாட்டில் பலதலங்களைத் தரிசித்துக்கொண்டு, கொடுங் கோளூர் சென்று, மறுபடியும் திரும்பி வருகையில் திருமுருகன் பூண்டியைத் தரிசித்துச் சென்றார் என்றும் ;

மூன்றாம் தடவையில் தான் சோழ நாட்டிலிருந்து திருவவி நாசிக்குப் போந்து முதலைவாய்ப் பிள்ளையை அழைத்தபின், வஞ்சி சென்று, சிலநாளிருந்து, திருக்கைலைக்கு எழுந்தருளினார் என்றும் ;

திருத்துடிசையம்பதிப் புராணக்காரர் கால ஒழுங்கைக் கவனியாமல் முதல் தடவையில் நடந்த ஒருசெய்தியை மூன்றாந் தடவை நடந்ததாக எழுதி விட்டாரென்றும், அதனாலேயே சுந்தரமூர்த்திகள் திருத்துடிசையம்பதிக்குப் போகவே இல்லை என்று சொல்ல முடியாதென்றும் ;

சுந்தர மூர்த்திகளுடைய வாழ்க்கையில் ஆங்காங்கே நடந்த திருவிளையாடல்களை அந்தந்த ஊர்ப்புராணங்களில் பார்க்க லாமே யொழிய, எல்லாவற்றையும் ஒருங்கே பெரிய புராணத்தில் பார்க்க முடியாதென்றும் ;

சுந்தர மூர்த்திகள் திருத்துடிசையை நண்ணி, சுவாமி தெரிசனம் செய்து, பதிகம் பாடியிராவிட்டால, சைனப் புலவ ராகிய கார்மேகக் கவிஞரும் அவிநாசிப் புராணக்காரரும், சுந்தர மூர்த்தி பிள்ளைத் தமிழ் ஆசிரியரும், துடிசைப் புராணக் காரரும் எல்லாரும் ஒரே விதமாக சுவாமி சுந்தரமூர்த்திகளுக்கு வேவே உருவமாகக் காட்சி கொடுத்த சங்கதியையும் விருந்திட்ட சங்கதியையும் பாடியிருக்க முடியாது, என்றும் ;

சமயாசாரிகள் தாங்கள் முன் பிறப்பில் செய்த அல்லது பார்த்த செய்திகளை, நடக்கும் பிறப்பில் தன்மையில் வைத்துப் பாடும் வழக்கம் இல்லை என்றும் கூறியதாயிற்று.

ஆகையால், மேற்காட்டிய " திருவின் நாயகனாகிய..........." என்ற தேவாரத்திற்கு நாம் கூறிய பொருளே பொருத்தமாயிருப்பதை வாசகர்கள் காண்பார்களாக.

# "இலக்கணமும் இலக்கியமும்"

(நல்லூர், சுவாமி ஞானப்பிரகாசர்)

இலக்கணம் இலக்கியம் என்னுஞ்சொற்கள் வடமொழிக்கு உரியனவா? தென்மொழிக்கு உரியனவா? இவை வடமொழியிற் போலத்தென்மொழியிலும் பல நூற்றாண்டுகளாய்ப் பயின்று வருகின்றன என்றல் ஒரு தலை ஆயினும், வடமொழியில் இவற்றிற்கு எடுத்தோதப்படும் தாது பொருத்தமுள்ளதாகாது, தமிழ் அடியே ஏற்புடைத்தாய் நிற்றலால், இவை தென்மொழிக்கே உரிமையானவை எனலாம் போலும். இத்துறையை ஒரு சிறிது ஆராய்ந்து காட்டுதும்:

லக்ஷ, லக்ஷக, லக்ஷண, லக்ஷ்ம, லக்ஷ்மண, லக்ஷ்மீ, லக்ஷ்ய ஆதியன வடமொழி உருவங்களாம். இவற்றிற்குத் தாது லக்ஷ என்பர் ஒரு சாரார். ஆயின் ஆராய்ச்சிவல்லோர் லக்ஷ ஆதிய சொற்கள் பிறத்தற்கு இடமாய் நின்ற லக்ஷ எனுந்தாது ஒன்று வடமொழியில் இன்று, லக்ஷ எனுந் தாதுவே முன்காட்டிய சொற்களினின்று வடித்தெடுத்து ஓதப்பட்டது என்பர். வேறு வகையாய்க் கூறிடின், லக்ஷ எனுஞ் சொல்லொன்று வடமொழியில் இலது. அது அம்மொழியில் உள்ளனவாகிய முன் சொல்லிய சொற்களினுக்கு ஓர் பற்றுக்கோடாக வலிந்து கற்பிக்கப்பட்டது, அற்றன்றாயினும், லக்ஷ எனுந் தாதுவிற்குப் பொருள்தான் யாது? எவரும் அதற்குப் பொருள்கூற அறியார்.

பின்னொரு சாரார் லக்ஷ ஆதிய சொற்களுக்குத் தாது றக்த (றஞ்ச) எனக்கூறி, ஈண்டு றகரம் லகரமாயிற்று என்பர். வடமொழியில் றஞ்ச் எனுஞ்சொல் 'சிவத்திருத்தல்' 'சிவப்பித்தல்' எனும் அடிப்பொருள் உள்ளது. ஆயின் அச்சொல்லே அடிச்சொல்லாகாது, தமிழ் அரத்—தம்=இரத்தம், அரி=எரி எனும் வரலாறுகொண்டு பிறந்தது என்றல் ஒருதலை. 'சிவத்திருத்தல்' எனும் பொருளோடு 'குறியாதல்' எனும் லக்ஷச்சொல் அருத்தத்தை ஒட்டுதல் வெகு தலைப்பட்டதோர் கூட்டரவாய் முடிதலும் ஒன்று. ஆதலால், இதுவும் பொருத்தமாகாமை காண்க.

அப்பால், மேலும் ஒரு சாரார் லக்ஷ ஆதிய சொற்கட்குத் தாது லக் (lag) ஆகும் என்பர். இத்தாதுவினுக்கு 'சேருதல்' 'ஒட்டுதல்' 'இணைத்தல்' ஆதிய பொருளே இருக்கின்றமையால், லக்ஷ ஆதிய சொற்களின் அருத்தம் எவ்வாறு பெறப்படலாகும். என்னும் மறுதலைக்கு இடனுண்டாகின்றது. லக் (lag) எனும் சொல்லும் எமது இணக்கு (இடு)தலின் திரிபே எனத்தோன்றுதலும் ஒன்று.

லக்ஷ என்றற்றொடக்கமான வடசொற்களுக்கு அவ்வடமொழியில் ஏற்ற தாதுவில்லாமையைக் கண்ட நாம், இனி எம் அமிழ்தினுமினிய தமிழை நோக்குவாம். தமிழில் வழங்கும் இலக்கணம் ஆதிய உருவங்கள் எவ்வாறு முளைத்துக் கிளைத்தன என்பது வெளிப்படவிருக்கும் எமது சொற்பிறப்பகராதியின் ஓர் ஏட்டை ஆராயுங்கால் இனிது புலமாகும். அதனைக் கைச்சரவையில் உள்ளபடி இங்கு பெயர்த்தெழுதுகின்றேம்.

இலகு iḷaku *v. intr.* [ila+k—u; root *el* "to be bright" Here *el* "flattened" into *ila*—இல க்—உ; எல் 'பிரகாசமாதல்' ஈண்டு யடக்குதல் விகாரம] To shine; விளங்குதல் (திவ். திருவாய். 8. 8.]

இலகு ilaku *n* [id, 'letting light through', 'not dense'-ஒளியூடறுக்க விடுவது', 'செறிவில்லாதது'] 1. Levity, ease; இலேசு. 2. Mitigation; தணிவு. 3. short vowel; குற்

றெழுந்து (யாப். வி. 95). 4. A variety of musical time; காலவகை. 5. [Perh. by Metathesis of *akil*] Eagle wood;

Gr. *elachus*, *elaphros*, *lagos; Lat. levis*, *lepus* (lephus) Goth *leihts*, A Sax *light*, skt *laghu*, *raghu*, swift, light.

இலங்கு ilanku *v.intr* [ *ilaku*; by euphonic nunnation இலகு; மெல்லொற்றணைந்தது] To shine; பிரகாசித்தல்.

இலக்கம் ila-kkam *n* [id + am — ஷை + அம்] 1. Brightness (தொல். சொல். 271). 2. Target; குறிப் பொருள் (குறள் 627). 3 Numerical figure; எண்குறி.

இலக்கு ila-kku *n* [id 'what shines', 'appears',— ஷை 'துலங்குவது' 'தோற்றுவது'] 1. Distinguishing mark or sign; அடையாளம். 2. Target; அம்பெய்யுங்குறி. 3. Favourable opportunity; சமயம். 4. Place; இடம். 5. Competitor; எதிரி. 6. Measure; அளவு.

Skt. *laksha*. *Note* the putative Skt root for this and the following words is very probably a nominal verb from *laksha* and which are best explained by the Tam verb *ilanku* above.

இலக்கணம் ila-kkanam *n* [ilakku+anam 'what appears prominently' — இலக்கு+அணம் 'புறப்பாடாய்த் தோற்றுவது'] 1. Distinctive mark; அடையாளம். 2. Attribute; சிறப்பியல்பு. 3. Beauty; அழகு. 4. Definition; வரைவிலக்கணம். 5. Grammear; வியாகரணம்.

skt. *lakshana*

இலக்கணை ila-kkanai *n* [ilakku+ana (vu) 'propriety' —இலக்கு+அண(வு) 'சிறப்புப்பொருள்'] Secondary significative capacity of a word; தந்துரைக்கும்பொருள் (நன். 269. விருத்.)

skt. *lakshana*

இலக்கி ila-kki *v. tr* [ila+kk-i for U 'make clear'—இலக்கு+இ=உ 'தெளிவாக்குதல்'] To sketch on a canvas; உருவரைதல் (சீவக. 180).

skt. *likh.*

இலக்கியம் ila-kkiyam *n* [ila+kk—iyam 'made clear' 'defined'—இல+க்கு—இயம் 'தெளிவாக்கியது' 'வரையறுத்தது'] 1. Mark, butt; குறி (பிரபோத. 44. 19.) 2. The thing defined; இலக்கணம் அமைந்தது. 3. Example from classical writings; உதாகரணம் (காரிகை, செய். 5 உரை). 4. classical writings; ஆன்றோர் நூல்.

skt. *lakshya.*

இலக்கு ila-kku *v. tr.* [id—ஷ்டி] 1. To cause to blaze; சொலிப்பித்தல். 2. To deliniate; வரைதல் (சைவ. பொது. 274).

skt. *likh.*

இலங்கை ila-nkai *n* [ilank(u)+ai 'prominent to view'—இலங்கு+ஐ 'வெளிப்படுத் தோன்றுவது'] 1. Islet in a river; ஆற்றிடைக்குறை. 2. The capital of Oyman Villiyatan; தொண்டை நாட்டில் ஓரூர் (புறம். 379). 3 The ancient capital of Ravana; இராவணன் தலைநகர். 4. Ceylon; ஈழமண்டலம்.

இலச்சினை ila-ccinai *n* [from ilakkanai; இலக்கணையின் திரிபு] Signet ring; முத்திரை மோதிரம்.

skt. *lanchana.*

இலச்சை ila-ccai *n* [for ilakk+ai=ilankukai 'becoming white'—இலக்கை (இலங்குகை) எனும் உருவத்தின் திரிபு] Blushing; நாணுதல். cf *vedku* from *vel* (=*el*) 'to become white'; ஒப், வெட்குதல் வேள் (=எல்).

skt. *lajja*.

தமிழ் 'இலங்கு'தலினின்று இலக்கணமும் இலக்கியமும் பிறந்தமையைக் கண்டோம். இலகுதலினுக்கு அடி எல் எனுஞ் சொல். "எல்லே இலக்கம்" எனத் தொல்காப்பியனாரும் குறித்துள்ளபடி, எல் தான் இல என "மடிந்து," வினைக்குறியாகிய உகரத்தை வகர உடம்படு மெய்யினின்று பிறந்த ககரத்தோடு கூடப்பெற்றது. இல + வ்—உ = இலவு, இலகு. தமிழ்ச்சொற் பிறப்பின்கண் மடக்கல் எனும் கட்டளையின் வெளிப்படையை எமது "தமிழ்ச்சொற் பிறப்பாராய்ச்சி" நூலினுட் காண்க. (6-ம் கட்டளை பக்கம் 24). அப்பால், எல் எனுஞ் சொல்லும் ஓர் தலையடிச் சொல்லன்று, எழு-தலினின்று இழிந்த கிளைச் சொல்லாம். எழுந்து வருவதே எல் = கதிரவன். இவ் எல் சொல் சூரியனையும் அதன் பிரகாசம் ஆதியவற்றையும் குறிப்பதால் இந்திய ஐரோப்பிய மொழிகளிலெல்லாம் பயிலுவது. தமிழில் எல்லினின்று முன்காட்டிய இலகுதலோடு எழில் ஆதியனவும், இவ் எழிலின்று "வலியுறுத்துகின்ற முதனிலை மெய்கள்" எனுங் கட்டளையால் (தமிழ்ச் சொற்பிறப்பாரய்ச்சி பக். 19) வேறு பல சொற்களும் கிளைத்தெழுந்துள்ளன. ககர மெய் முன்னிற்றலால் 'கெழு—மை' 'கேழ்' ஆதிய பிறக்கும். தகரமெய் முன்வரலால் 'தெளிவு' 'துளங்குதல் (திளங்கு)' 'திகழ்தல்' ஆதியன உண்டாகும். பகரமெய் முன்னுறலால் 'பிளங்குதல்' ஆதியன தோன்றும். மகரமெய் முன்சேர்தலால் 'மிளிர்தல்' 'மினுங்குதல்' ஆதியன பெறப்படும். வகரமெய் முற்படலால் 'விளங்குதல்' 'விளக்கம்,' 'வெளிச்சம்,' 'வெள்ளை' 'விலங்கல்' 'விடங்கல்,' 'விடிதல்' ஆதியன நிலைபெறும். (இத் திரிபுகளிற்குரிய விதிகளை எடுத்தோதிய நூலினுட் காண்க). ஈண்டு தந்த கிளைச் சொற்களும் ஐரோப்பிய மொழிகளுள் பல திறப்பட்டு மருவிப் பயில்கின்றன.

இவ்வாறே "ஒரு சொல் தனது உற்பத்தித்தானமான ஆதிச் சொல்லைத் தமிழிற் கொண்டதாய் தன்னோடு ஒத்த உருவும் பொருளுமுள்ள பலவேறு சொற்கள் அவ் ஆதிச் சொல்லினின்று பிறந்தனவாய்த் தன்னைப் புடைசூழ்ந்து நிற்கப்

பெற்றதாய் விளங்குமாயின், அது தமிழ்ச் சொல்லேயாம். ஆதிச் சொல்லென யாம் குறியீடு செய்வது: எண்ணங்களுக் கெல்லாம் அடிப்படையாயுள்ள இடச் சம்பந்தக் கருத்தினையே காட்டுகின்றதும், அதற்கப்பால் இனித் துருவித்துருவிச்சென்று வேறொரு அடி காணக் கூடாததாய் நிற்கின்றதுமான ஓரசை ஈரசைச் சொல்லையே என அறிக. இனி ஒருசொல் வடமொழி யில் தனக்கு ஏற்ற பெற்றியான அடியில்லாததாய், தன்னைப் போன்ற வேறு பல வியுற்பன்னங்களோடு கூடி நில்லாததாய் விளங்குமாயின், அது வடமொழிக்குரிய சொல்லன்று எனவே அறுதியிடுக. அப்பால் ஒரு சொல்லினுக்கு வடமொழித்தாது உள்ளவிடத்தும் அத்தாது வழியடியாய் மட்டில்நிற்ப, அதற்கப் பால் அம்மொழியில் தலையடி இல்லாது ஒழிய, தமிழில் அதற் குத்தலையடி காணப்படுமாயின், இருமொழிக்கும் பொதுவான சொல்லினுக்குத் தமிழே தலையடியைக் காப்பாற்றிக்கொண்டது என முடிக்க" எனத் "தமிழ்ச் சொற் பிறப்பாராய்ச்சி"யில் நாட்டியுள்ள விதிப்படி (பக். 61—2) இலக்கணமும் இலக்கியமும் தமிழ்ச் சொற்களே யாமென முடிவுகட்டுதல் பொருத்த முடைத்து எனலாம்.

"தமிழ்ப்பொழில்" பத்திரிகையில் எழுதிய பண்டிதர் ஒருவர் இலக்கண இலக்கியச் சொற்களைச் சுட்டி நன்றாக ஆராய்ந்து வரைந்திருந்தார். ஆயின் அன்னவர் இச்சொற்களின் தலையடிவரைக்கும் துருவிச் செல்லாதுவிட்டமைபற்றி யாம் இவ்வுரையை வெளியிட்டனம் என அறிக.

---

# பொருளின் அமைப்பு.

---

திருவாளர், அ. சீநிவாசாச்சாரியார் அவர்கள், B. A., L. T.,
ஆசிரியர், உயர்தரக்கல்லூரி, சீவில்லிப்புத்தூர்.

---

### சுடரியமும் சுடரிப்பொருள்களும்.

சுடரியம் என்னும் மூலப்பொருள் கண்டு பிடிக்கப்பட்ட நாள் தொட்டே, அணுக்கள் பகுக்க வொண்ணாத நீர்மையன

என்னும் கொள்கை சிதைவுறலாயிற்றென முன்னர்க் குறித்தோம். அது எங்ஙனே நிகழ்ந்ததென்பதைச் சற்று விரிவாக ஆராய்வாம்.

சுடரியம் எனும் பொருளைக் கண்டுபிடித்த பின்னர் அதன் இயல்புகளை ஆராயப் புகுந்தபோது, அதுகாறும் எவரும் அறிந்திலாததும் பேரிறும்பூதினை விளைக்கத் தக்கதுமான ஓர் அரிய இயல்பு அதன்கண் வைகுதல் தென்படலாயிற்று. சிறிது சுடரியத்தையோ சுடரியக் கூட்டுப்பொருள் ஒன்றையோ ஒரு சிறு கண்ணாடிக் குழாயின்கண் இட்டு, அதன் வாயினை உருக்கி அடைத்து வைக்குங்கால் அப்பொருளினின்றும் தானகவே இரண்டு புதிய மூலப்பொருள்கள் தோன்றி வெளிவந்து கொண்டிருக்கின்றன. அம்மாற்றத்தைப் பெருவிந்தையெனக் கருத நான்கு காரணங்கள் உளவாம். ஒன்று, நீரினைப் பகுக்குங்கால், அதன்கண் நீரயமும் உயிரமும் ஆகிய இருவேறு மூலப்பொருள்கள் பெறப்படுதல் போன்று, சுடரியம் முறிபட்டு இருவேறு பொருள்களாகுமெனின், சுடரியம் ஒரு கூட்டுப்பொருளாதல் வேண்டும்; ஆனல் சுடரியம் ஒரு மூலப்பொருளென்பதும், அதுசுண்ணகம் (Calcium) நிலவியம் (Magnesium) முதலாய மூலப்பொருட் குலத்தினைச் சார்ந்ததென்பதும் முன்னரே அறிஞரால் நிறுவப் பட்டிருக்கின்றமையின், அதனைக் கூட்டுப்பொருள் எனத் துணிதற்கு ஓர் இடர்ப்பாடு உண்டாகிறது. இரண்டாவதாக, சுடரியக் கூட்டுப் பொருள்கள் பலவற்றில் எதனை அடைத்துவைக்கினும், அதனின்றும் முற்கூறிய இரண்டு மூலப்பொருள்களே உண்டாகின்றன; இது முறிவு முறைக் கொள்கைக்கு முற்றிலும் முரண்பட்டதாகும். யாங்ஙனமெனின், காரீயக் கந்தகை (lead sulphide) காரீயப்பசியை (lead chloride) என்னும் இரண்டு வேறான கூட்டுப் பொருள்களைத் தனித்தனியே முறிவுபடுத்துங்கால், அவைகளினின்றும் பெறப்படும் காரீயமொழிந்த மற்றொரு பொருள் இரண்டிலும் ஒன்றாயிராது வேறுபட்டே யிருக்குமன்றே? மூன்றாவது, சுடரியக் கூட்டுப்பொருளினின்றும் இருமூலப் பொருள்கள் வெளிப்படும் விரைவினை நாம் அறிந்த எவ்வித ஏதுவானும்

குறைக்கவோ மிகச் செய்யவோ இயலவில்லை; ஆனல் பொருள்களின் இணைவையும் முறிவையும் சூட்டின் மிகுதியானும் ஏனைய புற ஏதுக்களானும் விரைந்து நிகழச் செய்தல் கூடும். நான்காவதாக, சுடரியம் தானுக இருமூலப் பொருள்களாக முறிவுபடுங்கால், அவையிரண்டையும் மீட்டும் இணையச் செய்து சுடரியத்தைப் பெறுதல் இயலாததாகின்றது; ஆனல் ஒரு கூட்டுப் பொருள் இரண்டாகப் பிரிவுபடுமாயின், அவ்விரண்டு பொருள்களையும் இணைத்தொன்ருகச் செய்து மீண்டும் அக்கூட்டுப் பொருளைப் பெறக்கூடும்; பொதுப்படக் கூறின், ஒரு கூட்டுப் பொருளின் இயைபினை (composition) ப் பகுப்பு முறையானும் (method of analysis) தொகுப்பு முறையானும் (method of synthesis) நிலைநாட்டுதல் ஒன்ருதலொன்றல்ல. இன்னும், சுடரியம் முறிவுபடுங்கால் அதன் உள்ளகத்தினின்று காலப்படும் சூடு, முறிவு நிகழுங்கால் ஒரு பொருளினின்றும் வெளிப்படும் சூட்டிற்கு இலக்கம் மடங்கு பெரிதாகின்றது; அன்றியும், இவ்வண்ணம் கனலை ஓவாது காலுதலின்பயனுய் அதன் அனற்பதன் அதைச் சூழ்ந்துள்ள பொருள்களின் அனற்பதனைக் காட்டிலும் சதகூற்றனற்பதனியின்படி ஒருகூறு இருகூறு மிகுந்திருக்கின்றது. இவ்வேறுபாடுகள் யாவற்றையும் கூர்ந்து நோக்கிய பேரறிஞர் சுடரியத்தின்கண் நிகழும் மாற்றத்தின் புதுமையைக் கருதி அதற்குப் புதுப்பெயர் புனையத்தொடங்கினர். அதனை இயைபு முறிவின்பாற் படுத்த வழியில்லாமையானும், மற்றும் அத்தகைய மாற்றம் வேறுசில பொருள்களின்கண் அருகிக் காணப்படுகின்றமையானும், அதனைச் சுடரிய மாற்றம் (Radio-activity) என்றும், அத்தகைய மாற்றத்தையுடைய பொருள்களைச் 'சுடரிப்பொருள்கள்' என்றும் அழைக்கலாயினர். சுடரியமாற்றம் ஒரு பொருளின்கண் நிகழுங்கால், அதன் அணுக்கள் உடைந்து வேறிருவகைப் பட்ட அணுக்களாக மாறுபாடடைகின்றன.

சுடரியம் இவ்வகையான மாற்றத்தைப் பெறுங்கால், ஒவ்வொரு சுடரிய அணுவினின்றும் மிக நுண்ணிய துகள்கள், பீரங்கியினின்றும் வெடித்தெழும் குண்டுகளினும் மிக்க கழி

பெரும் விரைவொடு எம்மருங்கும் எறியப்படுகின்றன. இத் துகள்கள் ‘அகரத்துகள்கள்’ எனப்பெயர் பெற்றன. ஒரு விநாடிக்கு ஒரு மைலினும் விரைந்து செல்லும் குண்டுகள் இல்லையெனினும், அகரத்துகள்கள் ஒரு விநாடிக்குப் பல்லாயிரமைல் விரைவொடு உந்தப்படுகின்றன. [இத்தகைய அகரத்துகள்களாற் றாக்கப்படும் சில சோதியப் பொருள்கள் இருளினும் மிளிரும் இயல்பினவாகும். ஒரு சிறிது சுடரியத்தை நாகக்கந்தகையொடு (zinc sulphide) கலந்து ஒரு கைக்கடியாரத்தின் முட்களின்மீது பூசிவைக்கின், சுடரியத்தினின்று பாய்ந்தெழும் அகரத்துகள்கள் நாகக்கந்தகையின்மீது தாக்குதலின், அம் முட்கள் இரவிலும் மிளிர்ந்து கொண்டிருக்கும். சுடரியக் கடியாரங்கள் இரவிலும் மிளிர்வதற்கு ஏது இதுவே.] இங்ஙனம் எறியப்படும் அகரத்துகள்கள் புறத்துள்ள ஒரு பொருளின்மீது மோதி விசைதணிந்து அமருங்காலை, இரவியம் (Helium) எனும் மூலப்பொருளின் அணுக்களாகக் காணப்படுகின்றன; சுடரிய அணுக்கள் அகரத்துகள்களை இழக்குங்காலை, மற்றொரு மூலப் பொருள்களாக மாறுகின்றன. அகரத்துகள்களின் இயல்பினைப் பின்னர் பௌதிக நூலார் ஆராய்ந்து கண்டபோது, அவை அணுக்களினும் மிகச் சிறிய மின்னுருக்களே என்பது புலனாயிற்று; அன்றியும், அணுக்களுள்ளும் உட்பகுதிகள் உளவென்பதும், அவ்வுட்பகுதிகள் ஒருவாறு மாறுபாடடையுங்கால் வேறொரு மூலப்பொருளின் அணுக்களாதல் இயலும் என்பதும் தெளிவுற விளங்கின. ஆக, சுடரிய மாற்றத்தின் இயல்பினைப் பற்றிய ஆராய்ச்சியால், அதுகாறும் அறிஞருலகத்து ஆழமாக வேரூன்றி வளம்பெற வளர்ந்த அடிப்படைக் கொள்கைகள் வேர்முதல் மாய்வுறலாயின. மேலும், எத்தகைய பொருளையும் சுடரிய மாற்றத்தையடையும் வண்ணம் செய்தல் கூடும் என்பதும் பிற்றைஞான்று ஆராய்ச்சியால் நிறுவப்பட்டது.

இதுகாறும் கூறிய ஏதுக்களான் அணுக்கள் பகுப்பினையடையும் பான்மையனவே என்பது முடிவாயிற்று. அணுக்கள் பகுப்புறுங்கால், மிக நுண்ணிய பகுதிகளாகிய மின்னுருக்களை நாற்றிசையும் சிதறுகின்றன. சிவந்தொளிரும் நிலையினை அடை

யும் உலோகம் ஒவ்வொன்றினின்றும் மின்னுருக்கள் புனலெனப் பெருகி ஓடுகின்றன. மின்மய வில்விளக்கு (Electric arc lamp) பேரொளியை உமிழும்போதும், இடி முழங்கும் போதும், உடுக்கணம் வானத்தே இமைக்கும்போதும், மின்னுருக்கள் மழைபோல் உலகிற் பொழியப்படுகின்றன. பொருள்களின் அணுக்கள் தாமாகவே முறிவுபடுதலின், மின்னுருக்கள் அருவி போற் பெருகி இரிகின்றன. இன்னும், ஊதாப்பின் ஒளிக் கதிர்கள் (Ultra-violet rays) இப்படியின்மீது பாய்தலின், அவைகள் நண்ணும் பொருள்களின் மேற்புறத்துள்ள அணுக்களினின்றும் மின்னுருக்கள் வெளியேற்றப்படுகின்றன; ஆனால் அவை நம்மைச் சூழும் வளிவளையத்துட் புகுந்து வருங்கால் முற்றும் விழுங்கப்படுதலின், அவை நம்முலகைப் பாழ்படுத்தாதொழிகின்றன. அங்ஙனம் அவை அழியாதொழியுமேல், இப்புவியின்கண் உலோகங்கள் அனைத்தும் சிதைந்தொழியும்; இஞ்ஞான்றைய நாகரிகத்திற்கு அடிப்படையாக இருக்கும் எஃகுத் தொழிலும் அடியோடழிந்து விடுவதாகும்.

இத்தகைய பெற்றிவாய்ந்த மின்னுருக்களின் இயல்பினைக் கண்டு விந்தையெய்திய ஒரு பேராசிரியர் பின்வருமாறு வியந்துரைக்கலாயினர்:—"ஈதென்ன விந்தை! ஒன்றும் அறியாதது போல் நடிக்கும் இவ்வுப்புத்தூளின் மாயமென்னே! பண்டைக் கால மக்கள் கனவிலும் கருதியறியாத மிகப் புதுமையான இயல்புகளையுடைய இதனை என்னென்று உரைப்பது! இந்நாளில் நன்கு நிறுவப்பட்டுள்ள உண்மைகளைப்பற்றிய ஓர் அறிகுறியையும் இதுகாறும் எவரும் எந்நூலிலும் குறித்து வைத்திலர். இத்தூளின் மேற்புறத்தினின்றும் எறியப்படும் நுண்பகுதியொன்று ஒரு விநாடிக்கு இலக்கம் மைல் வீதம் விரைந்தியங்கும் வன்மையதாகின்றது; இவ்விசையொடு தங்கு தடையின்றிச் செல்லுமாயின், அது ஒரு விநாடிக்குள் இப்புவிமுழுதையும் ஐந்துமுறை வலம் வரலாகும். அதன் பருமனோ, பௌதிக நூலார்க்குத் தெரிந்தமட்டில் அனைத்தினும் சிறியதாய நீரய (hydrogen) அணுவினும் ஆயிரமடங்கு சிறியதாகும். இன்னும், இப்பகுதிகள் மாற்று மின்சாரம் (Negative electri-

city) ஊட்டப் பெற்றிருக்கின்றன. ஒளி நுழையவொண்ணாதவையெனக் கருதப்படும் பொருள்களின் வாயிலாக அப்பொருள்களின் இயல்பினை இறையும் பொருட்படுத்தாது நேராக நுழைந்து செல்கின்றன. அவை தாம் மோதும் பொருள்களை இருளிலும் மிளிரச் செய்யும் ஆற்றலுடையன; படம் பதி கண்ணாடியில் உருவினைப் பதியவைக்கும் நீர்மையன; வளியினை மின்சார சத்தியைக் கடத்தும் பொருளாக்கவல்லன; ஈரம் பொதிந்த வளியினிடை மஞ்சு தோன்றச் செய்கின்றன; பொருள்களின் இயைபினை மாற்றவல்லன; உடலினும் ஒரு புதுமையான உணர்ச்சியை உண்டுபண்ணும் தன்மை வாய்ந்தன. சூரியத்தினின்று வெளியெழும் இக்கதிர்களினால் மக்கள் பிற்காலத்து எத்துணைய நலம்பெற இருக்கின்றனர் என்பதை இன்றே முன்னுணர்ந்துரைக்க வல்லார் எவர்கொலோ!

(தொடரும்.)

---

பின்னத்தூர்க் சுப்பிரமணியசாத்திரியார் தொல்காப்பியச்
சொல்லதிகார வாராய்ச்சியுரை மறுப்பின்மேல்
செந்தமிழ்ப்பத்திராதிபர் திரு. நாராயணையங்கார்எழுப்பிய

# தடையும், அதற்கு விடையும்.

---

திரு. ம. நா. சோமசுந்தரம் பிள்ளையவர்கள்,
தமிழ்ப்புலவர், மன்னார்குடி.

(முற்றொடர்ச்சி துணர் 10. மலர் 1. பக்கம் 24.)

மறுப்பு 38 தொடர்ச்சி.

திங்கள் மேவிய செஞ்சடைத் தேவனும்
செங்கண் மாலும் கடம்பமர் செல்வனும்
கொங்கு தங்கிய பங்கய முனிவனும்—சங்கமுற்று
வளர்த்ததோர் தண்டமிழ் நாட்டுவழக்கிலே

'இம்மாடு நூறு வெள்ளிக் காசிற்கு வாங்கப்பட்டது' 'விற்கப்பட்டது' எனவும், இவ்வயலில் பதின்கலநெல் காணப்

பட்டது' எனவும் சொல்ல வேண்டுவனவற்றை இம்மாடு நூறு வெள்ளிக்காசிற்கு வாங்கினது'—'விற்றது' எனவும் 'இவ்வயலில் பதின்கலநெல் கண்டது' எனவும் சொல்லும் வழக்குண்டு. இது பின்பு செய்யுள் வழக்கிலேயும் வரப்பெற்றது. இவ்வழக்கை நோக்கி, நம் தமிழ்மொழிக்கு முதனூலாகிய அகத்தியத்தின் வழித்தோன்றிய தொல்காப்பியம் என்னும் அருமருந்தனைய நூலிலே செயப்படு பொருளைச் செய்தது போலத்

தொழிற்படக் கிளத்தலும் வழக்கியன் மரபே'

என்றொரு சூத்திரம் வினையியலுள் ஓதப்பட்டது. அத்தொல் காப்பியத்தின் வழியே பிற்றைஞான்று நூல்செய்த பவணந்தியாரும் இதுபற்றி நன்னூலிலே

"செயப்படு பொருளைச் செய்தது போலத்

தொழிற்படக் கிளத்தலும் வழக்கினுள் உரித்தே."

யென்று சூத்திரம் ஓதினர். இவ்விரண்டு சூத்திரங்களையும் உற்றுநோக்கின், இருவர் ஆசிரியர்க்கும் கருத்து ஒன்றேயாம் என்பது கையுறு நெல்லியங்கனியிற் காணப்படும்.

தொல்காப்பிய வுரையாசிரியர் எல்லாரும் 'இல்லம் மெழுகிற்று.' 'சோறு அட்டது' (இல்வாழ்வான் என்பான்) என்றாற்போல்வன வற்றை உதாரணமாகக் காட்டினர். சங்கத்துச் சான்றோராகிய நக்கீரரும், திருக்குறள் உரையாசிரியராகிய பரிமேலழகரும், கோவையார் உரையாசிரியர் பேராசிரியரும், மாதவச்சிவஞான முனிவரும் அவர் கருத்தினையே தழுவியுரைத்தார். அவருள் வடநூல்வழக்கை நன்குணர்ந்த பலரும் அவ்வாறே வடமொழியில் வருவதனைக் 'கருமகருத்தா' என்பர் என்றும் குறித்தார். நன்னூற்குப் பழையவுரை யாசிரியர் ஆகிய மயிலைநாதரும் தொல்காப்பியவுரை யாசிரியர் கருத்தையே தழுவி உரைத்தார்-இப்பால் நன்னூற்கு விருத்தியுரை யென்று எழுதிய சங்கரநமச்சிவாயர் ஒருவரும் முன்னோர் கருத்தோடு முரணித் தாம் புதுவதாக உதாரணம் காட்டினர். அது இம்மாடு யான்கொண்டது என்பது - நன்னூற்குப் பின்பு காண்டிகையுரை யெழுதிய ஆறுமுகநாவலர் முதலியோரெல்லாம் அச்சங்கரநமச்சிவாயர் உரையின்படியே உரைத்தார்.

ஆகவே இருவர் மாறுகோள் ஒருதலை துணிவு என்னும் மதம்பற்றி, அவ்விருவர் உரைக்கருத்தையும் ஆசிரியர் இருவர் கருத்தையும் சான்றோர் வழக்கையும் யாம் மயக்கற ஆராய்ந்து கண்டது தொல்காப்பிய வுரையாசிரியர் உரையே பொருத்த மானது என்பதும் சங்கரநமச்சிவாயர் உரையெவ்வாற்றானும் பொருந்தா தென்பதுமாம் - ஆகவே இதுபற்றி யாமெழுதிய ஆராய்ச்சியுரை யொன்று சென்ற சித்திரைத்திங்கட் கரந்தைத் தமிழ்ப் பொழிலினும், வைகாசித்திங்கள் மதுரைச் செந்தமிழி னும் வெளியாயிற்று.

இப்பால் ஆடித்திங்களில் வெளியான செந்தமிழிலே, அச் செந்தமிழ்ப் பத்திராதிபர் திரு. நாராயணையங்கார் அவர்களால் 'வினையெச்சமுடிபு' என்று பெயரிட்டு எழுதப்பட்ட கட்டுரை யொன்று யாமெழுதி வெளியிட்ட ஆராய்ச்சியுரையின் ஒரு கூற்றை மறுப்பான் எழுந்ததாகக் காணப்பட்டது. அக்கட் டுரை தானும் எமது ஆராய்ச்சியுரையால் துணியப்பட்ட பொருளாகிய 'கருமகருத்தா' என்னும் மணிமாளிகையில் ஏறு மல், அஃது ஊன்றிய வயிரத் தூண்கள் நூற்றிலொன்றாகிய 'வினையெச்சமுடிபு' என்பதை அசைத்துப் புரட்டக் கருதியது, இங்குக் குறித்த 'வினையெச்சமுடிபு' என்பது, சங்கரநமச்சி வாயர் காட்டிய உதாரணமாகிய 'இம்மாடு யான் கொண்டது' என்பது பொருந்தாது என்பதைச் சாதிப்பதற்கு எடுத்துக் கொண்ட ஏதுக்களில் ஒன்று. 'இம்மாடு யான் கொண்டது' என்பதுபற்றி ஆராய்ச்சியுரையுள் கண்டது பின் வருமாறு:— இத்தொடர்மொழியில் வந்த 'கொண்டது' என்பது வினையா லணையும்பெயரே.......செயப்படு பொருண்மேல் நின்றது. யான் என்பது எழுவாய்; அது கொண்டது என்னும் வினையாலணையும் பெயருள் 'கொள்' என்னும் முதனிலையோடு முடிந்தது. அப் பால் 'யான் கொண்டது' என்பது ஒரு சொன்னீர்மையெய்தி எழுவாயாக நின்று 'இம்மாடு' என்னும் பெயர்ப் பயனிலை கொண்டு முடிந்தது................எழுவாய் வேற்றுமைக்கு முடிபு ஓதிய 'பொருண்மை சுட்டல்' என்னும் சூத்திரத்தில் வினைநிலை யுரைத்தல்' என்றே ஆசிரியர் கூறினர்' 'வினைச்சொற்கோடல்'

என்று கூறினரிலர். 'சாத்தன் காலொடிந்தான்' என்புழிக்கால் என்னும் சினை 'ஒடிந்தான்' என்பதனுள் ஒடிதல் வினையோடு முடியும்; சாத்தன் என்னும் முதல் எழுவாய் ஒருசொன்னீர்மை யெய்திய 'காலொடிந்தான்' என்பதைக்கொண்டு முடியும்; 'சாத்தன் கண்பெரியன்' என்புழிக் கண் என்னும் சினையெழு வாய் அச்சூத்திரத்தில் 'பண்புகொளவருதல்' என்பதனால், பெரியன் என்பதனுள் பெருமையென்னும் பண்புகொண்டு முடியும்; ஈண்டு 'வினைநிலையுரைத்தல்' என்பது வினைப்பகுதி யையே குறிக்கும் என்பது 'வினையெனப்படுவது வேற்றுமை கொள்ளாது.' 'வினையெஞ்சு கிளவிக்கு வினையுங் குறிப்பும் நினையத்தோன்றிய முடிபாகும்மே.' 'வினையின்றொகுதி காலத் தியலும்' என்னும் சூத்திரங்களில் 'வினை' யென்றது வினைப் பகுதியே யாதலானும் துணிக. இதனைச் சேனாவரையர், பேரா சிரியர், பரிமேலழகர், சிவஞானமுனிவர், முதலியோர் உரைகளான் அறிக;

'சார்ந்துவரன் மரபின் மூன்றலங்கடையே'

என்புழிச் சார்ந்து என்னும் வினையெச்சம் 'வரல்' என்னும் தொழிற்பெயரின் 'வா' என்னும் முதனிலையோடு முடிந்தது. எ-து. சிவஞானமுனிவர் சூத்திரவிருத்தி.

'அவர் நாண ஒல்வதோ' (குறள்) என்புழி நாண என்னும் வினையெச்சம் ஒல்வது என்னும் தொழிற்பெயருள் ஒல்லுதற் றொழிலோடு முடிந்தது.

'ஆகி.......ஆகிய' (பரி—13). ஆகியென்னும் வினையெச்சம் ஆகிய என்னும் பெயரெச்சத்துள் ஆகலோடு முடிந்தது. எ-து. பரிமேலழகர் உரை.

'நல்வினையுந் நயந்தந்தின்று' (கோவையார்)

என்புழித் துப்புற என்னும் வினையெச்சம் தந்தின்று என்பத னுள் தருதல் என்பதனோடு முடிந்தது. எ-து. பேராசிரியர் உரை.

வினைசார் பினமிட மேவி விளங்காப்—பல பொருளொரு சொல் (நன்னூல்) என்புழி மேவியென்னும் வினையெச்சம் விளங்கா என்பதன்கண் முதனிலையோடு முடிந்தது. எ-து. சங்கர நமச்சிவாயர் உரை.

இவ்வா றன்றி எழுவாயை வினையெச்சம் பெயரெச்சம் வினையாலணையும் பெயர் தொழிற்பெயர் என்னும் இவற்றேடு முடித்துக்காட்டுவாரும் உளர். அஃதெல்லாம் ஒற்றுமை நயம்பற்றி உபசாரத்தாற் கூறியதென்றெழிக. எ-து.

ஈண்டு எழுவாய்க்குக் கூறிய உபசார முடிபு வினையெச்சத்திற்கும் ஒக்கும் என்பது உய்த்துணர வைக்கப்பட்டது.

மேலே குறிக்கப்பட்ட பல்வகை முடிபுகளிலே, வினையெச்சம் மேற்காட்டியவாறு வினைமுதனிலையோடு முடியும் என்ற கொள்கை ஒன்றனையே **செந்தமிழ் ஆசிரியர்** மறுக்கப் புகுந்தார்.

அங்ஙனம் புகுந்தவர், எங்கொள்கைக்கு ஆதாரமாகக் குறித்த 'வினையெனப்படுவது வேற்றுமை கொள்ளாது' 'எவ்வயின் வினையும் அவ்வியல் நிலையும்' 'வினையெஞ்சு கிளவிக்கு வினையுங் குறிப்பும்-நினையத் தோன்றிய முடிபாகுமே' வினையின்றொகுதி காலத்தியலும்' என்னும் சூத்திரங்களின் உரையிலே சேனவரையர் முதலியோர் 'வினை' யென்றது வினைச் சொல்லின் முதனிலையே யென்று கூறியதனை யெடுத்துக்கொண்டு ஆராய்ச்சி செய்தாரிலர். வினையெச்சம் வினைமுதனிலையைக் கொண்டு முடிந்ததுபற்றி, மேலே குறிக்கப்பட்ட பண்டைஉரையாசிரியர் உரைமேற்கோள் ஐந்தனுள்ளே, 'சார்ந்துவரல்' என்பதுபற்றிச் **சிவஞானமுனிவர்** கூறியது ஒன்று மாத்திரம் பொருந்தாது என்கிறார். ஏனைய நான்கிடத்தும் வினையெச்சம் வினைமுதனிலையைக்கொண்டு முடிந்ததென்றது இலக்கணமே யென்று உடம்படுகின்றார். அவர் **சிவஞானமுனிவர்** உரைக் கருத்தொடு முரணுதற்குக் காரணம் யாதாயினுமாக; அதுபற்றிப் பின்னர் ஆராய்வாம். அவரது பெரும்பான்மை உடம்பாட்டால் எம்முடையகொள்கை மறுக்கப்படாமல் முடிந்தவாறு காண்க.

இனி அவர், வினையெச்சம் வரையறையின்றித் தொழிற்பெயர் முதலியவற்றைக் கொண்டும் முடியும் என்று கூறினர். அதற்குக் காரணம் பிழைபட்ட பல கொள்கைகளைத் தம் கொள்கையாகக் கொண்டமையும் 'வினையெச்சம்' என்னும் குறியீட்டின் கருத்தை நன்கு ஆராயாமையுமேயாம் என்பது.

அவர் உரையால் விளங்குகின்றது. ஆகவே, அவருரையில் கண்ட பிழைபட்ட கொள்கைகளை முன்னர் எடுத்துக்காட்டி மறுத்துவிட்டு அதன்பின் அவர் தடைகளுக்கு விடைகூறல் வேண்டுவதாயிற்று.

செந்தமிழ்ப் பத்திராசிரியர் 'வினையெச்சமுடிபு' என்ற தலைக்குறிப்புடன் எழுதிவிடுத்த சட்டுரையிலே, எம்முடைய ஆராய்ச்சியுரையை நேரே சுட்டி யெடுத்துக்கொள்ளாமல், இலக்கணக்கோத்து நூலார் இவ்வினையெச்ச முடிபுபற்றி 77-ஆம் சூத்திரவுரையுள் கூறியவற்றை யெடுத்துக்கொண்டு, அவர் ஆண்டுக் கூறியவை பொருந்தாவென்று மறுப்பார்போல் எழுந்து, அப்பால் யாம் மேலே காட்டிய சிவஞானமுனிவர் முதலியோர் உரைக் குறிப்புக்களைப்பற்றி யெங்கருத்திற்கு மாறாக உரைக்கலுற்றார். மூக்கைத் தொடுவதற்குத் தலையைச் சுற்றவேண்டுவது எற்றுக்கு? அதுகிடக்க. அவருரையிற்கண்ட

முதலாவது பிழை :— வினைச்சொல்லிலே வினையெச்சம் பெயரெச்சம் வினைமுற்றுத் தொழிற் பெயர் வினையாலணையும்பெயர் என ஐந்து வகை கொண்டுரைத்தனர். இது தவறு. ஆசிரியர் தொல்காப்பியனார் வினைச்சொல் வகையாக வினைமுற்று வினையெச்சம் பெயரெச்சம்என மூன்றேகொண்டு வினையியலுள் இலக்கணம் கூறினார். தொழிற் பெயரையும் பெயர்ச்சொல்வின் வகையெனவே கூறினார். 'தொழினிலை யொட்டுமொன்று' எனவும் 'வினைப்பெயர்' எனவும் அவற்றிற்குக் குறியீடுகொடுத்துப் பெயரியலுள்ளே ஓதினார். 'வினை யெனப்படுவது வேற்றுமை கொள்ளாது' என்னும் சூத்திர வுரையிலே சேனாவரையரும் அத்தொழிற் பெயரும் வினையாலணையும் பெயரும் வினைச்சொல்லெனப் படாவென்று விலக்கினார். நச்சினார்க்கினியரும் :— 'ஆயென் கிளவியும் அவற்றொடுகொள்ளும்' என்னும் சூத்திரவுரையில் அக்கருத்துத்தோன்ற உரைத்தார். அவ்வாறன்றித் தொழிற்பெயரும் வினையாலணையும் பெயரும் வினைச்சொல் வகையின வென்று கொள்ளின், வினையெனப்படுவது வேற்றுமை கொள்ளாது' என்னும் சூத்திரக்கருத்தின்படி வேற்றுமையுருபு ஏற்றுவரலாகாது. அவை வேற்றுமையுருபேற்று வருதலால் அவை வினைச்சொல் வகையினுள் அடங்காவென்பது அறிக.

(தொடரும்.)

---

# ஒரு பெரு மகிழ்ச்சி.

தஞ்சை, அரசியலாரின் வழக்கறிஞரும், சென்னைச் சட்டசபை உறுப்பினரும், நம் சங்கத்தின் உறுப்பினரும் பேசன்பரும் ஆய திருவாளர். இராவ்பகதூர். A. T. பன்னீர்ச் செல்வம் (Bar-at-law) அவர்கட்கு, சென்னைமாநில அரசாங்க அகமந்திர நாயகர் (Home-Member to the Govt. of Madras) பதவி கிடைத்தமைக்குப் பெரிதும் மகிழ்ந்து, நமது சங்கம் பவ, ஆடி, எ (22—7—34) ஞாயிறு மாலை மணி 4-க்கு ஒரு பெரிய வாழ்த்துவிழா நடத்தியது. அதுபோது நகர நாட்டாண்மைக்கழகப் பெருமக்களும், தஞ்சை அரசியல் தலைவர் பலரும் பன்னூற்றுக் கணக்கிற் குழுமியிருந்தனர். நான்கு மணிக்குத் தலைவர் திரு. A. T. பன்னீர்ச்செல்வம் அவர்களைச் சங்கத் தலைவர் வரவேற்றதும் ஒரு நானூற்றுவருக்குச் சிற்றுண்டி நடந்தது. பின்பு கடவுள், தமிழன்னை வணக்கங்கள் நடைபெற, சங்கத்தார் ஓர் ‘வாழ்த்துப்பா’ வழங்கினர். பிறகு அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பேராசிரியர் திரு. சு. சோமசுந்தரபாரதியார் M. A., B. L., அவர்களும், அண்ணாமலைப் பல்கலைக்கழக ஆசிரியர் திரு. பண்டிதமணி, மு. கதிரேசச்செட்டியாரவர்களும் முறையே ‘தமிழுக்கு ஓர் வாழ்த்து,’ ‘தமிழ் விருந்து’ என்பன பொருள்களாக, இரு சொற்பொழிவுகள் நிகழ்த்தினர். பின்னர் நாகை பொன்னுசாமிப் பிள்ளையவர்களால் சில ‘மாயவேலைகள்’ காண்பிக்கப்பெற்றன. முடிவில் திருவாளர், A. T. பன்னீர்ச்செல்வம் அவர்கள் அவையோரின் உள்ள மகிழ்ச்சிக்கிடையே எழுந்து, சங்கத்தொண்டுகளைப் பாராட்டி, தான் இத்தகைய உயர்நிலை எய்தியதற்கு, சங்கத் தலைவர் அவர்களும், சங்கமும் ஓர் ஆதரவாகும் என்பதையும் தன் நினைவில் எப்பொழுதும் சங்கத்தின் முன்னேற்றத்திற்காய பல கருத்துக்கள் குடிகொண்டிருப்பதையும் கூறித் தனக்கு இத்தகைய சிறப்புவிழா வமைத்த தலைவர் முதலியோர்கட்கு நன்றி கூறியதும், அமைச்சர் அவர்களால் விழாத்தலைவர், சொற்பொழிவாளர், அவையோர் முதலிய யாவர்க்கும் வணக்கங்கூற, தமிழ்த்தாய் வாழ்த்தொலி யாண்டும் பரவ, இன்னிசை முழங்க, மகிழ்ச்சி மங்கலம் இனிது நிறைவுற்றது. நலம்!

உ

திருவாளர், இராவ்பகதூர்,

**A. T. பன்னீர்ச்செல்வம் Bar-at-law அவர்கட்குக் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தார் கூறிய வாழ்த்துப் பாக்கள்.**

மல்குவளச் சோணுட்டின் மன்னுறுசீர்த் தஞ்சையில்,தா
மரைப்பேர் வாய்ந்த
செல்வனருள் தவப்பன்னீர் செல்வனெனுந் திருப்பேரோய்!
சீர்சால் கல்வி
எல்லையெலாம் மேனுட்டின் எய்தப்பெற்றதன்பயனு
ஏற்ற வாய்மை
பல்குணங்கள் தெய்வவழி பாடொழுக்கம் தூயவுளம்
பயின்ருேய்! வாழி!

எங்கரந்தைத் தமிழ்ச்சங்கத் தின்னுயிராய் இருகண்ணுய்
எழிலார் வாழ்வாய்த்
தங்குறுமு மாமகே சன்றனது தனித்தோழா!
சாரிச் சங்கம்
பொங்கிடநல் லுறுப்பாகிப் போற்றிவரும் புரவலனே!
புவியி னின்பாற்
றங்கியபல் சீரெல்லாம் சங்கமிது தன்சீராத்
தாங்கு மாலோ!

நாட்டாண்மை நகராண்மை நற்கல்விக் கழகங்கள்
நாண யத்தாற்
கூட்டாண்மைப் பொருட்கழகம் குலத்தினரின் பல்லவைகள்
கூறுஞ் சென்னை
மாட்டாருஞ் சட்டசபை வட்டசபை மற்றவற்றும்
மாண்பார் நின்னைக்
கூட்டாத, முதன்மைபனுக் கொள்ளாத வொன்றுண்டோ
கூறுங் காலே.

பேர்நாட்டும் ஆங்கிலத்தார் பிரதிநிதி யாவந்த
பெரியன் சைமன்,
மாநாட்டுப் பேரவையில் மாற்றுரும் ஏற்றுரும்
மன்னி நிற்ப
நீநாட்டும் பேரொழுங்கும் நேர்மைசால் நிகழ்ச்சிகளும்
நேரிற் கண்டு
பாராட்டிப் பாராளுமன்றத்தின் பான்மையெனப்
பகர்ந்தா னன்றே!

நின்னுட்சி தன்னிலற நிலைச்சாலைக் கல்விதனை
நேர்ந்தார் தாமும்
நின்னுட்சி தனிலலுவல் நெறியுற்று வாழ்க்கைநிலை
பெற்றுர் தாமும்
நின்னுட்சி தனிற்செல்வம் நேடியதாற் றிருவினரா
நின்றுர் தாமும்
விண்ணுட்சி செயுமீனின் மேலாமேல் நின்னறத்தின்
மேன்மை யென்னே!

ஐயாற்றில் தமிழ்மன்னன் ஆக்கியபே ரறநிலையம்
அருங்கல் விக்குச்
செய்யாற்றில், நடுநிலைமை சேராதஃ தொருபாலே
சேரக் கண்டு
மெய்யாற்றிற் றமிழாரம் மேவிடுமா தமிழ்மொழிக்கும்
மேன்மை தந்தங்
குய்யாற்றில் தமிழுரையும் உக்குவித்தாய் நின்பெருமை
யுரைத்தற் பாற்றே!

உலகமெலாங் கொண்டாடும் ஒருபெரியர் தமதுதிரு
வுளத்தின் றேங்கும்
இலகுறுநற் றெண்டாய இங்கிலத்துத் தீண்டார்முன்
னேற்றந் தன்னைப்

பலபலவாம் ஆண்டுகளின் முன்கருத்திற் பதித்தனையாய்ப்
பயிலும் மாணூர்
நலமுறுமுண் டிச்சாலை நாட்டினையால் நின்னறச்சீர்
நவிலற் பாற்றே!

சென்னைநக ரரசியலார் சேர்குழுவின் உறுப்பினனுத்
திகழும் ஒன்றும்
நின்னதருந் திறனோக்கின் நேரிடமா நிகழ்த்துவதும்
நேரா தன்றே;
இன்னமுயர் ஆட்சியினன் இரும்பதவி எய்துதற்காம்
இயலு முள்ளாய்,
அன்னைதமி ழருளாலஃ தண்மையினில் அணைந்திடுமால்
அன்ப வாழி!

வாழியநின் னரும்பெறலா மக்களொடு சுற்றமெலாம்
வாழி வாழி!
வாழியநின் பெருவளங்கள் வாழியநின் திருநலங்கள்
வாழி வாழி!
வாழியநின் னுளங்கிடக்கும் மலிநீதி யார்கொள்கை
வாழி வாழி!
வாழியபன் னீர்ச்செல்வ மாண்பெயரோய் பல்லாண்டு
வாய்ந்து வாழி!

க. த. சங்கம், பவ, ஆடி, எ } நீ. கந்தசாமி, அமைச்சர்.

---

# மதிப்புரை.

---

கிராதார்ச்சுனீயம்:— வடமொழிப் பெருங்காப்பியங்களுள் சொற்சுவை பொருட்சுவை மலிய 'பாரவி' என்ற பெரும் புலவரால் இயற்றப்பெற்றது. இவ்வடமொழிப் பெருங் காப்பியத்தின் நலங்களை தமிழர் உணர்தற்பொருட்டு யாழ்ப்பாணம்

மத்திய கல்லூரி வியாகரணப் பேராசிரியர் திருவாளர். வை. இராமசாமி சர்மா அவர்கள் தமிழில் செவ்விய நடையில் எழுதி உதவியதற்குத் தமிழுலகம் நன்றி பாராட்டும். இது உயர்தரக் கல்லூரி மாணவர் பயிலுதற்குரியது. தமிழ் நாட்டிலுள்ள புத்தகாலயங்களிலும், கல்லூரி நூல்நிலையங்களிலும் ஆதரவுடன் போற்றுதற்குரியது. சுன்னுகம் தனலக்குமி புத்தகசாலையின ரால் திருத்தமுறப் பதிப்பிக்கப்பெற்றது.

திருக்குறள் நாட் குறிப்பு :—Tirukkural jem diary 1935 இது தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின ரால் 1934ல் தொடங்கப்பெற்றது. இதில் முதல் 365 அருங் குறட்பாக்களை உரையுடன் வெளியிட்டனர். இன்றியமையாத பஞ்சாங்கம் முதலிய விவரங்களுடன் நல்ல கடிதத்தில் செவ்விய முறையில் பதிப்பிக்கப்பெற்று மிக எளிய விலைக்குக் கொடுக்கப் பட்டது. அடுத்த ஆண்டி (1935)ற்குரிய 366 முதல் 730 குறட் பாக்களை உரையுடன்பதித்து இப்போதே விற்பனைக்குத் தயா ராகவந்திருக்கிறது. இத்துணை நயமான விலைக்குகாலத்தே வந் திருக்கும் நாட் குறிப்பினை தமிழராவார் ஆதரிக்கும் கடப்பாடு டையர். இதன் விலை அணு 5; அணு 6.

மங்கைக்கோர் மதியுரை :—இது ஈழகேசரி என்னும் தாளில் வெளிவந்த சிறந்த கட்டுரை. "தேசாபிமானிப்" பத்திராதிபர் திருவாளர். தா. பொ. மாசிலாமணிப் பிள்ளை அவர்கள் தமது அனுபவ முதிர்ச்சியாலும், மதிநுட்பத்தாலும் கண்ட உண்மைக் கொள்கைகளை எளிய நடையில் மாணவிகள் கற்றுத்தெளிந்து நலனடையும்பொருட்டு எழுதி வெளியிட்டிருக்கின்றனர். வாழ்க் கையைச் செவ்வனம் நடத்துதற்கு இன்றியமையாத பொருள் களை விளக்கமாக எழுதப் பெற்றிருக்கின்றது. பள்ளியிற் பயிலும் மாணவரேயன்றி பெண்மக்கள் அனைவரும் பயிலத் தருவது. சுன்னுகம் வண்ணார்பண்ணை தனலக்குமி புத்தக சாலையில் இந்நூல் கிடைக்கும்.

உ

# தமிழ்ப் பொழில்



தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத்
திங்கள் வெளியீடு.

துணர்-ய } பவ—புரட்டாசி. { மலர் - சு.

க. சொல்லதிகாரமறுப்பின் தடையும் விடையும் 241
திரு. ம. நா. சோமசுந்தரம் பிள்ளையவர்கள்,

உ. நன்னெறி 250
வித்துவான். திரு. வீ. குமாரசாமி ஐயர் அவர்கள்,

ங. ஏர் என்னும் வைப்புத்தலம் 258
திரு. T. V. சதாசிவப்பண்டாரத்தாரவர்கள்,

ச. நமது வரலாறுகளும் கல்வெட்டாதாரமும் 263
திரு. A. கந்தசாமி பிள்ளை அவர்கள்,

ரு. மண்ணியல் சிறுதேர் 267
திரு. அ. சிதம்பரஞ்செட்டியார் அவர்கள், B.A.,

சு. சங்கர நமச்சிவாயர் உரை பொருந்துமாறு 274
திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள்.

எ. அமைச்சர்களின் வருகை

அ. கல்லூரி ஆண்டு அறிக்கை
திரு. சிவ. குப்புசாமி பிள்ளையவர்கள்.

செந்தமிழ்ப்புரவலர்,

த. வே. உமாமகேசுவரம் பிள்ளை, பொழிற்றொண்டர்.

தஞ்சைக் கூட்டுறவுப் பதிப்பகம், கரந்தை.

உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு

| | | |
|---|---|---|
| துணர் ௰ | பவ, புரட்டாசி | மலர் ௬ |

உ

## பின்னங்குடிச் சுப்பிரமணியசாத்திரியார் தொல்காப்பியச் சொல்லதிகார வாராய்ச்சியுரை மறுப்பின்மேல் செந்தமிழ்ப்பத்திராதிபர் திரு. நாராயணையங்கார்எழுப்பிய

# தடையும், அதற்கு விடையும்.

திரு. ம. நா. சோமசுந்தரம் பிள்ளையவர்கள்,
தமிழ்ப்புலவர், மன்னார்குடி.



(முற்றொடர்ச்சி துணர் 10. மலர் 5. பக்கம் 236.)

மறுப்பு 38 தொடர்ச்சி.

இனி, நன்னூலாரும், 'அவை தாம் முற்றும் பெயர் வினையெச்சமுமாகி—ஒன்றற்குரியவும் பொதுவுமாகும்' என்னும் சூத்திரத்தால் மூன்றுவகையே கொண்டார். அற்றேல், 'முதனிலை தொழிற்பெயர் முற்றீரெச்சமென்று ஐவகையுள்ளே அடங்கும் வினையே' என்று இலக்கணக்கொத்து நூலார் கூறினாராலோவெனின், அச்சூத்திரக்கருத்து வேறென்றொழிக.

இரண்டாவது பிழை:—பரிபாடல் 13-வது செய்யுளில் 'நிறனுழ வளைவாய் நாஞ்சிலோனும்.........இலங்கொளி மருப்பிற்

களிறுமாகி—மூவுருவாகிய தலைபிரி யொருவனை' யென்பதிலே 'ஒருவனை' யென்பது பெயர்ப்பயனிலை யென்று செந்தமிழாசிரியர் கூறினர். அதனால் அவர்க்கு அது பெயர்ச்சொல் என்பது கருத்துப்போலும்.

'ஒருவனை' யென்பதிலே ஐகாரம் முன்னிலையை விளக்கி நின்றது, 'கானகநாடனை நீயோ பெரும்' (புறம் 5 'நீயே............ கழறைஇய வல்லாளனை' என்புழிப்போல, ஐகாரம் முன்னிலையை விளக்கல் வினைமுற்றின் கண்ணதேயாம். எனவே 'ஒருவனை' யென்பது முன்னிலை வினைக்குறிப்பு முற்றாதல் அறிக. அப்பரிபாடலுள் அவ் 'வொருவனை' யென்பதனோடு அடுக்கப்பட்ட 'செல்வனை' 'புகழவை' 'மேனியை'...........'பெரியை' 'பரியை' 'நுண்ணியை' என்பனவற்றாலும் அது முன்னிலை வினைக்குறிப்பு முற்றாதல் தெளிந்து கொள்க.

மூன்றாவது பிழை :—மேற்குறித்த பரிபாடலுள், 'ஆகி' என்பதனை ஆகிய என்பதனோடு முடிப்பின் காலவழுவாமாதலால் அடையாகவும் முடியாது' என்றார் செந்தமிழாசிரியர்.

ஆகியென்பது இறந்தகால வினையெச்சம். ஆகிய என்பது இறந்தகாலப் பெயரெச்சம். இறந்தகால வினையெச்சம் இறந்த இறந்தகால வினைச்சொல்லோடு முடிதலில் காலவழுவாமாறு யாண்டையதோ? அது காலவழுவாமென உணர்த்தும் தொல்காப்பியச் சூத்திரம் யாதோ? 'குருதிபடிந்துண்ட காகம்' என்புழி இறந்தகால வினையெச்சம் இறந்த காலப் பெயரெச்சச் சொல்லோடு முடியக் காலவழு நேர்ந்ததாமே? 'செய்தெனெச்சத்திறந்தகாலம், எய்திடனுடைத்தே வாராக்காலம்' என்னும் சூத்திரவுரையுள், இறந்தகால வினையெச்சம் இறந்தகால வினைச் சொல்லோடு தொடர்தலே வழாநிலையென்று சேனாவரையர் கூறியவாறு காண்க.

நான்காவது பிழை :—மேற்குறித்த ஆகியென்னும் வினையெச்சம் பெயரெச்சத்துடன் விரவி அடுக்கி நின்றும் முடியாது என்றார் செந்தமிழாசிரியர்.

வினையெச்சவடுக்கு என்றும் பெயரெச்சவடுக்கு என்றும் நூல்களிலும் உரைகளிலும் வழங்குவதனைக் கண்டோமேயன்றி, வினையெச்சமும் பெயரெச்சமும் விரவியடுக்கும் என்பதனையாண்டும் கண்டிலம். வினையெச்சமாயினும் பெயரெச்சமாயினும் இரண்டு முதலாகத் தொடர்ந்த வழியே அடுக்கென்று வழங்கப் படுவதன்றி ஒருவினையெச்சமும் ஒருபெயரெச்சமும் தொடர்ந்து வந்தவழி அடுக்கு என்று சொல்லுதல் வழுவாம் என்க. இது பற்றி,

அடுக்குமொழி யென்பதன் இலக்கணம் ஈண்டு ஒருவாறு விரித்துரைக்க வேண்டுவதாயிற்று. உலக வழக்கிலே அடுக்குதல் என்பது ஓரினமாய பொருள்களை ஒன்றன்மேல் ஒன்றாக ஒட்டவைத்தற்குப் பெயராம். அடுக்கு என்பது செயப்படு பொருண்மேல் நின்று அங்ஙனம் ஒட்டப்பட்டபொருளை உணர்த்தும். இதனை 'வெற்றிலையடுக்கு' 'பானையடுக்கு' 'அடுக்குமாடம்' 'அடுக்குமல்லிகை' என்பனவற்றால் அறிக. 'அடுக்கிய கோடி' 'நூற்றுப்பத்தடுக்கிய நாட்டம்' எனச் செய்யுள் வழக்கிலும் வரும்.

ஒரு வெற்றிலையை அடுக்கென்று சொல்வதில்லை. ஒரு மாடத்தை அடுக்கென்று சொல்வதும் இல்லை.

இனி அவ்வடுக்குத்தான் ஒரு சொல்லடுக்கு எனவும் ஓரினப்பட்ட பொருள்பற்றி வரும் பல சொல்லடுக்கெனவும் இருவகைப்படும். அதுதானும் பெயர் வினையிடை யுரியென்னும் நான்குவகைச் சொல்லினும் வரும்.

ஒரு சொல்லடுக்குப்பற்றி ஆசிரியர் தோல்காப்பியனார்

'இசைநிறை யசைநிலை பொருளொடு புணர்தலென்
றவைமூன் றென்ப ஒருசொல் லடுக்கே.'

'இசைபடு பொருளே நான்கு வரம்பாகும்.'

'விரைசொல் லடுக்கே மூன்று வரம்பாகும்.' என்று மூன்று சூத்திரத்தால் ஓதினார்.

' அசைநிலை பொருணிலை யிசைநிறைக் கொருசொல்
இரண்டு மூன்றுநான் கெல்லைமுறை யடுக்கும்.'

என்பது நன்னூல்.

உதாரணம் :—

'ஏஎ அம்பல் மொழிந்தனள் யாயே'

'நல்குமே நல்குமே நல்குமே நாமகள்.
ஒக்குமே ஒக்குமே ஒக்குமே ஒக்கும்.'

இவை இசைநிறை.

'பல்சான்றீரே பல்சான்றீரே........பல்சான்றீரே.' (புறம்)

'அகவன்மகளே அகவன்மகளே.........அகவன்மகளே.

'வந்தது வந்தது கூற்று' (நாலடி) விரைவு.

'ஐவிரை மாண்பகழி அரந்தின்வாய் போன்ம்
போன்ம் போன்ம் (பரி-11).

'அறம்பிற - செய்யாமை செய்யாமை நன்று. (குறள்)

'ஞாயிறு திங்கள் - ஆசறு நல்ல நல்ல. (தேவாரம்)

துணிவு.

'யாதனின் யாதனின் நீங்கியான்'. (குவள்)

'கடும்பொடும் கடும்பொடும்'. (பரி) பண்பைகுறித்தல்.

'முன்னும் முன்னும்' (பரி)

'ஆண்டாண்டுதோறும்' காலநீட்டம்.

'மாண்டுமாண்டு வந்துவந்து' (திருவாச)

'அடித்தடித்து வக்கார முன்தீற்றிய' ஷை

'அடுத்தடுத்து' (பரி) மிகுதி.

'நாய்தரக் கொள்ளுஞ்சீயம் நன்றுநன்றென்ன நக்கான்'

(கம்பர்) இகழ்ச்சி.

'நன்று நன்றென நகையொடும் புகையுக நக்கான்'

(கம்பர்) வெகுளி.

'போற்றி போற்றி.' வாழ்த்தல்.

'ஐயா வென்னையா வென்னையா அகன்றனையே.' (சிந்தா)

'ஆம் ஆம்.' அசைநிலை. அவலம்.

இனி, ஒருபொருண்மேல் வரும் பல பெயரடுக்கு.

இது 'ஒருபொருள் குறித்தவேறு பெயர்க்கிளவி
தொழில்வேறு கிளப்பின் ஒன்றிடனிலவே.' என்னும்
சூத்திரத்தால் ஓதப்பட்டது.

'ஒருபொருண்மேற் பலபெயர்வரின் இறுதி
ஒருவினை கொடுப்ப தனியுமொரோவழி.' நன்னூல்

(உ-ம்) ஆசிரியன் பேரூர்கிழான் செயிற்றியன்
இளங்கண்ணன் சாத்தன் வந்தான்.
'ஆங்கணைந்தார் நின்னையும் முளரோ சென்றகன்றவரே.'
(கோவை.)

'பூதநாயகன் நீர்சூழ்ந்த புவிக்குநாயகன் அப்பூமேல்
சீதைநாயகன் வேறுள்ள தெய்வநாயகன் நீசொல்லும்
வேதநாயகன் மேனின்ற விதிக்குநாயகன் றான்விட்ட
தூதன்யான் பணித்தமாற்றம் சொல்லிய வந்தேன்.'
என்றான் (கம்பர்)

'எந்தை வருக எம்பெருமான் வருக.'

இனி, வேற்றுமையுருபடுக்கு.

இது 'உருபுதொடர்ந்தடுக்கிய வேற்றுமைக்கிளவி
ஒருசொன்னடைய பொருள்சென்மருங்கே.'
என்னும் சூத்திரத்தால் ஓதப்பட்டது.

(உ-ம்) 'மண்ணையும் விண்ணையும் அளந்தான்.' (2)
'என்னொடு நின்னொடுஞ் சூழாது.' (3)
'அந்தணர்நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்.' (4)
'குழலினும் யாழினும் இனியசொல்' (5)
'சொல்லினும்........அன்பரிடத்தினும் ஈசன்
இருப்பதல்லால்.' (7)

ஆறனுருபு அடுக்கி முடியாது. இனி அச்சூத்திரவுரையுள் ஒன்றென முடித்தல் என்னும் உத்தியால் விளிவேற்றுமையடுக்கும் கொள்ளப்படும். (உ-ம்.)

'ஆரமிழ்தே யனங்கே தோளாமணியே பிணையே' (கோவை-47.)

இனி, வினைமுற்றடுக்கு.

இது 'அவைதாம், தத்தங்கிளவி அடுக்குந வரினும்
எத்திறத்தானும் பெயர் முடிபினவே.'

என்னும் சூத்திரத்தால் ஓதப்பட்டது. (உ-ம்.)

'உண்டான் தின்றான் ஓடினான் சாத்தன்.'

'நின்றான் கிடந்தான் இருந்தான் தன்கேளலறச்
சென்றான் எனப்படுதலான். (நாலடி.) இவை ஒருவன்
என்னும் எழுவாய் வெளிப்படாது நின்றதனோடு முடியும்.

'வீறின்மையின் விலங்காமென மதவேழமும் எறியான்
எறுண்டவர் நிகராயினும் பிறர்மிச்சி லென்றிசையான்
மாறன்மையின் மறம்வாடு மென்றிளையாரையு மதியான்
ஆறன்மையின் முதியாரையும் எறியான் அயிலுழவன்.' (சிந்.)

'இளையள் மெல்லியல் மடந்தை.' (ஐங்.)

இனி, வினையெச்சவடுக்கு.

இது, 'பன்முறையானும் வினையெஞ்சு கிளவி
சொன்முறை முடியாது அடுக்குநவரினும்
முன்னதுமுடிய முடியுமன் பொருளே.'

என்னும் சூத்திரத்தால் ஓதப்பட்டது.

(உ-ம்) உண்டு தின்று ஓடிப்பாடி வந்தான்.

'அறந்தலை நிறுத்திவேதம் அருள்சுரந் தமைந்தநீதித்
திறந்தெரிந் துலகம்பூணச் செந்நெறி செலுத்தித்தீயோர்
இறந்துகநூறித் தக்கோர் இடர்துடைத் தேகவிண்டு
பிறந்தனன் தன்பொற்பாதம் எத்துவார் பிறப்பறுப்பான்'
(கம்பர்)

'தாழாத் தளராத் தலைநடுங்காத் தண்டூன்றா
வீழா விறக்கும் இவள்மாட்டும்.' (நாலடி)

'விழுந்துபுர டவினை நிலத்தொடு வெதும்பத்
தொழுந் தகையநல்வினை களிப்பினொடு துள்ள
அழுந்து துயரத்தமரர் அந்தணர்கை முந்துற்
றெழுந்து தலையேற இனிதேறினன் இராமன்.' (கம்பர்)

'மிகினும் குறையினும் நோய் செய்யும்.' (குறள்)

இனிப், பெயரெச்சவடுக்கு.

இது அச்சூத்திரத்துரையுள் அருத்தா பத்தியால் கொள்ளப் படும்.

'இடிப்பாரை யில்லாத ஏமரா மன்னன்.' (குறள்)

'புரைதீரா, மன்னு விளமை மகிழ்ந்தாரே.' (நாலடி)

இனி அதனாலே வினைத்தொகைபடுக்கும் கொள்க.

(உ-ம்) 'ஒளிர் திகழ் அடர்' (பரி)

தெய்வச்சிலையார் இப்பெயரெச்சவடுக்கு என்னும் இலக் கணத்தை 'செய்யுண் மருங்கினும்' என்னும் அதிகாரப் புற னடைச் சூத்திரத்தால் முடிப்பர்.

நன்னூலார் மேற்குறித்த வேற்றுமையுருபடுக்கு வினைமுற் றடுக்கு வினையெச்ச வடுக்குப் பெயரெச்சவடுக்கு என்பனபற்றி,

'உருபுபல வடுக்கினும் வினைவே றடுக்கினும்
ஒருதம் எச்சம் ஈறுற முடியும்' என்னும்

ஒரு சூத்திரத்தாற் சுருக்கி ஒதினார்.

'உருபு தொடர்ந்தடுக்கிய வேற்றுமைக் கிளவி ஒரு சொன் னடைய பொருள் சென்மருங்கே.' என்னும் தொல்காப்பியச் சூத்திரவுரையிலே இளம்பூரணர் பலவேற்றுமை யுருபுகளும் தம்முள் மயங்கி அடுக்குமென்று கூறி 'யானையது கோட்டை நுனிக்கட் பொருட்கு வாளால் குறைத்தான்' என்பதை உதாரணமாகக் காட்டினார். அங்ஙனம் பலவுருபுகள் மயங்கி வருவது அடுக்கன்றெனை மறுத்து 'என்னொடு நின்னொடுஞ் சூழாது' என்றாற்போல ஒரு வேற்றுமையுருபே தொடர்ந்து வருவது அடுக்காமென்று வலியுறுத்தினர். நச்சினார்க்கினியர் வேற்றுமை யுருபுகள் ஒருவகையால் தொடர்ந்து வருவதும் அடுக்கே, மயங்கி வருவதும் அடுக்கேயென்று கொண்டு, அவ் விருவர் காட்டிய உதாரணங்களையும் காட்டினர். ஆயினும் சேனா வரையர் உரையே வலியுள்ளது. அற்றாகவும், நன்னூல் உரை யாசிரியர் ஆகிய மயிலைநாதரும், சங்கர நமச்சிவாயரும், நச்சினார்க் கினியர் கொண்டவாறே அவ்விருவகை முடிபும் காட்டினர். அவ்

விருவரும் 'உருபுபல அடுக்கினும்' என்புழி 'வேறு' என்னும் சொல்லை நலிந்து வருவித்துரைத்தார். ஆதலின் அவர்கள் 'யானையது கோட்டை........குறைத்தான்' என பல வேறுருபுகள் விரவிவருவதும் அடுக்காம் என்றது பொருந்தாதென்றொழிக. இலக்கண விளக்க நூலார் சேனாவரையர் உரையையே தழுவி உரைத்தவாறும் காண்க.

இனி 'மண்ணையும் விண்ணையும் அளந்தான்' என ஒரு வேற்றுமை யுருபே பல பெயர் வழியவாய் நின்று தொடர்ந்து அடுக்கிவரும் அடுக்கேயன்றி,

'குயிலைச் சிலம்படிக் கொம்பினைத் தில்லையெங்
கூத்தப்பிரான் கயிலைச் சிலம்பிற்பைம் பூம்புனங்
காக்குங் கருங்கட் செவ்வாய் மயிலைச் சிலம்பகண்டி
யான் போய் வருவன்' (கோவை) என

ஒரு வேற்றுமையுருபு, ஒருபொருண்மேல் வரும் பல பெயர் வழியவாய் நின்று தொடர்ந்து அடுக்கி வருவதும் உருபடுக் கென்றே கொள்ளப்படும்.

'ஆய்ந்த குருகுலமாம் ஆழ்கடலினுள் முளைத்தஅறச்
செங்கோல் ஆய்கதிரினை வேந்தர் பெருமானைச்
சச்சந்தனை மந்திரிமாநாகம் உடன் விழுங்கிற் றன்றே'
(சிந்தா.)

'ஆவியைச் சனகன்பெற்ற அன்னத்தை அமிழ்தின் வந்த—
தேவியைப் பிரிந்த பின்பு திகைத்தனைபோலும் (கம்பர்)

'ஞானத்தின் திருவுருவை நான்மறையின் தனித்துணையை
வானத்தின் மிசையன்றி மண்ணின்வளர் மதிக்கொழுந்தை
தேனக்க மலக்கொன்றைச் செஞ்சடையார் சீர்தொடுக்கும்
கானத்தின் எழுபிறப்பைக் கண்களிப்பக் கண்டார்கள்.
(பெரிய.)

என இவ்வுருபடுக்குப் பயின்றுவரும். இவ்வாறு பிறவேற்றுமை யுருபு அடுக்கி வருதலும் கண்டு கொள்க.

இவ்வடுக்கிலக்கணத்தை 'உருபு தொடர்ந்தடுக்கிய வேற்று மைக்கிளவி' என்னும் சூத்திரத்தாலே முடித்துக் காட்டினர் தெய்வச்சிலையார். இதனை 'ஒருபொருண்மேல்வரும் பலபெயர்

இறுதி-ஒருவினை கொடுப்ப' என்னும் நன்னூற் சூத்திரத்தால் முடித்துக் காட்டினர் சங்கரநமச்சிவாயர்; அச்சூத்திரத்திற்கு நேரான முதனூற் சூத்திரம் 'ஒருபொருள் குறித்த வேறு பெயர்க்கிளவி' என்பது. அதன்கண் ஆசிரியர் குறித்தது பெயரடுக்கே உருபடுக்கன்று. பெயரடுக்கு எனினும் எழுவாய் வேற்றுமையடுக்கு எனினும் ஒக்கும். எழுவாய் வேற்றுமைக்கு உருபு இல்லை. அது 'எழுவாய் வேற்றுமை பெயர் தோன்று நிலையே' என்னும் சூத்திரத்தாலும் உணர்க. உருபெனச் சிறப்பாகப் பெயர் பெறுவன எழுவாயும் விளியும் ஒழிந்த ஆறு வேற்றுமையுமே யாம். ஆதலால், அவ்வாறுருபும் தத்தமோடு அடுக்கி வருதலும் ஒரு மயக்கமாதல்பற்றி அதனை ஆசிரியர் வேற்றுமை மயங்கியலுள் ஓதினர். முற்குறித்த 'ஒருபொருள் குறித்த' என்னும் சூத்திரம் அல்வழித் தொடர் முடிபு கூறும் கிளவியாக்கத்திலே யுள்ளது. உருபடுக்கு எத்திறத்ததாயினும் 'உருபுதொடர்ந்தடுக்கிய' என்னும் சூத்திரத்தால் முடிப்பதே ஆசிரியர்க்குக் கருத்தாவதன்றி 'ஒருபொருள்குறித்த' என்னும் கிளவி யாக்கத்துச் சூத்திரத்தால் முடிப்பது கருத்தன்று. ஆகவே நன்னூலாசிரியர்க்கும் அது கருத்தன்று. ஆகவே சங்கர நமச்சிவாயர் கொள்கை தவறுதல் அறிக.

இனி, மயிலைநாதர் 'கட்கினியாள் காதலன் காதல் வகைபுனைவாள்—உட்குடையாள் ஊராண் இயல்பினள்—உட்கி—இடனறிந்தூடி யினிதின் உணரும்—மடமொழி மாதராள் பெண்' (நாலடி) என்புழி எழுவாய் வேற்றுமை யடுக்கை உருபடுக்கென்று கொண்டு 'உருபுபல வடுக்கினும்' என்னும் சூத்திர வுரையுள் உதாரணம் காட்டியதும் தவறு. ஆண்டுக் 'கட்கினியாள்' முதலாயின முற்றெச்சவடுக்கு என்று இலக்கண விளக்க நூலார் கூறிக் 'கட்கினியாளாய்' என ஆக்கச்சொல் விரித்து 'முற்று எச்சமாய்த் திரிதல்' * என்பது 'காணன் கழிதலும்' 'முகந்தனர் கொடுப்ப உகந்தனர் பெயரும்' 'குழலன் கோட்டன் குறும்பல்லியத்தன்' 'கண்ணியன் வில்லன் வரும்' என்றாற்

---

* எச்சமே முற்றாகத் திரிந்ததென்பது நச்சினார்க்கினியர் சிவஞான முனிவர் முதலியோர் கொள்கை.

போலத் தொடர்ந்த தொழினிகழ்ச்சிக் கண்ணேயாம். 'கட்கினியாள்' முதலியவற்ருல் கற்புடைப் பெண்ணின் இயல்பு கூறப்பட்டதேயன்றித் தொழினிகழ்ச்சி கருதப்பட்டிலது. இதனை 'ஊரான் இயல்பினுள்' என்பதே வலியுறுத்தும். இவ்வியற்கைப்பொருண்மேல் ஆக்கம் விரித்துச் செயற்கைப் பொருளாம் என்றல் தாய்மலடி யென்னும் கூற்ருக முடியுமாறு அறிக.

இத்துணையும் விரித்துரைத்தவாற்ருல் பல்வேறு வகையான அடுக்கின் இலக்கணம் உணர்த்தப்பட்டது. படவே 'ஆகிஆகிய' என வினையெச்சம் ஒன்றே பெயரெச்சம் ஒன்றனோடு விரவி யடுக்கியதென்று செந்தமிழ்ப் பத்திராதிபர் கூறியது தவருதல் காண்க. அடுக்கு என்பதெல்லாம் பொதுவாக ஒரு முடிபே கொள்ளும். ஆகி ஆகிய என்பன தனித்தனி முடிபு கொள்ளுதலானும் அவை அடுக்கல்லவெனத் துணிக.

(தொடரும்.)

---

# நன்னெறி

வித்துவான், வீ. குமாரசாமி ஐயர்,
தமிழாசிரியர், உயர்தரப்பள்ளி, மேலூர்,

பண்டைப் புலவர்கள் உலகு நன்னிலையுறச் செய்தலையே தம் தொழிலாகக் கொண்டிருந்தனர். ஆதலின், தமிழ்ச் சான்ருேர் நாட்டின் நலத்தைப் பெரிதும் கருதிவந்தனர். 'மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்' ஆதலின் அவர்கள் மன்னனைச் சார்ந்துதான் உலகிற்குயிரென்பதை யறிந்து தீ நெறியிற்படரா உள்ளத்தனுப் நன்னெறியுற்றுச் செங்கோல் வழுவா திருக்க வுறுதிபயக்கும் வேம்புங் கடுவும் போன்ற வெஞ் சொற்களைக் கூறியும், நன்னெறியிற் செல்லும் வேந்தனையுற்று நாடு முன்னிலும் வளம் பெருக வேண்டுவன செய்யுமாறு இயன் மொழியியம்பியும், புலவர்தம் செந்நெறிச் செம்மொழிக்குச் செவிகொடா வேந்தனுயின் வசைகூறி அவன்றன் இசைமாற்றியும், நிலத்தைப் பொதுநீக்கி யாள்வான் அரசிருவர் போர்

புரிவராயின் அன்னார் தம் பொருளார்வத்தால் உலகமக்கள் இன்னலுறுவதை யறிந்து அவர்பால் ஏந்து போய் அவர்க்கு நிலையாமையை எடுத்துரைத்து நாட்டின்கண் அமைதியை நாட்டியும், உலகின்கண் நன்னெறியைப் பேணினமையன்றிப் பிற்காலத்து மக்களும் நன்னெறி யுடையராதலைக் கருதிப் பல வொழுக்க நூல்களையும் யாத்தனர். அவை இன்னும் யாம் பயிலும் திருக்குறள், நாலடியார், திரிகடுகம், ஆசாரக்கோவை முதலியனவாம். இவைகளே தமிழ்மக்களின் அறநெறியாகிய கொல்லாமை, புலாலுண்ணாமை, கள்ளாமை, செய்ந்நன்றி மறவாமை முதலியவற்றைத் தெரிப்பனவாயுள்ளன. பண்டைச் சான்றோர்கொண்ட கொள்கையறிந்து இடைக்காலத்தும் தம்பிடுகுன்றாவண்ணம் தங்கடனாற்றிவந்த புலவர் பலருளர். அவர்தம் பேருழைப்பே யாம் காணும் நூல் வடிவாம். அவர்கள் முதியோர் கற்றற்குரிய உலகியலையும், சமயநெறியையும் உணர்த்தும் பரந்த காவியங்களையாத்து அவற்றால் நீதிகளை யுணர்த்தி மக்களை நல்வழிப்படுத்தினர். அன்றியும் பள்ளியிற் பயிலும் பருவத்த இளஞ்சிறாரே பின்னர் உயர்நிலையுற்று உலக மக்களுள் தலைமையுறுவோராதலின் அவர்கள் இளமையிலேயே நல்லொழுக்க முடையராதலைக் கருதி அவர்கள் பயில்வதற் கேற்றவாறும், மனங்கொளற்கேற்றவாறும் பரந்த அடிகளா லாகிய பாக்களாலல்லாமல் குறைந்த பாக்களையுடைய நூல்களில் அறநெறியை பொதிந்துவைத்து எளிய வுவமானங்களாலும் விளக்கிப்போந்தனர். இன்றும் தென்னாட்டுப் பள்ளிகளில் இத்தகைய அறநூல்களை மாணவர்க்குக் கற்பிப்பதும், அவற்றை மனனம் செய்விப்பதும் உண்டு. ஏனெனில் இளமையிற் கற்றவை முதுமையிலும் மறவாதென்பது கருதியும் இளமையி லேயே ஒழுக்கமுடையராயின் பின்னர்தம் நெறியினின்றும் பிறழாரென்பதும் கருதியேயாம். மாணவர்தம் பன்னிரண்டாம் பருவம் வரையில் நெட்டுருச் செய்யும் சக்தி அதிகமாயிருக்கும் காலமாதலின் அக்காலத்தில் அவர்களுக்கு நல்லொழுக்கங்களை யறிவிக்கும் செய்யுள்களையும் பிற்காலத்திற்கின்றியமையாத வற்றையும் நெட்டுருச் செய்வித்தல் வேண்டுமென்று உள நூலார் கூறும் கருத்திற்கு நம் முன்னோர் கொண்ட கொள்கை ஒத்ததன்றோ?

இவ்வாறு வாணாளிற் பயனளிக்கப்பயிலும் நன்னெறிப் பனுவல்கள் பலவற்றுள் 'நன்னெறி' எனப்படுவதுமொன்றாகும். இதனைத் துறவானமைந்த தூயராகிய துறைமங்கலம்—சிவப்பிரகாச அடிகள் அருளிச் செய்தனர். இந்நூலைப்பற்றிப் பெரியோர்கள் செவிமரபாகக்கூறும் வரலாறொன்றுண்டு. அஃதாவது:— இந்நூலாசிரியரின் ஞானசிரியர் சிவஞானபாலைய சுவாமிகளாவர். இவர் எழுந்தருளிய தலம் பொம்மபுரமாகும். இது புதுவைக்கு வடபாலுள்ள ஓர் சிற்றூர். இதனைப் பொம்மய பாளையம் என்று வழங்குவர். ஈண்டு அடிகளுடைய ஞானசிரியர் பிரமநிலையுணர்ந்தமையால் இத்தலத்திற்குப் பிரமபுரமென வழங்கப்பட்ட பெயர் பிற்காலத்தில் மருவி வழங்கலாயிற்றென்பர். இத்தலத்திலுள்ள மடாலயத்தில் இப்புலவர் பெருமான் தம் இளவல் கருணைப் பிரகாசரோடு வதியுங்கால் ஓர் நாள் வயிற்றழுக்குப் போக்கும் பொருட்டு ஆமணக்கு நெய்யுண்டு அருகேயுள்ள கடற்கரையை யண்மினர். உடல் நன்னிலை பெறாத அந்நாளையும் வாளாகழிக்க மனம்பொறா அடிகள் கடற்கரையிலுள்ள எக்கரில் நாற்பது வெண்பாக்களை எழுதிவைத்துத் திரும்பினர். பின்னர், கருணைப்பிரகாசரைப் போக்கி அந்நாற்பது வெண்பாக்களை இந் 'நன்னெறி' என்னும் நூலாயிற்றென்பதாம்.

இவ்வரலாறு செவி மரபாக விருப்பினும் இதில் மக்கள் செயலிற்கு மாறுபட்டதொன்று மில்லாமையான் புனைந்துரையெனத்தள்ளாது உண்மை வரலாறெனக் கொள்ளலே பொருந்தும். அன்றியும் இவ்வரலாற்றான் பண்டைப் புலவர்களைப் போலவே பிற்காலத்துப் புலவர்களும் தம் நாளில் ஒருகூறேனும் வீணாகச்சழியாது உலகின் பொருட்டே பயன் படுத்தினரென்பதை நன்குணரலாம்.

சங்கமருவிய கீழ்க்கணக்கிற்சேர்ந்த இனியவை நாற்பது, இன்னாநாற்பது, கார்நாற்பது, களவழிநாற்பது என்னும் நூல்கள் நாற்பது பாக்களைக் கொண்டிருத்தல்போலவே இந்நூலும் நாற்பது வெண்பாக்களைக் கொண்டுள்ளது. இந்நூலாசிரியர் "மின்னெறி சடாமுடி விநாயக னடிதொழ, நன்னெறி

வெண்பா நாற்பதும் வருமே.'' எனக் காப்புச் செய்யுளில் நூலின் பெயரோடு நூற் செய்யுளின் றொகையையும் சேர்த்துக் கூறி யிருத்தலை நோக்க இந்நூலிற்கும் 'நன்னெறி நாற்பது' எனப் பெயர் புனைந்துரைத்தல் பொருந்தும் போலும்.

இந்நூலாசிரியரைக் 'கற்பனைக் களஞ்சியம்' என்றும் 'கவிதா சார்வ பௌமர்' என்றும் அறிஞர் புகழ்ந்துரைப்பதுலக மறிந்ததே. இவர் யாத்த தொடர்நிலைச் செய்யுள், தொகை செய்யுள்களில் கற்பனைசக்தி மிக்கு விளங்குவதுபோலவே இச் சிறு நூலிலும் இவர் தம் புலமைப் புகழும் பான்மையதாய் விளங்குகின்றது. பாட்டுடைத் தலைவனுக்கேற்றவாறு நூலியற் றும் வன்மைமிக்க அடிகள் இந்நூலினும் சிறுவர் அனுபவத்திற் சுலபமாக அறியும் எளிய உவமைகளால் தாமெடுத்துக்கொண்ட நீதியை விளக்கு முறைமை போற்றத்தக்க தொன்றாகும். இந் நூலில் எடுத்தாளும் உவமைகளை நோக்கின் இந்நூல் சிறுவர் பொருளறிந்து பயிலும் பொருட்டே யாத்தனரென்பது துணி வாம்.

உவமமென்பது ஒருபொருளோடு ஒருபொருளை ஒப்புமை கூறுதலாம். ஒப்புமை கூறும் பொருள் விளக்கமுடையவாயின் பொருள் நன்கு புலப்பாடாகும். ஆதலின் பலராலும் நன்கறி யப்படும் பொருளை உவமமாக எடுத்தாளுதலே சிறந்ததாகும். நானிலத்துள்ள பொருள்கள் யாவற்றையும் ஒருவன் அறிந்திருத் தல் முடியா. குறிஞ்சி நிலமக்கள் நன்கறியப்படும் பொருள் புலப்பாடாதற்கோர் ஐயமுண்டோ? இதனை நன்குணர்ந்த சிவப்பிரகாச அடிகள் இந்நூலின்கண் பலசெய்யுள்களில் உட லின் உறுப்பினையே உவமையாகக் கொண்டு தாம் கூறும் நன் னெறியை விளக்கிச் காட்டும் அழகும், அவ்வுவமையினுட்பமும் உணரும் பான்மையவாம்.

அவை:—

1. இந்நூலின் முதற்செய்யுளை நோக்குவாம்.

கையானது மிக்க சுவையுறூஉ முனவினை எடுத்து நாவி னுக்குக் கொடுத்தல் அதன் இயல்பாகும். அதற்கு நா கையி னைப் புகழ்தல் என்றுமில்லை. இவ்வியல்பினை உற்றுநோக்கி

வைத்து, செல்வத்துப் பயனே யீதலென வறிந்து ஈதலே தம் கடனாகக்கொண்ட பெரியோர் தம்பாலுற்ற யாதொரு நாளி லும் முகமனுரை யியம்பார் மாட்டும் தாமே அவர்வதியுமிடஞ் சென்று விருப்பத்தோடு அவர் விழையும் பொருளைக் கொடுத் துதவுவரென்னும் நீதிக்கு உவமையாக,

"என்று முகம னியம்பா தவர்கண்ணுஞ்
சென்று பொருள் கொடுப்பர் தீதற்றோர்—துன்று
பூவிற் பொலிகுழலாய் பூங்கை புகழுவோ [சுவை
நாவிற் குதவு நயந்து." என்றருளியது விளங்

குதாரணத்தொடு ஆழமுடைத்தாதலும் பெற்றுப் பொலி கின்றது. இதன் உள்ளுறைப் பொருளாவன :—

இரவலர் ஈவோரையணுகி, 'கல்லாத வொருவனை யான் கற்றாயென்றேன் காடெறிபு மறவனை நடாள்வாயென்றேன், பொல்லாத வொருவனையான் நல்லாயென்றேன் போர்முகத்தை யறியானைப் புலியேறென்றேன், மல்லாரும் புயமென்றேன் சூம்பற்றோளை வழங்காதகையனையான் வள்ளலென்றேன்" என்றோர் புலவர் கூறியவாறு முகமனுரையியம்ப இரக்கப் படுவோர் ஈதல் உண்டென்பதூஉம், அவ்வாறு முகமனுரை பெற்றீதல் தாமீயும் பொருட்கோர் பயன் பெற்றுதவியதாத லின் அஃது ஈகையின்பாற் படாவென்பதூஉம், "இலனென்னு மெவ்வ முரையாமை யீதல், குலனுடையான் கண்ணே யுள." என்றாராதலின் இளிவரவை யொருவன் றனக்குச் சொல்வதற்கு முன்னே அவன் குறிப்பறிந்து கொடுத்துதவலே யீகையா மென்பதூஉம், "ஈதலிசைபட வாழ்தலது வல்ல தூதியமில்லை யுயிர்க்கு." என்றவாறு விரும்பத்தக்க புகழ் ஈகையாலுண்டா மெனினும் பெரியோர் இரப்போர் தாம் விழையும் பொருள் பெறும் பொருட்டுப் புகழும் உரையினை விரும்பாது ஈதலால் நிற்கும் பொன்றாப் புகழைப் பெறுவரென்பதூஉம் செல்வத்தில் தாழ்ந்தவராயினும் பெரியோர் அவ்வாறு நினையாது அவர்பா லொழுகுவரென்பதூஉம், இத்தகைய அருஞ்செயல்கள் பெரி யோர்மாட்டுள வென்பதூஉம் ஆம்.

2. மற்றும், கூறும் உவமைச் சிறப்பினை நோக்குவாம்.

முதற் செய்யுளில் பெரியோர் தம் ஈகைக்குக் கையின் செயலினை உவமைப்படுத்திய அடிகள் மற்றொரு செய்யுளில் கைம்மாறு கருதா ஈகைக்குப் பல்லின் செயலினை உவமைப் படுத்துகின்றார்.

அஃதாவது:—பல்லானது உணவுப் பொருளினை அரைக்கும் கருவிகளில் ஒன்றாகும். இது கடினமான தின்பண்டங்களை மென்று நாவிற்கு நிறைந்த சுவையைத் தரும். ஆனால் நாவினால் பல்லினுக்கு யாதொரு உதவியுமில்லை. இவ்வியல்பினை மூளையெயிற்ற சிறாரும் நன்குணர்ந்ததே. ஈண்டு இவ்வியல்பினை அறநூல்களைக் கற்றுணர்ந்தோர் (வேள்-பாரி முதலியோர் போல்) கைம்மாறு விரும்பாமல் உடல் வருந்தித் தம்மாலியன்ற வுதவிகளைத் தாமே செய்வர் என்ற பொருளிற்கு உவமைப் படுத்தி,

"கைம்மா றுகவாமற் கற்றறிந்தோர் மெய்வருந்தித்
தம்மா லியலுதவி தாஞ்செய்வர்—அம்மா
முளைக்கு மெயிறு முதிர்சுவை நாவிற்கு
விளைக்கும் வலியனதா மென்று."

என்று கூறும் இவர்தம் மாண்புற்ற மதிநுட்பம் என்னே! பெரியார்கட் பட்ட நுண்பொருளும் சிறப்புறுமல்லவா?

3. ஆசிரியர் திருவள்ளுவர் 'நட்டவனுக்கு இடுக்கண் வந்துழி அப்பொழுதே சென்றுதவி அதனைக் களைவதே நட்பாவது' என்னும் இலக்கணத்தை விளக்க அவையிடை ஆடைகுலைந்தவனுக்கு அப்பொழுதே கைசென்றுதவி அவ்விளிவரவு களைதலை உவமையாக்கி,

"உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு" என்று கூறும் செய்யுளின் பொருளாக்கத்தையும் பொருள் விளக்கத்தையும் நன்குணர்ந்த அடிகள் இதனை, 'உடையிழந்த வொருவன் கரமெனக் கடிதடைந்து களைந்தருள் செய்புநாள்.' எனத்தம் நூலில்

பெற்றுவதோடமையாது இதனை ஓர் படியாகக் கொண்டு இத்தகைய விழுப்பொருள் பயக்கும் உவமை கற்பிக்கும் கருத்தினராதலறியத்தக்கது.

ஒருவன் மற்றொருவன் உடம்பின்கண் பெரிய கோலினாலடிப்பின் அடிக்கப்பட்டவன்றன் கையானது அவ்வடியை அப்பொழுதே மனத்தினுங்கடிது சென்று ஏற்றுக்கொள்ளலை யாவருங் காண்பதேயாம். இதனைத் தம்மறிவுக் கண்ணாலோர்ந்து தம்முளத்தில் சேமித்து வைத்திருந்த அடிகள், சான்றோர் வருத்துகின்ற பிறருடைய துன்பத்தை வீரத்தோடு தாம் ஏற்றுக்கொண்டு அவரைக் காத்தற்கு முற்படுவரென்னும் நீதிக்கு உவமையாக,

"பேரறிஞர் தாக்கும் பிறர்துயரந் தாங்கியே
வீரமொடு காக்க விரைகுவார்—நேரிழாய்
மெய்சென்று தாக்கும் வியன்கோ லடிதன்மேற்
கைசென்று தாங்குங் கடிது." என்று கூறும்

இச்செய்யுளின்பம் அறிஞர் சுவைத்துச் சுவைத்து நுகரத்தக்கதன்றோ! இவ்வுவமை நாயனார் கூறும் உவமையோடு ஒத்துச் சிறிது மேற்றத் தாழ்வின்றி விளங்குகின்றதல்லவா? இதுவே மெய்யறிவும், கற்பனைசக்தியும், திருவள்ளுவரைக்கற்றபயனும் இலக்கிய வளர்ச்சியுமாம்.

4. பின்னரும் பெரியோரியல்பினை ஆசிரியர் விளக்கும் பான்மையை நோக்குவாம்.

மக்கள் பிறர்மாட்டுக்கொள்ளும் அன்பும் அருளும் உருவுடைப் பொருளாகாமையான் அவற்றையாம் காட்சியளவையானறியலாகா. ஆயினும் அவை அனுமான அளவையானறியப்படும். இதுபற்றியே நாயனாரும், "அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர், புன்கணீர் பூசல் தரும்." என்றருளினர். அவ்வாறே ஓர் உறுப்பின்கண் புண்முதலிய நோயிருப்பின் அவற்றானுண்டாகும் துன்பத்தால் உண்ணெகிழ்ச்சியுற்றுக் கண்ணீர் வடிப்பதை யாம் காண்டும். கண்ணீரானது அவ்வுறுப் துன்பத்தைக் காட்டுகின்றது. இவ்வியல்பினை, பெரியோர் பிறருக்குற்ற நோயைக்கண்டு தமக்குற்ற நோய் போற்கருதி மனம் அழலிற்பட்ட இழுதென உருகுவரென்பதற்கு உவமையாக்கி,

"பெரியவர்தந் நோய்போற் பிறர்நோய்கண் டுள்ளம்
எரி யி னிழுதாவரென்க—தெரியிழாய்
மண்டு பிணியால் வருந்து பிறவுறுப்பைக்
கண்டு கலுழுமே கண்." என்று கூறிய

நுண்மாணுழை புலமை வியக்கத்தக்கதன்றோ!

இந்நீதியானது, ஒரு விண்மீன் வீழ்ச்சியைக்கண்டு கோச்சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேர விரும்பொறை என்னுமரசன் இறப்பானென்று நிச்சயித்து,

.... .... .... .... .... ....
.... .... .... .... .... ....
ஒருமீன் விழுந்தன்றால் விசும்பினானே
அதுகண், டியாமும் பிறரும் பல்வே றிரவலர்
பறையிசை யருவி நன்னாட்டுப் பொருநன்
நோயில னாயி னன்றுமற் றில்லென
வழிந்த நெஞ்ச மடியுளம் பரப்ப
அஞ்சினம். .... .... .... (புறம்—229.)

என வருந்திய கூடலூர்கிழார் முதலிய சான்றோர் தம் இலக்கணத்தை யுணர்த்துகிற தல்லவா?

இதுவரை இந்நூலின்கண் எடுத்தாண்டுள்ள வுவமைச் சிறப்பினை தாவி புலாக நியாயம்பற்றிச் சிலவற்றை எடுத்துக் காட்டினும். மற்றும் கண் கை முதலிய உறுப்பினைப்பற்றிய உளங்கவரும் உவமைகளும், ஞாயிறு திங்கள் கடல் காற்று முதலிய நன்கறியும் இயற்கைப் பொருளினைக்கொண்ட வுவமைகளும், நெல் வாழையாகிய தாவரப் பொருளினைக்கொண்ட வுவமைகளும், 'குருட்டுக்கண் இருட்டிற்கஞ்சா' என்பது போன்ற பழமொழிபற்றிய வுவமைகளும் பெரியபுராணம் கந்தபுராணம் முதலியவற்றிற்காணும் வாலாறுகளைக் கொண்ட வுவமைகளும் இந்நூலுள் திகழ்கின்றன. அன்றியும் பெரியோரியல்பு, ஈகை, நட்பு, இல்வாழ்க்கை, அறிவுடைமை, வெகுளாமை, பெரியாரைத் துணைக்கோடல், யாக்கை நிலையாமை, அன்புடைமை, குடிமை, இனியவை கூறல், நூலறிவின்மாண்பு, தவம், அறன்வலி யுறுத்தல், கல்வி முதலிய பொருள்கள் நன்கு

விளக்கப்பட்டுள்ளன. இவைகள் இளைஞர் முதியோரனைவரும் கற்றுணரும் பான்மையவாம்.

மக்கள் நன்னிலையுறற் கேதுவாகிய இத்தகைய அற நூல்கள் முற்காலத்துப் புலவர்களியற்றியதோடன்றி இடைக் காலத்தும் பிற்காலத்தும் பண்டைய அறநூல்களோடொப்ப எண்ணத்தகும் சுவைசான்ற நூல்கள் எழுதப்படாமலில்லை. அறநூல்களை எழுதுமாண்பு சமண சமயப் புலவர்களுக்கே சிறப்பாக உரியதெனக் கூறுவரேனும் மற்றையோர் அக்கடமை யினின்றும் தவறினாரில்லரென்பதற்கு இந் 'நன்னெறி' நூலை இயற்றியருளிய சிவப்பிரகாச அடிகள், நீதிநெறிவிளக்கம் இயற்றிய குமரகுருபர அடிகளாதியோர் தக்க சான்றாவர். இவ் விருபதாம் நூற்றாண்டிலும் 'இன்னிசையிருநூறு' முதலிய நூல்கள் எழுந்துளவன்றோ! இத்தகைய புத்தம்புதிய நூல்கள் எழுதல் புலவர் தங் கடனாற்றுவதோடு அவர்தம் பொன்றாப் புகழினையும் நிலைநாட்டலாம்.

---

# ஏர் என்னும் வைப்புத்தலம்.

திரு. T. V. சதாசிவப்பண்டாரத்தாரவர்கள்,
தமிழாசிரியர், வாணுதுறை ஹைஸ்கூல், கும்பகோணம்.

கும்பகோணத்திற்கு வடபால் இரண்டுமைல் தூரத்தில் ஏரகரம் என்ற சிற்றூர் ஒன்று உளது. அது சைவசமயாசாரி யார் நால்வர்களாலும் பாடப்பெற்ற திருப்புறம்பியம் என்னுந் தலத்திற்குத் தென்கிழக்கே இரண்டுமைல் தூரத்திலும் திரு ஞானசம்பந்த சுவாமிகளாலும் திருநாவுக்கரசு சுவாமிகளாலும் பதிகங்கள் பாடப்பெற்ற இன்னம்பர் என்னும் திருப்பதிக்கு வடகிழக்கில் இரண்டுமைல் தூரத்திலும் இருக்கின்றது. கல்லா மக்கள் அதனை ஏராரம் எனவும் ஏராவரம் எனவும் வழங்கு கின்றனர். அவ்வூர் இதுபோது மிகவும் அழிவுற்ற நிலையில்

இருக்கின்றது. ஆயினும், பண்டைக்காலத்தில் நம் சோழ மண்டலத்தில் சிறந்து விளங்கிய பேரூர்களுள், அச்சிற்றூரும் ஒன்றாக விருந்திருத்தல்வேண்டும் என்பதை அதனை ஒரு முறை பார்த்தோரும் நன்குணர்ந்து கொள்ளலாம். அப்பழைய ஊரில் தென்மேற்கு மூலையில் வயல்களுக்கு அணித்தாக ஒரு சிவாலயம் உளது. அது பாதுகாப்பாரின்றிச் சிதைந்து அழிந்துபோகும் நிலையில் இதுபோது இருக்கின்றது. அவ்வாலயத்தின் திருமதில்களும் திருச்சுற்று மாளிகைகளும் கோபுரமும் இடிந்துபோயின; மகாமண்டபம் மாத்திரம் இடிந்து விழக்கூடிய நிலையில் உள்ளது. அத்திருக் கோயிலுக்குச்சென்று யான் பார்த்தபோது அது பழமை வாய்ந்த ஒரு சிவாலயம் என்று துணிதற்குரியதாக இருந்தது. அதன் கர்ப்பக் கிரகத்தின் தென்புறத்தில் பெரியதோர் கல்வெட்டும் காணப்பட்டது. அக்கல்வெட்டு மிகச் சிதைந்தும் நிலத்திற் புதைந்தும் இருந்தமையின் அதனைமுற்றிலும் படித்தற்கு இயலவில்லை. ஆயினும், அஃது எவ்வரசன் காலத்தில் வரையப்பெற்றது என்பதையும் அத்திருக்கோயில் அமைந்துள்ள ஊரின் உண்மைப்பெயர் யாது என்பதையும் அறிந்து கொள்ளவேண்டும் என்ற விருப்பம் உண்டாயிற்று. ஆகவே, நிலத்திற் புதைந்திருந்த பகுதியைச் சில நண்பரது உதவிகொண்டு தோண்டிப் பார்த்தபோது அது கி. பி. 1120 முதல் 1136 வரையில் சோழமண்டலத்தில் சக்கிரவர்த்தியாக வீற்றிருந்து ஆட்சிபுரிந்த விக்கிரம சோழன் காலத்திய கல்வெட்டு என்பது நன்கு வெளியாயிற்று. விக்கிரம சோழனது நீண்ட மெய்க்கீர்த்தியில் 'ஐம்படைப் பருவத்து வெம்படை தாங்கியும்' என்பது முதலாகவுள்ள பகுதியும் காணப்பட்டது. பின்னர், அக்கல்வெட்டின் எஞ்சிய பகுதியையும் இயன்றவரையில் முயன்று படித்துக்கொண்டு வருங்கால், **'இன்னம்பர் நாட்டு ஏராகிய மும்மடி சோழமங்கலம்'** என்னும் தொடர்மொழிகள் அத்திருக்கோயில் அமைந்துள்ள அவ்வூரின் பெயர் யாது என்பதைத் தெளிவாகப் புலப்படுத்தி மகிழ்வூட்டின. பிறகு, அவ்வூர் வைப்புத்தலங்களுள் ஒன்று என்பது எனது ஆராய்ச்சியிற் புலப்பட்டமையின் அதனை ஈண்டு விளக்குவேன்.

சைவசமயகுரவர்களுள் ஒருவராகிய திருநாவுக்கரசுசுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய க்ஷேத்திரக் கோவைத்திருத்தாண்டகத்திலுள்ள,

'இடைமருதீங்கோய் இராமேச்சுரம் இன்னம்பர்ஏர்இடவை
[ஏமப்பேரூர்
சடைமுடிசாலைக் குடிதக்களூர் தலையாலங்காடு தலைச்சங்காடு
கொடுமுடிகுற்ருலங் கொள்ளம்பூதூர் கோத்திட்டைகோட்டாறு
[கோட்டுக்காடு
காடைமுடிகானூர் கடம்பந்துறை கயிலாயநாதனையே காண
[லாமே.

என்னுந் திருப்பாடலில் ஏர் என்ற திருப்பதி ஒன்று கூறப்பட்டுள்ளது. அன்றியும், அவ்வடிகள் அருளிய திருவீழிமிழலைத் திருத்தாண்டகத்திலுள்ள,

'பெரும்புலியூர் விரும்பினர் பெரும்பாழியார் பெரும்பற்றப்
[புலியூர் மூலட்டானத்தார்
இரும்புதலார் இரும்பூளையுள்ளார் ஏரார்இன்னம்பரார் ஈங்கோய்
[மலையார்இன்சொற்
கரும்பனையாள் உமையோடும் கருகாவூரார் கருப்பறிய லூரார்
[கரவீரத்தார்
விரும்பமரர் இரவுபகல் பரவியேத்த வீழிமிழலையே மேவினரே'

என்ற திருப்பாடலினும் ஏர் என்னும் திருப்பதி குறிக்கப்பெற்றிருத்தல் அறியத்தக்கதாகும். வாகீசப்பெருமானது திருவாக்கிற் பயின்றுள்ள அத்திருப்பதிக்கு அவ்வடிகள் திருவாய் மலர்ந்தருளிய தனிப்பதிகம் இதுபோது காணப்படவில்லை. அன்றியும், திருஞானசம்பந்த சுவாமிகளும் சுந்தரமூர்த்திசுவாமிகளும் அருளிய பதிகங்களும் அத்திருப்பதிக்கு இல்லை. சமய குரவர்களாகிய இப்பெரியோர்கள் மூவரும் அருளிய தேவாரப்பதிகங்களுள் பல இறந்துபோயின என்று சொல்லப்படுகிறது. அங்ஙனம் இறந்துபோன பதிகங்களுள் ஏர் என்னும் திருப்பதிக்கு உரிய பதிகங்களும் இருத்தல் கூடும் என்பது திண்ணம். ஆயினும் திருநாவுக்கரைய தேவரது திருவீழிமிழலைப் பதிகத்திலும் க்ஷேத்திரக் கோவைத் திருத்தாண்டகத்திலும் அத்திருப்பதி

கூறப்பட்டிருத்தலின் அது தேவார வைப்புத்தலங்களுள் ஒன்ருகும் என்பது ஒருதலை. எனவே, ஏர் என்னும் அவ்வைப்புத் தலம் யாண்டையது எனின், அஃது 'இன்னம்பர் நாட்டுஏராகிய மும்மடி சோழமங்கலம்' என்று கல்வெட்டுக்களில் குறிக்கப் பெற்று இதுபோது ஏரகரம், ஏராரம் என்னும் பெயர்களுடன் கும்பகோணத்திற்கு வடபால் இரண்டுமைல் தூரத்திலுள்ளதே யாதல்வேண்டும்.

இனி, ஏரகரம் திருக்கோயிலில் காணப்பெறும் அக்கல் வெட்டு, அவ்வூர் இன்னம்பர் நாட்டில் உள்ளது என்பதையும் பழையகாலத்தில் ஏர் என்னும் பெயருடன் நிலவியது என்ப தையும் அதற்கு மும்மடி சோழமங்கலம் என்ற வேருெரு பெய ரும் அந்நாளில் இருந்தது என்பதையும் நன்கு விளக்கி நிற்றல் காண்க. இவ்வின்னம்பர்நாடு பண்டைக்காலத்தில் சோழமண் டலத்தில் காவேரிக்கு வடகரையிலிருந்த பல நாடுகளுள் ஒன் ருகும்; இஃது இன்னம்பரைத் தலைநகராகக் கொண்டது. கும்ப கோணந் தாலூகாவிலுள்ள கொட்டையூர், மேலக்காவேரி, கருப்பூர், அசூர், ஏரகரம் முதலான ஊர்களையும் பாவநாசம் தாலூகாவிலுள்ள ஆதனூர், மருத்துவக்குடி முதலான ஊர்களை யும் தன்னகத்துக்கொண்டு இவ்வின்னம்பர் நாடு முற்காலத்தில் விளங்கிற்று என்பது பல கல்வெட்டுக்களால் அறியப்படுகின் றது. எனவே, தற்காலத்தில் இந்நாடு கும்பகோணம் பாவ நாசம் தாலூகாக்களில் அடங்கியுள்ள ஒரு பகுதி எனலாம். இன்னம்பர் நாட்டிலுள்ளதென்று கல்வெட்டுக்களால் அறியப் படும் ஏர் என்னும் திருப்பதி இந்நாளிலும் இன்னம்பருக்கு அணித்தாகவிருப்பது குறிப்பிடத்தக்கது. அன்றியும், அத் தலத்தைத் தம் திருப்பதிகங்களில் கூறியுள்ள திருநாவுக்கரசு சுவாமிகள் 'இன்னம்பர்ஏர்' எனவும், 'ஏரார் இன்னம்பரார்' என வும் அதனை இன்னம்பருக்கு அணித்தாகவே வைத்துக் கூறி யிருப்பது ஈண்டு அறிந்து கொள்ளற்பாலதாகும்.

இனி, முதல் இராஜராஜ சோழனல் எடுப்பிக்கப்பெற்ற தஞ்சை இராஜராஜேச்சுரத்தில் உள்ள கல்வெட்டு ஒன்று ஏர் என்னும் திருப்பதி இன்னம்பர் நாட்டில்உளது என்று உணர்த்து

கின்றது. அது 'ராஜேந்திர சிங்கவளநாட்டு இன்னம்பர்நாட்டுப் பழைய வானவன் மகாதேவிச் சதுர்வேதி மங்கலத்துச் சபையார் இடக்கடவ திருமெய்காப்பு ஒன்றும் (எ0) இந்நாட்டு அசுகூர்சபையார் இடக்கடவ திருமெய்காப்பு ஒன்றும் (எக) இந்நாட்டுக் கொட்டையூர் சபையார் இடக்கடவ திருமெய்காப்பு ஒன்றும் (எஉ) இந்நாட்டு ஏராகிய மும்மடி சோழமங்கலத்தார் இடக்கடவ திருமெய்காப்பு ஒன்றும் (எங) இந்நாட்டு ஸ்ரீபராந்தகச் சதுர்வேதி மங்கலத்துச் சபையார் இடக்கடவ திருமெய்காப்பு இரண்டும்' (South Indian Inscriptions Valume II No 70) என்பதாம். தஞ்சைப் பெரிய கோயிலிலுள்ள இக்கல்வெட்டும் இன்னம்பருக்கு அண்மையிலுள்ள ஏரகரத்தில் அமைந்துள்ள கோயிலிற் காணப்படும் கல்வெட்டும் தம்முள் ஒற்றுமை யுடையனவாய் ஏர் என்ற ஊர் இன்னம்பர் நாட்டில் உளது என்றுணர்த்துதல் காண்க. ஆகவே, ஏர் என்னும் வைப்புத்தலம் இந்நாளில் ஏரகரம் என்ற பெயருடன் கும்பகோணந் தாலூகாவில் காவேரியாற்றிற்கு வடகரையில் உளது என்பது நன்கு உறுதி யெய்துகின்றது.

பத்து, பன்னிரண்டாம் நூற்றுண்டுகளில், வைப்புத் தலமாகிய ஏர் மும்மடி சோழமங்கலம் என்ற மற்ருெரு பெயரும் உடையதாக இருந்தது என்பது ஏரகரத்திலுள்ள கல்வெட்டாலும் தஞ்சைப் பெரியகோயிலிலுள்ள கல்வெட்டாலும் புலப்படுகின்றது. சோழமன்னர்களது ஆட்சிக்காலங்களில் நம் தமிழகத்திலுள்ள பல நகரங்கள் அவ்வேந்தர்களது பெயர்களை எய்தி அப்பெயர்களால் வழங்கப்பெற்று வந்தன என்பது பல கல்வெட்டுக்களால் தெரிகின்றது. கொங்குநாட்டுத் தலங்களுள் ஒன்ருகவுள்ளதும் திருவானிலை என்னுந் திருக்கோயிலைத் தன்னகத்துக் கொண்டதுமாகிய கருவூர், அந்நாளில் முடிவழங்கு சோழபுரம் என்ற பெயரையும் உடையதாக இருந்ததென்பது அவ்வூரிலுள்ள கல்வெட்டுக்களால் வெளியாகின்றது. (South Indian Inscriptions Vol. III Nos. 23 and 24.) நம் சோழமண்டலத்தில் காவேரிக்குத் தென்பாலுள்ள தலங்களுள் ஒன்ருகிய பழையாறு என்ற நகர் முடிகொண்ட சோழபுரம் என்னும்

பெயரையும் முற்காலத்தில் உடையதாக இருந்தது. (Inscription No. 271 of 1927) அவ்வூர்கள் கருவூராகிய முடிவழங்கு சோழபுரம் எனவும், பழையாறாகிய முடிகொண்ட சோழபுரம் எனவும் கல்வெட்டுக்களில் வரையப் பெற்றிருத்தல் போல ஏர் என்னும் தலமும் ஏராகிய மும்மடி சோழமங்கலம் என்று குறிக்கப் பெற்றுளது. மும்மடி சோழன், மும்முடி சோழன் என்றபெயர்கள் முதல் இராஜராஜ சோழனுக்கு வழங்கிவந்தன என்று தெரிகிறது. எனவே, முதல் இராஜராஜ சோழனது ஆட்சிக்காலத்தில் தான் ஏர் என்னும் தலம் மும்மடி சோழ மங்கலம் என்ற பெயரை எய்தியிருத்தல்வேண்டும் என்பது திண்ணம், தஞ்சைப் பெரிய கோயிலிலுள்ள முதல் இராஜராஜ சோழனது கல்வெட்டும் இச்செய்தியை வலியுறுத்துகின்றது. ஆகவே, சோழ மன்னர்களது ஆட்சிக்காலங்களில் மும்மடி சோழமங்கலம், ஏர் என்ற பெயர்களையுடையதாயிருந்த ஊர் இந்நாளில் ஏரகரம் என்று வழங்கி வருகின்றது என்பதும் அஃது அப்பரடிகளால் குறிக்கப்பெற்ற வைப்புத் தலங்களுள் ஒன்று என்பதும் நன்கு வெளியாதல் காண்க.

---

## நமது வரலாறுகளும் கல்வெட்டாதாரமும்.

திரு. A. கந்தசாமி பிள்ளை அவர்கள்,
தமிழாசிரியர், அரசியலார் உயர்தரக்கல்லூரி, சென்னை.

நம் தமிழகத்தில் வழங்கும் சரிதப்பகுதிகள், பிறவரலாறுகளைப்போல் வழங்கற்பாடு (ஐதிகம்) ஒன்றே பற்றிக்கொள்ளப் படாது தக்க சான்றுகளைக் கொண்டு நிலவுவன, அறிதலுறுவார்க்குப் புதியதோரின்பம் பயப்பிப்பனவாம். அவற்றுள் இங்குக் காட்டப்படுவதும் ஒன்று.—

புலவர் பெருமக்களனைவரினும் தலைசிறந்தவராகிய நமது சேக்கிழார் பெருந்தகையை யறியாதார் யாரே? அவரைப்பற்றிய

உமாபதிசிவம் இயற்றியருளிய சேக்கிழார் நாயனார் புராணத்தால் அறியப்படும் வரலாறு :—

"தொண்டைநாட்டு இருபத்து நான்கு கோட்டங்களுள் புலியூர்க் கோட்டத்துக் குன்றைவள நாட்டுக் குன்றத்தூர் உள்ளது. முன்னொருகால் ஒரு சோழ அரசனால் அந்நாட்டிற் குடியேற்றப் பட்டவர்கள் நாற்பத்தெண்ணாயிரவர். அவருள் புரிசைகிழான், வெண்குளப்பாக்கிழான், சேக்கிழான் முதலிய குடியினரும் வாழ்ந்து வந்தனர். அக்குன்றத்தூரிற் சேக்கிழார் குடியில் உதித்தவர் நந்தம் பெரிய புராண நூலாசிரியராகிய சேக்கிழார் நாயனார். இவர், தம் கல்வி வன்மையினாற் சோழ வரசனுக்கு முதன் மந்திரியாகி அரசியற்றுறைகளை நன்கு நடாத்தினார். அரசனால் **உத்தமச் சோழப் பல்லவராயர்** என்னும் பட்டம் அளிக்கப்பெற்றார். இவர் சோழ நாட்டுத் திருநாகேச்சுரம் என்னும் தலத்து மிக்க பேரன்பு கொண்டு இறைவனை வணங்கிவந்தார். அவ்வன்பிற் கறிகுறியாகத் தமது பிறந்த ஊராகிய குன்றத்தூரிலும் ஓர் சிவாலயமெடுப்பித்து அத்திருக் கோயிற்குத் **திருநாகேச்சுரம்** என்று பேரிட்டுப் பல நிபந்தங் களும் ஏற்படுத்தினார்" என்பதும் பிறவுமாம்.

இவ்வரலாறுகள் அனைத்தும் உண்மையேயெனற்குச் செங் கற்பட்டுச்சில்லா, சைதாப்பேட்டைத் தாலூகாவிற் குன்றத் தூரிலுள்ள திருநாகேச்சரம் என்னும் திருக்கோயிலும் அதிற் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டுக்களும் சான்று பகர்கின்றன.

இக்கல்வெட்டுக்கள் சென்ற ஆண்டில் வெளிவந்த தென் னிந்தியக் கல்வெட்டுத் தொகுதியின் ஆண்டிறுதியறிக்கையில் (Annual Report South Indian Ephigraphy for the year ending 31st March 1931) வெளியிடப்பட்டுள்ளன.

(1)

பாலாறு வளஞ்சுரந்து நல்கமல்கும் பாளைவிரி மணங்கமழ் பூஞ் [சோலை தோறும்

காலாறு கோவியிசைபாட நீடுகளி மயினின்றாடுமியற் றொண்டை [நாட்டுள்

நாலாறு கோட்டத்துப் புலியூர்க கோட்டம் நன்றிபுனை குன்றை
[வளநாட்டுமிக்க
சேலாறுகின்றவயற் குன்றத்தூரிற் சேக்கிழார் திருமரபு சிறந்த
[தன்றே

என்னும் சேக்கிழார் நாயனர் புராணம் 11-ஆம் பாடலால் அறியப்படுவது தொண்டை நாட்டுப் புலியூர்க் கோட்டத்துக் குன்றை வளநாட்டுக் குன்றத்தூர் உள்ளது என்பது. அது,—

ஷை கல்வெட்டு எண் 187

"ஜெயங்கொண்ட சோழமண்டலத்துக்[1] குலோத்துங்கவளநாட்டுப்புலியூர்க் கோட்டத்துக் குன்றத்தூர் நாட்டுக் குன்றத்தூர் ........" என்பதாலும் பெறப்படுகின்றது.

(2)

நாடெங்கும் சோழன் முனம்தெரிந்தேயேற்றும் நற்குடி நாற்பத்
தெண்ணுயிரத்து .... .... ....

என்னும் ஷை புராணம் 12-ஆம் பாடலால் அறியப்படுவது 'சோழனல் இந்நாட்டிற் குடியேற்றப்பட்டவர் நாற்பத்தெண்ணுரவர்' என்பது. அது.—

ஷை கல்வெட்டு எண் 214

"தேவரடியாள் வீதியார் நாற்பத்தெண் ணுயிரமாணிக்கம்."
என்பதாலும்

ஷை, ஷை, 221

"நாற்பத்தெண்ணுயிர சோழ குமாரனுகிய கைக்கோளன்......."
என்பதாலும் பெறப்படுகின்றது.

(3)

"புரிசைகிழான் குலவுசீர்வெண் குளப்பாக்கிழான்........இவருஞ் செழித்துவாழச் சேக்கிழார் குடியிலிந்தத் தேசமுய்யப், பாடல் புரியருண்மொழித் தேவரும் வந்துதித்து வாழ்ந்தார்" என்னும் அப்பாடலால் அறியப்படுவது-'அக்குடிமக்களில், புரிசைகிழான் வெண்குளப்பாக்கிழான் என்னுங் குடியினர்போல சேக்கிழார்

(1) ஜெயங்கொண்ட சோழமண்டலமென்பது தொண்டை மண்டலத்துக்கு ஓர் பெயர்.

குடியுமிருந்தது (அக்குடியில் நமது நாயனுர் வந்தவதரித்தார்) என்பது. இது—

ஷி கல்வெட்டு எண் 188

"....புரிசைகிழான்...." என்பதாலும்

ஷி ஷி ,, 206

"....வெண்குளப்பாக்கம் [2] என்னும் ஊரின் தலைவன் அழகிய பெருமாள் காலிங்கராயன்......." என்பதாலும்

ஷி ஷி 208, 218, 230

இவற்றில் முறையே, "....சேக்கிழான் ஆடல்வல்லான்...." எனவும் "....சேக்கிழான் வரந்தருபெருமாள்...." எனவும், "....சேக்கிழான் புவனப் பெருமாள் தண்டக நாடுடையான் எனவும் வருவனவற்ருலும் பெறப்படுகின்றது.

(4)

அத்தகையபுகழ் வேளாண்மரபிற் சேக்கிழார் குடியில்வந்த
[அருண்மொழித் தேவர்க்குத்
தத்துபரிவளவனுந் தன்செங்கோ லோச்சும் தலைமையளித்தவர்
[தமக்குத் தனதுபேரும்
உத்தமச்சோழப் பல்லவ னென்னுமுயர் பட்டங்கொடுத்
[திடவாங்கவர் நீர்நாட்டு
நித்தனுறை திருநாகேச்சுரத்தி லன்புநிறை தவினல் மறவாத
[நிலைமைமிக்கார்
தம்பதி குன்றத்தூரின் மடவளாகந் தானக்கித் திருக்கோயிற்
[ருபித்தங்கட்
செம்பியர் கோன்றிரு நாகேச்சுரம் போலீதும் திருநாகேச்சுர
[மென்றே திருப்பேர்சாற்றி
அம்புவியிலங் காங்கவை பவங்கட்கான பரிகலந் திருநாள்பூசை
[கற்பித்
திம்பர்புகழ் வளவனரசுரிமைச் செங்கோல் இமசேது பரியந்த
[மியற்றுநாளில்.

---

(2) வெண்குளப்பாக்கம்+கிழான்—வெண்குளப்பாக்கிழான்—மரூஉ.

என்னும் ஷை புராணம் 18, 19 ஆம் பாடல்களால் நமது சேக்கிழார் நாயனார் உத்தமச் சோழப் பல்லவராயன் என்னும் பட்டம் அளிக்கப் பெற்றமையும், அவர் குன்றத்தூர்த் திருநாகேச்சுரத்திற்கு நிபந்தங்கள் அமைத்தமையும் அறியப் படுகிறது. இது—

ஷை கல்வெட்டு எண் 227

"....செல்வன் உத்தமச் சோழப் பல்லவராயன் திருநாகேச்சுர முடைய நாயனாருக்கு நிபந்தங்களுக்காக நிலம் வாங்கியது...." என்பதாலும் பெறப்படுகின்றது.

இவற்றால் நமது தெய்வப் புலமைச் சேக்கிழார் நாயனாரது வரலாறுகள் முற்றிலும் உண்மையேயெனற்குக் கல்வெட்டுக்கள் தக்க சான்றுகளாகின்றனவென்பது பெறரும்.



# " மண்ணியல் சிறுதேர் "

( திரு. அ. சிதம்பரநாதஞ் செட்டியார், பி. ஏ. )

" மண்ணியல் சிறு தேர் " என்னும் எண்ணறுஞ் சுவை ததும்பும் பாட்டிடை வைத்த உரைவகைப் பனுவலொன்று மேலைச்சிவபுரி சன்மார்க்க சபையாரால் சமீபத்தில் வெளியிடப் பெற்றுள்ளது. அது சூத்திரகன் என்னும் வடமொழிவாணர் அம்மொழியிற் செய்த "மிருச்சகடிகம்" என்னும் சங்கீரணப் பிரகரண நாடகத்தின் மொழிபெயர்ப்பாகும். அதனை நமக்குத் தந்தவர்கள் "நல்ல பலநூலின் நறுஞ்சுவையும் மெய்ப்பொருளும் வல்லை யுணரும் மதி" பெற்ற பண்டிதமணி கதிரேசச் செட்டியாரவர்கள். அவர்களிடமிருந்து வரும் எதுவும் வளம்பட அமைக்கப்பட்டிருக்கும் என்பதற்குச் சான்று வேண்டின், மண்ணியல் சிறுதேர் ஓடிவந்து முதலிடத்தைப்பெறும் என்று கூறுதல் தகவுடைத்தே. இந்நூலின் நடைநோக்கும் சொன்னோக்கும் பொருணோக்கும் படிப்போர் உள்ளத்தை அள்ளும் பெற்றியவாய் உள்ளன. நவின்றோர்க்கினிமை, நன்மொழி

புணர்த்தல், முதலான அழகுகளும் ஈண்டுத் திகழ்கின்றன. பண்டிதமணியாரவர்கள் இடையிடையே தொடுத்துள்ள பாக்க ளிற் பல நவிருேறும் நவிருேறும் நயம்பயப்பனவாயுள. அவர்கள் முடிமுதல் அடிகாறும் எழுதிச் செல்லும் அடிக்குறிப்புகள் தாமேயாய் நின்றும் அறிவூட்டும் தகைமைய.

இம்மண்ணியல் சிறுதேர் நம் மண்ணில் உள்ளதோர் குறையை நிறைப்பதாயிற்று என்பதைப் பின்வருமாறு மொழி களால் அறியலாம்:—"நம் அமிழ்தனைய தமிழ்மொழி, இயலிசை நாடகம் என முத்திறப்பட்டு நிகழ்ந்த முறையை நோக்குவே மாயின், இதன்கண் அவ்விலக்கணங்கள் பண்டைக் காலத்தில் எத்துணை விரிவாக அமைந்திருந்தன என்பது புலனும். இற்றைஞான்று நம் தீந்தமிழில் நாடகப்பகுதிகள் ஒருசில வன்றி முழுதுங் காண்டற்கில்லை. ஒருமொழியில் ஒருகாலத்தில் ஒரு பகுதி விரிவாக அமைந்து பிறிதொரு காலத்தில் அப் பகுதி எக்காரணத்தாலோ குறைந்துவிடுமாயின், அக்குறைவை நிறைவிக்க வேண்டுவது அம்மொழிப் பற்றுடையார்க்குரிய கடமையன்ருே! இக்குறிக்கோளைக் கடைப்பிடித்தே தமிழில் நாடகக் கலையின் வளர்ச்சி கருதி வடமொழியிலுள்ளதொரு பெரிய நாடகம் தமிழாக்கப்பட்டது."

இந்நூலின் புறத்தே, பீடுகெழு புலமையும் நாடுபுகழ் பெருமையும் பொருந்திய பலரால் அணியப்பட்ட அணிந்துரை திகழ்கின்றன. அவற்றுள் ஒன்றில் சுவாமி விபுலாநந்தர் அவர்கள் "மண்ணியல் சிறுதேர்" எப்படிப் பிரகரண நாடகத் தின் இலக்கணங்கள் எல்லாம் பொருந்தியதாக இருக்கின்றது என்பதைத் தசரூபகத்தை யொட்டி எடுத்துக்காட்டி, எப்படி உவகை முதல் நடுவுநிலை ஈருன ஒன்பான் சுவையும் இதனுள் விரவி வந்துள என்பதையுங் காட்டி "ஒன்பது சுவைகளையும் நவமணிகளுக்கு ஒப்பிடலாமாகலின், "மண்ணியல் சிறுதேர்" நவமணிக் குவையினைத் தாங்கி நடப்பதென்பது பெறப்படு கிறது என்று கூறுவர். மேலும், "இம்மண்ணியல் சிறுதேர் தண்கதிர் மதியமும் இளவேனிலும் தலைப்பெய்த பூம்பொழில் போன்று இதயத்திற்கு இனிமை பயப்பது" என்றுங் கூறுவர்.

திரு. த. வே. உமாமகேசுவரம் பிள்ளையவர்கள் "மிருச்சகடி கத்தை மொழிபெயர்க்குந் தகுதி பண்டிதமணியார் அவர் கட்கே உரியதாகும். இம் "மண்ணியல் சிறுதேர்" என்ற நூல் பயில்தொறும் பல்வகைச் சுவைகளையும் நல்கி மனத்தினை இன் புறுத்துகிறது. மூலநூலில் உள்ளபடியே உரையுஞ் செய்யுளு மாக இயற்றப்பட்டுள்ளது. தமிழிற் காணாத உவமங்களும் கற்பனாலங்காரங்களும் இதிற் காணப்படுகின்றன." என மொழிவர். வடமொழிவல்ல புலவராகிய திரு. வி. சுப்பிர மணிய அய்யர் அவர்கள் "இந்நூல் வழிநூலாயினும், முதனூல் போலவே விளங்குகிறது. வடமொழியில் தெளிவுகுன்றிக் கிடக்குஞ் சில இடங்களில் இத்தமிழ்நூல் தெளிவு மலிந்து காணப்படுகிறது. இவற்றால், இது முதனூலினும் மேம்பா டுடையதாகக் கருதற்பாலது" எனக் கூறுவாரேயாயின், தமி ழொன்றே வல்ல நல்லார் எவர்தாம் எதிர்நின்றுரைக்க வல்லார்? நிசம் பேசக் கூசாத சோமசுந்தரபாரதியார் அவர்கள் கூறு வதே சாலாதோ? என்னை? இந்நாடக பாத்திரங்களின் குண விசேடங்களைத் தொகுத்துக் கூறி, சில சந்தர்ப்பங்களையும் உவமைகளையும் எடுத்துக்காட்டி, சிலப்பதிகாரத்திற்கும் இந் நூற்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமை நயத்தை ஆராய்ந்து காட்டிச் செல்லுமவர்கள் சொல்லுவதாவது:—"இந்நூல் தமிழி னுக்கே ஆக்கந் தரும் என்பதில் ஐயமில்லை. இந்நாடகம் இவ ருக்குப் பொன்றாப் புகழ்தரத் தக்கதாம். இஃது இப்புலவரின் நிறைநூற் கல்வித் திட்பத்தையும், மிறைபடா மதியொட்பத் தையும் ஒருங்கு நினைவுறுஞ் சான்றாக நிலவுவதாகும். 'சேரி மொழியிற் செவ்விதிற் கிளக்கும்' கூத்து முதலிய நாடகத் தமிழ் நடையை வெறுத்துச் செயிர்தீர்ந்த செந்தமிழ்ச் செய் யுண்மொழியாற் சீர்புனைந்தியாத்த அழகுடையது இப்பனுவல் ......................அன்றியும், இடையிடையே தொடுக்கப்பெற்ற பொருட்டிட்பமும் நடைநயமும் புணரயாத்த பலதிறப்பட்ட பாவும் பாவினமும் இவர் புலமை நலத்தைப் புலனுறுத்துகின் றன. இந்நூலின் உரைநடை வளத்தை இதனைப் படிப்பவர் அனைவரும் சுவைத்துணர்வர். நம் பண்டிதமணி ஆரியம்போற் றமிழும், தமிழேபோல் ஆரியமும் விரும்பிப் பயின்ற வித்தகர்.

என்பது இம்மண்ணியல் சிறுதேரைப் படிப்பவருக்கு விசதமாகும். இயலொழுக்காய் முதனூல் இதுவே எனத்தக்க எழில்வளமும் நடைநலமும் சுவை பலவும் செறிந்தொளிரும் செவ்வியுடையது இந்நூல்.''

இதன் கதைச் சுருக்கத்தைப் பாரதியார் அவர்கள் தந்துள்ளவாறே ஈண்டுத் தருவேன், அதனினும் சுருக்கமாயாதல் திட்பமாயாதல் வேறு தரமாட்டாமையின்:—"வேசையர் இயலொழுக்கத்தை வெறுத்த இளமையும் எழிலும் வளங்கொளும் பரத்தை வசந்தசேனை என்பவளும், பழுதற்ற பார்ப்பனர் குலத்துதித்து மாசற்ற வணிகரறம் மேற்கொண்டு வாழ்ந்து அருளொடும் அன்பொடும் திறனறிந்து தீதின்றிவந்த பொருளையெல்லாம் விருந்தோம்பித் தக்கார்க்கு வேளாண்மை செய்து உலந்து வறுமைபூண்ட சாருத்ததன் என்பவனும் தம்முள் மெய்க்காதல் கொண்டதும், அக்காதல் காரணமாகவே இருவரும் பல அல்லலுழந்து அவலமுற்றதும், இறுதியில் அறந் தலைகாப்ப, இவர்க்குக் கேடு சூழ்ந்த கயவன் சகாரனும் அவன் மைத்துன மன்னன் பாலகனும் அறக்கழிவு பூண்டு அழிவெய்த, கருத்தொரு மித்த இக்காதலரிருவரும் ஆதரவுபட்டு அறத்தான் வரும் இன்பம் துய்க்கப் பெற்றதும் இந்நூலுட் கூறப்படுவது.''

இனி, அணிந்துரைகளை அறியுமுன்னர் இந்நூலைப் படித்த காலை என் மனத்திடைத்தோன்றிய சில குறிப்புகளையே ஈண்டுக் குறிக்குங் கருத்துடையேன். பக்கத்து வீட்டுக் குழந்தையினது பொற்றேரை உருட்டி விளையாடிய உரோகசேனன் (சாருதத்தன் புதல்வன்) அக்குழந்தை அதனைத் தன்னில்லம் கொண்டு சென்றுழி, பொன் வண்டியே வேண்டுமென்று கூறிப் பணிப் பெண்ணிடத்து அழுதானாகவும், அவள் அவனோடு வசந்தசேனைபாற் சேர்ந்தாளாகவும், அவன் விருப்பமறிந்த வசந்தசேனை தனது அணிகளை எடுத்து, அவனுக்குத் தந்து பொற்றேர் செய்வித்துக்கொள்ளுமாறு கூறினளாகவும், அவன் அவற்றை ஏற்றுக்கொள்ளத் தயங்கி நின்றானாகவும், இந்நிகழ்ச்சிகளுக்கிடையே அவன் "இவ்வம்மை என் தாயாயின், எப்படி இவ்வளவு அணிகலன்கள் உடையளாயினள்'' எனக்கூற, அதனைக்

கேட்டவசந்தசேனை பிறன்கண் தோன்றிய இளிவரல்பொருட்டு அழுது நிற்குமிடத்திற்காணும் அவலச்சுவை மிகப் பல சுவையினும் மிக்கது எனக் கருதிப்போலும் மண் இயல் சிறுதேர் என்று இந்நூற்குப் பெயர் வந்தது! (216—19 பக்கங்கள் காண்க.)

இந்நாடகத்தின் தலைவனாய சாருதத்தனது அரும் பெரும் குணங்கள் யாவர் உள்ளத்தையும் ஈர்த்துருக்கும் பெற்றிய; எண்ணு செல்வம் அனைத்தும் பெற்ற அவ்வண்ணல் நல்லநீர்த் தடம்போல் அல்லலுற்றோர்க்கு அளித்து மெலிவினை யடைகிறான். (பக். 46) "அவன் காண்டற்கு எல்லாராலும் விரும்பத் தக்கவன்; இன்சொலாளன்; தன்கொடைப் பெருமையைப் பிறரிடம் கூறுபவனல்லன்; நன்றல்லது அன்றே மறப்பவன்; பலவாறு விரிப்பதென்? கண்ணோட்டத்தால் தன் உடல், பொருள் முதலிய எல்லாம் பிறர்க்குரியன என்றே உணர்ந்தவன் அடைக்கலம் புகுந்தார்க்கு அருள் செய்யும் வள்ளல்". (பக். 86) "மலர்ந்த மாதவிக்கொடியையும் வளைத்து மலர் பறிப்பின், அங்ஙனம் செய்தலால் ஓர் அமயம் அதன் தளிர் உதிர்ந்து விடுமோ என்னும் ஐயத்தால் அக்காரியத்தைச் செய்தற்கும் மனம் ஒருப்படாத இனிய நண்பன் அச் சாருதத்தன்". (பக்கம் 344) அவன் தனது தண்ணாருங் குணங்களாலேயே எண்ணாரும் இடர்களை அடைகிறான் என்பதை இந்நாடகம் காட்டுகிறது எனின், அஃது உலகியலை யன்றி வேறெதைக் காட்டுகிறது? தான் அல்லலுற்ற காலையிலும் பிறர் செல்லலைப் போக்கவே முயலும் அவனது முற்றியவுவகை முளரிப்போதின் குற்றமில் முகப்பெற்றி யாவராலும் போற்றற் பாற்றன்றோ! தன் பொருள்வளங் குன்றி, அருளொன்றே துணையா ஓரகத்தே துயின்ற காலையில், தன்னிடத்து அடைக்கலமாக வைக்கப்பட்ட பலகலன்களைத் திருடனொருவன் திருடிச் சென்றானாகவும், அத்திருடன் வறிதேகாது பயனெய்தினான் என்பதுபற்றி அகமகிழும் அவ்வண்ணல், 'கள்வன் வந்து கன்னமிட்டு வெளியேறினான்' என்ற சொல்லை முதற்கண் கேட்ட காலையில் அவ்வேழைக் கள்வன் தன்னில்லுட் புக்கு ஒன்றும் பெறவில்லையேஎன வருந்தியிருப்பன் கொல்லோ என்று தான் வருந்துங்கால் நாம் வியப்

படையாவிடினும், "வீட்டிற் கன்னம் வைக்கப்பட்டது" என்ற சொல் கேட்டவுடனே அக்கன்னத் துளேயைக் கண்டு அது அழகாக இருக்கிறது, குடவுருவுடைத்து என்று சொல்லி இன்புறுங்கால் வியப்புறாது நிற்போமா?

அடைக்கலப் பொருளினிமித்தம் அதற்கீடாகத் தரும் பொருட்டுத் தன்மனேவி தனக்கு அனுப்பிய இரத்தினமாலேயைக் கண்டு, "ஓ பார்ப்பனி (என் மனேவி) என்மாட்டு அருள் புரிகின்ருள். அந்தோ! இப்பொழுதுதான் வறியவனுகின்றேன்" என்று கூறி,

"போகூழாற் றன்பாற் பொருணீங்கப் பொற்ருெடிதன்
ஆகூழ்ப் பொருளால் அருள்பெறுவோன்—வாகாரும்
ஆடவனே யாயினும்பெண் ணுகும் பயனுறலால்
ஆடவனே அப்பெணத னுல்"

என்னும் மாற்றமஃதுரைசெயுங்கால், அவனது இணையற்ற பெருமை துணேக்கூறலரிதாய்த் தோன்றுகின்றது.

இல்லான் கொடையே கொடை என்பர் நல்லோர். அக் கொடை வள்ளலும் ஆகின்ருன் அல்லலுறும் நம் வள்ளல் சேடன், வசந்தசேனே வந்துவிட்டதாகக் கூறக் கேட்டவுடன் சாருதத்தன் "யான் ஒருபொழுதும் அன்புரையைப் பயனில்லாததாகச் செய்வதில்லே; ஆகலின் மகிழ்ச்சியோடு தரும் இப் பரிசிலேப் பெற்றுக்கொள்" என்று சொல்லித் தனது மேலங்கியைக் கொடுக்கின்ருன். பிறிதோரிடத்தில், தனது புதல்வனுக்குக் கொடுக்க வேறென்று மாட்டாமையின், தனது பூணூலேயே கொடுக்கின்ருன்.

இத்துணேப் பெருமை வாய்ந்த தருமனது முகத்தைக் காண்டலும் சண்டாளர்களுக்குள்ளேயே இவனேக் கொல்வதில் விருப்பின்றிப் போதலும், சீட்டுப்போடலும், வாள் நழுவி வீழ்தலும் வியப்பன்றே. பின், வசந்தசேனேயைக் கொன்றதாகப் பொய்க்கொலேக் குற்றத்தைக் கொடிய மனத்தாற் சாருதத்தன் மீது சாற்றிய சகாரன் என்னும் காதகன் தப்புவதுதான் வியப்பு. ஆனல், அவனும் சாருதத்தரையல்லாது வேறுயாரிடம்

அடைக்கலம் புகுந்தாலும் அந்நிலையில் உய்ந்திருக்கமாட்டான். அப் பேய்போலுங் கொடியானை நாய்களைவிட்டுக் கடித் துண்ணச் செய்யவேண்டுமெனக் கூறும் சருவிலகன் என்னும் அந்தணன்சொற் கேளாது, செந்தண்மை கொண்டொழுகும் அறவோனாகிய சாருதத்தன்

உடைப்பெரும் பகைவனாய் ஊறு செய்தவன்
அடைக்கலம் எனாநம் அடிக்கண் வீழ்வனேல்,
படைக்கலத் தவனுடல் படுத்தல் நன்றல;
தடைப்படா உதவியால் தடிதல் வேண்டுமே

என்று கூறி விடுதலை செய்வதால், அதுவும் வியப்பன்று.

ஆனால், சாருதத்தன் நமக்கு வியப்பை எவ்விடத்தும் தாராது செல்கின்றானில்லை. வியப்பை நயவாரும் நயந்து வியக்கும்படி ஓரிடத்தே நடந்துகொள்கிறான். கழுவில் ஏற்றித் தன்னைக் (காரணமின்றிக்) கொல்லும்படி அரசன் ஏவினான் என்பதைக் கேட்ட சாருதத்தன்,

"எனைத்
தகவறக் கொல்லுதி; சாற்றுமிச் செயலால்
அடுநா கிடைநின் குடிவழி மக்களொடு
கடிதின் வீழ்ந்து படுதுயர் உறுகவே"

என்று கூறுகின்றானாயின், குணமென்னும் குன்றேறி நின்றோர்க்கும் கணநேரம் வரும் சினமுண்டு என்றும், உலகியல் நவை அறவே அற்றார் என்றற்கு யாருமிலர் என்றும் கவி காட்டக் கருதியதாகக் கருதி யடக்கிக்கொள்வதல்லால் வேறென் செய்வது? இங்ஙனம் வியக்கத்தக்க குணநலன் பலவும், அக்குணநலத்தானேயே வியக்கத்தக்க குற்றமொன்றும் பெற்றுநின்ற சாருதத்தனை முற்றமுடிய அறிய வேண்டுவார் நூலினுள் நுழைந்து பார்க்கக்கடவர். இச்சாருதத்த அண்ணலை நம் தமிழ் நாட்டிற்கு அளித்த வள்ளலாம் வணிக மணியார்க்குச் செய்யலாம் கைம்மாறுமுண்டோ!

"அதனின் கண்ணுள்ள உவமை சிலவற்றைக் கூறு; நான் அதன் நயத்தை அறிந்தேனேவேன்" என ஒரு காப்பியத்தைக் குறித்து ஒருவர் கூறக் கூடும். ஆதலின், இந்நாடகக் காப்பியத்தே வந்துள்ள உவமைகள் பலவற்றுள் எனக்குவப்புத் தந்த

உவமையிரண்டு தருவேன். 'பிடி பிடி' எனக்கூறிச் சாருதத் தன் கையிற் கொடுப்பதாகக் கருதி அடைக்கல அணிகளைக் கொடுத்துப் "பெற்றேன்" என ஒருசொல் கேட்கப்பெற்று கவலை நீங்கிய மைத்திரேயன் கூறும் உவமை இது :— "இப் பொழுது விலைப்பொருளை விற்றுவிட்ட வணிகனைப்போல் யான் சுகமாகத் தூங்குவேன்." பாதகம் எதற்கும் அஞ்சாக் காதகனும் சகாரனிடஞ் சினங்கொண்ட அம் மைத்திரேயன் கூறுவது இது:—"உன் மனம்போல் வளைந்த இம்மரத் தடியால் உன் தலையை அடித்துப் பல துண்டுகளாகச் சிதறச் செய்வேன்." இனிப் பேராசிரியரையும் மயங்கச் செய்யும் ஒருவமையும் இதன் கண்ணுண்டு. "காக்கைகால்போன்ற தலையினையுடைய இவன் எதற்காக என்றலையை அடித்துப் பல துண்டாக்க வேண்டும்" என்ற சகாரன் கூற்றில் (பக். 345) அதனைக் காண்க.

(தொடரும்.)

## "செயப்படு பொருளைச் செய்ததுபோல" என்னும் சூத்திரத்திற்குச்

# சங்கர நமச்சிவாயர் உரை பொருந்துமாறு.

திரு. ச. தண்டபாணி தேசிகர், நாகை.

நமது பொழிலில் சென்ற சித்திரைமலரில் 'கருமகருத்தா' என்னும் இலக்கணத்தைப்பற்றிய மறுப்புமணம், மன்னார்குடித் தமிழ்ப்புலவர் சோமசுந்தரம் பிள்ளையவர்களாற் பரப்பப் பெற்றது.

அதில் ஆசிரியர் சங்கர நமச்சிவாயருரை போலியுரையென்றும், வினையாலணையும் பெயரியல்பும் எழுவாய் முதலிய முடிபுணர்ச்சியும் முற்ற ஆராயாது முன்னையோர் யாரையுங் குற்றங் கூறினர் எனவும், குறிக்கப்பெற்றுள்ளது.

'செயப்படுபொருளைச் செய்ததுபோல' என்னும் சூத்திரம் நன்னூலாரால் முன்னோர் மொழியைப் பொன்னேபோற் போற்ற எடுத்தாளப் பெற்றதாதலின் நூலாசிரியர்களுள் கருத்து மாறுபடுவதற்கு இடன் ஒரு சிறிதும் இல்லையென்பது தெளிவு.

இச்சூத்திரத்திற்கு இளம்பூரண அடிகள் 'வினைக்கண் செய்கையிருச் செய்யப் பட்டபொருளை தான் செய்கை செய்தது போல அதற்கு அத்தொழில் கூறுதலும் உண்டு; அது மரபு எனப் பொழிப்புரைப்பர்.

நச்சினார்க்கினியர் 'ஒருவினை முதல் ஒருதொழில் செய்வதனையுறுவதாகிய பொருளை, அத்தொழிலைச் செய்த வினைமுதல் போல அத்தொழில் அதன் மேற்படக் கூறுதல் வழக்கின்கண் முறைமையாம்' எனப் பதவுரை கூறுவர்.

சேனாவரையர் 'செயப்படு பொருளைச் செய்தவினை முதல் போல தொழிற்படக் கிளத்தலும் வழக்கின் கண்ணியலும் மரபு எனப்பொழிப்புரைப்பர்.

தெய்வச்சிலையார் செயப்படுபொருளைச் செய்யப் பட்டதெனக் கூறாது கருத்தாவைக் கூறுமாறுபோலத் தொழிற்படச் சொல்லுதலும் வழக்கியல் மரபு. மரூஉ வழக்கு என்பர்.

சங்கர நமச்சிவாயர் செயப்படுபொருளைக் கருத்தாவைப் போல வைத்து அதன்மேல் வினைமுதல் வினையேற்றிக் கூறுதலும் வழக்கின்கண் உரித்தாம் எனப் பொழிப்புரைப்பர்.

இவ்வைவர் உரையுள் தெய்வச்சிலையார் ஒழிந்த மூவர்க்கும், சங்கரர்க்கும் உள்ளவேறுபாடு; 'வைத்து,' 'அதன்மேல்' என்ற இருசொற் பெய்ததன்றி வேறொன்றும் இன்று. அதன் பயன் செயப்படு பொருளையும் கருத்தாவாக நிறுத்தி வினைமுதல் வினையைக் கொடுத்தல் மரபு என்பது. முன்னவர்கள் கூறிய உரையான் வினைமாற்றிக் கூறலே பெறப்பட்டது. இவர் உரையான் கருமத்தைக் கருத்தாவாக மாற்றுதலும் அதன்மேல் கருத்தாவின் வினையேற்றிக் கூறலுமாகிய இரண்டும் பெறப்பட்டன. இவர்கள் கூற்றுக்கும் சங்கரர் கூற்றுக்கும் பெரிதும் வேறுபாடின்று.

உரையாசிரியர் 'இல்லமெழுகிற்று,' 'சோறு அட்டது' என உதாரணங் காட்டினர். நச்சினார்க்கினியரும் சேனாவரையரும் இல்லம் மெழுகப்பட்டது சோறு அடப்பட்டது என்பன இல்லம் மெழுகிற்று சோறு அட்டது எனவரும் என விரித்து, வழாநிலையும், வழக்காற்றிலுள்ள வழுவும், அதன் அமைப்பும், உணர்த்தினார்கள். சங்கர நமச்சிவாயர் உரையாசிரியர் காட்டியாங்கே விதந்து யான் என்றதன் வினைமுதலையுங் கூட்டி இம் மாடு யான் கொண்டது, இச்சோறு யான் அட்டது, எனவரும் எனக் கூறினர். இவற்றுள் மாடும் சோறும் ஐயுருபு தொக்க செயப்படு பொருளாதலின் கொள்ளுதலு அடுதலுமாகிய தொழிற்பயனை யுறுவனவன்றித் தொழில்புரிவன ஆகா. ஆதலால் தொழின்மேற்கொண்ட சுதந்திர வினைமுதலை இடைப் பெய்தே காட்டல்வேண்டும் என்பது. இது பின்னர் நன்கு ஆராயப்பெறும்.

இனிப் பிள்ளையவர்கள் பொழில் 26-ம் பக்கத்து, இம்மாடு யான் கொண்டது, இச்சோறு யான்கொடுத்தது, இவ்வெழுத்து யானெழுதியது என்பவற்றிலுள்ள கொண்டது, கொடுத்தது, எழுதியது, என்பன வினைப்பெயரே. முற்று எச்ச வாய்பாடுகளான் வந்தன அல்ல என்று கூறி வினையாலணையும் பெயரிலக்கணத்தை விதந்தார்களாதலின் அவர்கள் கூற்றைச் சிறிது ஆராய்வோம்.

'வினையாலணையும் பெயரிலக்கணம் நன்னூலளவே பயின்றார்க்கு உணரலரிது; வினையாலணையும் பெயர் என்பது நன்னூல் வழக்கு. வினைப்பெயர் என்பது தொல்காப்பிய வழக்கு. பிரயோக விவேகம் இலக்கணக்கொத்து முதலிய நூல்வழக்கு, வினைமுற்றுப்பெயர் என்பது' எனக் கூறியுள்ளார்கள். நன்னூல் முழுதுமன்றி இரண்டு மூன்று இயல்மட்டும் ஊன்றிப் படித்தார்க்கும் வினையாலணையும் பெயர், வினைப்பெயர், தொழிற்பெயர், என்பன ஒரு பொருட் கிளவிகள் என்பது விளங்காமற் போகாது. இது கிடக்க.

வினையாலணையும் பெயரென்பது வினையடியாகப் பிறந்த பெயர் என்றார்கள். இங்ஙனம் இலக்கணங்கூறின் நடத்தல்

வருதல் முதலியனவும் வினையடியாகப் பிறத்தலின் வினையா லணையும் பெயராவான் செல்லும். மற்றும் 'இது வினைச்சொற் பாகுபாடாகிய செய்பவன் முதலிய ஆறனுள் அடங்கும்' என் றூர்கள். செய்பவன் முதலிய ஆறும் வினைச்சொல் கருவியாக உணரப்படுவன என்பது "ஆறுந்தருவது வினையே" என்ற நன்னூலானே பெறப்படுதலின் செய்பவன் முதலிய ஆறும் வினைச்சொற் பாகுபாடாமாறு எங்ஙனம்? திரு. பிள்ளையவர்கள் சங்கரர் காட்டிய உதாரணங்களில் கொண்டது, கொடுத்தது முதலியன, வினையாலணையும் பெயர் வாய்பாட்டான் வந்தனவே. ஒன்றேனும் முற்றெச்ச வாய்பாடுகளான் வந்தன அல்ல எனத் தன் துணிபுரைத்து அக்கொள்கையை வலியுறுக்கும் மேற் கோளாக நச்சினர்கினியரும் "பெயர் நிலைக் கிளவி காலந் தோன்ரு" என்னும் சூத்திரவுரையுள் இதனைச் சிறிது விரித் துணர்த்தினர். உண்டவன் உண்பது என்பன வினைமுதல் மேல் நின்ற வினைப்பெயர். அவனேறிற்றுக் குதிரை முதலியனவும், யான் சொன்னவன் இவன் முதலியனவும் செயப்படுபொருண் மேனின்ற வினைப்பெயர் எனக் கூறிப் பிறவாறு வருவனவும் காண்க என்ரூர்." என இதனை எடுத்துக்காட்டி இதனுல் உண் டவன் உண்பது முதலியன முடிக்குஞ்சொல் வேண்டாது தனித்த நிலையிலேயே வினைப்பெயராய் ஒருவனையும் ஒன்றையும் உணர்த்திற்று எனக் கூறினூர்கள்.

நச்சினர்க்கினியர் உரைப்புத்தகத்தில் உண்டவன் உண் ணுமது என்ற உதாரணங்களே காணப்பெறுகின்றன. உண்பது என்ற உதாரணங் காணப்பெறவில்லை. உண்டவன் உண்ணுமது என்பன இலக்கணக்கொத்து நூலார் கூறியாங்கு ஈற்றயல் திரித லாகிய வினையாலணையும் பெயரின் உருபேற்று வந்தமையின் ஓசை வேறுபாடும் முடிக்குஞ் சொல்லும் நோக்காது வினைப் பெயராகும் என்பது நச்சினர்க்கினியராற் கருதப்பெற்றது. அங்ஙனமிருக்க 'உண்ணுமது' என்ற ஈற்றயல் திரிந்த வினைப் பெயரை 'உண்பது' எனத் திரித்துக் காட்டியதிலிருந்தே நமது பிள்ளையவர்களுக்கும் உண்பது என்பதும் அது போன்ற 'கொண்டது' 'கொடுத்தது' முதலியனவும் 'உண்டவன்' என்ப

தைப்போன்ற வினைப்பெயரன்று என்பது கருத்தாயிற்று. இது நிற்க.

பிள்ளையவர்கள் ஈண்டு விதந்தவாறு 'உண்பது' என்பது தனித்த நிலையிலேயே வினைப்பெயராயின் இந்த 'உண்பது' என் பதற்கினமாய் மற்றக்காலங்களில்வரும் உண்டது, உண்கின்றது முதலியனவும் வினைப்பெயராவான் செல்லும். ஆகவே 'ஒன்றன் படர்க்கை தறடவூர்ந்த குன்றியலுகரத்திறுதியாகும்' என்ற சூத்திரமும் உண்டது, உண்கின்றது, உண்பது, முதலிய ஒன்றன் படர்க்கை வினைமுற்றுக்களும் வேண்டா கூறலாம். ஆகை யால், உண்பது, கொண்டது, கொடுத்தது, முதலியன முடிக்குஞ் சொற் குறித்தும், பகுதியையும் விகுதியையும் எடுத்துச் சொல்லும் ஓசை வேறுபாட்டானும் வினைப்பெயராமேயன்றித் தனித்த முறையில் வினைப்பெயராகவே கொள்ளுதல் சிறிது சாலாதென்பது வெள்ளிடைமலை.

மற்றும், பிள்ளையவர்கள் முன்னெடுத்துக் காட்டிய "பெயர் நிலைக் கிளவி காலந்தோன்ற என்னும் சூத்திரவுரையுள் அவ னேறிற்றுக் குதிரை, கொலைவர் கொடுமரந்தேய்த்தார், யான் சொன்னவன் இவன், உண்பவைநாழி, என்ற நான்கு உதாரணங் களையும் ஒன்று சேர்த்து செயப்படுபொருண்மேல் காலந் தோன்றி நின்ற வினைப்பெயர்" எனக் கூறினார்கள்.

சொல்லதிகார நச்சினார்க்கினியத்து, அவனேறிற்றுக் குதிரை, கொலைவர் கொடுமரந் தேய்த்தார், என்பன செயப்படு பொருட்கண் காலங்காட்டி நின்ற தொழிற் பெயர் எனவும் யான் சொன்னவன் இவன், உண்பவைநாழி, என்பன செயப்படு பொருள்மேற் பெயராய்க் காலந்தோன்றி நிற்கும் தொழிற் பெயர் எனவும் இருவகையாகப் பிரித்துக் காணப்பெறுகின்றது. இவ்விரண்டற்கும் நுணுகியாராயத் தக்க சில வேறுபாடுகள் உள. இத்தொடர்மொழிகளில் செயப்படுபொருட்கண் காலங் காட்டிநின்ற தொழிற்பெயர் என்பதனையும், செயப்படுபொருண் மேற் பெயராய்க் காலந்தோன்றி நின்ற தொழிற்பெயர் என்ப தனையும் நன்கு உய்த்துணர்ந்து கொள்ளுதல்வேண்டும். எங் ஙனமெனின் 'ஏறிற்று' 'தேய்த்தார்' என்பன இயற்கை வினை

முற்றுக்கள். ஈண்டுத்தொடர்மொழி நிலையும் ஓசை வேறுபாடு நோக்கிக் காலத்தைக் காட்டிச் செயப்படு பொருட்கண் வந்த வினைப்பெயராயிற்று. சொன்னவன் உண்பவை என்பன வினை முற்றுத் திரிந்து செயப்படுபொருள்மேல் வினைப்பெயராயிற்று. அங்ஙனம் பெயராயினமையின் காலங்காட்டும் ஆற்றலின்றியும், முற்றின் விகாரமாதலின் காலந்தோன்றவும் நின்றதென்பது கருத்து. ஆகையால் இவ்விருவகையினையும் ஒன்று படுத்திச் செயப்படுபொருள்மேல் காலங்காட்டி நின்ற வினைப்பெயர் என்று ஒழிதல் ஒருவகையானும் சாலாதென்பது. இவற்றுள், செயப்படுபொருட்கண் காலங்காட்டி நின்ற தொழிற்பெயர் எனக்கூறிய நச்சினார்க் கினியருக்கு ஏறிற்று தேய்த்தார் போல்வன ஓசையும் தொடர்மொழியு நோக்கியே வினைப்பெயராயின என்றலே கருத்தாதல் காண்க.

பிள்ளையவர்கள் உண்பவை என்பது முதல் வேற்றுமைக் கருத்தாவென்றும் மற்றை வேற்றுமையுருபுகளை ஏற்கும்போது உண்பவற்றை, உண்பவற்றால் எனவரும் என்றும் கூறினார்கள். உண்பவையென்பது விகுதிமேல் விகுதியாய கள்பெறுதநிலையில் யாண்டும் வினைமுதலாமேயன்றிப் பிறவேற்றுமை யுருபுகளை ஏலாது என்பது. உண்பவற்றை உண்பவற்றால் என்பன உண்ப என்னும் அகரவீற்றுப் பலவற்றுப் படர்க்கை வினைமுற்றே ஈண்டுப் பெயராய் வற்றொடு சிவணி யுருபேற்று முடிந்தது. ஆதலால் உண்பவையென்பது உருபேற்று உண்பவற்றை முதலாக வருமென்ற பிள்ளையவர்கள் கூற்றுப் பொருந்துமாறெங்ஙனம்?

பெரும்பாலும் கருத்தொருமித்தே செல்லும் பிரயோக விவேகத்தினும், இலக்கணக்கொத்தினும், காலமொழித்த செய்பவன் முதலிய ஐந்தன்மேலும் வினைப் பெயர் வரும் என்பதை எடுத்துக் காட்டி, நமது பிள்ளையவர்கள், வழக்கிலும் சில உதாரணங்களை எடுத்துக் காட்டினார்கள். பொழில் 29-ம் பக்கத்து அவர்கள் காட்டிய உண்பன தின்பன யாவும் வினைப்பெயராகா. ஏனெனின் பிள்ளையவர்களே பேராசிரியர்கள் பெருநெறிகடைப் பிடித்துப் பெயர்ச்சொல்லுக்கும் வினையாலணையும் பெயர்க்கும்

உள்ள வேறுபாட்டை யுணர்த்தும்போது 'பெயர்ச் சொற்குப் பொது இலக்கணமாவன வேற்றுமை யுருபேற்றலும், பயனிலை தோன்றலும் காலந்தோன்றாமையுமாம். வினையாலணையும் பெயர்க்கு உருபேற்றலும் பயனிலை கோடலும் காலந்தோன்ற நிற்றலுமாம்' எனக் கூறினார்கள். அது கருவியாகக்கொண்டு ஊர்வனமுதல் குத்துவனவரை கூறப்பெற்ற உயிர்ப் பெயர் களையும், உணவு வகைகளையும் வாச்சியப் பெயர்களையும் ஆராயும் போது பிற்குறித்தவாறு முடிபு கிடைக்கப்பெறும். ஊர்வன, வாழ்வன, வெட்டுவன முதலியவை வினையின்புடை பெயர்ச்சி உணர்த்தாமை தேற்றம். வினை நிகழ்ச்சி இல்லையாகவே காலங் காட்டா. ஆகையால் வினைப்பெயர் என்றல் எங்ஙனம்? ஊர்வன முதலியவை காலங் காட்டு மிடைநிலை பெற்றனவாதலின் காலங் காட்டின என்றால் வரும் இழுக்கென்னையோவெனின் ஊர்வன பறப்பனவாகிய உயிர்கள் எதிர்காலத்து நிகழ்பவையே;இன்றும் இல்லை, நேற்றும் இல்லை, யென்பது பெறப் பட்டுக் காண்டல் விரோதம் உண்டாகும். ஆதலால் இவை புடை பெயர்ச்சியுங் கருதாது காலமுங் கருதாது தொழிற் காரணம் பற்றிப்பிறந்த பொருளின் பெயராகிய காரணவிடு குறிப்பெயரே யாதல் வேண்டும் என்க.

ஏனைய ஆறுவது, மொழிவது, விளையாடுவது, பழிப்பன என்பன விளையாடியது மொழிந்தது முதலிய வினைமுற்றுக்கின மான எதிர்கால வினையாங்கால் முற்றாயும் தொடர்மொழி நிலையில் ஓசை வேறு பாட்டான் வினைப்பெயராயும் நின்ற தென்க.

ஓதுவது ஒழியேல் என்பதின்கண் உள்ள ஓதுவது என்பது ஓதுதல் எனப்பொருள் பெறுமாயின் துவ்விகுதிபெற்ற தொழிற் பெயரேயாம். காலங்காட்டும் இடைநிலை பெற்று நிற்குமேனும் புடை பெயர்ச்சி யுணர்த்தாமையின் காலந்தோன்றாது வாளா தொழிலுக்குப் பெயராயே நிற்கும் என்பது.

(தொடரும்.)

---

உ

# கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை.

சென்னைமாநில

# அரசியல் அமைச்சர்களின் வருகை.

---

நிகழும் பவயாண்டு புரட்டாசித்திங்கள் ௩௰ (16-10-1934) ஆம் நாள் புதன்கிழமை மாலை மணி ௪-ல் நம் சங்கத்திற்கு, சென்னை அரசியற் பேரமைச்சர் மாட்சிமைமிக்க திரு பொப்பிலி மன்னர் அவர்களும், சென்னை நீதிமந்திர நாயகர் மாண்புள்ள திரு. இராய்பகதூர் சர். K. V. இரட்டிநாயுடு Kt. B.A., B.L., அவர்களும், சென்னை அகமந்திரநாயகர் மாண்புள்ள திரு. இராவ் பகதூர், A. T. பன்னீர்ச்செல்வம் Bar-at-law அவர்களும் அன்புடன் எழுந்தருளினார்கள். முதலில், மணி ௩இ-க்கு மாட்சிமைமிக்க மன்னர்பெருமானும், அகமந்திரநாயகரும் நமது சங்க நூல் நிலையத்தைப் பார்வையிட்டனர். பிறகு, தஞ்சை நாட்டு அரசியற்றலைவர்களும், அறிவுமிக்க ஆன்றோர்களும், பொதுநலத் தலைவர்களும் பெருநலத் தொண்டர்களும், பெருங்குடிமக்களும் பிறரும் பன்னூற்றுக் கணக்கிற் குழுமியிருந்த நமது சங்கக் கல்லூரியின் பேரவையில், தமிழன்னை, இறைவன் வணக்கங்கட்குப் பின்னர், தலைவர் மூவருக்கும் முறையே வரவேற்புத் திருமுகங்கள் வழங்கி மலர்மாலைகள் சூட்டப்பெற்றன. அவற்றுள் முதலமைச்சரின் வரவேற்புரையில், "நம் சங்கம் தோன்றிய 1911-ஆம் ஆண்டுமுதல் தமிழ்மொழியின் பெருவளங்கருதி, இச்சங்கம், தொல்காப்பியவுரை முதலிய நூல்களையும் திங்கள்தோறும் தமிழ்ப்பொழிலையும் வெளியிட்டும், ஓர் உயரிய முறையில் தொடக்கக் கல்லூரி ஒன்றை நடாத்தியும், ஒரு தமிழ் மருத்துவக் கூடத்தைப் புரந்தும், திக்கற்ற மாணவர்கட்காக ஒரு இல்லத்தைத் தோற்றியும், கூட்டுறவு முறையில் ஒரு பதிப்பகத்தை நிறுவியும், தமிழ்த்தொண்டு புரிந்து வருகின்றது. இவ்வரிய அறச்செயல்கட்குத் துணைநிற்பவர் எளிய மக்களே. செல்வர்களோ கலையின்பங்களில் நாட்டமில்லாதவர்களாய், வாயுணர்வினையும் பெரும் பதவிகளையும் நாடி செல்வத்தை அவலமாக்குகின்றனர். இதனாலன்றோ நமது தாய் நாட்டின் அருங்கலைகள் மாய்வுற்று வருகின்றனவென்பதை செல்வர்களும் அரசியலாரும் கருத்தூன்றி தமிழக்கலைகளை வளர்க்க முற்படுவார்களாக"வெனக் குறிக்கப் பெற்றிருந்தது:—

நீதிமந்திர நாயகர் வரவேற்பில், " தன்னல மறுத்த சீரிய தொண்டினால் மாண்ட்போர்டு சீர்திருத்த சபையில் அமைச்சர்

பதவியும், தென்னுபிரிக்காவின் இந்தியப் பிரதிநிதி பதவியும் அன்னார் பெற்றதைப் பாராட்டியதுடன், தமிழர் நாகரிகமே உலகில் தலைசிறந்ததெனநிலைநாட்டப்படும் இந்நாளில் வடமொழி ஆகிய பிறமொழிகளினும் தமிழ்மொழி தன்னுட்டிலே தாழ்த்தப்படுதல் அடாத கருமம் என்றும் மகாமகோபாத்தியாயர் என்ற பட்டம் வடமொழியாளர்க்கே உரியதென நினைத்து புலமைசான்ற தமிழரை புறக்கணிப்பது தவறெனவும், பல்கலைக் கழகத்தேர்வுகளில் வித்துவான் ஆகிய பட்டங்களையும் பிற சிறப்புகளையும் பெறுகின்ற புலவர்களை graduate களுடன் ஒப்ப நோக்கி பல்கலைக் கழகங்களின் வாக்குரிமையை அவர்கட்கு வழங்காதிருத்தல் நேரிதன்றெனவும்'' முறையீடு செய்யப் பெற்றிருந்தது.

அகமந்திர நாயகரின் திருமுகத்தில் " நம் சங்கத்தினிடமுள்ள நீண்ட நாள் தொடர்பும், தஞ்சை மாநாட்டாண்மைக் கழகத்தில் மும்முறை தலைமை எய்தி தமிழ்மொழிக்காக, புலவர் வகுப்பை ஐயாற்றில் தோற்றுவித்து வளர்த்ததனமையும், பாராட்டப்பெற்றது. 1936-ல் நிகழவிருக்கும் இச்சங்கத்தின் வெள்ளி விழாவில் வித்துவான் தேர்விற்குரிய கல்லூரி அமைக்கவும், அதில் பயிலும் மாணவர் தமிழ்ப்புலமையுடன் மருத்துவம், இசை, நாடகம், ஓவியம் ஆகிய தொழிற்கலைகளை பயிலுதற்குரிய முறையில் அக்கல்லூரியை நடத்தவும் மேற்கொள்ளும் முயற்சிகளுக்குத் துணைபுரியவும், அரசியற்பதிப்பு நூல்களை வெளிவரும் போதெல்லாம் சங்கநூல் நிலையத்திற்கு இலவசமாக அருளுமாறும்'' வேண்டப்பெற்றது.

இம்மூன்றுக்கும் மூவரும் முறையே மறுமொழி கூறுமுகத்தால் 'தாங்கள் உண்மையாகவே சங்கத்தொண்டை நன்கு மதிப்பதாகவும், இதன் முன்னேற்றத்திற்குத் தங்களாலான உதவியை அவ்வப்போது செய்வதாகவும்' உறுதி கூறினர்கள். பின்னர் நம் சங்கத்தலைவர் அவர்களால் நன்றி கூறப்பெற்றதும் சங்கக்கல்லூரி ஆசிரியர்களுடனும், இல்ல மாணவர்களுடனும் அமைச்சர்கள் மூவரும் புகைப்படம் எடுக்கப்பெற்றனர். பின்னர் இன்னிசை யாண்டும் பரவ வரவேற்புவிழா இனிது நிறைவேறிற்று. நலம் !

## பிழையும் திருத்தமும்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 264 | 21 | சைதாப்பேட்டைத் தாலூகா | ஸ்ரீபெரும்பூதூர்த் தாலூகா |

# கரந்தைத் தமிழ்ச் சங்கக் கல்லூரி ஆண்டு விழாக்கள்.

க. கல்லூரி விழா:—

திருவருட்பெருக்கால், இக் கல்லூரியின் பதினெட்டாம் ஆண்டுவிழா பவ, ஐப்பசி ரு-ஆம் (21-10-34) நாள் ஞாயிறன்று தஞ்சை, சித்தவைத்திய சரபம் திருவாளர் Dr. ஆ. சோதி பாண்டியன் அவர்கள் தலைமை தாங்க இனிது கொண்டாடப் பெற்றது. அதுபோது பலதிறத்தப் பெரியார்களும் பல கழகங்களின் உறுப்பினர்களும், பிறருமாக இருந்து அவையை அணி பெறச் செய்தனர். தமிழ்த்தாய், கடவுள் வணக்கங்கட்குப் பின்னர் தலைவர் வரவேற்பு, அறிக்கைபடித்தல் இவை முறையே நிகழ்ந்ததும் அவைத் தலைவரவர்கள் தாம் இக்கல்லூரியின்பால் கொண்டுள்ள அன்புடைமையை முன்னுரையாக மொழிந்தனர். பின்னர், 'தமிழறிவின் அவசியம்' என்ற பொருள்பற்றி இக் கல்லூரி மாணவன் திரு. S. இலக்குமி நரசிம்மனும், 'பழந்தமிழ் நாட்டின் கல்வியின் நோக்கம்' என்றபொருள் கொண்டு திருவையாற்று அரசர் கல்லூரித் தமிழாசிரியர் திரு. R. வேங்கடாசலம் பிள்ளையவர்களும், தேர்வு பெறாத மாணவர் மகாநாடு என்பது பொருளாக இக்கல்லூரி மாணவி திரு. இ. மங்கையர்க்கரசியும் சொற்பொழிவாற்றினர். பின்னர் கல்லூரி மாணவர்கள் 'சோழன் கரிகால் வளவனின்' சீரிய வரலாற்றின் பகுதியை ஒரு நாடகமாகக் கண்டார் வியப்புறுமாறு நடித்துக் காட்டினர். அவைத்தலைவர் அவர்கள் அன்றைய நிகழ்ச்சிகளுள் தாம் கண்ட அரிய பொருள்களைப்பற்றியும் மாணவர் திறத்தையும் ஆசிரியர்களது உழைப்பையும் புகழ்ந்து பேச, சங்கத் தலைவர் செந்தமிழ்ப்புரவலர் உயர்திரு. த. வே. உமாமகேசுவரம் பிள்ளையவர்கள் B.A.,B.L., யாவர்க்கும் நன்றிகூற தமிழ்த்தாய் வாழ்த்தொலி யாண்டும் பரவ, விழா இனிது நிறைவேறிற்று.

உ. கலைமகள் விழா (பஞ்சாபகேசன் கழக ஆண்டுவிழா).

இவ்வாண்டின் இவ்விழா, ஐப்பசி, ச, (20—10—34) சனிக்கிழமையன்று தஞ்சை வட்டம் உதவிக் கல்லூரி கண்காணிப்பாளர் திருவாளர் R. இலக்குமண ஐயர் அவர்கள் B. A., L. T., அரிய தலைமையில் நிகழ்ந்தது. அதுபோது கடவுள் தமிழன்னை வணக்கங்கட்குப் பின்னர் பஞ்சாபகேசன், இராதாகிருட்டினன்

கழகங்களின் அறிக்கைகள் படிக்கப்பெற்றன. தலைவர் அவர்கள், இக் கல்லூரியின் உயர்வு குறித்த தனிமொழிகளை முகவுரையாகக் கூறியதும் இக்கல்லூரி மாணவர் திருவாளர்கள் G.R. சீனிவாசன் (வகுப்பு அ.) K. வேங்கடராமன் (வகுப்பு எ.) N. செல்லம் (வகுப்பு ச.) N. விசுவநாதன் (வகுப்பு எ.) ஆகிய இவர்கள், முறையே, 'நூல்நிலையப் பிரசாரம்', 'பாட்டின் இயல்பு', 'நமதுவீடு', 'பண்டிதை இராமாபாய் ரானடே', எனபன பொருள்களாக, அவையோர் அனைவரும் வியப்புறும் வண்ணம், சொல் பொருள் வழுவாது, சிறந்த முறையில் சொற்பொழிவுகள் ஆற்றினர். பின்னர் ஆங்கிலத்தில், 'Misery Glorified' என்ற நாடகத்தை மாணவர்கள் நடித்துக் காட்டினர். முடிவில் தலைவர் அவர்கள், மாணவர்கள் ஆற்றலைப் புகழ்ந்து போற்றி பின்னுரை கூறியதும் அவையோர்க்கு வணக்கங்கூற, மாணவர்களை அவையோர் புகழ்ந்துகொண்டாட விழா நன்கு நிறைவேறிற்று.

௩. பொருட் காட்சிக்கூடத் திறப்புவிழா:—

இக் கல்லூரி, ஆண்டுதோறும் தனித்து நடத்தும் பொருட் காட்சி சாலை, இவ்வாண்டு ஐப்பசி மதி ௪ (20-10-34) ஆம் நாள் சனிக்கிழமையன்று, தஞ்சை கலியாணசுந்தரம் உயர்தரக் கல்லூரித் தலைமை ஆசிரியர் திரு. K. M. சுந்தரம் ஐயர் B.A., L.T., அவர்களால் திறக்கப் பெற்றது. அதில் மாணவர் களாலும் ஆசிரியர்களாலும் அரிதில் இயற்றப்பெற்றதும் சேர்க்கப்பெற்றதுமாய, உருநலமிக்க ஓவியங்கள், நிலப் படங்கள், பலநாட்டுக் காசுகள், அஞ்சற்றலைகள், அட்டை, தாள், களிமண் மணி இவற்றாலாய அரியபொருள்கள் மிளிர்ந்து காண்போர் மனதைக் கவர்ந்தன.

௪. பரிசளிப்புவிழா:—

ஆண்டுதோறும் நிகழும் இக்கல்லூரிமாணவர் பந்தய விளையாட்டு இவ்வாண்டு புரட்டாசித்திங்கள் 'உ௰௩' (15-10-34) ஆம் நாள் அன்று எம்விளையாட்டிடத்தின்கண், நிகழ்வுற்றது. அதில் மாணவர் பலரும் தங்கள் திறமையைக்காட்டி வெற்றியுற்றனர். அவ்வாறு வெற்றியுற்ற மாணவர்கட்கு 20—10—34 அன்று, தஞ்சை, தூய பேதுரு உயர்தரக் கல்லூரித் தலைமை ஆசிரியர் திரு. J. G. கோயில்பிள்ளை B. A., L. T., அவர்கள் தலைமை வகித்து பரிசில் அளித்தனர். இவ் விளையாட்டானது தஞ்சை மாநாட்டுப் பந்தய விளையாட்டை நிகர்த்திருந்தது எனக் கூறுவதில் மிகை ஒன்றும் இல்லை. இவ்வாறு இவ்வாண்டின் கல்லூரி ஆண்டு விழாக்கள் இன்னருட்பெருக்கால் இனிது நிகழ்ந்தேறியன.

உ

கரந்தைத் தமிழ்ச் சங்கக் கல்லூரி, தஞ்சை

(6—10—1916)

# பதினெட்டாம் ஆண்டின் அறிக்கை

பவ, ஐப்பசி ரு (21—10—1934)

கடுக்கவின் பெறுகண்டனும் தென்திசை நோக்கி
அடுக்கவந்து வந்துஆடுவான் ஆடலின் இளைப்பு
விடுக்க ஆரமென்கால் திருமுகத் திடைவீசி
மடுக்கவும் தமிழ்திருச்செவி மாந்தவும் அன்றே

என்றெல்லாம் பெருமையுறுதற்குரிய நம் தமிழ்மொழியின் வளர்ச்சியின் வழியே நாட்டின் நலங் காண முயலும் இக்கல்லூரிக்கு இது போது பதினெட்டியாண்டுகள் இனிதே நிறைவேறுகின்றன. இஃது இவ்வாண்டில் புரிந்த பல செயல்களையும் ஈண்டுச் சுருங்கக் கூறுதும்.

ஆண்டு விழா :—அன்பரீர்! இக்கல்லூரியின் பதினேழாவது ஆண்டுவிழா, திருமுக ஆண்டு புரட்டாசித் திங்கள், கரு (28-9-1933) ஆம் நாள் வியாழக்கிழமை மாலை மணி ரு-க்கு, தஞ்சைமாநாட்டாண்மைக்கழகத்தலைவர்திருவாளர். ஆ. பழ. நா.வயி. நாடிமுத்துப்பிள்ளையவர்கள் M.R.A.S., M.B.I.P.S., F.R.E.S., M.L.C., தலைமை தாங்க இனிது கொண்டாடப்பெற்றது. அதுபோது பலதிறத்த பெரியார்களும், பலகழகங்களின் உறுப்பினர்களும் பிறரும் ஆக இருந்து அவையை அணிபெறச் செய்தனர். தமிழ்த்தாய், கடவுள் வணக்கங்கட்குப் பின்னர், தலைவர் வரவேற்பு, கல்லூரி அறிக்கை படித்தல் இவை நிகழ்ந்ததும், அவைத் தலைவரவர்கள் இக்கல்லூரியினிடத்துக் கொண்டுள்ள அன்புடைமையை முன்னுரையாக மொழிந்தனர். பின்பு, 'வாழ்க்கைக்கான கல்வி' என்ற பொருள்பற்றி மன்னார்குடி கௌமார குருகுலத் தலைவர் திரு. இராவ்சாகிப். சு. வி. கனகசபைப் பிள்ளையவர்களும் 'சாதுரியம்' என்ற பொருளின்கீழ் க. த. ச. கல்லூரி மாணவன் திரு. ஈ. தேவராசனும், 'புறநானூறு' கம்பராமாயணம்' என்பன பொருள்களாக உரத்தநாட்டு உயர்தரக் கல்லூரித் தமிழாசிரியர் திரு. அ. பொன்னன்னுக் களத்தில்வென்றார் அவர்களும், தஞ்சை, ஓய்வுற்ற மாநாட்டுப் பதிவகத் தலைவர் திரு. T. S. சபாபதிப்பிள்ளை B.A., அவர்களும் சிறந்த விரிவுரை களாற்றினர், பின்னர் இக்கல்லூரி மாணவர்கள் 'வள்ளல் பேகன்' வரலாற்றை ஓர் நாடகமாக நடித்துக் காட்டினர். அவைத் தலைவரவர்கள்

அன்றைய நிகழ்ச்சிகளுள் கண்ட அரிய பொருள்களைப்பற்றியும் சிறுவர்கள் நடித்த நாடகத்தைப் பற்றியும் புகழ்ந்து கூறியதும், எம் சங்கத்தலைவர் திரு. த. வே. உமாமகேசுவரம் பிள்ளையவர்கள் B.A., B.L., யாவர்க்கும் நன்றி கூற, விழா இனிது நிறைவேறிற்று.

கலைமகள் விழா :—திருமுக ஆண்டின் இவ்விழா புரட்டாசி, ௰௨-ஆம் நாள் அன்று மாலை 'ச இ' மணிக்கு தஞ்சை, அரசியலார் பெண்கள் ஆசிரியப் பயிற்சிக் கல்லூரித் தலைமையாசிரியர் திருநிறை. வே. செல்லம்மாள் அவர்கள் B.A., L.T., தலைமை ஏற்றருள நிகழ்ந்தது. அதுபோது கடவுள், தமிழன்னை வணக்கங்கட்குப் பின்னர், பஞ்சாபகேசன், இராதாகிருட்டினன் கழகங்களின் அறிக்கைகள் படிக்கப்பெற்றன. தலைவர் அவர்கள் தங்களது முகவுரையில் இக் கல்லூரியின் உயர்வு குறித்த தனிமொழிகளைக் கூறியதும் எம்கல்லூரி மாணவர்களாய திரு. சு. கி. சுப்பையன், திரு. ம. நடேசன், திரு. கோ. சாமிநாதன், திரு. இ. மங்கையர்க்கரசி, என்பவர்கள் முறையே உழவின் சிறப்பு, காஃபி, தெய்வவழிபாடு, பொய்யா மொழிப்புலவர், கொசுகுகளின் மாநாடு என்பன பொருள்களாக அவையோர் அனைவரும் வியப்புறும் வண்ணம் சொல் பொருள்வழுவாது சிறந்த முறையில் சொற்பொழிவுகள் ஆற்றினர். பின்னர் ஆங்கிலத்தில் எம்மாணவர்கள் 'Strange Trial' (வியப்பான தீர்ப்பு) என்ற நாடகத்தை நடித்தனர். முடிவில் தலைவர் அவர்கள் மாணவர்களது ஆற்றலைப் புகழ்ந்து போற்றி பின்னுரையாகக் கூறியதும் அவையோர்க்கு வணக்கம்கூற மாணவர்களைப் புகழ்ந்து அவையோர் கொண்டாட விழா நன்கு நிறைவுற்றது.

பொருட் காட்சி :—இக்கல்லூரி ஆண்டுதொறும் தனித்து நடத்தும் இப்பொருட்காட்சிசாலை சென்ற ஆண்டில் (27—9—33)ல் மாணவர்கள் இயற்றிய உருநல மிக்க ஓவியங்கள், நிலப்படங்கள், பல நாட்டுக்காசுகள், அஞ்சற்றலைகள், அட்டை, தாள், களிமண், மணி இவற்றாலாய பொருள்கள் முதலியவற்றால் மிளிர்ந்தது. அதுபோது தஞ்சை பெண்கள் கல்லூரி உதவிக் கண்காணிப்பாளர், திருமிகு. Miss. K. அருளப்பன் அவர்கள் B. A., L. T., இக்காட்சிக் கூடத்தைத் திறந்தருளினார்கள்.

பரிசளிப்பு விழா :—எம்மாணவர்கள் கொண்டாடும் ஆண்டுத் தேர்ச்சி விளையாட்டில் வெற்றி பெற்றவர்கட்குச் சென்ற ஆண்டில் பரிசளிப்பதற்கு, தஞ்சை, துணைமருத்துவத் தலைவரின் வாழ்க்கைத் துணை Mrs. K. S. சுப்பிரமணியம் அவர்கள் தலைமை வகித்து விழாவினைச் சிறப்புறச் செய்தனர். சென்ற ஆண்டின் மாணவர் தேர்ச்சிவிளையாட்டு விழா, தஞ்சை மாநாட்டுத் தேர்ச்சி விளையாட்டு விழாவினையொப்ப சிறப்புற நடைபெற்றமை இவண் குறித்தற் பாலதாகும்.

பஞ்சாபகேசன் கழகம்:—இக்கல்லூரியின் கூட்டங்கள் யாவும் இதனைச் சார்ந்துள்ள பஞ்சாபகேசன் கழக ஆதரவிலேயே நடை

பெறுவதால் இக்கூட்ட நிகழ்ச்சிகளனைத்தும் இக்கழக ஆண்டுவிழா அறிக்கைகளில் வெளியிடப்பெற்றுள்ளன. இக்கழகம் மாணவர் வசதி, தகுதிக்கேற்ப இருபிரிவாக நின்று அவர்களை, சொல்லாடல், சொற்போர், சொற்பொழிவு முதலாய துறைகளில் பயிற்றிவருகின்றது.

இபாதாகிருட்டிஎன் கழகம்:—இஃது மாணவர்களின் ஆங்கில அறிவைப் பெருக்குவான் வேண்டி கிழமைகள்தோறும் கூட்டப்பெற்று செய்யுளிசைத்தல், கட்டுரைவரைதல், உரைநடைப்பயிற்சி ஆகியவற்றுள் மாணவர்கட்குப் பயிற்சியை அளிக்கின்றது.

இசை பயில் மன்றம்:—இழுக்கிலா இசையினுல் பழிப்பிலா புகழ்வரும் என்பது ஒரு மொழி. இஃதை நன்கு இக்கல்லூரி அறிந்திருந்தும், பொருள் முட்டுப்பாட்டால் தன் எண்ணம் நிறைவுறாது கலங்குகிறது. இதுபோது இக்கல்லூரி ஆசிரியர் திரு. T. S. சம்பந்தசாமி அவர்களின் முயற்சியால் ஒரு சிறிது இசைப்பயிற்சி எம்மாணவர் பெறுகின்றனர். எனினும் தக்க இசையாசிரியரின் துணை பெரிதும் இங்கு வேண்டற்பாலதாகும்.

வெளியீடு:—மாணவர்களின் அறிவுத்திறனை மிகுக்க எழுந்த 'பஞ்சாபகேசன்' எனும் பெயரிய மூத்திங்கள் வெளியீடு இதுபோது பொருள் நலிவால் குன்றியுளது. இனி தக்கார் துணையால் செம்மைபெற மிளிரும் எனக் கருதப்படுகின்றது.

உடற்பயிற்சி:—மாணவர்கள் உடலுரம்பெறாது அறிவுப்பயிற்சி பெறுவதால் மனவுறுதியற்ற மாக்களாகி வாணாள் குறுகி மடிகின்றனர் என்பதை ஓர்ந்து, சிறார்களின் உடல்வலிமை பெருகும் பல துறைகளிலும் இக்கல்லூரி முயல்கின்றது. இஃதை ஊக்கவே ஆண்டுதோறும் பரிசு விளையாட்டுத் தேர்ச்சியையும் கொண்டுளது.

சாரணப்படை:—மாணவர்கள் நாட்டின் பொதுநலவுரிமையைப் புரத்தற்பொருட்டு தோற்றப்பெற்ற இப்படை, இக்கல்லூரியில் ஒரு சாரணப்படைத் தலைவரையும் இரு சாரண ஆசிரியர்களையும், இரு குருளை ஆசிரியர்களையும் கொண்டு மிளிர்கின்றது.

நூல்நிலையம்:—சென்ற ஆண்டினிறுதியிலிருந்த சுவடிகளோடு இதுபோது ஐம்பது சுவடிகள் சேர்க்கப்பெற்று தமிழும் ஆங்கிலமுமாக 1290 சுவடிகள் உள. ஆசிரியர்கட்கும் மாணவர்கட்கும் பயனுகும் பல அரிய நூல்களும் இன்னும் வேண்டற்பாலனவாகும்.

அறிவுநூல் பொருள் நிலையம்:— வகுப்புகட்குப் பயனுகும் அரிய ஆய்வுகளை உணர்த்துதற்கான ஒரு சில பொருள்கள் சேமிக்கப் பெற்றும், இன்னும் இன்றியமையாதனவாயுள்ள பல கருவிகளும், பொருள்களும் விரும்பப் பெறுவனவாயுளதால் இக்கல்லூரியின் கருத்துமுற்றப் பணியாற்றத் தவக்கம் எற்படுகின்றது.

காட்சிபொருள் நிலையம்:—சிறிது சிறிதாக சேமிக்கப்பெற்ற பல அரிய பொருள்களை எல்லாம் தக்க இடத்தில் பேழைகளில் அமைத்து மாணவர்கள் யாவரும் எளிதில் அவற்றைக்கண்டு பயன் பெறுதற்காய வழிகளை யியற்ற வசதியற்றுள்ளோம்.

கைத்தொழிற் பயிற்சி:— 'கைத்தொழிலாலேயே நாட்டின் கவலை நீங்கும்' எனக் கருதும் இந்நாளில், பல கைத்தொழில்களையும் மாணவர்கள் பாடங்களுடன் இணைத்து கற்பித்தற்கு முயலும் இக்கல்லூரி, பொருள்வலியில்லாமையால், வான்வளம் குறைந்துள்ள பயிர் என வாட்டமுறுகின்றது.

திக்கற்ற மாணவர் இல்லம்:—ஆங்கீரச, சித்திரை முதல் நாளன்று இவ்வில்லம் தொடங்கப்பெற்றது. இதில் இதுவரையில் பதினன்கு மாணவர்கள் சேர்ந்தனர். அவருள் ஒருவன் உரத்த நாட்டு உயர்தரப் பள்ளியில் நான்காவது பாரத்தில் பயின்று வருகின்ருன். வேருெருவன் யாண்டு முதிர்ந்து அறிவுவளரா நிலையிலிருந்தமையால், தஞ்சைக் கூட்டுறவுப் பதிப்பகத்தில் தொழிலிலமர்த்தப்பெற்று இல்லத்தொடர்பினின்றும் நீக்கப்பெற்ருன். இதன் மேற்பார்வையாராகப் பொதுநலத்தொண்டர் திரு. ச. அ. சாம்பசிவம் பிள்ளையவர்களிருந்து மாணவர்களைப் புரந்து வருகின்றனர்.

பொது:—இக்கல்லூரி பல சிறப்பியல்களைக் கொண்டுள்ளதோடு அமையாது, தமிழ், ஆங்கிலம், கணக்கு, நாட்டுவரலாறு, நிலநூல், அறிவுநூல், ஓவியம் ஆய இன்னேரன்ன பாடங்களிலும் பிற உயர்தரக் கல்லூரிகளின் பாடதிட்டங்களுக்கு ஒருசிறிதும் குறையாது, மிகுத்தே அமைத்துப் பயிற்றி வருகின்றது. மேலும் மாணவர்கள் தாய்மொழிப்பற்றுடன் இருத்தற்குரிய முறைகளை எல்லாம் இயன்றவரையில் கையாண்டு வருகின்றது என்பதற்குப் பத்தாம் வகுப்புத் தமிழ்ப் பாடங்களை இவண் எட்டாம் வகுப்பு மாணவர்களே பாடமாகக் கொள்ளுகின்றனர் என்பதே போதிய சான்ருகும்.

நாட்டின் நலங்காணும் பெரியீர்! இதுவரையில் எடுத்துக் காட்டிய பல துறைகளினும் சிறந்து விளங்கி, இந்நிலவரைப்பில் என்றுமே அழிவுருதியங்கும் கன்னிநற்றமிழாம் நம் அன்னையின் வளர்ச்சியினையே நாடிநின்ற இக்கல்லூரிக்குக் களைகணுயுள்ளவர்கள் மிகப்பலராவர். அவர்களுள் தமிழ்மொழிப் பணியையே தன் தனித்த வேலையாகக்கொண்டு உழைத்துவரும் எம் தலைவர் செந்தமிழ்ப் புரவலர் திரு. த. வே. உமாமகேசுவரம் பிள்ளையவர்கள் B. A., B. L., எம் கல்லூரியின் அடித்தளமாய் அமைந்துள்ளதை உலகமறியும். அன்னரது தொண்டினை எம்கல்லூரி என்றும் சிறப்புப் பெற்றுய்யவேண்டும் எனும் நல்லுரையைத் தவிர

எம்மனோர் கூறும் மாற்றமும் உளதோ? இக்கல்லூரியினுக்குச் செலவாகும் தொகையுள் பெரும் பகுதியைத் தந்துதவி இதன் வளர்ச்சிக்கு ஒரு பற்றுக்கோடாயுள்ள கல்வி வளர்ச்சி நெறியாளர்கட்கும், தம்வாணுளின் ஒரு பெரும் பகுதியை இக்கல்லூரியின் மேம்பாட்டிற்கென அளித்து இதன்-பணியே தன் அணியாகக் கொள்ளும் எம்மாநேசர் திரு. மா. வே. கோபால கிருட்டின ஐயரவர்கட்கும், தமிழ் நாட்டாரனைவரும் தாய் மொழியின் நலம் பருக மனங்கொண்டு அதற்கு ஆம் துறையில் நாளும் முயன்றுவரும் தமிழ்ப்பேரறிஞர் திரு. நீ. கந்தசாமிப் பிள்ளை M. R. A. S., அவர்கட்கும், எம் கல்லூரியினின்றும் உயர்தரக் கல்விக்காக ஆண்டுதோறும் அனுப்பப்பெறும் மாணவர்கள் இருவருள் ஒருவரையாவது இவ்வாண்டு உரத்தநாட்டு உயர்தரக் கல்லூரியில் ஏற்று, அறவுணவு விடுதியிலிருத்தி இலவசமாகக் கல்வி பயில அருளிய தஞ்சை மாநாட்டாண்மைக் கழகத்தலைவர் திருமிகு ஆ. பழ. நா. வயி. நாடிமுத்துப் பிள்ளை அவர்கட்கும் இன்னும் இக்கல்லூரியின் பணிகள் பலவற்றுள்ளும் ஈடுபட்டுத் துணைபுரியும் திருவாளர்கள் ச. அ. சாம்பசிவம் பிள்ளையவர்கள், சங்க நிறைவேற்றுக்கழகத்தார், நாடோறும் தனது நெற்பொறிக்கூடத்தில் சேமிக்கும் பிடியரிசியைக்கொண்டு திங்கள்தோறும் பலபடியரிசியாக உதவிவரும் கரந்தை திரு. S. இராமசாமி ஐயர் B. A., B. L., அவர்கள், கரந்தை திரு. த. வே. இரத்தினசாமியவர்கள், தஞ்சை மாநாட்டாண்மைக் கழக அமைச்சர் திரு. சி. வேதாசலம் அவர்கள் B. A., B. L., இன்னும் இன்னோரன்ன எம் நலம் நாடி நாளும் பல்வழியினும் துணைபுரிந்துவரும் அன்பர்கள் யாவருக்கும் எம் நன்றி என்றும் உரித்தாகும்.

மகிழ்ச்சி:—எம் சங்கச் சிறப்புறுப்பினருள் ஒருவரும், இக்கல்லூரியின் ஆண்டு விழாக்களில் இருமுறை தலைமை தாங்கியவரும் ஆயதிருவாளர். இராவ்பகதூர், A.T. பன்னீர்ச்செல்வம்Bar-at-law அவர்கட்கு, சென்னைமாநில அரசாங்க அகமந்திர நாயகர் (Home Member) பதவி கிடைத்தமைக்கும் பெரிதும் மகிழ்கின்றோம்.

இரங்கல்:—எமது கல்லூரியின்பால் மிகுந்த அன்புகொண்டு எங்களுடன் நாளும் உறைந்து பல்வழியாலும் எங்களுக்குத் துணையாயிருந்த பெரியார் மருத்துவர். ம. கண்ணுசாமிப் பிள்ளை அவர்கள் எம்மினின்றும் பிரிந்தமைக்குக் கலங்குகின்றோம். அவரது இன்னுயிர் இறைவனடி தழைக்க.

வரவு செலவு:—இக்கல்வி நிலையம் குறைவிலாது நடைபெறுதற்கு ஆண்டுதோறும் வெண்பொற்காசுகள் 5000-க்குக் குறையாது வேண்டியிருக்கிறது. இத்தொகையின் பெரும்பகுதியை அரசியலாரின் அருந்துணையும், எம்தலைவரவர்கள் உதவும் பெருந்துணையும், இவ்வூர் அன்புடைத் தாய்மார் இடும் பிடியரிசியும், அன்பர்கள் பலர் ஈயும் சிறு பொருளும் கொண்டு ஈடு செய்து எஞ்சியவற்றிற்கு எம் சங்கமே ஆதரவாயுளது.

வேண்டுகோள்:—அருளுடைப்பெரியீர்! இதுவரையில் இவண் கூறிய சிறந்த பலதுறைகளிலும் முயன்றுவரும் இக்கல்லூரி தன் முயற்சிகளில் சிறந்தோங்கவும் தன்பாற் பயிலும் மாணவர்கள் ஐயம் திரிபுஅறக்கற்று, உடல் வளம், கைத்தொழின்முறை இவற்றுள் ஊக்கங் கொள்ளவும், பயிலுங்கால் உடை, உணவு, உறைவிடம் முதலாய வசதிகளைக் குறைவறப் பெறவும் நாங்கள் மேற்கொள்ளும் செயலும், முயற்சியும் உங்கள் அருந்துணையின்றி இயலாது என்பது வெளிப்படையே. எமது கல்லூரியின் தனிச்சிறப்பினை நன்கு அறிந்தும் அறியாதார்போல் கல்வி நிலைக்கோர் ஊன்றுகோலாயிருக்கும் நம் அரசியலார், தக்க உதவிபுரிந்து நம் கல்லூரி முன்னிலை எய்துமாறு செய்து பெரும்புகழ் தாம் எய்தற்கு முன் வாராதிருத்தற்கு யாம் பெரிதும் வருந்துகின்றேம். ஆண்டுகள் தோறும் நம் கல்லூரியில் கல்வி கற்க வரும் மாணவர்களின் எண் பல்கிக்கொண்டே வருகின்றதாதலின் மாணவர்கள் படித்தற்குத் தக்க இடவசதி யில்லையாய் முடிகின்றது. நூல் நிலையத்திற்கும் பொருட்காட்சி நிலையத்திற்கும் தக்க இடம் இன்னும் எமக்கில்லையெனக்கூற யாம் மிகவும் வருந்துகின்றேம். ஆதலின் ஆண்டுகள் தோறும் பல்வகை அறத்துறையில் பல்லாயிரம் பொற்காசுகளை உதவிவரும் பெருஞ் செல்வக் குடிமக்களே! நீங்கள் ஒவ்வொருவரும் ஆண்டொன்றிற்கு வெண்பொற்காசு ஒன்றே எம் கல்லூரிக்கு அளித்துப் பேருதவி புரியினும், அதுவே எமக்குப் போதியதாகும். அவ்வெண்பொற்காசு ஒன்றீந்ததன் பயனாய் எம் கல்லூரியும் பெருவளத்துடன் முன்னேற்றம் அடைந்திடும்; நீவிரும் அழியாப் பெரும்புகழ் பெற்றிடுவீர்; நம் தாய்மொழியும் பெருஞ்சிறப்புப் பெற்றிடுவள். எமக்கோர் அருந்துணையாம் அரசியலாரையும் பெருந்துணையாம் உங்களையும் எம் கல்லூரி நன்னிலையுற்று நற்பணிபுரிந்து சிறப்பெய்த இயன்றவளவில் துணைபுரியுமாறு வேண்டி எல்லாம்வல்ல தமிழ்த்தாயை இறைஞ்சுகின்றேம்.

உ

## கல்லூரி அமைப்பும் செயலும், 1934.

தலைவர். திருவாளர், செந்தமிழ்ப்புரவலர்,

த. வே. உமாமகேசுவரம் பிள்ளையவர்கள், B.A., B.L.,

மானேசர். திருவாளர், மா. வே. கோபாலகிருட்டின ஐயரவர்கள்.

ஆசிரியர்கள்.

(Sec. Gr. 8, Ele. Higher Gr. 10) (௧௮) பதினெண்மர்.

மாணவர்கள். நானூற்று இருபத்தைவர் (௪உ௫)

வகுப்பு. க. முதல் அ. ஆம், வகுப்பு முடிய (கசு பிரிவுகள்

| | |
|---|---|
| அரசியலார் ஆண்டுக் கொடை. | ரூ. 3075—0—0 |
| கல்லூரி ஆண்டுச் செலவு. | ரூ. 4970—4—8 |

சிவ. குப்புசாமி,
தலைமை ஆசிரியன்.

உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத்
திங்கள் வெளியீடு.

துணர்-ம } பவ—ஐப்பசி. { மலர் - எ.

க. மண்ணியல் சிறுதேர் 281
திரு. அ. சிதம்பரநாதஞ்செட்டியாரவர்கள், B.A.,

உ. சங்கர நமச்சிவாயர் உரை பொருந்துமாறு 289
திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள்,

ரு. கலித்தொகையும் நச்சினார்க்கினியரும் 294
ஆசிரியர், திரு. அ. வரதநஞ்சைய பிள்ளையவர்கள்,

ச. சொல்லதிகார மறுப்பின் தடையும் விடையும் 303
திரு. ம. நா. சோமசுந்தரம் பிள்ளையவர்கள்,

ரு. சோழன் கரிகால் வளவன் 312
திரு. சிவ. குப்புசாமி பிள்ளையவர்கள்.

செந்தமிழ்ப்புரவலர்,
த. வே. உமாமகேசுவரம் பிள்ளை, பொழிற்றொண்டர்.

தஞ்சைக் கூட்டுறவுப் பதிப்பகம், கரந்தை.

உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு

| | | |
|---|---|---|
| துணர் ய | பவ, ஐப்பசி | மலர் எ |


உ

## "மண்ணியல் சிறுதேர்"

( திரு. அ. சிதம்பரநாதஞ் செட்டியார், பி. ஏ. )

(முற்றொடர்ச்சி துணர் 10. மலர் 6. பக்கம் 274.)

இனி, மனக்கினிய உவப்பளிக்கும் பகுதிகளில் சில காண்போம். "வண்டிமாற்றம்" என்னும் ஆறும் அங்கம் முழுதுமே ஒரு பெருங் கருங்கூத்து (a comedy of errors) ஆகலின் அதுமுழுதும் நூலிலேயே காணல் தகும். மற்றைய சில பகுதிகளையே ஈண்டு நோக்குவோம். வசந்தசேனையின் இல்லத்துள் எட்டாங்கட்டிற் புகுந்த விதூடகன் வசந்தசேனை யின் நற்றூயைக்கண்டு, "பெரிய தெய்வவுருவத்தைப்போன்ற இவளை முதலில் உள்ளே புகுத்திப் பின்னர் இவ்வீட்டின் வாயில் வழி நிருமிக்கப்பட்டது கொல்?" என்று சேடியை வினவும் இடமும் (பக். 163), சேடன் போட்ட வினவிரண்டிற் கும் அவன் விடை தந்து பதங்களை மாற்றிக்கூறும் இடமும் நகைச்சுவை தருவனவாம். மாமரங்கள் அரும்பும் காலம் 'வசந்தம்' என்றும், கிராமங்களைக் காப்பது 'சேனை' என்றும் விதூடகன் சாருதத்தன்பாற் கேட்டுக் கூறியதைச் சேர்த்துக்

கூறும்படி சேடன் சொல்ல, "சேனை வசந்த." என அவன் விளம்ப, பதங்களை மாற்றிச் சொல்லுமாறு பணிக்கப்பட்ட விதூடகன் பாதங்களைத் திருப்பிக் கொண்டு "சேனை வசந்த" என்று கூறுமிடம் அது. (பக். 181—182). தேவர் கடன் இருக்குங்கால் இடத்தோளிலும், தென்புலத்தார் கடன் இருக்குங்கால் வலத்தோளிலும் அணியப்படும் பூணூல் (பக். 370), கன்னம் வைக்கும் சமயத்தில் சுவரில் துளையளக்கவும் தாலிப் பூட்டகற்றவும், கதவுத்தாழ் திறக்கவும், தேள் கொட்டினாற் கட்டவும் உதவும் என்று கூறிச் சருவிலகன் இந்நான்கனுள் இரண்டிற்குத் தனது பூணூலைக் கையாளுவது கண்டு இன்புறாற் பாற்று. நீதி மன்றத்தே காட்டப்பட்ட அணிகலன்களைக் கண்ட வசந்தசேனையின் தாய், "இது அதனை (வசந்தசேனையின் அணியை) ஒத்திருக்கின்றது. அஃதொன்று" என்று கூறியவுடன், சகாரன் "கண்களாற் சொல்லி வாக்கினால் மறைத்து விட்டாய்" என்று (பக். 348) கூறுவதைப்பார்த்து இன்புறுபவரே, "காணப்பட்டான் ஆரியன் (என்று பாதிகூறிய அளவில்) இல்லை; ஆரியை வசந்தசேனை காணப்பட்டாள்" என்ற (பக். 235) சந்தனகனது சொற்கேட்டு இன்புற்றாராவர்.

மேலும், சகாரன் பகர்கின்ற மொழிகளெல்லாம் நகைச் சுவை மலிந்து நிற்கின்றன. ஆங்கில நாடகவாசிரியர் ஷெரிடன் (Sheridan) எழுதிய நாடகமொன்றனுள் வரும் ஸ்ரீமதி மேலப்பிராப்பு (Mrs. Malaprop) என்பாளுடைய மொழிகளால் விளையும் விநோதம் எத்தகைத்தோ அத்தகைத்து இச்சகாரன் கூற்றால் விளைவதும் செய்யுள் 45, 257, 267, முதலான புராண விருத்தங்களையும், ஆகம விருத்தங்களையும், காண்பார் அதனை அறியலாம் எனினும் வேறு சில உதாரணம் தருவேன்:—

(i) "எருதுகள் அறுந்துபோக வில்லையா; கயிறுகள் இறந்துபோக வில்லையா?"

(ii) "அரக்கியோ கள்வனோ வண்டியில் ஏறி இருக்கின்றனர். அரக்கியாயின், நம் இருவரையுந் திருடுவாள்; அன்றிக் கள்வனாயின், நம் இருவரையும் தின்று விடுவான்."

(iii) "நரிகள் பறக்கின்றன. காக்கைகள் நடக்கின்றன. இவ்வையன் அரக்கியின் கண்களால் உண்ணப்பட்டுப் பற்களால் பார்க்கப்படு முன்னரே யான் ஓடி விடுகிறேன்." இனைய பகுதிகளெல்லாம் " மேலப் பிராப்பிசம் " என்பதுபோல " சகாரம் " என்பதோர் சொல், எழுவதற்கு நிலைக்களமாக உள்ளன.

அன்பின் ஐந்திணையில் "ஒப்புவழியுவத்தல்" என ஒரு துறையுண்டன்றோ? அத்துறையை யொட்டியதே நூனுயகமாக விளங்கும் பண்டைத் தமிழ்நூல் சிலவற்றிற்கும் இம் மண்ணியல் சிறுதேர்க்கும் உள்ள ஒப்புமை கண்டு உவத்தலும். குணவாயிற் கோட்டத்து அரசு துறந்திருந்த குடக்கோச் சேரலிளங்கோஅடிகள் "சிலப்பதிகாரம் என்னும் பெயரால் நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள்" என்று சாத்தனரிடம் சொல்ல அவர் அடிகளை இயற்றுக எனக் கூறின் தன்னை இயற்றுமாறு கூறுவர் எனக் கருதி "அடிகள்! நீரே அருளுக" என அடிகள் தாமே அருளிவிட்டனர் என்பதை அறிந்த நாம், வண்டியில் முதலில் ஏறுமாறு சேடனுக்குக் கூறிய சகாரனே அன்னுன் முதலில் வண்டியில் ஏறுவதைக் கண்டு "யான் அப்படிக் கூறினும், பெருமான் ஏறுங்கள் என்று சொல்வதன்றோ உங்களுக்கு முறை" என்று கூறுகின்ற இடத்து (பக். 268-9) ஒப்புமை கண்டு உவக்காதிருப்போமா?

"காதலன் துன்பம் காணாது கழிந்த
மாதரோ பெருந்திரு உறுக வானகத்து;
அத்திறம் நிற்கநம் அகனுடைந்தஇப்
பத்தினிக் கடவுளைப் பரசல் வேண்டுமென" என்ற

சிலப்பதிகாரப் பகுதியோடு (காட்சி 111—114)

"மானமார் வசந்த சேனையே வானிற்
பொன்னுடல் பெற்றுப் பொலிவுற் றிருப்பினும்
இந்நில வரைப்பின் எவ்விடத் துறினும்" என்ற

இந்நூற் பகுதியை (பக்கம் 389) ஒப்புமைகோடல் ஆகாததொன்றோ?

"ஈங்கென்
தாழ்பூங் கோதை தன்காற் சிலம்பு
கன்றிய கள்வன் கைய தாகில்
கொன்றச் சிலம்பு கொணர்க ஈங்கென" என்ற சிலப்பதிகார அடிகளோடு (கொலை 150-4) "எவன் வசந்தசேனையைக் கொன்றவனோ அவனை நீங்கள் கொன்றுவிடுங்கள் என்பதே அரசன் கட்டளையாகும். ஆதலின் அரசன் மைத்துனனாகிய சகாரனையே தேடிப் பிடிப்போம்" என்ற வாக்கியங்களை (பக். 397) ஒப்பிட்டுக், கல்லாக்களிமகனது சிலப்பதிகாரச் செயலுக்கும் மண்ணியல் சிறுதேர்ச் சண்டாளன் செயலுக்கும் உள்ள வேற்றுமை நயத்தைக் காண்போமாக.

இனி, "பாய்தலிற் பூசை, ஓடலின் இரலை, பற்றுபு சிதைத்தலின் பருந்து, வாய்மையிற் பொய்யிற் றுயில்பவன் நிலைபை மதித்தலின் நாய்" என முதலாக வரும் செய்யுட்கள் (பக். 117) இரண்டினைப் படிப்பார் யாருக்குத் தான் "தருமன் தண்ணளியால், தனதீகையால் வருணன் கூற்றுயிர் மாற்றலின், வாமனை அருமையால்" என்ற சிந்தாமணிச் செய்யுள் (160) சிந்தை வந்து தங்காது கொல்! அன்றியும்

"விண்ணுல கெய்தினர் விளங்கு நல்லுடல்
புண்ணிய உருவமே புதல்வ னாகலின்" என்ற இந்நூற்பகுதியைச் (பக். 357) சிந்தாமணிச் செய்யுள் 2324 இன் உரையோடு ஒப்புநோக்குவார் யாரே உவகை பூக்காதிருப்பர்? என்னை? ஆய்கதிரினை மந்திரிமாநாகம் விழுங்கிற்று எனக்கூறிய தேவர் (சிந்தா. 290) பன்மணி நாகந் தன்னை வல்லைவாய் போழ்ந்து போந்தோர் மழகதிர் நின்றது ஒத்தான் என்று பின்னர்க் கூறுமிடத்து, "தந்தை புதல்வனாய்ப் பிறப்பன் என்னும் விதிபற்றிக் கூறினார்" என்று நச்சினார்க்கினியர் நவிலும் நயம் நோக்கினார் எவர், அவர் மகிழ்தல் திண்ணம் என்க. இனி,

"இந்நகர்க் கனியென இலங்கு வோனிவன்
முன்னையூழ் வலியினாற் கொலையின் முற்றினன்
அன்னது கண்டுவின் ஆற்று கின்றதோ" என்ற இந்நூற் செய்யுளை (பக். 363) யும்,

"வாழ்வினை நுதலிய மங்க லத்துநாள்
தாழ்வினை யதுவரச் சிறை சாத்தினன்
சூழ்வினை நான்முகத் தொருவர்ச் சூழினும்
ஊழ்வினை யோருவரால் ஒழிக்கற் பாலதோ,"
"நன்னெடுங் கண்களின் நான்ற நீர்த்துளி
தன்னெடுந் தாரைகள் தளத்தின் வீழ்தலால்
மன்னெடுங் குமரன்மாட் டமுங்கி மாடமும்
பொன்னெடுங் கண்குழித் தழுவ போன்றவே" என்ற

கம்பராமாயண நகர்நீங்கு படலச் செய்யுட்களையும் (163, 199) நோக்குவார் யார்க்கே உவப்பினைத் தரும் ஒப்புமை காண்டலரிது? சாருதத்தனது நிலையைக் கண்ட மாடத்திலுள்ள பெண்கள் கண்களினின்றும் ஒழுகும் நீரைக்கண்டு "விண் அரற்றுகின்றதோ" என்று ஐயுற்றூர் நிற்பது போலவே, வள்ளல் இராமனின் இன்னலைக் கண்டு "குமரன் மாட்டமுங்கி மாடமும் பொன்னெடுங் கண்குழித்தழுவ போன்ற" ஆயின என்றால், மண்ணியல் சிறுதேருடையாரும் இராமாயணமுடையாரும் தம்முள் மிக்கார் யாவர் என அறியப் போட்டிபோடுவது போலன்றோ தோன்றுகின்றது?

இனி, புலவர் யாவரும் ஒவ்வோர் அகப்பை அள்ளிக் கொண்டிருக்கும் பெருமைவாய்ந்த திருக்குறளுக்கும் இந்நூற்கும் ஏதேனும் ஒற்றுமையின்றிப் போமாயின், எல்லாப்பொருளும் முப்பாலுள் உள்ளதாகக் கூறுஞ்சொல் மெய்யல் பொய்க் கூற்றாய் முடியுமாகலின்போலும்.

"ஊடல் நீட்டிப்பின் இன்பொழியும் என்னினும்
ஊடலின்றெனின் சுகமுறுதல் எங்ஙனம்?" என்ற

ஓர் பகுதி விடன் வாயிலிருந்து வருகிறது! (பக். 197) இதைச் சொல்லும் எவர் நாவே "ஊடுதல் காமத்திற்கின்பம் அதற்கின்பம் கூடி முயங்கப்பெறின்" என்ற குறளையும் "துனியும் புலவியும் இல்லாயிற் காமம் கனியுங் கருக்காயும் அற்று" என்ற குறளையும் சாற்றிப்பாராது விடும்? "மாறுய வுள்ளமும் மாண்பிலாத் தீச்செயலும் ஏற்ற இறைச்சியுருவேய் மரமாவார் தம் தோற்றம் நிலக்குச் சுமை" என்றதோரடியோடு (பக்.261)

"ஈட்டமிவறி இசைவேண்டா ஆடவர் தோற்றம் நிலக்குப் பொறை" என்ற ஈரடியை ஒப்புநோக்குங்காலும், "தடைப் படாவுதவியாற் றடிதல் வேண்டுமே" (பக். 412) என்பதையும் "அவர் நாண நன்னயஞ் செய்து விடல்" (குறள் 314) என்ப தையும் ஒப்புநோக்குங்காலும் வரும் மகிழ்ச்சி மலரக் காரணமா யுள்ள பிறிதோரிடமுண்டு. "அறத்தாறிதுவென வேண்டா சிவிகை பொறுத்தானோடூர்ந்தானிடை" என்ற அறவுரை யாமறிந்ததே. அறிந்து வைத்தும்,

சகாரன்:—நல்வினையின் பயனுகர்ச்சி எனைத்து?

சேடன்:—பெருமான் பலவகைப் பொன் ஆபரணங்களால் அலங்கரிக்கப் பட்டிருக்கும் இந்நிலையே.

சகாரன்:—தீவினைப் பயனுகர்ச்சி எனைத்து?

சேடன்:—யான் ஏவலாளனாய்ப் பிறர் உணவை ஏற்றுண் ணும் இந்நிலையே." (பக். 281) எனவரும் சம்பாஷணையைக் கண்டு நாற்காலியில் அசைந்தசைந்து ஆடாதிருப்பங்கொல்?

மேல்,

சருவிலகன்:—மதனிகே! அச்சாருதத்தர் நீதிமன்றத்தில் என்னை அறிவிப்பாராயின்?

மதனிகை:—திங்களஞ் செல்வனிடத்திருந்து வெயில் தோன்றுமா?" (பக். 145) என்ற பகுதியைப் படிக்குங்கால், கலியைக் கற்குமாறு கற்றூர் யாரே

"குன்றகல் நன்னாடன் வாய்மையிற் பொய்தோன்றின்
திங்களுள் தீத்தோன்றி யற்று" (கலி 41) என்பதை

நினைவுகூர்ந்து இன்புறார்கொல்?

இனி, "இவ்வளவிற் செல்லுங்கொல் இவ்வளவிற் காணுங் கொல் இவ்வளவிற் காதலியம்புங்கொல்-இவ்வளவில் மீளுங் கொல்" என்று அன்னத்தைக் குறித்து ஐயப்பட்டிருக்கும் தம யந்தியைப்போல, "மற்றொரு பாண்டில் உற்றவன் முன்னர் மெல்ல மெல்லச் செலுத்துகின்றது கொல்! ஆங்கதனிடை வெளி காண்கின் றனன்கொல்! அச்சிடை முறிய வைச்சுமற்

றுன்று சேர்க்கின் றனன்கொல்! மூக்குக் கயிறு சிதைத்தறுந் தது கொல்" என்று வருத்தமானகனைக் குறித்து ஐயப்பட்டு வருந்தும் சாருதத்தனது நிலைமை நமக்குப் புகழேந்தியை நினை வூட்டவில்லையா?

பொருளொற்றுமையுடைய இவையே அன்றி, சொல் லொற்றுமை ஒலியொற்றுமையுடைய பகுதிகளும் ஈண்டு உண் டெனக்காட்ட ஒரு காட்டுத் தருவேன்.

"நண்ணியஎன் உடலிதனைப் பலியுணவென்று
உண்ணுதற்கு நயந்து காக்கை
கண்ணுறீஇக் கடுங்குரலாற் கரைந்து கரைந்து
அருகிலுறக் கருது மாலோ"

என இறும் விருத்தம் (பக். 360)

"மதக்கரி மருப்பிற மதம்புலரு மாலோ
மடப்பிடி மருப்பெழ மதம்பொழியு மாலோ"

எனவரும் தாழிசை (கலிங்கத்துப் பரணி) ஆகிய இரண்டினையும் நோக்குக.

மேல், "எனக்கோ இரண்டு செயல்கள் நகைப்பை உண் டாக்குகின்றன. ஒன்று:—பெண்மகள் வடமொழியைப் படித் தல்; மற்றொன்று:—ஆண்மகன் சூக்கும இன்னிசை பாடுதல்" என்ற மைத்திரேயன் மாற்றம் (பக். 100) பேராசிரியர் உரை யில் ஓர் மாறுதலைச் செய்யும் ஆற்றல் உடையதுபோற்றோன்று கின்றது. என்னை? மெய்ப்பாட்டியல் முதற் சூத்திரத்தே நகைச்சுவைக்குப் பொருளாவன கூறுவான் எடுத்துக்கொண்ட அவர் கூறுவது "ஆரியர் கூறுந் தமிழும்..................குருடரும் முடவரும் செல்லும் செலவும் போல்வன" என்பதன்றோ? அவற்றுடன், பெண்மக்கள் கூறும் ஆரியமும் ஆண்மகன் பாடும் சூக்கும இன்னிசையும் எனச் சேர்த்துக்கொள்ளின் இழுக் காகாது எனத் தோற்றும் இப்பகுதி வழுவில் ஒப்புமை காட்டி உவப்பை ஊட்டுகின்றதெனக் கூறுதல் மிகைபடு மாற்றமாகாமை யுணர்க. இன்னோரன்ன பகுதிகளைக் கண்டு கண்டு மகிழ்க.

நிற்க,

"அடைக்கலப் பொருளை ஆவியின் ஓம்பலும்
புகலடைந் தோரைத் தகவுறப் போற்றலும்
இன்னுயிர் நண்பர்க் கின்னல் நேர்ந்துழித்
தன்னுயிர் வெறுத்தலும் மன்னுயி ரோம்பலும்
இன்னா செய்தார்க்கும் இனியவே செய்தலும்
வினைப்பயன் நுகர்வுழித் தெய்வம் வெறாமையும்
ஈந்துபொருள் வறத்தல் இனிதெனக் கோடலும்
அரைசியல் பிழைத்தோர்க் கறங் கூற்றாதலும்
உரைசால் பத்தினிக் குயர்ந்தோர் ஏத்தலும்
ஊழ்வினை கடத்தற் கொல்லா தாதலும்
பெருமையுஞ் சிறுமையும் பிறப்பா னன்றிக்
கருமச் சார்பால் வருமெனத் தேறலும்
கற்பின் மாட்சியுங் காதலின் பெருமையும்
.... .... .... ....
ஆகிய இவையும் பிறவும் அமைந்து" நன்புலங் கொள்வோர்க்கு இன்பஞ் செய்கின்றது இந்நூல் (ஆசிரியரது முகவுரை பக். 6-8). இத்தகைய மாசிலா இன்பத்தையும் மாண்புடை அறிவையும் ஒருங்கே முதனூல் ஊட்ட வல்லதோ அன்றோ யானறியேன். ஆனல், பண்டிதமணியாரவர்கள் பழந்தமிழ்க் காப்பியங்களில் திளைத்துத் தேக்கிப் பருகி உருகிக் கொடுத்து வருவதாலன்றோ இவ்வளவு நயம்படத் தமது நூலை யாக்க வல்லுநராயினர் என்று நினைக்க இடமுண்டென்பதை ஒருதலையாகக் கூறுவேன்.

இத்தகைய அரிய பெரிய அருமருந்தனைய நூலை நமக்குத் தந்து புகழைத் தமதாக்கிக் கொண்டவரும், நந்தமிழ் நாட்டுக் குறையொன்றை நிறைவு செய்த கோதிலா மணியாரும் ஆகிய பண்டிதமணியாரவர்கட்குத் தமிழுலகம் பெரிதுங் கடப்பாடுடைத்து. நல்கூர்ந்தார் ஆயினும் ஒல்காரே நல்லார் தமது நிலையினிற் றுன் எனற்பாலதாகிய இந்நூலது வித்து, முளைத்து நாற்றாகிச் சூலுண்டு விளைந்து துய்க்குநிலை அடைதலைக் காண வேண்டியும் நூல் முழுதும் ஓதலுங் கடனாமே. மகாவித்வான் ஆர். இராகவையங்கார் சுவாமிகள்

"முன்பல்வட நூல்கள் தமி ழான்மொழி பெயர்த்தோன்
தென்பழைய நாட்டணிக லந்திகழ வுள்ளோன்
மன்புலவர் வாழ்கெனவ ழுத்தவிவ னின்னும்
நன்பலசி றக்கநெடு நாளினிது துய்த்தே''

என வாழ்த்தியுள்ளவாறு பல்லாண்டு கூறி வாழ்த்தலுங் கடனாமே.

வாழிய கதிரேசர், வாழிய சிறுதேர்.

---

## "செயப்படு பொருளைச் செய்ததுபோல" என்னும் சூத்திரத்திற்குச்
## சங்கர
# நமச்சிவாயர் உரை பொருந்துமாறு.

---

திரு. ச. தண்டபாணி தேசிகர், நாகை.

---

(முற்றொடர்ச்சி 274-ம் பக்கம் பார்க்க.)

பிரயோக விவேக இலக்கணக் கொத்து நூலார்கள், வினைப் பெயர் காலங் காட்டியும் காலந்தோன்றவும் நிற்றலின், செய்பவன் கருவி இவற்றின்மேல் வருமாறு போல காலத்தின்மேல் வருதல் வழக்காற்றிலில்லையெனக் கண்டு வரையறுத்து ஒழித்தனர். அங்ஙனமாகவும் நமது பிள்ளையவர்கள் "நாழிகை யறுபது கொண்டது ஓர் நாள்" "வைகறைக்கும் நண்பகற்கு மிடைப்பட்டது எற்பாடு" என உதாரணங் காட்டினார்கள். இவற்றுள் கொண்டது, இடைப்பட்டது, என்பன வினைமுதற் பொருள்மேனின்ற வினைப்பெயராவன அன்றிக் காலத்தின்மே னின்றன ஆகா. கொண்டது முதலியன காலத்தின்மேல் நின்ற தாங்கால் அறுபது கொண்டகாலம் நாள் எனவும் இடைப்பட்ட காலம் எற்பாடு எனவும் விரியும். செய்பவன் முதலிய முறை யிற்சொல்லப் பெற்ற காலம் என்பது இறப்பு நிகழ்வு எதிர்வு

என்பனவற்றையன்றி இத்தகைய காலத்தின் பொதுப்பெயரை யன்று. ஆதலால் 'அறுபது—கொண்டது' என்பது அறுபது கொண்ட இறந்தகாலம் என விரியாமையின் இது காட்டாகாது என்பது ஒருதலை. பிள்ளையவர்கள் காட்டிய காலம் என்பது 'பொருளிடம்காலம்' என்ற பெயரின் வகைபாகிய காலமே யாகும்.

இதுகாறுங் கூறியவாற்றால் ஈற்றயல் திரிந்த வினைப்பெயர் ஒழிய ஏனையவை ஓசை வேறு பாட்டானும் சொற்றொடர் பானும் அன்றி வினைப்பெயராகா என்பதும், வினைப் பெயரிலக் கணங்கள் பிறவும் ஆராயப்பெற்றன.

இனி, இம்மாடு யான் கொண்டது என்பதில் கொண்டது என்பதை வினைமுற்றாகக்கூறின் வருமிழுக்கென்னை? மாடு என்ற வினைமுதல் போனின்ற செயப்படுபொருட்குப் பயனிலையா யிற்று, கொண்டது என்னும் வினைமுற்று. கொண்டது என்ப திற்கொள்ளுதல் வினை, யான் அவன் முதலிய சுதந்திரகருத்தா வினது ஆதலின், அதனையும் சேர்த்துக் கூறுதலே சிறப்புடைத் தாகும்.

சங்கரர் உரையில் 'தொழிற்பட' என்பதற்கு வினைப்பெயர் பட எனக்கூறாது வினை அதன்மேற்பட எனப்பொருள் கொள்ளு தலின் 'கொண்டது' முதலியனவற்றை வினைப்பெயராகக் கரு திற்றிலர் என்பதும் 'யான்கொண்டது இம்மாடு' எனக்கூறினும் எச்சப் பெயர்வினை ஈற்றினெய்தியதாகக் கொள்ளப்பெற்று வினைப்பெயராகா என்பது தேற்றம்.

இத்தொடர்மொழியுள் கொண்டது என்ற வினைமுற்றி னுள்ள கொள்ளுதல் வினை யான் என்னும் வினைமுதல் வினையே. இத்தொடர்வழா நிலையாங்கால் இம்மாட்டை யான் கொண்டேன் என்னும் பொருளில் இம்மாடு யான் கொண்டேன் எனவழங்கும். இத்தொடர் வழக்காற்றில் இம்மாடு யான் கொண்டது என வழுவாய் வருதலின் அதனை அமைத்தற்கே எழுந்தது இச்சூத் திரம். இவ்வாறே இவ்வீட்டை அவன் வாங்கினன் என்பது இவ்வீடு அவன் வாங்கினது எனவும், அம்மாடு நான் வாங்கினது

எனவும் இன்றும் வழங்கப்பெறுவதை நாம் காண்போம். இவ் வழக்காற்றில் மாடும் வீடும் என்றும் வாங்கப்பெறும் செயப்படு பொருளேயன்றி வாங்கும் வினைமுதலாகாமையின் அச்செயப்படு பொருள்களைச் செய்ததுபோல வைத்து தன் வினைமுதற்குரிய வாங்குதல் வினையை செயப்படு பொருட் கியைந்ததாக இட மாற்றியும் பால் மாற்றியும் பொருத்திக் கூறுதலே வழக்கிற் கேற்க உரித்தாதல் காண்க.

இங்ஙனமாக, செயப்பாட்டு வினையைச் செய்வினையாக ஓதப் பெறுதற்கு இச்சூத்திரம் எழுந்தது எனின், செய்யுள் வழக்கில் (உட்கப்படார் ஒளியிழப்பர்) "ஆறுபயனிலையும் ஏற்கப்படுதல்" எனவரும் செய்வினை செயப்பாட்டு வினையாயவற்றிற்கும், மற்றும், தன்வினை பிறவினையாயவற்றிற்கும் விதிவிதந்து, கூறல் வேண்டும். அங்ஙனங் கூறுமையான் குன்றக் கூறலாம். உலக வழக்கின்கணுள்ள இம்மாடு யான் கொண்டேன் என்ற பொரு ளில்வரும். இம்மாடு யான் கொண்டது என்பது போன்ற தொடர்மொழி வழுக்களுக்கு அமைப்பின்றி ஒழியும். ஆதலான் நூலாசிரியர்களுக்கு அது கருத்தன்றென்க. அதுவும் வினை மாற்றுதலுமே கருத்தாயின் விளங்க வைத்தல்பற்றி 'செயப் பாட்டு வினைச்சொல்லைச் செய்வினையாகத் தொழிற்படக் கிளத் தலும் வழக்கியல்மரபே' எனச் சூத்திரித்திருப்பர். அங்ஙன மன்றிச் "செயப்படு பொருளைச் செய்தது போலத், தொழிற் படக் கிளத்தலும் வழக்கினுளுரித்தே" எனச் செயப்படு பொருளையும் வினையையும் மாற்றிச் சொல்லுதல் மரபு என்பது பட இரண்டற்கும் அமைதி உடம்பொடு புணர்த்திக்கூறுதலால் சங்கரர் கூறியாங்கு வருதலே வற்புறுத்துமாறு அறிக.

இளம்பூரணர் ஒழிந்த ஏனை உரையாசிரியர்கள் எல்லாரும் செயப்பாட்டு வினையினைச் செய்வினையாக்க வந்தது என்று உரை வகுத்தனர். அங்ஙனமிருந்தும் உரையாசிரியராகிய இளம் பூரணர் கூறிய 'ஒருவகை வழூஉச் சொல்லமைத்தல் நுதலிற்று' என்ற உரையைப் பின்பற்றி மரபு வழூவமைத்தது என்றார் சங்கர நமச்சிவாயர்.

பொழில் 33-ம் பக்கத்து நமது பிள்ளையவர்கள், 'சங்கர நமச்சிவாயர் கூறியாங்கு நன்னூலார்க்கும் கருத்தாயின் செயப் படுபொருளைச் செய்ததுபோல' என உவமவாசகம் படக்கூறுது "செய்ததன் தொழிற்படக் கிளத்தலும்" எனப் பொருள் விளங்கச் சூத்திரித்திருப்பர். அங்ஙனமின்றிச் செய்ததுபோல என்றதனுலே உதாரண வாக்கியத்துள் சுதந்திர கருத்தாவாரா தென்பது போதரும் என்ருர்கள். 'செய்ததுபோல' என்றதை ஊன்றி நோக்கும்போது செய்தது எது? போன்றது எது? என்ற இருவினுக்கள் நிகழும். அப்போது செய்த சுதந்திர கருத்தாவும் போன்றது செயப்படு பொருட் கருத்தாவும் என விடையிறுக்கப் பெறுமாதலின் விளக்கத்திற்கு இரண்டனையுஞ் சேர்த்துக் கூறலே ஏற்றதாமாறு காண்க.

மற்றும் அவர்கள் செய்ததுபோல என்பதற்கு 'கருத்தா வைப்போல வைத்து' எனப் பொருள் கொள்ளினும் 'அதன் மேல் வினைமுதல் வினைஏற்றிக் கூறலும் என்பதற்குச் சூத்திரத் தில் சொல்லமைந்திலது என்ருர்கள். 'தொழில்—அவ்வினை முதல்வினையை, பட—அதன் மேற்பட, எற்றிக் கிளத்தலும் உரித்து எனப்பொருள் கொள்ளின் வருமிழுக்கென்னை? செயப் படுபொருளை அத்தொழிலைச் செய்த வினைமுதல்போல அத் தொழில் அதன் மேற்படக் கூறுதலும் வழக்கியல் மரபு என்ற நச்சினர்க்கினியருக்குக் கிடைத்த சொல்லமைதி சங்கர நமச்சி வாயருரைக்கு அமையாத தென்னையோ!

மற்றும் அவர்கள் சாத்தன் கண்ணெளுந்தான் என நோத லாகிய சினையின் வினையை முதல்மேல் ஏற்றிக் கூறினற்போல இம்மாடு யான் கொண்டது என்பதும் முடிந்ததென்று கருதினர் போலும் எனத் தாமே ஒரு வினு நிகழ்த்தி அதன் விடையாக யான் என்னும் உயர்திணைச் சொல்லோடு மாடும் என்னும் அஃறிணைச் சொல் ஒருங்கு முடிந்த வழுவமைதியாகும். அதனை இச்சூத்திரத்தாற் கூறுவது ஆசிரியர் தொல்காப்பியனர்க்குக் கருத்தாயின் கிளவியாக்கத்துள் வைத்திருப்பர் என்ருர்கள். இம்மாடு யான் கொண்டது என்பதில் அஃறிணைச் சொல்லோடு உயர்திணைச்சொல் ஒருங்குமுடிந்தது என்று கூறுதலேயமையும்

முதற்கண்ணிற்பதும் முடிபுக் குரிமைபூண்டதும் மாடாதலின், அங்ஙனம் திணைவிரவி வந்தாலும் சிறப்புமிகுதி இழிவு முதலிய வற்ருன் ஒருமுடிபு எற்கும். ஈண்டு எக்காரணம்பற்றி ஒருமுடி பேற்றது என்று கூறவியலாமையான் இவ்வையம் தோன்று தற்கே இடம் இன்று.

இன்னும், பிள்ளையவர்கள், "வினையியலுள் அஇருக்திரத் தைத் தொல்காப்பியனர் ஓதியவதனல் ஒரு வினைச்சொல் வாய் பாட்டாற் கூறவேண்டியதை வேருெரு வினைச்சொல் வாய்பாட் டாற் கூறும் வழக்கு வழுவமைப்பதே அவர்க்குக் கருத்தாம்" என்ருர்கள். இவர்கள் ஈண்டு வேருெரு வினைச்சொல் என்றது வினைப்பெயரையா? அல்லது நச்சினர்க்கினியரும் தெய்வச் சிலையாரும் கருதினற்போல செயப்பாட்டு வினையினைச் செய் வினையாக்குமதனையா? என்பது ஈண்டு ஆராயத்தக்கது; வினைப் பெயரையெனின் மற்ற வினை விகற்பங்களிலும் இவ்வாருன வழக்கிருத்தல்வேண்டும். செய்வினையாக்கும் அதனை யெனின் முன்னர்க் கூறியாங்குச் செய்வினையைச் செயப்பாட்டு வினை யாக்குதற்கும் தன்வினை பிறவினையாதற்கும் தனித்தவிதி கூறப் பெறுதல் வேண்டும். ஆதலால் இரண்டும் ஈண்டைக்காகா என்பது.

மற்றும் "இல்வாழ்வான் என்பான்" என்ருற்போல படு விகுதி தொக்கு வருவனவற்றிற்குச் சங்கரர் இலக்கணவிதி காட்டினரிலர் என்ருர்கள். ஒரு வினைச்சொல் மற்ற வினைச் சொல் வாய்பாட்டான் வழங்கல் செய்யுள் வழக்கினுட் பெரும் பாலும் பயின்றுவந்தும் இலக்கணக்கொத்து முதலிய நூலார் தவிர எனையோர் விதப்புவிதி கூருமையான் உரையானுணருவன என ஒழித்தார்.

இவ்வெழுத்தாணி யானெழுதியது என்பதன்கண் இவ் வெழுத்தாணியால் யானெழுதினேன் என்னும் வழா நிலையே கருவி கருத்தாவைப்போல நின்று யான் என்னும் வினைமுதலின் வினையேற்று வந்தது. இதுபோலியாமாறு எங்ஙனம்.

வடநூற் கொள்கையான கரும கருத்தாவின் அமைதியைப் பின்னர் ஆராய்வோம். (தொடரும்.)



# கலித்தொகையும் நச்சினார்க்கினியரும்.

ஆசிரியர். திரு. அ. வரதநஞ்சையபிள்ளை அவர்கள்,

(முற்றொடர்ச்சி துணர் 9. மலர் 8. பக்கம் 297.)

நம் உரையாசிரியர் பெருமானார், இங்ஙனம் உள்ளுறை யுவமங்களை விரித்துரைத்துக் கற்போர்க் குவகை பெருக்குவ தோடமையாது, செய்யுட்களிற் புலப்படும் மெய்ப்பாடுகளை நுனித்துணர்ந்து விளக்கிச் செல்லுந் திறனும் பெரிதும்வியந்து பாராட்டற்குரியதாம். அத்தகை மெய்ப்பாடுகளை அவர் இன்ன வாறு பொருட்டோடு விளக்குகின்றாரென இதனைக் கற்போர்க்கு எடுத்துக் காட்டுமுன் "மெய்ப்பாடு" என்பது ஈது எனத் தொல் காப்பியனார் உரைத்தவாறு ஓராற்றால் விளக்குவது, ஈண்டைக் குப்பொருந்துவதொன்றாகலின், அது கூறுதும்

மெய்ப்பாடு 'என்பது பொருட்பாடு; அஃதாவது உலகத் தார் உள்ள நிகழ்ச்சி, ஆண்டு நிகழ்ந்தவாறே புறத்தார்க்குப் புலப்படுவதோராற்றான் வெளிப்படுதல்.' எனத் தொல்காப்பி யத்தில் உரைக்கப்பட்டது. அம்மெய்ப்பாடுகள் தாம்,

நகை, அவலம், இழிபு, வியப்பு, அச்சம், வீரம், வெகுளி உவகை என்னும் * எட்டுவகைச் சுவைப்பொருளும், அவ்வச் சுவையை நுகரும் பொறியுணர்வும், அவ்வுணர்வுபற்றி உள் ளத்தே நிகழ்கின்ற குறிப்பும், அக்குறிப்பினால், கண்ணீரரும்பல்

---

* நடுவுநிலை (சமநிலை)ச் சுவையையும் உடன் கூட்டிச் சுவைப் பொருள் ஒன்பதென்பாரும், வெகுளிச்சுவையை விலக்கி எட்டென்பாரும் அவலச்சுவையை நீக்கிக் கருணைச்சுவையைக் கொள்வாருமாகப் பலதிறத்தர் ஆசிரியர். அவர், அங்ஙனம் கொண்டது, சமநிலைச்சுவை, உலகியல் நீங்கி னார்பெற்றியாகிய "செஞ்சாந்தெறியினும் செத்தினும் போழினும், நெஞ் சோர்ந்தோடா நிலைமைத்"தாகலின், உலகியலில் வாராதென்றும், வீரச் சுவையுட்படும் வெகுளி வேறாகாது என்றும், அவலச்சுவையே பிறரவலங் கண்ணுற்ற வழிக்கருணையாகமாறுதலின் அஃது வேறன்றென்னாது, சிறப் புடைமையின் வேறென்றலே தகும், என்றும் கருதிய கருத்துவகையா னென்க.

மெய்ம்மயிர் சிலிர்த்தல் கம்பித்தல் முதலியனவாக உடம்பின்கட் டோன்றும் சத்துவங்களும் என ஒரோ ஒன்று நந்நான்காகி முப்பத்திரண்டாகும் என்பர். இங்ஙனமன்றிச் சுவைப்பொருளும் பொறியுணர்வும் ஒன்று கூடிய வழியன்றிச் சுவை பிறவாமையின் அவ்விரண்டனையும் ஒன்றாகவும், குறிப்பு, சத்துவம் அல்லது விறல் என்னும் இவ்விரண்டும்முறையே உள்ள நிகழ்ச்சியும், உடம்பின்வேறுபாடுமா யடங்கலின் இவ்விரண்டினையும் ஒன்றாகவும்கொண்டு, முற்கூறிய எண்வகைச் சுவைகளோடு றழ்ந்து பதினாறுவகை யாக்குதலும், எண்வகைச் சுவைகளின் விகாரங்களாகிச் சத்துவங்கள் அவற்றுள்ளடங்குதலால் எட்டெனக் கோடலும் ஆசிரியர் கருத்தாதலுமுணர்க.

நாடக நூற்குச் சிறந்த பொருளவாகிய இச்சுவைகளை 'வழக்குஞ் செய்யுளுமா யிருமுதலின்.' என்று புகுந்து இலக்கணங் கூறிய ஆசிரியர், உலகியலுணர்த்துமாற்றால் மெய்ப்பாடென வகுத்துத் தனியியலானுரைத்துப் பொருளிலக்கணத்தோடு சார்த்திப் பொருத்தினரென்க. நாடகவழி நூல்செய்த ஆசிரியர் செயிற்றியனார், சுவையையும் அதனுணர்வையும் ஒன்றாகவடக்கிச் சுவையெனவே கொண்டு, குறிப்பு சத்துவம் என்னுமிரண்டோடுங்கூட்டி "எண்ணிய மூன்று மொருங்கு பெறுமெனநுண்ணிதினுணர்ந்தோர் நுவன்றனரென்ப." என மூன்றுவகையின் முடிப்பாராயினர்.

இம்மெய்ப்பாடுகளை எண்வகையவாக மேற்கொண்டு நகைச்சுவை முதல் உவகை யிறுதியாக ஆசிரியர் தொல்காப்பியனார் உரைத்த முறைவைப்பைப் பொருட்டோடு விளக்கிச் செல்லும் அவ்வுரை நயமும் ஈண்டு அறிந்தின்புறற்பாலது. அஃதாமாறு:-

எப்பாலவர்க்கும் இன்பம்பயக்கும் விளையாட்டுப் பொருட்டாதலின் நகைச்சுவை முதற்கண்ணிடம் பெறுவதாயிற்று. அதற்கு மறுதலையாகிய அழுகை (அவலம்) அதன்பின் வைக்கப்பட்டது. இளிவரவு (இழிவு) அதன்பின் வைத்தான் அழுகையும் இளிவரவோடு இயைபுடைமையின் தானிளிவந்து பிறிதோர் பொருளை வியக்குமாதலின் இளிவரலின்பின் வியப்பு

வைத்தான். வியப்புப்பற்றியும் அச்சம் பிறத்தலின் அச்சத்தை அதன்பின் வைத்தான். அச்சத்திற்கு மறுதலையாகிய வீரத்தை (பெருமிதம்) அதன்பின் வைத்தான். அவ்வீரத்தின் பயனாகிப் பிறர்க்குவரும் வெகுளியை அதன் பின்னே வைத்தான். வெகுளிக்கு மறுதலையாகலானும், எல்லாவற்றினும் ஈண்டு ஓதுதற்குச் சிறந்ததாகலானும், முதற்கண் ஓதிய நகைக்கு இயைபுடைத்தாகலானும் உவகையை அவ்விற்றுக் கண்வைத்தான் என்பது. இனி இவற்றின் விரி. இவ்வெண் பொருளும் ஒவ்வொன்று நாற்பகுதியவாய், முப்பத்திரண்டாம் அன்றியும், முதற்கண்ணின்ற நகை முதலிய நான்கும், தன் பொருட்டு, பிறர் பொருட்டென இருவகை நிலத்தின், ஓரோவொன்று நந்நான்காகி, முப்பத்திரண்டாகவும், பின்னின்ற அச்ச முதலிய நான்கும், அவ்வாறிரண்டாகாது தன் பொருட்டாகவே நின்று பதினாறாகவும் விரிக்கவும் பெறாஉம். அவை வருமாறு:—

(1) நகை—எள்ளல், இளமை, பேதைமை, மடன் என நான்கும் தன்பொருட்டினும், பிறர்பொருட்டினும் வருதலின் 8

(2) அவலம்—இளிவு, இழவு, அசைவு, வறுமை என நான்கும் தன்னானும் பிறரானும் வருதலின் 8

(3) இளிவரல்—மூப்பு, பிணி, வருத்தம், மென்மை என நான்கும் மேற்கூறியவாறு வருதலின் 8

(4) வியப்பு (அல்லதுமருட்கை)—புதுமை, பெருமை, சிறுமை, ஆக்கம் என்னும் நான்கும் மேற்கூறியாங்கு 8

(5) அச்சம்—அணங்கு, விலங்கு, கள்வர், தமதிறைவர் என 4

(6) வீரம் (அல்லது பெருமிதம்)—கல்வி, தறுகண், புகழ், கொடையென 4

(7) வெகுளி (அல்லது உருத்திரம்)—உறுப்பறை, குடிகோள், அலை, கொலையென 4

(8) உவகை (அல்லது சிங்காரம்)—செல்வம், புலன், புணர்வு, விளையாட்டு என 4

ஆக நாற்பத்தெட்டாதல் காண்க. 48

இவ்வாறன்றி வேறோராற்றான் முப்பத்திரண்டாக ஓதப்படுதலு முண்டு. இவையும் முற்கூறியவற்றுள் அடங்குவனவுமாம்.

அவையாவன:—

(1) உடைமை, அதாவது செல்வம், முற்கூறிய உவகை, செல்வ நுகர்ச்சியான்வரும் மகிழ்ச்சி. இவ்வுடைமை அச்செல்வத்தைக் கருதி மகிழ்தற் கேதுவாகிய பற்றுள்ளம். அவ்வுள்ளத்தான் வரும் மெய்வேறுபாடு இதன் சத்துவமாம். பின் வருவனவற்றிற்கும் இவ்வாறே கொள்க.

(2) இன்புறல். அச்செல்வமுடைமையை வியந்து நினையுந்தோறும் இடையிட்டுத் தோன்றும் மனமகிழ்ச்சி உடைமைக்கும் இதற்குமுள்ள சிறிய வேற்றுமை நுணுகி யறிதற்பாலது.

(3) நடுவு (சம) நிலை. இது முன்னர்க் கூறப்பட்டது. நாடகத்துள் வேண்டப்படுவது. இஃது சிறுவரவிற்று.

(4) அருளல். இது முற்பகுதியில் அவலச் சுவையுளடங்குமெனக் கூறப்பட்டது. நுனித்துணரின் அவலமும் கருணையும் வேறுதலின் ஈண்டுப் பிரித்துரைக்கப்பட்டது.

(5) தன்மை—அதாவது சாதித் தன்மை. அவ்வச்சாதியாரின் நடையுடை பாவனைகளாகத் தோன்று மியற்கை.

(6) அடக்கம்—உயர்ந்தோர் முன்னர்த் தாழ்ந்தோர் அடங்கியொழுகும் பணிவொழுக்கம். அவை தாழ்ந்த மொழியும், தணிந்த நடையும், தானை (உடை) மடக்கலும், வாய் புதைத்தலும் முதலாயின.

(7) வரைதல்—காப்பன காத்துக் கடிவன கடிந்து அவ்வக் குலத்தாரொழுகும் ஒழுக்கம். முற்கூறிய தன்மை, பண்பாதவின் தொழிலின் பாற்பட்ட இதனோடு வேற்றுமை யுறுதல் தெளிக.

(8) அன்பு—அருள் தோன்றுவதற்குக் காரணமாகி மனத்தினிகழும் நேயம். அஃதுடையார்க்குப் பிறர்கட்டுன்பம் கண்டுழிக் கண்ணீர் விழுமாகலின், அவ்வருளானே அன்புடைமை

விளங்குமென்பது. இவையெல்லாம் தத்தம் மன நிகழ்ச்சிகளை வெளிப்படுப்பனவாகலின் மெய்ப்பாடெனப் பட்டன. மேற் போந்தவற்றிற்கும் மேல்வருவனவற்றிற்கும் இஃதொக்கும்.

(9) கைம்மிகல்—ஒழுக்கக்கேடு. அது சாதித் தருமத்தினை நீங்கினமை. தன்னுள்ள நிகழ்ச்சியானே பிறர் அறியுமாற்றான் ஒழுகுதல்.

(10) நலிதல்—பிறர்க்கின்னா செய்து நெருங்குதல். அது தீவினைமாக்கள் கண்ணிகழும். அவரைக் கண்டு அச்சம் நிகழுமாயின் அஃது அச்சத்தினுள் அடங்குமாகலின் அதனோடிதனிடை வேற்றுமை பெரிதென்க.

(11) சூழ்ச்சி—சுழற்சி. சூழ்வருவானைச் சுழல் வருமென்றவின், அஃது, வெளிப்படுவதோர் குறிப்பின் அவன் கட்டோன்றின் அதுவும் மெய்ப்பாடு. அஃதாவது மனத்தடுமாற்றம்.

(12) வாழ்த்தல்—இது பிறரால் வாழ்த்தப்படுதலின் பிறவினையாமெனினும், அவன் வாழ்கவென வாழ்த்துவோன் குறிப்போடு தோன்று மெய்ப்பாடாகலின் அமையும்.

(13) நாணுதல். நாணுள்ளம் பிறர்க்கு வெளிப்பட நிகழும் நிகழ்ச்சி.

(14) துஞ்சுதல்—உறக்கம். அது நடந்து வருகின்றோன் கண்ணும், இவன் உறக்கக் குறிப்பினன் என விளங்குதலின் மெய்ப்பாடெனப் பட்டது.

(15) அரற்றல்—அஃதாவது அழுதலன்றிப் பலவுஞ் சொல்லித் தன் குறை கூறுதல்.

(16) கனவு—அஃதாவது வாய்வெருவுதல். அதனானும் அவனுள்ளத்தின்கண் நிகழ்கின்ற காட்சியொன்றுண்டென்றறியப்படும் ஆதலின் மெய்ப்பாடாம்.

(17) முனிதல்—வெறுத்தல். அஃது அருளுஞ் சினமுமின்றி இடைநிகர்த்ததாதல். (வடநூலார் உபேக்ஷையென்பர்).

(18) நினைதல்—விருப்புற்று நினைத்தல். நின்னை மிகவும் நினைத்தேன் என்பது வழக்காதலின் அந்நினைவுள்ளம் பிறர்க்குப் புலனாதலின் மெய்ப்பாடாயிற்று.

(19) வெரூஉதல்—விலங்கும் புள்ளும்போல வெருவி நிகழும் உள்ள நிகழ்ச்சி. அது அஞ்ச வேண்டாதன கண்டுழியும் கடிதிற் பிறந்து மாறுவதோர் வெறி. ஆகலின் அச்சத்திற் சிறிது வேறு பட்டது.

(20) மடிமை—சோம்பு.

(21) கருதல்—மறந்ததனை நினைத்தல் ஆகலின், இது முற் கூறிய நினைத்தலின் வேறாயது.

(22) ஆராய்ச்சி—ஒருபொருளை நன்று தீதென்றாராய்தல். ஆராய்கின்றானெனப் பிறருணரும் சத்துவம்தோன்றின் மெய்ப் பாடாம்.

(23) விரைவு—இயற்கை வகையானன்றி ஒருபொருட்கண் விரைவு தொழில்பட உள்ள நிகழுந் தோற்றம்.

(24) உயிர்ப்பு—வேண்டிய பொருளைப் பெறாதவழிக்கையற வெய்திய கருத்துப் புலப்பாடு. இது நெட்டுயிர்ப்புத் தோன்றற் கேதுவாகலின் உயிர்ப்பென ஆகுபெயராற் கூறப்பட்டது.

(25) கையாறு—மேற் கூறியவாறு நெட்டுயிர்த்தலுமின்றி வினையொழிந்து அயர்வுறல்.

(26) இடுக்கண்—மலர்ந்த நோக்கமின்றி மையல் நோக்கம் படவரும் இரக்கம்.

(27) பொச்சாப்பு—(மறதி) அற்றப்படுதல். அஃதாவது பாதுகாத்துச் செல்கின்ற பொருட்கண் யாதானும் ஓரிகழ்ச்சி யான் இடையறவுபடுதல்.

(28) பொறாமை—அழுக்காறு. பிறர் செல்வங் கண்டவழி வேண்டாது நெஞ்சழிதல்.

(29) வியர்த்தல்—பொறாமை முதலியனபற்றி மனம் புழுங் கல்.

(30) ஐயம்—ஒரு பொருள்மேல் இருபொருட்டன்மை கருதி வரும் மனத்தடுமாற்றம்.

(31) மிகை—கல்லாமையும் செல்வமும் இளமையும் முதலாகவரும் உள்ளமிகுதி. (தருக்கு) கல்வியாலுந் தருக்கலுளதாதலின் கல்லாமை எனற்பாலது. கல்வியென்றிருத்தல் சாலாதோவெனின்:—சாலாது. தருக்குத் தருங் கல்வியைக் கல்வியென ஆன்றோர் கருதாமையின் என்க.

(32) நடுக்கம்—அன்பும் அச்சமும் முதலாக உடம்பிற் புலப்படுமாற்றான் உள்ளம் நடுங்குதல். புதல்வர்க்குப் பிணியில் வழியும் எவனாங்கொலோ வென்று நடுங்குதல் அன்பான் நடுங்கல். அச்சச்சுவை பிறந்த வழித்தோன்றிய நடுக்கம் அச்சத்தாற்றோன்றிய நடுக்கம்.

இக்கூறிய இருபாலவாய மெய்ப்பாடுகள் அனைத்தும், அகப்பொருள் புறப்பொருள் என்னும் இருவகைப் பொருட்கும் பொதுவாகும். இவை உலக வழக்காதலின் நாடக வழக்கிற்கு மேற்பனவாம்.

இனி, அகத்திணை யொன்றற்கே பெரிதும் உரியனவாய் அதனுள்ளும் களவிற்குச் சிறந்துவரும் மெய்ப்பாடுகளிவை யெனத் தொல்காப்பியத்து விதந் தோதப்படும் மெய்ப்பாடுகளும் சிலவுள. அவற்றையும் ஈண்டுக் கூறின் விரியும். அந்நூலுள் விளங்க வுணர்கவென விடுத்து, ஆசிரியர் நச்சினார்க்கினியர் கலித்தொகை யுட்கொண்ட மெய்ப்பாடுகளில் இரண்டொன்றை மாதிரிக்காகக் காட்டுவாம்.

குறிஞ்சிக்கலி. (1).

கயமலருண் கண்ணாய் காணா யொருவன்
வயமானடித் தேர்வான் போலத் தொடைமாண்ட
கண்ணியன் வில்லன் வருமென்னை நோக்குபு
முன்னத்திற் காட்டுத லல்லது தானுற்ற
நோயுரைக் கல்லான் பெயருமற் பன்னாளும்
பாயல் பெறேஎன் படர்கூர்ந் தவன்வயிற்

சேயேன் மன்யானுந் துயருழப்பேன்

.... .... .... ....

இப்பாட்டினுள், தலைவியின் களவுப் புணர்ச்சியினை † நாற்றம், தோற்றம் முதலிய எழுவகையானும் உணர்ந்த தோழி, "மெய்யினும் பொய்யினும் வழிநிலைபிழையாது பல்வேறுகவர் பொருள் நாட்டத்தாற்" கூறுகின்றாள்,

"கயத்தின்கண் மலரும் நீலமலர் போலும்மையுண்ட கண்ணினை யுடையவளே! யான் கூறுகின்றதனை நின்மனத்தான் ஆராய்ந்து தெளிக. தனக்கு நிகரில்லாதானொருவனை, வலியையுடைய யானை முதலியவற்றின் அடிச்சுவட்டைத் தேடுவான் போலக் கட்டுதன்மாட்சிமைப்பட்ட கண்ணியையுடையனாய் வில்லை யுடையனாய் வந்து, என்னைப் பார்த்துத்தான் உற்ற நோயை மிகவும் குறிப்பாலே யுணரக்காட்டுவதன்றிச், சொல்லால் வெளிப்படவுரையானாகிப் பலநாளும் மீண்டுபோகின்றான். அது கண்டு, அவனேயன்றி அவனிடத்து மிகவும் உறவில்லாதயானும் அவன் என் செய்கின்றானென்னும் நினைவு மிக்குத் துயில்பெறேனாய் வருத்தத்திலே விழுந்து அழுந்துகிற்பேன்............எனக் கூறினள் என்னும் இப்பகுதியில், அவனும் "தானுற்ற நோயுரைக் கல்லான் பெயரும்மன் பன்னாளும்" என்றது தலைவன்பாற் றோன்றிய இளிவரல், அதனை யுணர்ந்ததோழி "பாயல் பெறேன் படர் கூர்ந்தவன்வயின்........யானுந் துயருழப்பேன்." என்னுமிது பிறன் கட்டோன்றிய இளிவரல்; இதனால் அவலச் சுவை பிறந்தது, என மெய்ப்பாடு சுட்டுகின்றார். முற்காட்டிய எண்வகை மெய்ப்பாடுகளில் மூன்றாமெண்ணு முறைக்கணின்ற இளிவரலின் நாற்பகுதிகளினும் மூன்றாவதாகிய வருத்தந் தோன்றி, அதனால் இரண்டாமெண்ணு முறைமையினின்ற அவலச்சுவையின் முதற்கண்ணதாகிய இளிவு புலப்பட்டது. இங்ஙனமாதல், இளிவரலோடு அவலமும் தொடர்புறுதலின் என்க.

பாலைக்கலி (கூ) வறியவன் இளமைபோல்........வனையே

---

† நாற்றம், தோற்றம், ஒழுக்கம், உண்டி, செய்வினை மறைத்தல், செலவு, பயில்வு, எதிர்பாட்டுப் புணர்ச்சி என்னுமிவையேழும், தோழிக்குத் தலைவியின் களவொழுக்கம் புலப்படுத்துங் கருவிகளாம். தொல்-கள-சூ. 22.

இது தலைமகனாற் பிரிவுணர்த்தப்பட்ட தோழி இவ்வகைப் பட்ட சுரத்தில் பொருள் காரணமாகப் பிரிகின்றீரெனக் கேட்பின், தலைவி இவ்வாறுவாள் எனச்சொல்லிச் செலவழுங்குவித்து அதனைத் தலைமகட்குச் சொல்லியது.

இச்செய்யுளின் பொருளைச் சுருங்க உரைத்து, நச்சினார்க்கினியர் காட்டிய மெய்ப்பாடுகளையும் விளக்குவாம்.

தலைவரே! பிரமசரிய நெறிகாத்தலான் இளமைப் பயன் கொள்ளாது வறியனானவன், இளமைச் செவ்வியின்றி யிருக்குமாறு போலத் தளிர்கள் வாடின கொம்புகளை யுடையவாய், உலோபியாய் மனச்சிறுமையுடையான் பெற்ற செல்வம், தன்னைச் சேர்ந்தாரைப் பாதுகாவாதவாறு போலத் தன்கீழ் நின்றார்க்கு நிழல் தருவதின்றாய், யாவரிடத்தும் உலக ஒழுக்கத்தைக் கடந்து தீங்கு செய்து புகழ் கெட்டவனுடைய முடிவு காலத்து அவன் கிளையோடு கெடுமாறுபோல, மரம், சினையேயன்றி வேரோடும் நின்று வெம்பும்படியாக ஞாயிற்றின் பரந்த கதிர்கள் சுடுகையால் வருந்திக், குடிமக்கள் கூக்குரலிடும்படிக் கொலைத்தொழிலுக் கஞ்சாத அமைச்சராலே நெறியன்றிப் பொருளை வாங்கிக்கொண்டு செங்கோல் வளைந்த அரசனுடைய குடை நிழலிற்றங்கிய உலகம்போல, உலறின உயர்ந்த மரங்களை யுடைய வெய்ய காட்டினிடத்துப் பொருள் வேட்கையால் நீர் போவீர் என்று யான் கூறக்கேட்பின், அன்னத்தின் தூவி முதலியவற்றாலியன்ற பஞ்சணைபின்மீது துயிலுங்காலையில் நீர் அவள் வருத்தம் அறியீராய் அவள் முயங்கியகையை விட்டுச் சிறிது நீங்குவீராயினும் அது பொறாது தனிமைகொண்டு வருந்தும் எமது தலைவி நெஞ்சழிந்து மிகவும் ஒளி கெடுவதொன்றோ! இறந்துபடுவாளே;

முயன்றுதேடும் பொருள் மேற்கொண்ட ஆசையால் நீர் பிரிவீரென்று யான் கூறக் கேட்பின், அம்மெல்லியல், நீர் ஓர் விளையாட்டை விரும்பி நீங்கியதாகப் பாவனை செய்து சிறிது பொழுது நீட்டிப்பினும் அத்துணை நீக்கத்துக்கும் மனம் பொறாமல் கலங்குகின்றவள் நீர்வாரும் கண்கள் உறக்கம் பொருந்தாவாய் நினைவு மிகுவதுடன் நிற்பளோ? இறந்துபடுவாளே!

நீர் பொருளை விரும்பிப் பிரிந்து போவீரென யான் கூறக் கேட்பின் அம்மங்கை, நின் அருட்பார்வை சற்று நீங்கினும் வருத்தங்கொண்டு நெஞ்சழிபவள், அழகுகெட்டு மிகவும் மயக்கு முறுவதோடு நிற்பளோ? இறந்துபடுவாளே!

புனைந்த பூணினையுடையோனே! நீர் பொருள் தேடுதலை விரும்பிப் போவீரேல் இவளுடைய உயிர்தானும்போமென்று 'தலைவி! நின் பிரிவாற்றாமையைத் தலைவர்க்கு நான் சொல்ல அவர் பிரிந்து போதலை மெல்லத் தவிர்ந்தனர்.' இனி நின் கை வளை கழலாதிருப்பனவாக', எனத்தோழி தலைவிக்குக் கூறிய இக்கூற்றினால், தலைவிக்குப் புணர்வென்னும் உவகையும், தலைவற்கு இளிவும், தோழிக்கு அச்சமும் பிறந்தன; என்று நம் உரையாசிரியர் நவில்கின்றார். தலைவன் போக்கொழிந்ததாற் பிறந்தவுவகை, செல்வ முதலிய நால்வகையினுட் புணர்வென்னும் வகையிற்சார்வதென்பார், தலைவிக்குப் புணர்வென்னு முவகை தோன்றிற்றென்றும், தான் புறப்படின், தலைவியினுயிரும் உடலினின்று புறப்படுமெனத் தோழி கூறக் கேட்டமையிற்றலைவற்கு, அத்தகைய அன்புமிக்காளைப்பிரியஎண்ணியதை நோக்கி இளிவரல் தோன்றிற்றென்றும், தலைவன் பிரிவு பொறாது தலைவி உயிரிழப்பளே என்று கருதியமையாற் றோழிக்கு அச்சம் பிறந்ததென்றும் விளங்க வுரைத்தமை நோக்கற்பாலது. (தொடரும்.)

---

## பின்னங்குடிச் சுப்பிரமணியசாத்திரியார் தொல்காப்பியச் சொல்லதிகார வாராய்ச்சியுரை மறுப்பின்மேல் செந்தமிழ்ப்பத்திராதிபர் திரு. நாராயணையங்கார்எழுப்பிய

# தடையும், அதற்கு விடையும்.

---

திரு. ம. நா. சோமசுந்தரம் பிள்ளையவர்கள்,
தமிழ்ப்புலவர், மன்னார்குடி.

(முற்றொடர்ச்சி துணர் 10. மலர் 6. பக்கம் 250.)

இனிச் செந்தமிழ்ப் பத்திராசிரியர் 'துளவஞ்சூடிய வறிதுயிலோனும்.......நிறனுழுவளைவாய் நாஞ்சிலோனும்..........இலங்கொளி மறுப்பிற்களிறும் ஆகி, மூவுரு ஆகிய தலைபிரி ஒருவனை'

யென்னும் பரிபாடற் பகுதியுள், 'ஆகிய' என்னும் பெயரெச்ச வினைச்சொல்லை 'ஆகிய' 'உள்ள' எனப் பிரித்து, அவற்றிற்கு இடையே உம்மையை விரித்து, 'ஆகியும் உள்ள' எனப்பொருள் விரித்து, களிறுமாகியும் மூவுருவாகியும் உள்ள ஒருவன் எனக் கூட்டி முடித்தவர், அவ்வாறு விரித்துரைப்பதற்கு இலக்கண விதி கூறப்புகுந்து,

(1) வினைமுதனிலை வினைவிகற்பங்களுக்கெல்லாம் பொது வாய் நிற்கும் எனவும், வினையெச்சப் பொருண்மைபற்றி வினையெச்சம் ஆதலும் பெயரெச்சப் பொருண்மை பற்றிப் பெயரெச்சம் ஆதலும் உண்டெனவும், அவ்விலக்கணம்பற்றி ஆகிய என்னும் பெயரெச்ச வினைச்சொல்லின் பகுதியாகிய 'ஆகு' என்பதனை வேறாகப் பிரித்து அதனை ஆகியென்னும் வினையெச்சமாகக் கொள்ளப் பட்டதெனவும்,

(2) 'தாரணி மைந்தர் தவப்பயன் சான்மேனக்
காரணி கூந்தற் கயற்கட் கவிரிதழ்
வாரணி கொம்மை வகையமை மேகலை
ஏரணி யிலங்கெயிற் றின்னகை யவர்'

என்னும் (பரி-22) பகுதியுள் 'சான்மென' என்னும் வினையெச்சம், 'இன்னகையவர்' என்பது 'இனிய நகையினையுமுடைய மகளிர்' என இரண்டாவதனோடு விரிந்த உடைய என்னும் பெயரெச்சங்கொண்டு முடிந்ததுபோல, அந்த ஆகு என்னும் முதனிலை ஆகியென்னும் வினையெச்சமாய் அதனொடு விரிந்த 'உடைய' என்னும் பெயரெச்சத்தைக் கொண்டு முடிந்தது எனவும்,

(3) இவ்வாறு முடிபு கொள்ளுதலே பரிமேலழகர் கருத்தெனவும் கூறினர்.

மேற்குறித்த மூன்றுரைகளும் முறையே ஐந்தாவதும் ஆறாவதும் ஏழாவதும் ஆகிய பிழையாம்.

ஐந்தாவது பிழையின் விளக்கம்:—வினைச்சொல்லின் முதனிலை நின்றபடியே நின்று வினையெச்சப் பொருள்பட்டு வினையெச்சம் ஆகும் என்பதும், பெயரெச்சப் பொருள் பட்டுப்

பெயரெச்சம் ஆகும் என்பதும், பிற்காலத்துப் புலவர் சிலர், தொல்காப்பியனார், நன்னூலார் கருத்துணராமல் கொண்டதோர் போலியிலக்கணம்.

முதன் முதலாக இவ்வாறு ஓர் புதிய இலக்கணத்தை கற்பித்தவர் பிரயோக விவேக நூலார். அவரும் வினைச்சொல்லின் பகுதியே வினையெச்சமாகுமென்றேனும் பெயரெச்சமாகுமென்றேனும் கூறினரல்லர். அவர் இதுபற்றி 'முன்னிலை யேவல் ஒருமைச் சொற்போலும்' என்னும் காரிகை யுரையுள் கூறியதெல்லாம் பின் வருமாறே. 'முதனிலைவினை முன்னிலையேவன் மாத்திரையாய் நில்லாது வினையெச்சப் பொருட்டாயும், பெயரெச்சப் பொருட்டாயும், புடைபெயர்ந்து வினை தன்னைச்சொல்லும் பெயர்ப் பொருட்டாயும், முற்றுச் சொல்லாய் நின்றவிடத்து அம்முதனிலை பிரிந்து நின்று, வினை தன்னைச் சொல்லும் பெயர்ப் பொருட்டாயும் நிற்கும் என்று கூறி,

(உ-ம்) 'வரிப்புனைபந்து' (வரிந்து புனைந்த பந்து)

'அறுவேறு வகையின்' (அற்று வேறு வகையின்)

'பாலறிவந்த' (பால் அறிய வந்த). 'சாக்குத்தினான்'

(சாவக் குத்தினான்). பொருதகர் (பொருதகர்)

'அறிகொன்றறியான்' (அறிதலைக்கொன்று)

'தேரான் பிறனை.......இடும்பை தரும்' (தெளிதல்—தரும்)

எனக் காட்டினர்.

அங்ஙனம் கூறிய பிரயோக விவேக நூலார் அப்பால் 'ஆயுமலர்தம்' என்னும் காரிகையுரையுள் 'சாவக் குத்தினான்' 'பாலறியவந்த' என்புழிச் 'செய'வென்னும் எச்சத்தின் இறுதி அகரம் 'சாவ என்னும் செயவெனெச்சத்-திறுதி வகரம் கெடுதலும் உரித்தே' என்னும் சூத்திரவிதியால் கெட்டதென்றும், 'வரிந்து புனைந்த பந்து' என்பதிலே வரிந்து என்னும் செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சவிறுதியும் அவ்வாறே கெட்டு 'வரிப்புனை பந்து' என நின்றதென்றும் கூறினர். அன்றியும் அவர் 'செய்யாய்' என்னும் முன்னிலை வினைச்சொல் ஈறுகெட்டுச் 'செய்' என நின்றதெனவும் கூறினர். ஆகவே, 'செய்' என்னும்

வினைமுதனிலையே நின்றாங்கு நின்று பெயரெச்சமாகும் என்பதும் வினையெச்சமாகும் என்பதும் அவர்க்கும் கருத்தன்று போலும் என்க.

இலக்கணக்கொத்து நூலாரும் அப்போலி யிலக்கணத்தை யெடுத்தோதி, அது 'பிறர் மதங் கூறல்' என்று குறித்து, அதனைப் பலபடியானும் மறுத்தார். அவ்வாறாகவும், நன்னூலில் வினைமுற்றே வினையெச்சமாகலும்' என்னும் சூத்திரத்திற்குச், சங்கர நமச்சிவாயர் எழுதிய விருத்தியுரையின் இறுதியிலே, வேறு யாரோ ஒரு புலவர் அப்போலியிலக்கணத்தை எழுதிச் செருகினர். பின்னர் அந்நூற்குக் காண்டிகையுரையென எழுதினரெல்லாம் ஆராயாமலே அப்போலி யிலக்கணத்தை மிகவும் நுட்பமாகக் கண்டார்போல எடுத்துக் காட்டினர். 'பழக்கம் கொடியது' ஆகலின், அவ்வுரையிலே பயின்றாரெல்லாம் அக்கொள்கையை விடார் ஆயினர். ஆயினும், அது தவறுதல் அறிக. எனவே, வினைச்சொல்லின் பகுதி நின்றாங்கே நின்று வினையெச்சமாதலும் பெயரெச்சமாதலும் யாண்டும் இல்லையென்பது தெளிக.

இனி ஆறுவது பிழையின் விளக்கம்:— 'தாரணிமைந்தர் தவப்பயன் சான்மென' என்பதிலே 'சான்மென' (தவப்பயன் பெரிதென்று கண்டார்கூற) என்பது 'செய' என்னும் வாய்பாட்டு வினையெச்சம். 'வினையெஞ்சு கிளவிக்கு வினையும் குறிப்பும்—நினையத் தோன்றிய முடிபாகும்மே.' என்னும் சூத்திர விதியால் 'இன்னகையவர்' என்னும் வினையாலணையும் பெயரின் விரியாகிய 'இனிய நகையினை உடைய மகளிர்' என்பதிலே 'உடைய' என்னும் பெயரெச்சத்தைக் கொண்டு முடிந்தது. வினையாலணையும் பெயர் என்பது பொருள்வகையால் பெயரெச்ச வினைச்சொல்லும் அதனை முடிக்கும் பெயரும் தொக்கு ஒருசொல்லாக நிற்பதேயாம். 'இன்னகையவர்' என்பது ஈண்டுக் குறிப்பு வினையாலணையும் பெயர் ஆதலால் 'அதுச்சொல் வேற்றுமை உடைமையானும்' என்னும் சூத்திர விதியால் 'இனிய நகையினையுடைய' என விரித்துரைக்கலாயிற்று. ஆகவே 'சான்மென' என்னும் 'செய' என்னும் வாய்பாட்டுவினையெச்சம்

மேற் கூறிய சூத்திர விதியால் விரிந்த 'உடைய' என்னும் குறிப்புப் பெபரெச்சத்தைக் கொண்டு முடிந்ததென்றது முறையே. ஆயினும், ஈண்டு 'ஆகிய' என்னும் பெயரெச்சத்தின் முதனிலையாகிய ஆகு என்பது 'ஆகி' யென்னும் வினையெச்சமாய், அதனோடு விரிந்த 'உள்ள' என்னும் குறிப்புப்பெபரெச்சத்தைக் கொண்டு முடிந்ததென்றது பொருந்தாது. முற்குறித்த 'இன்னகையவர்' என்பது குறிப்பு வினையாலணையும் பெயர் ஆதலால் அங்கே 'உடைய' என்னும் சொல் விரித்து முடித்தற்கு ஏற்புடைத்து. இங்கே 'ஆகிய' என்பது தெரிநிலை வினைப் பெயரெச்சம் ஆதலால், இதன்கண் 'உள்ள' என்னும் சொல் விரிதற்கு ஏற்புடைத்தன்று. 'வரிப்புனை பந்து' என்றவிடத்தும் வரிந்து என்னும் வினையெச்சச் சொல், வேறு சொல்லாகிய புனைந்த என்னும் பெயரெச்சம் கொண்டு முடிதற்கு ஏற்புடையது. இங்கே 'ஆகிய' என்னும் ஒரு சொல்லையே 'ஆகி' 'உள்ள' எனப் பிரித்து முடிபு காட்டுதற்கு இலக்கணவிதி யாண்டுமில்லையென மறுக்க.

இனி, ஏழாவது பிழையின் விளக்கம். பரிமேலழகர் மேற்கண்டவாறு 'சான்றென' என்பது 'இன்னகைபவர்' என்பதிலே விரிந்த 'உடைய' என்பதனோடு முடிந்ததென்று கூறிய முடிபும் வேறு; 'ஆகி' யென்னும் வினையெச்சம் ஆகிய என்னும் பெயரெச்சத்தைக் கொண்டு முடிந்ததென்று காட்டிய முடிபும் வேறு.

'மிகச்செய்து தம்மெள்ளுவாரை நகச்செய்து
நட்பினுட் சாப்புல்லற் பாற்று.' என்னும்

குறளுரையிலே 'சாவ' என்பதன் இறுதிநிலை, 'கோட்டின்வாய்ச் சாக்குத்தி' என்புழிப்போல, விகாரத்தால் தொக்கது என்று பரிமேலழகர் கூறினர். வினைமுதனிலை வினையெச்சமாய் நிற்றலும் ஓர் இலக்கணமாயின், அவர் 'சா' என்னும் முதனிலை 'சாவ' என்னும் வினையெச்சமாய்ப் பின்பு அதன் இறுதிநிலை கெட்டதென்று கூறுவர். அவ்வாறு அவர் கூறாமையால் வினைமுதனிலை பிரிந்து நின்று வினையெச்சமாகும் என்பதும் பெயரெச்சமாகும் என்பதும் அவர்க்கு உடம்பாடன்று. ஆகவே, பரிமேலழகர் 'ஆகி' யென்னும் வினையெச்சம் 'ஆகிய' என்னும்

பெயரெச்சத்துள் 'ஆதல்' என்பதனோடு முடிந்தது என்றதன் கருத்து, மேலே கூறியவாறு 'ஆதல்' என்பதை வினையெச்சமாக்கி 'உள்ள' என்பதைக்கொண்டு முடித்திலேயென்று செந்தமிழ்ப் பத்திராசிரியர் கூறியது பழுதாதல் அறிக.

இனி, 'அறிதுயிலோனும்.......நாஞ்சிலோனும்........களிறுமாகி.......மூவுருவாகிய' என்புழி,

ஆகியென்னும் வினையெச்சப் பொருண்மை செவ்வனே அறிதல்வேண்டும். ஆகியென்பது செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சம். அதன் பொருண்மையோ பல.

(1) அவன் கற்றுயர்ந்தான்—காரணகாரியப் பொருட்டு. கற்றதனால் உயர்ந்தான் என விரியும்.

(2) உண்டு வந்தான்—வென்று மீண்டான்—முடிக்குஞ் சொல்லால் உணர்த்தப்படும் தொழிற்கு எச்ச வினைச்சொல்லால் உணர்த்தப்படும் தொழில் முன்னிகழ்தற் பொருட்டு, உண்டபின் வந்தான். வென்றபின் மீண்டான்—எனப்பொருள் படும்.

(3) ஆடிவந்தான். 'தொழுதெழுவாள்.' 'முகந்திரிந்து நோக்க.'—முடிக்கும் சொல்லால் உணர்த்தப்படும் தொழிலோடு எச்ச வினைச்சொல்லால் உணர்த்தப்படும் தொழில் உடனிகழ்தற்பொருட்டு. இதனைத் துணைவினை யென்பர். 'தொழுதெழுவாள்' என்பது 'வேர்த்து வெகுளார்' என்புழிப்போல வினை நிலைமாறல் என்று பிரயோக விவேக நூலாரும், இலக்கணக் கோத்து நூலாரும் கூறினர். அது தவறு. அவர் கொள்கையின் மறுப்பைத் தமிழ்ப்பொழிலில் முன்னமே வெளிவந்த பகுதியிற் காண்க.

(4) 'வேர்த்து வெகுளார்'. வெகுண்டு வேரார் எனப் பொருள்பட்டது. இது வினை நிலைமாறல்.

(5) 'குடிபொன்றிக் குற்றமும் ஆங்கே தரும்.' செய்வித்து எனற்பாலது செய்து என நின்றது.

(6) 'யாழும் எழுதி'. எழுதப்பட்டு என்பது எழுதியென நின்றது.

(7) 'கற்றறிதல்' (குறள்). கற்றலும் அறிதலும் எனத் தொழிற் பெயர்ப் பொருட்டு. கற்றதனல் அறிதல் என்றுதல் கற்றபின் அறிதல் என்றுதல் பொருள்படாமையால் கற்று என்பது ஈண்டு எச்சப்பொருள் தாராமை காண்க. 'மந்திர மும் குலாலன் வினைதவிர்ந்த, சக்கரமும் கந்தித்துச் சுழலுமா போல்' (சித்தி-10-6) 'பயந்து காத்தழிக்கு மற்றை மூவர்' (திருச்சதகம்-30) என்பனவும் அது. இவை செவ்வெண் மாத் திரை குறித்து நின்றனவென்று சிவஞானமுனிவர் கூறியதன் பொருளும் உணர்க.

(8) 'நிர்க்குணனுய் நின்மலனுய் நித்தியானந்தனுய்த் தற் பரமாய் நின்ற தனிமுதல்வன்'. (சிவ-போ-10-2) என்புழி ஆக் கச்சொல் உண்மை குறித்து நின்றது வடமொழிமதம் என்றூர்.

(9) 'பூதலத்திற் புகழ் சீவன் முத்தராகி........காண்பர்' (சித்தியார் 8-29). 'சீவன் முத்தராகி' யென்புழி ஆக்கச்சொல் உவமை குறித்து நின்றது, 'ஆள்வாரிலி மாடாவேனே' என்றூற் போல.

(10) 'தானதுவாய்........தானும் இறை' (சிவ-போ-10-1) ஆய் ஆம் எனக் கூட்டுக. ஆய் ஆம் என்புழிச் செய்தெனச் சம் காலமுணர்த்தி நில்லாது, 'நள்ளார்க்கு நஞ்சொத்து நட் டார்க்கு அமிழ்தொக்கும் இவன்' என்புழிப் போலத் தன்வினை முதல்வினையாதல் மாத்திரையே உணர்த்தி நின்றது. இவை (சிவஞானமுனிவர் உரை).

இனி, இச்சிவஞானமுனிவர் உரை நுட்பத்தை உணரவல் லார்க்கு, மேற்குறித்த பரிபாடற் பகுதியுள் 'ஆகி' யென்னும் செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சத்திற்குப் பொருண் முடிபும் சொன்முடிபும் கண்டுகொள்ளுதல் அரிதன்று. எனவே 'ஆகி' யென்பது சொன்னேக்கால் இறந்தகால வினையெச்ச மாயினும பொருணேக்கால் அக்காலங் கருதப் படுவதொன்று அன்றும். ஆகலின், ஆகி யென்பதை ஆகிய என்பதனேடு முடித்தால் காலமயக்கம் நேருமென்று செந்தமிழ்ப் பத்திராசிரியர் அஞ்சவேண்டுவதுமில்லை. அதுபற்றி 'ஆகிய' என்பதைப்

பிரித்து 'ஆகியும் உள்ள' என இடர்ப்பட்டு விரித்துரைக்க வேண்டுவதுமில்லை என்க.

'மண்ணாகி விண்ணாகி மலையுமாகி
வயிரமுமாய் மாணிக்கந் தானேயாகிக்
கண்ணாகிக் கண்ணுக்கோர் மணியுமாகிக்
கலையாகிக் கலைஞானந் தானேயாகிப்
பெண்ணாகிப் பெண்ணுக்கோர் ஆணுமாகிப்
பிரளயத்துக் கப்பாலோர் அகண்டமாகி
எண்ணாகி எண்ணுக்கோர் எழுத்துமாகி
எழுஞ்சுடராய் எம்மடிகள் நின்றவாறே.'

(திருநாவு—திருத்தாண்டகம்)

'வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே.'

(திருச்சதகம்.)

இவற்றுள் வந்த ஆகி ஆய் என்னும் வினையெச்சங்களெல்லாம் காலம் உணர்த்தி நின்றனவல்ல.

ஆகவே பரிபாடலுள் 'ஆகி' யென்பது 'ஆகிய' என்பதனோடு முடிந்த முடிபை மேற்காட்டிய 'தானதுவாய்........,தானும் இறை' என்றதன் முடிபொடு படுத்திக்கொள்க.

எட்டாவது பிழை:—'சாத்தன் உண்டான்' என்னுமிடத்துச் 'சாத்தன்' என்னும் பெயர் 'உண்' என்னும் முதனிலை வினைகொண்டு முடியின், 'சாத்தனுண்' என இயைந்து அடையடுத்த ஒருமொழியாய்ப் பகுதியாக, அதன்மேற் காலங்காட்டும் இடைநிலையும் விகுதியும பயனிலையாய் விட்டிசையாது தொடர்தலால், எழுவாயும் பயனிலையுமாய் இயையும் பொருட்பேறு இல்லாது நின்றுவற்றும் என்றார் செந்தமிழ்ப் பத்திராசிரியர்.

'நல்வினையுங் நயந்தந் தின்று........துப்புறவே.' என்னும் கோவையாருள் 'துப்புற' என்னும் வினையெச்சம் 'தந்தின்று' என்பதனுள் 'தா' என்னும் முதனிலையோடு முடிந்ததென்று

அப்பத்திராசிரியரே கூறினர். ஆகவே 'நல்வினையும்' என்னும் எழுவாய்க்கும் அத்'தா' என்னும் முதனிலையே முடிவு என்பதும் அவர்க்கு உடம்பாடாயிற்று. எனவே 'நல்வினையுந் நயந்தா' என முடிந்த தொடர் பின்னர் இடைநிலையும் விகுதியும் எதிர் மறை யிடைநிலையும் ஏற்றுத் 'தந்தின்று' என முடியும் என்றார் ஆயிற்று. அவ்விடத்தே அத்தொடர்மொழி நின்று வற்றுதல் இல்லையாக இவ்விடத்து மாத்திரம் நின்றுவற்றுதல் யாண்டை யதோ எனக் கடாவி மறுக்க. ஓரிலக்கணத்தை ஒரு நிகரான தொடர்மொழிகளில் ஒன்றன்கண் கொண்டு மற்றொன்றன்கண் கொள்ளாது மறுப்பது மாறுகொளக் கூறல் என்னும் குற்றமாம் என்க. மேலும் அவர் 'சாத்தன்' என்பது 'உண்' என்னும் வினைமுதனிலையைக் கொண்டவழிச் சாத்தன் என்பது உண் என்பதற்கு அடையாம் என்றார். அதுவேயன்றியும், 'வினை சார்பினமிடம்மேவி விளங்காப் பலபொருளொருசொல்' என்ப தன்கண் 'மேவி' என்பது விளங்குதற்கு அடையென்றார். இது ஒன்பதாவது பிழை.

எழுவாயும் பயனிலையுமாய் இயைந்து முடியும் சொற்றொட ரில், எழுவாயாக நிற்கும்சொல் பயனிலைச் சொற்கு அடை யெனப்படாது. வினையெச்சத்துள்ளும் 'இனிது விளங்கும்' 'ஆடி வந்தான்' என்றாற்போல முடிக்குஞ்சொல்லை விசேடித்து நிற்பனவே அடையெனப்படும். 'கற்றறிந்தான்' என்றாற்போல விசேடிக்கும் இயல்பில்லாது காரண காரியப்பொருளில் வருவன அடையெனப்படா. ஈண்டு 'மேவி' யென்னும் எச்சம் காரணப் பொருட்டாதல் அறிக. 'வினையெஞ்சு கிளவியும் வேறு பல் குறிய' என்னும் சூத்திரவுரையுள், 'வினையெச்சத்துள் விசே டித்து நிற்பனவும் உளவென்று சேனாவரையர் கூறியதன் கருத்தும் இவ்வேறுபாடு தெரிந்து கொள்ளுதற் பொருட்டே, அடைமொழியிலக்கணத்தை ஈண்டு விரிப்பின் உரை பெருகும்.

(தொடரும்.)

# சோழன் கரிகால் வளவன்.

(ஒரு சிறு நாடகம்.)



திரு. சிவ. குப்புசாமிப் பிள்ளையவர்கள்,
தலைமையாசிரியர், கரந்தைத் தமிழ்ச்சங்கக் கல்லூரி, தஞ்சை.



வரலாறு:—நிலமகளின் திருமுகமெனப்பெறும் காவிரிசூழ் சோழவளநாடு, இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் உறையூர்ப் பெருநகரைத் தலைநகராகக் கொண்டிருந்தது. அதுபோது, உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னி என்பான் தன் துணையாய அழுந்தூர் வேள்மகள் என்பாளோடு இனிது வாழ்ந்து அரசியலை நடத்திவந்தான். அவர்கட்குத் திருமாவளவன் என்ற ஒருமகன் பிறந்தான். திருமாவளவன் குழவிப் பருவத்திலிருக்கும்போதே அவன் தந்தை இளஞ்சேட்சென்னி விண்ணாடு புரக்க எய்தினன். தந்தையைப் பிரிந்துள்ள திருமாவளவன் இளையவனாயிருத்தலைக்கண்டு அவனது தாயமாக்கள் நாட்டில் கலாம் விளைத்து அவனையும் ஊறுசெய்வாராயினர். அதனால் திருமாவளவன் உறையூரினின்றும் நீங்கிக் கருவூரடைந்து உருக்கரந்து திரிவானாயினன். தாயமாக்களும் நாட்டைக் கைப்பற்றிக் கொடுங்கோன்மையைக் கொலுவீற்றிருக்கச் செய்தனர். இவ்வாறு, நாட்டில் நாளும் கொடுமைகள் மிகுவதை யுணர்ந்த உறையூர்ப் பெருமக்கள் ஒருநாடு கூடி நெடிது கருதி, கழுமலத்து நின்ற யானையைக் கட்டவிழ்த்து விட்டனர். அவ்யானையும் காவிரியாற்றின் கரைவழியே கருவூரடைந்து, ஆண்டுக்கரந்து திரிந்த திருமாவளவனைப்பற்றித் தன் எருத்தத்தின்மீது எழுந்தருளச்செய்து உறையூர் வந்தது. இஃதை யறிந்த தாயமாக்கள் திருமாவளவனைப் பிணித்துச் சிறையில் இட்டு அதனையும் தீ மூட்டினர். திருமாவளவனோ, அவனது மாமன் இரும்பிடர்த் தலையாரின் பேருதவியினால் சிறையினின்றும் வெளிவந்து தன்னை எதிர்த்து நின்ற பகைவர்கள் யாவரையும் வென்று அரசுகட்டிலேறினன். அவன் இவ்வாறு சிறைத் தீயினின்றும் தப்பியபோது அவனது கால்கள் தீயினால் சிறிது

கரிந்தமையால் அவனை யாவரும் கரிகால்வளவன் என அழைக்கலாயினர். கரிகால்வளவன் இவ்வாறு தனக்குரிய நாட்டைக் கைப்பற்றியதும் உள் நாட்டுக் குழப்பங்கள் யாவையும் அடக்கி நல்லரசு அமைத்தான். பிறகு தமிழ்நாட்டு மன்னர்களையும், வடநாட்டு வேந்தர்களையும் போரில் புறமுதுகிடச் செய்து வடக்கில் இமயம்வரையுள்ள நாடுகள் யாவையும் தன்னடிக் கீழ்ப்படுத்தி, அவ்வெற்றிக்கு அறிகுறியாகத் தனது புலிக் கொடியையும் இமயத்தின் முடியின்மீது பொறித்துவைத்தான். இவ்வாறு இமயமுதல் குமரிவரையிலுள்ள கடல்சூழ்ந்த ஞாலத்தைத் தனது ஆட்சிக்குட்படுத்தி ஆண்டுவரும் நாளில் இரண்டு, யாண்டு முதிர்ந்த பெரியோர்கள் அவனது அவைக்களம்புகுந்து "இவன் இளைஞனுள்ளான் வழக்கறியான்" எனக் கூறி அவர் களது வழக்கை அங்கு அறிவிக்காது வெளிச் சென்றனர். அஃதை யுணர்ந்த வளவன் தானும் ஒரு நரை முதிர் முதியவர் வடிவு தாங்கி அவர்களை யழைப்பித்து, அவர்களிருவரும் உவப்ப வழக்குத் தீர்த்து, பின்னர் உண்மை வடிவுடன் தோன்றி அவர்களை வியப்புறச் செய்தான். ஒருக்கால், இவன் காவிரியாற்றிற்குக்கரை அமைக்கக்கருதி பலமன்னர்களுக்கும் தனது கருத்தை அறிவிக்க அவர்களும் அவனது ஆணையை முடிமேற்கொண்டு காவிரியடைந்து கரைகட்டத் தலைப்பட்டனர். ஆனால் பிரதாபருத்திரன் என்பவன் மட்டும் இவனது கட்டளையைப் பொருட்படுத்தவில்லை. அஃதை யுணர்ந்த வளவன் பிரதாபருத்திரனது வடிவம் திறம்பட விளங்கும் ஒரு படத்தைக் கொணர்ந்து அஃதையுற்றுநோக்கி அவனது நெற்றியில் ஒரு கண் இருக்கக் கண்டு அதுவே அவனை இறுமாப்புறச் செய்தது எனக்கருதித் தனது உடைவாளால் அக்கண்ணைக் குத்தினான். உடனே அப்பிரதாப ருத்திரனின் நுதற்கண்ணும் மறைவுபட, அவன் அஞ்சி நடுங்கி, ஓடோடியும் காவிரி நாடு வந்து, கரிகால் வளவனை வணங்கி அவனது ஆணையை ஏற்றுக்கொண்டான். இத்தகைய வெற்றியும் வீரமும் ஆண்மையும் மிக்க கரிகால்வளவன் தமிழ் மொழியிடத்தும் தமிழ்ப் புலவரிடத்தும் நீங்காத பற்றுள்ளம் கொண்டவனாக விளங்கினான். இவனது பெரும் புகழ் விளங்கு

மாறு பொருநர் ஆற்றுப்படையையருளிய முடத்தாமக் கண்ணி யார் என்ற புலவருக்குப் பெருஞ்சிறப்புகள் பல செய்தான். மேலும் இவனது ஆட்சி, வீரம், புகழ் முதலியன தோன்ற பட்டினப்பாலை எனும் நூலை இயற்றித்தந்த கடியலூர் உருத்திரங் கண்ணனார் என்ற புலவர்க்குப் பதினாறு நூறாயிரம் பசும்பொன்னைப்பரிசிலாகத் தந்தனன். மேலும் இவன் காடு கெடுத்து நாடாக்கி பல ஊர்களைத் தோற்றுவித்தான். வாணிபமும் வேளாண்மையும் மிகுதற்பொருட்டு இவன் பல கால்வாய்களையும் புதிய பாதைகளையும் உண்டாக்கினான். இவை வளம் படுதற்காகவேத் தனது தலைநகரையும் காவிரிப்பூம் பட்டினத்திற்கு மாற்றிக்கொண்டான். பிறகு அவன் தன் மனத்திற்கிசைந்த உருநல மிக்க நாங்கூர் வேள்மகள் எனும் கற்புடை நங்கையைத் தனது வாழ்க்கைத் துணையாகக்கொண்டு, பல ஆன்றோர்களின் துணைவழி நின்று, இமய முதல் குமரிவரையில் தனது ஆணையைச் செலுத்தி, யாவரும் அவனது அடிகளைப் பரவி நிற்குமாறு பெருமையுற்று, இனிதே பலநாள் வாழ்ந்து வந்தான். நலம்!

## இயல் க.

### காட்சி க.

உறுப்பினர்:—1. மணிமொழிக் கூத்தர், 2. மணிமொழி, 3. இளம்பிறை, 4. கிளிச்சிறை, 5. ஒளிமணி, 6. இரும்பிடர்த் தலையார்.

இடம்:—உறையூரின் முருகன் திருமுன்னர்.

பொழுது:—மாலைப்பொழுது.

[உறையூர்ப்பெருமக்கள் முருகவேளின் திருமுன்னர்கூடி, இளஞ்சேட்சென்னிக்குப் பிறகு அரசுக்கு உரியாரைப்பற்றி முடிவு செய்தல்.]

மணிமொழிக் கூத்தர்:—உலகம் முழுதும் உவந்தளிக்கும் உரவோய்! நினது அருள் வெள்ளம் எங்கள்பால் மிகுவதாகுக.

பெரும! "தீச்சினம் செறிந்த எம் உள்ளமாம் தோணியை, இவ்வுலகமாகிய பெருந்துயர்க் கடலினுள் அறிவு என்ற பற்றுக் கோலால் தள்ளிச்சென்று, இறுமாப்பு என்ற பாறையில்மோதி, இடர்ப்பாடுற்றுத் துன்புறுதவாறு நீ என்றும் துணைபுரிகின்றாய்," என நின் அடியவர் கூறும் அமுத நன்மொழியும் இன்று எம்பால் பொய்த்ததே! மன்னுயிர் யாவும் தன்னுயிர் எனக் கருதி, நாட்டில் பசி, பிணி, பகையின்றி, கல்வியும் செல்வமும் கவின்பெற விளங்க, இத்துணைநாள் எம்மைப் புரந்துவந்த, இளஞ்சேட்சென்னி, இன்று நின் திருவடி நீழலை எய்தியதால்.... என்னே! இந்நாட்டிற்குற்ற தீவினைப்பயன். 'மக்கள் யாவரும் மனங்களிக்கத் தோன்றினன் தக்கதோர் செல்வன்.' என நாளும் பறையடித்துக் கொண்டிருந்த எனது உள்ளமும், இற்றைக்கு, எங்கு இருக்கின்றான் என யாவரும் அறியாதவாறு அவன் மறைந்ததிலிருந்து, பாழ் பட்டு ஒழிந்ததே. பசுவினும் சாந்த மிக்க பான்மையராய்த் தோன்றிய பங்காளிகள்....இளஞ் சேட்சென்னி இன்று இறந்ததும், எள்ளளவும் இரக்கமின்றி அவன்றன் அருமருந்தன்ன மகனையே அழித்துவிடத் துணிந்தனரே! எ! முருக! இவையாவும் நின்செயலாலன்றி நடவா.

மணிமொழி :—அண்ணா! தாங்கள் கடந்தன பொருட்டு கருதுவதாற் பயனென்னை? இனி நாம் செயற்பாலனவற்றையே சிந்தித்தல்வேண்டும்.

மணிமொழிக் கூத்தர் :—மணிமொழி! நன்குஉணர்த்தினை. நம்மன்னன் மகனிடத்து உற்ற என் அன்பு இங்கு இவ்வாறு நிகழ்வித்தது....நன்று. நம் நகர்ப் பெரியார் பலரும் இன்று இங்கு ஒருநாடுகூடக் கருதியுள்ளனர். நம்மன்னன் இளஞ்சேட் சென்னியின் மைத்துனர் இரும்பிடர்த்தலையாரும் இவண் எழுந்தருளுவதாக உள்ளார். நீ சென்று, இங்கு பூசனைக்குரியன யாவும் கொணர்க.

மணிமொழி :—பெருந்தகையே! அவ்வாறே செல்லுகின்றேன். ஆனால் அவர்கள் எதன்பொருட்டு ஈண்டு கூடுகின்றனர் என்பதை யான் அறியலாகுமோ?

மணிமொழிக் கூத்தர் :—அதுவா ! யாவும் இன்று நடக்கும் நம் நாட்டின் அரசியற் குழப்பத்தைப் பற்றியேயாகும். நம் மன்னனின் தாயத் தலைவன், மன்னன் மகன் திருமாவளவனை அச்சுறுத்தி, அல்லற்படுத்தியதோடு அமையாது, குடிமக்களாய நம்மையும் நாளும் வரி முதலிய தொல்லைகளால் பிணிப்பித்து வாட்டுகின்றனன் என்பது நீ அறியாததொன்றல்லவே? அத் தொல்லையினைக் களைந்து, நல்லரசொன்று நம்நாட்டில் நாட்டவே இன்று கூடுகின்றனர். நீ விரைந்து சென்று வருக.

மணிமொழி :—அண்ணலே ! இதோ சென்று பூசனைப் பொருளுடன் மீள்வன் (போகின்றான்).

மணிமொழிக் கூத்தர் :—கிளிச்சிறை ! ஈண்டுள்ள யாவற்றையும் முறைப் படுத்துக! அதோ! பெரியார் அனைவரும் வருகின்றனர் [மணிமொழி பூசனைப் பொருளுடன் வருதல் பெரியார் பலரும்நுழைதல்] அன்பர்களே! வரவேண்டும்! நாட்டின் பெருந்தொண்டர்களே, தலைவர்களே, வரவேண்டும் ! வரவேண்டும் !! (கைகுவித்தல்).

இரும்பிடர்த் தலையார் :—மணிமொழிக் கூத்த ! வணக்கம் (யாவரையும் பார்த்து) யாவரும் இவண் அமருங்கள் [அனைவரும் அமர்தல்] அன்பர்களே ! இதுபோது நாம் நம் நாட்டின் நிலைமையை நாடி ஈண்டுக்குழுமி யுள்ளோம் என்பதை நம்மில் எவரும் அறிவோம். ஆதலின், நாம் இன்னே இதுபற்றிஆவன கருதித் தொழிற்படவேண்டும்.

இளம்பிறை :—பெரியீர்! யான் சொல்வதற்குத் தாங்கள் சற்று செவி சாய்த்தருளல்வேண்டும்....ஒரு பசிளங் கன்றின் பொருட்டு, மணிநா நடுங்கியதை உற்று அறிந்து, தன் அமைச்சர்மொழிந்ததையும் மறுத்து, தன் மகன் என்றும் பாராது தேர்க்கால்படுத்தி நன்முறை செலுத்திய முடியுடைச் சோழன் வாழ்ந்த இந்நாட்டில், இன்று பலபெருமக்கள் இறக்க, அவரது உற்றார் உறவினர் நடுங்க, நாட்டில் குழப்பமும் குறைபாடும் மிகுந்து கொடுங்கோன்மை கொலு வீற்றிருக்க, நாம் கண்டு வாளாயிருத்தல் நலமாகுமா? நாயை அடிக்கக் குறுந்தடியும்

நச்சுப்பூடையொழிக்க நாளும் ஞாயமும் வேண்டுமா? தங்களைப் போன்ற பெரியார்கள் இன்றே வலிந்து அரசுரிமையைக் கைப் பற்றி நன்முறை வகுத்து நாட்டில் நல்லாட்சி நிறுவுதல் வேண்டும்.

இரும்பிடர்த் தலையார் :—இளம்பிறை! நன்று கூறினாய். நல்லரசு நிறுவுதல் எவ்வாறு ஆகும். தாய மாக்கள் தலைவன் தனியாட்சி செலுத்தும்போது நமக்கு இங்கு செல்வாக்கு ஏது? நம் அரசிளங்குமரன் அடைந்தவிடத்தை இன்னும் அறியேம். அவனின்றி அரசை வலிந்துபற்றுதல் என்பது எளிதில்ஆகுமா?

ஒளிமணி :—தலைவ ! இதற்குத் தாங்கள் பின்னிட வேண்டாம். யாங்கள் யாவரும் இன்றே தங்களுடன் போர்க்கெழுகின்றோம். நீங்கள் எமதுபடைத்துணைகொண்டு, தாயமாக்கள் தலைவனை தகர்த்து விடலாகும். நமது நாட்டிற்கு உரிமையாய்ப் பிறந்த உரவோன் ஒருவன் இருக்க, எங்கிருந்தோ வந்த, எத்தகைய தொடர்பும் இல்லாத ஏழை ஒருவன், அரசு கட்டிலில் வீற்றிருந்து, அரசாட்சி செலுத்துவதென்றால், ஆ! இத்தகைய அடாத செயலுக்கு என் செய்வது? பெரியீர்! இன்னே படையைத் திரட்டுங்கள், அரசைப் பற்றுங்கள், பின்னர் அரசன் மகன் சென்ற இடத்தை ஆய்ந்து, கண்டு அரியணை ஏற்றலாம்.

இரும்பிடர்த் தலையார் :—என் இனிய அன்பர்களே! என்னை மன்னித்தருள்க. போர்ப்படை திரட்டுவது என்பது சார்புடைத்தன்று; ஒருவன் ஒரு செயலில் முற்படுங்கால் ஆராய்தற்குரியன பலவாகும். ஆதலால் நாம் இதுபோது போர்க்கெழுமுன் நம் வலியும், நம் படை வலியும், நம் பொருள்வலியும், நம் துணைவலியும், நம் மற்றார் வலியோடு மதிப்பிடல்வேண்டும். அவற்றுள் நம் வலிமிகுமாயின் போர்க்கெழுவது நலனாகும். எனவே, நண்பர்களே! நம் பகைவராய நம் மன்னனின் மாற்றலர் சேர, பாண்டியராய இருமுடிப் பெருமன்னர்களாலும் இருமருங்கும் துணைபெற்று, நாட்டின் பெரும்படையின் துணையும், பொருள் நிதியின் ஆட்சியும் உள்ளாராய் இருக்க, நம்மால் என்ன செய்ய இயலும்?

கிளிச்சிறை :—பெரும! பின்னர் என்னதான் செய்வது; இவரால் என்றும் இடர்ப்பட்டுச் சாவதா?

இரும்பிடர்த் தலையார் :—தம்பி! கிளிச்சிறை! பொறுத்தார் பூமியாள்வார். ஆகு நாளன்றி எடுத்த கருமங்கள் அடுத்து முயன்றாலும் ஆகுமா? நாம் அரசுரிமையைப்பற்றி பின்னர் கருதுவோம். நம் அரசிளங்கோ, இன்று எங்குளன் என்பதை யாம் அறியோம். எனவே அவன் பொருட்டே முன்னர் ஆய்வோம். [தனித்து] கருத்து அறியாத சிறுவனுயிற்றே அவன் இதுபோது களைகண் அற்று எங்கு கண் கலங்கிக் கவல்கின்றனனோ? ஏ! இறைவ! (கும்பிடுதல்—மற்றவர்களைப் பார்த்து) ஆ! அன்பர்களே! இதுபோது எனக்கு ஓர் எண்ணம் எழுகின்றது. அதாவது நாம் இறைவனைத் தொழுது நம் நாட்டின் கழுமலத்தே நிற்கும் யானையைக் கட்டவிழ்த்துவிட்டால் அஃது திருவருளால் எங்கு சென்றாயினும் நம் அரசுக்குற்ற ஒருவனை கொண்டு வந்து சேர்க்கும். அவ்வாறு அதன் ஆய்வில் நம் மன்னர்மகன் திருமாவளவன் வாரானாயின் அவன் இறந்தான் என்றே கொள்ளல் வேண்டும். இறைவன் அருளாற் பெற்ற ஒருவனைக்கொண்டு நம் இறைமாட்சியை நிறுவுதல் ஏற்புடைத்தாகும். அதுவே நிலையும் பெறும். இதற்குத் தங்களது கருத்தென்ன?

மணிமொழிக் கூத்தர் :— தாங்கள் கூறுவதே மிகவும் பொருத்தமுடைத்து இறைவன் துணைவலியின்றி எம்மால் என்ன செய்ய இயலும்?

இரும்பிடர்த் தலையார் :—நன்று! கூத்த! நன்றேயாகுக. நாம் யாவரும் நம் நாயகன் முருகப் பெருமானை வணங்கி, நம் மன்னர்மகனையே நாம் அடையவும், நம் வினை முட்டின்றி நிறைவேறவும் வாழ்த்துவோமாக. தாங்கள் முதலில் முருகற்கு வழிபாடியற்றி பூசனை புரியுங்கள்.

[மணிமொழிக் கூத்தர் வழிபாடியற்றிப் பூசனை புரிதல், பின்னர் யாவரும் கடவுளைத் துதித்தல்.]

பாட்டு.

கூவுநற் கோழியின் கொடியோனே!
கூரிய வேலுடைக் குமரேசா!
காவிய நல்விழி உமையாள் தன்
காதல் மிகுதரு மிளையோனே!
நேமிநல் நாதனின் மருகோனே!
நேர்மை தருமென தருள்நாதா!
நாமநீர் வேலைசூழ் உலகோர்தம்
நாடிய நன்மையாம் பெருமாளே!

---

இயல் க—காட்சி உ.

உறுப்பினர்:—1. நன்மொழிக் கூத்தன். 2. பால்வண்ணன்.

[நன்மொழிக் கூத்தரும், பால் வண்ணனும், திருமாவளவன் சிறையுற்றமைக்குப் பெரிதும் வருந்தி உரையாடல்.]

நன்மொழிக்கூத்தன் :—ஏ! குறிஞ்சிநிலக்கிழவ! இஃதென்ன வியப்பு! 'தான் பெறுதற்குற்ற ஒருமகன் இந்நிலவுலகைத்தனது ஒரு குடைக்கிழ்நிறுத்தி ஓம்பவேண்டும்' எனும் பெருவிருப்பால் ஒரு முனிவன் மொழிந்தவாறு இயற்கை நிலையைக் கடந்து ஆ! என்ன துன்பம்! உரியபொழுதில் கருவுயிர்க்காது, தன் வயிற்றிலேயே நற்பொழுது கூடும் வரையில் அடக்கியிருந்து, பின்னர் பெற்றெடுக்கப்பெற்ற அவ்வழுந்தூர் வேள்மகளின் திருமகன், இன்று இவ்வாறு தானோ இழிந்த-தாயயாக்களால் சிறைவாய்ப்பட்டு இடர்ப்படவேண்டும்? நாட்டின் நலத்தைப்பற்றி ஒரு சிறிதும்கருதாத, இத்தீத்தொழிலும் திறனில்செயலும்வாய்ந்த, இன்னவரது ஆட்சிக்கு எல்லை இல்லையா? பொது மக்களாலே கட்டவிழ்க்கப்பெற்ற கழுமலத்து யானையும், நின் அருள்வாய் நின்று தானே, கருவூரையடைந்து யாங்கள் கைவிட்டு நின்ற திருமாவளவனைப் பற்றி வந்தது. அவ்வாறு இருந்தும், யாவும் புரியவல்ல நின்பேரருள் திறத்தின் பெருமையை மதியாது

தானே, இன்று நாட்டிற்குரியவனை நள்ளிருட்சிறையில் அடைத்தனர். ஏ! தலைவ! இறைவனாய நினக்கும், நின் அன்பராய எமக்கும் இடர்புரியும் இத்தீய மாக்களை இன்னும் இறைமை இடத்தில் வைத்திருப்பது தான் முறையோ? பெரும! நின் கருணையை அளக்க எவரால் ஆகும்.

[பால் வண்ணன் கூத்தரிடம் வருதல்.]

பால் வண்ணன் :—பெரியீர்! வணக்கம். உங்களையான் எங்கெங்கு தேடுவது நல்ல வேளையாக! இப்பொழுதாவது, இங்கு கண்டேனே!

நன்மொழிக் கூத்தன் :—பால்வண்ணா! வாழ்க! வருக! ஏதேனும் புதுமையுண்டோ? நின்னைக் காணாது என் மனம் கவன்று கொண்டே யிருந்தது.

பால் வண்ணன் :—ஐய! தாங்கள், இங்கு யாது கருதி நிற்கின்றீர்கள்? தங்களை நோக்கின் ஏதோ ஒரு அரிய கருத்துள் ஆழ்ந்திருப்பவரை யொத்து காணப் பெறுகின்றதே?

நன்மொழிக் கூத்தன் :—ஆம். அரியதுதான்! நீ அறியாதது அல்ல. நமது அரசிளங்கோமான் சிறைப்பட்ட நாள்தொட்டு என் உள்ளமும் உணர்வும் ஊறுபட்டுக் கொண்டே உள்ளன. என்றைக்கு அவன் நமது நாட்டின் நாயகனாக வருவானோ, அன்று தான் என் நெஞ்சமும் மகிழ்வுறும். நல்லது! நமது மன்னர் மகனைப்பற்றி யாதேனும் அறிவையோ? அறிந்தால் அருள்கூர்ந்து எனக்கு விளம்புவாய்.

பால் வண்ணன் :—அண்ணல்! யான் என் சொல்வேன்! சற்றுமுன் நம் ஒற்றன் ஒளிமணி என்பால் வந்து சென்றான். நமது 'திருமாவளவனை இனிமேல் உயிருடன் வைக்கலாது' என்று தாயமாக்கள் தலைவன் கருதுகின்றானாம்.

நன்மொழிக் கூத்தன் :—அடா! தீவினையாளா! நினக்குக் கேடு விரைவில் வந்துறுதா? என்னே! கொடுமை! கொடுமை!

(தொடரும்.)



உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத்

திங்கள் வெளியீடு.

துணர்-ωι } பவ—கார்த்திகை. { மலர் - அ.

க. அகநானூற்று உரை 321
திரு. வித்துவான். ஔவை,
சு. துரைசாமிப் பிள்ளையவர்கள்,

உ. ஆந்தையென்னுந் தோகைவிரியுமாறு 326
திரு. பண்டித, ஆ. சிவசுப்பிரமணியன்,

௩. தமிழகத்தின் உழவின் நலமும்
வாணிகத்தின் சிறப்பும் 333
திரு. K. சோமசுந்தரம் பிள்ளை B.A., B.L.,

௪. தம்பிரான்றோழர் தேவாரம் 339
திரு. இ. மு. சுப்பிரமணிய பிள்ளையவர்கள்,

ரு. கருதலளவைப் பகுதி 350
திரு. த. இராமநாத பிள்ளையவர்கள்,

சு. சோழன் கரிகால் வளவன் 356
திரு. சிவ. குப்புசாமி பிள்ளையவர்கள்.

செந்தமிழ்ப்புரவலர்,

த. வே. உமாமகேசுவரம் பிள்ளை, பொழிற்றொண்டர்.

தஞ்சைக் கூட்டுறவுப் பதிப்பகம், கரந்தை.



உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு

| | | |
|---|---|---|
| துணர் ய | பவ, கார்த்திகை | மலர் அ |


உ

## அகநானூற்று உரை.

திரு. வித்துவான். ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை,
தலைமைத் தமிழாசிரியர், போர்டு உயர்கலாசாலை, திருவத்திபுரம்.

வான மூர்ந்த வயங்கொளி மண்டிலம்
நெருப்பெனச் சிவந்த உருப்பவிர் அங்காட்(டு),
இலையில மலர்ந்த முகையில் இலவம்,
கலிகொள் ஆயம் மலிபுதொடு(பு) எடுத்த
அஞ்சுடர் நெடுங்கொடி பொற்பத் தோன்றிக்
கயந்து களாகிய பயம்தபு கானம்
எம்மொடு கழிந்தனர் ஆயின், கம்மென,
வம்பு விரித்தன்ன பொங்குமணற் கான்யாற்றுப்
படுசினை தாழ்ந்த பயில்இணர் எக்கர்,
மெய்புகு வன்ன கைகவர் முயக்கம்

அவரும் பெறுகுவர் மன்னே; நயவர,
நீர்வார் நிகர்மலர் கடுப்ப, ஓமறந்(து),
அறுகுளம் நிறைக்குந போல, அல்கலும்,
அழுதல் மேவல வாகிப்
பழிதீர் கண்ணும் படுகுவ மன்னே,

என்பது, நல்லிசைப் புலமை மெல்லிய லாராகிய ஔவையார் பாடியனவாகக் காணப்படும், பாட்டுக்களுள், ஒன்று. இது, "தலைமகன் பொருள்வயிற் பிரிந்தவிடத்து ஆற்ருளாய தலைமகள் வேறுபாடுகண்டு ஆற்ருளாய தோழிக்குத் தலைமகள் 'ஆற்றுவல்' என்பது படச்சொல்லியது," எனத்துறை கூறுகின்றது.

இனி, இதற்கு உரைமுடிபு, மண்டிலம் சிவத்தலால் உண்டாகிய உருப்பு அவிர் காட்டு இலவம், நெடுங்கொடி பொற்பத் தோன்றிக் கயந்துகளாகிய கானம், எம்மொடு கழிந்தனராயின், கான்யாற்று, இணர்பயில் எக்கரிடத்து, கைகவர் முயக்கம் அவரும் கம்மென நயம்வரப் பெறுகுவர்மன்; (அவ்வாறு கழிபாமையின் அதுவும் கழிந்தது;) கண்ணும், நிகர்மலர் கடுப்ப, ஓமறந்து, அறுகுளம் நிறைக்குநபோல, அல்கலும், அழுதல் மேவலவாகிப் படுகுவமன் (எம்மொடு கழிபாமையின், படாது ஒழிந்தன), என்பது.

இனி, இதன் உரை:— வானத்தில் விரைவாகச் செல்லும் விளங்குகின்ற ஒளியினையுடைய சூரியன் நெருப்புப் போலக் காய்வதால் உண்டாகிய வெப்பம் சிறந்த அழகிய பாலைக்காட்டிலுள்ள, இலைகளும் அரும்புகளும் இன்றி, (முற்றவும்) மலர்ந்த இலவின்பூ, ஒலிகொண்ட மகளிர் கூட்டம் மகிழ்ந்து கூடியெடுத்த அழகிய விளக்குகளின் ஒழுங்குபோலத் தோன்றி, (உலர்ந்து) மெல்லிய துகளாகிய பயனற்ற சுரத்தின்கண், எம்மையும் தம்மோடு உடன்கொண்டு சென்றிருப்பாராயின், புதிதாய் விரித்தாற்போல் மிக்குற்ற மணல்பரந்த காட்டாற்றின் (கரையிற்) ருேன்றிய மரங்களின் கிளைகள் தாழ்ந்துள்ள, பூங்கொத்துக்கள் விரவிக் கிடக்கும் மணல் மேட்டின்கண், (நம் தலைவராகிய) அவரும் ஒருவர் மெய்யினுள் மற்றவர் மெய் புகுவதுபோலும் கைகளால் தழுவிப்பெறும் முயக்கத்தை விருப்பம் மிகவிரையப்

பெறுவாரன்றே; (அன்றியும்,) நீர்சொரியும் அழகிய ஒளி பொருந்திய பூவைப்போலக் கண்ணீருகுத்து, வற்றியகுளத்தை நீரால் நிறைப்பவைபோல அழுவதைப் பொருந்தாவாய், நம் குற்றமில்லாத கண்ணும் உறங்குவனவாம் அன்றே; அவர் அவ்வாறு கொண்டு ஏகாமையினால், நாமேயன்றி அவரும் அம் முயக்கம் பெறுவது இல்லையாயிற்று; நம் கண்களும் உறங்கு வது இல்லையாயிற்று, என்பது.

இனி, சூரியன் வானம் ஊர்ந்துவருதல் முக்காலத்தும் ஒத்த செய்தியாகையால், நிகழ்கால வாய் பாட்டால் கூற வேண்டியதாயினும் விரைவுக் குறிப்புத் தோன்றுவதற்காக "ஊர்ந்த" என இறந்த காலத்தாற் கூறப்பட்டது. வட்ட மாய்த் தோன்றுதலால், சூரியனை, "மண்டிலம்" என்றார். சிவந்த என்னும் பெயரெச்சம் காரணப்பொருளில்வந்து உருப்பு என்னும் பெயர் கொண்டு முடிந்தது. சிவத்தல், இலக்கணை. இலையுதிர் பருவத்தில், இலவுபூத்தல் இயல்பாகையால் "இலையி லமர்ந்த இலவம்" எனப்பட்டது. "இலையிலமர்ந்த வோங்கு நிலைஇலவம், மலையுறுதீயிற் சுரமுதல் தோன்றும்" (ஐங். 338) என்றார் பிறரும். இனிப்பூத்தற்கின்றி முற்றவும் பூத்துவிட் டமைதோன்ற, "முகையில் இலவம்" என்றார். "அரும்பற, வள்ளிதழ் அவிழ்ந்த தாமரை, நள்ளிரும் பொய்கையும்" (246.) எனப் புறநானூற்றினும் வந்தது. இலவம், சினையாகிய பூவைக் குறித்தலின், முதலிற் கூறும் சினையறி கிளவி. ஒலி செய்தலே மகளிர் கூட்டத்தின் சிறப்பியல்பு என்பதனால், "கலி கொள் ஆயம்" என்றார் போலும். அவர்கள் நெடியரும் குறியரு மாய் ஒருநெறியின்றிக் கூடியிருத்தல் தோன்ற, "மலிபுதொகுபு" என்றார். பொற்ப என்பது உவமஉருபு. கயந்துகள் என்பது தடந்தோள் என்றாற்போல உரிச்சொல் முடிபு. "கயவென் கிளவி மென்மையுமாகும்" (சொல். 322.) என்பது தொல்காப் பியம். பூவின்துகளாகலின், "கயந்துகள்" எனப்பட்டது. இவ்வாறு துகளாதற்குக் காரணம் காட்டின் "உருப்பு" என்க. மேலே கூறும் "பயிலிணர் எக்கர்" (9) போலாது, தன்பால் விழுந்தவை யாவும் வெந்து துகளாகுமாறு செய்யும் கொடுமை

குறித்துப் பாலையைப் "பயந்தபு கானம்" என்றும், காட்டாற்றின்கண், பெருக்கு எழுந்தோறும் புதுமணல் வந்து விரிந்து விடுமாதலால், "வம்பு விரித்தன்ன பொங்குமணல்" என்றும் கூறினர். வம்பு, புதுமை. கம்மென என்னும் விரைவுக் குறிப் புணர்த்தும் இடைச்சொல் "பெறுகுவர்" என்பதனோடு கூட்டப் பட்டது. "தாழ்ந்த" (9) என்பதனைத் தாழ்த்த என்பதன் திரிபாகக்கொண்டு "உதிர்த்த" என்று உரைத்தலுமுண்டு. ஔமறந்து என்பது ஒருசொல்லாய் இடையறாமல் என்னும் பொருளதாயிற்று. ஔவுதல், நீங்குதல். மன்னென்னும் இடைச்சொல் கழிவு குறித்து வந்தது.

இனி இதன்கண் "கழிந்தனராயின்" (7) என்றதனால் உணரப்படும் பிரிவு, ஓதுதல், தூது முதலிய ஏனைப் பிரிவுகள் போலத் தெரித்துக் கூறப்படாமையால், ஆண்மகனுக்குக்கடன் எனப்படும் சிறப்புடைய பொருள் வயிற் பிரிவு என்பதும், "கைகவர் முயக்கம் அவரும் பெறுகுவர்மன்" (10-11) என்பதனாற் கூட்டமில்லாமையும், "அல்கலும், அழுதல் மேவலவாகி" (13-14) என்றதனால் அழுகையும், "கண்ணும் படுகுவமன்"(15) என்றதனால் கண் துஞ்சாமையும் தோன்றக் கூறுதலால், தலைமகள்பால் மெலிவும், தன் மெலிவறிந்து தோழிக்குக் கூறுவதனால் தோழி ஆற்றாளாயினமையும், அதுகண்டு, "எம்மொடு கழிந்தனராயின்" (7) என்பது முதலியவற்றால் முயக்கம்பெறுதலும், அழாமையும், இனிது கண்படுதலும் கூறித் தேற்றுதலின், தலைமகள் தான் ஆற்றுவல் என்பது படக் கூறியவாறும் பெறப்படுவதால், "தலைமகன் பொருள்வயிற் பிரிந்தவிடத்து ஆற்றாளாய தலைமகள் வேறுபாடு கண்டு ஆற்றாளாய தோழிக்குத் தலைமகள் ஆற்றுவல் என்பது படச் சொல்லியது," எனத் துறை கூறுவதாயிற்று.

இனி, தலைமகன் பிரிவினால் தன் மேனியுற்ற வேறுபாடு கண்டு, "அவன் அன்பிலனாய்க் கழிந்தான்," எனக் கருதித் தோழி ஆற்றாளாயினள் என்பதுணர்ந்த தலைமகள், உருப்பவிர் அங்காட்டின்கண் முற்றவும் மலர்ந்த இலவம், மகளிர் எடுத்த அஞ்சுடர் நெடுங்கொடி போலத் தோன்றி, உதிர்ந்து துகளாகி

யதுகண்டு, பிரிவுத் துன்பம் நின்று வருத்தும் மனையின்கண், நலங்கனிந்து தோன்றிய நம்மேனி, தன் பிரிவால் வேறு பாடு நினைந்து வருந்தும் பேரன்பினர்; ஆகலின், நீ ஆற்றாயாதல் என்னை,'' என இறைச்சியுட் சுட்டிக் கூறினாள். "அன்புறுதகுந இறைச்சியுட் சுட்டலும், வன்புறையாகும் வருந்தியபொழுதே'' (தொல். பொ. 231) என்பது விதி. இவ்விதி, பெரும்பான்மை யும் தோழி கூற்றுக்கே யுரியதாயினும், தோழி வருந்திய பொழுதின்கண் தலைமகள் வன்புறையாகச் சிறுபான்மை வரு தலின் தலைமகட்கும் சிறுபான்மை யுரித்தெனக் கோடல்வேண் டும். இவ்விதி இன்னார்க்கே யுரியதெனத் தெரித்துக் கூறா மையே, இதற்குச் சான்றாதல் அறிக.

களவின்கண் ஒழுகுதல்போலத் தலைமகன் கற்புக் காலத் தில் நம்மை தன்னுடன் கொண்டேகுதல் முறையன்றென்பாள் "எம்மொடு கழிந்தனராயின்,'' (7) எனக்கொண்டு கழியாமை யுணரக்கூறி, வழியின்கண் நிகழ்வன அவர் மனத்தில் நம்மை நினைப்பித்து அழுங்குவித்தலின், அவர் அன்பு சிறந்து, கூட்டம் நினைந்து வருந்துவர் என்பாள், "கைகவர் முயக்கம் அவரும் பெறுகுவர்'' (10-11) என்றும் கூறினாள். இஃது அன்புதொக நிற்றல் களவுக்காலத்துத் தலைமகனோடு உடன்போகியபோழ்து, கூடியாடி மகிழ்ந்து பயின்றுளாள் ஆகலின், "வம்பு விரித்தன்ன பொங்குமணற் கான்யாற்றுப், படுசினை தாழ்ந்த பயிலிணர் எக்கர்'' (9) எனச் சிறப்பித்தாள். "நிழல் காண்டோறும் நெடியவைகி, மணல் காண்டோறும் வண்டல்தைஇ, வருந்தா தேகுமதி வாலெயிற்றோயே'' (நற். 9.) என்பதனால், உடன் போக்கின்கண் தலைவனொடு கூடியாடி மகிழ்ந்து செல்லுதல் துணியப்படும். இவ்வாறு நிகழ்ந்ததுகூறி நிற்றலும் பாலை யாகும். "நிகழ்ந்ததுகூறி நிலையலும் திணையே'' (தொல். பொ. 44) என்பது விதி. இஃது அழிவில் கூட்டத்து மறைந்தவை யுரைத்தல். நீர்சொரிதல் நீங்காவாயினும், கூடியவிடத்துப் போலப் பிரிவினும் தலைவன்வரும் நெறியும் பொழுதும் நோக்கி ஆற்றுமாறு பயத்தலின், "பழிதீர் கண்ணும்'' (15) என்றாள். இனி, இதனை எதிர்மறைக் குறிப்பு மொழியாகக் கொண்டு,

கண்ணீர் சொரிந்து மெலிவு தோற்றித் தலைவன்பால் பழிபெற்றித்தூற்றும் கன்கள் என்று கூறுதலும் ஒன்று. மெய்ப்பாடு, இளிவரல்; பயன் தோழியையாற்றுவித்தல்.

இனி, இதன் அரும்பதவுரைகாரர் "அஞ்சுடர் நெடுங்கொடி பொற்பத்தோன்றி" (5) என்றவிடத்துத் தோன்றியென்பதைத் "தோன்ற" வென்பதன் திரிபாகக் கொள்வர். அவ்வாறு கொள்ளின், கயந்துகளாதற்காதல், கானம் பயன்கெடுதற்காதல் பொருந்தாமையின், அதனால் ஒருபொருட் சிறப்பின்மை யறிக. அன்றியும், "அஞ்சுடர் நெடுங்கொடி" யென்றது கார்த்திகை விளக்கை என்றும் அவர் கூறுவர். "அறுமீன் பயந்த அறஞ்செய் திங்கட், செல்சுடர் நெடுங்கொடி போலப், பல்பூங் கோங்கம் அணிந்த காடே" (நற். 202) என்பது இதற்கு ஒத்த எடுத்துக் காட்டாகும்.

---

# I. ஆந்தையென்னுந் தொகைவிரியுமாறு.

---

திரு. பண்டித, ஆ. சிவசுப்பிரமணியன், உதவித்தமிழாசிரியன்,
இராமேசுவர தேவத்தான வடமொழிப்பாடசாலை, மதுரை.

---

செந்தமிழ்த் தொகுதி 19, பக்கம் 281-ல் "ஆந்தையைப் பற்றிய ஐயம்" என்னும் தலைப்புடைய கட்டுரையொன்று வெளியிடப்பட்டிருக்கின்றது. அதனுட் கூறப்படுவன :—

1. ஆதன் + தந்தை = ஆந்தையென முடிந்த பெயருக்கு ஆதனுடைய தந்தை என்று பொருள் கொள்ளுதல் பலவகையானும் இடர்ப்பாடுடையதாகலின், அதற்கு ஆதனாகிய தந்தையையுடையவன் அல்லது ஆதனைத் தந்தையாக வுடையான் என அன்மொழித் தொகையாற் பொருள்கொள்ளுதலே தக்கது.

2. இலக்கண நூலார் ஆதன் என்னும் நிலைமொழியும் தந்தையென்னும் வருமொழியும் கூடியவழி, ஆந்தையென மருவிற்றென்று இலக்கண முடிபு காட்டினாரன்றி, ஆதனுடைய தந்தையென்றேனும், ஆதனுக்குத் தந்தையென்றேனும் ஆந்தையென்னும் பெயரின் பொருளை வேற்றுமை வழியில் விரித்துரைத்தாரல்லர்; ஆகலான் ஆதனாகிய தந்தையையுடையான் என அன்மொழித்தொகைப்பொருள் கொள்ளுதல் இலக்கணத்துக்கு விரோதமாகாது.

3. ஆந்தையென்னும் பெயரோடொத்த சாத்தந்தையென்னும் பெயருக்கும் சாத்தனாகிய தந்தையையுடையான் என்றே அன்மொழித் தொகைப் பொருள் விரிக்கவேண்டும்.

4. எந்தையென்பது என்னுடைய தந்தையென வேற்றுமைப் பொருளொன்றே தோன்ற விகாரப்பட்ட நிலைமொழியையுடைய முறைப்பெயர்; ஆந்தையென்பது அவ்வாறின்றி அவ்வழிப்பொருளும் உடன் கொள்ளக்கிடக்கும் இயற்பெயர்; ஆகலான் அதற்கு எந்தையென்பது காட்டாக மாட்டாது.

5. அன்மொழித் தொகையால் ஒற்றுமைப் பொருள் கொள்ளத் தகுதியுள்ளவிடத்து வேற்றுமைப் பொருள்கொள்ளுதல் மிகையுடைத்தாம். ஒற்றுமைப்பொருளில் ஆதனாகிய தந்தையையுடையான் ஆந்தையென்றாகி, ஆந்தை = ஆதன்மகன் என்பதே போந்த பொருளாகும். இவ்வாறே பூந்தை = பூதனுடையமகன், சாத்தந்தை = சாத்தனுடையமகன், எயினந்தை = எயினனுடைய மகன் என்பதே போந்த பொருள் என்னல் வேண்டும்.

6. சிலப்பதிகாரத்துக் கட்டுரை காதையிற் கூறப்பட்ட பொற்கைப் பாண்டியன் வரலாற்றுள் வரும் **கீரந்தை மனைவி** என்பது கீரனுடைய தந்தையே கீரந்தையாயின் (கீரனுடைய தந்தையினுடைய மனைவியெனப் பொருள்படும்) கீரந்தை மனைவியெனச் சுற்றிக் கூறுவதினும், **கீரன்றாய்** என எளிதிற் கூறுதலே ஆண்டைக் கேற்புடைத்தாம்.

7. சாத்தந்தையார் மகனார் கண்ணஞ்சேந்தனார் என்னும் பெயராலே, (சாத்தனுக்குத் தந்தை என்று பொருள் பயக்கும்) சாத்தந்தைப் பெயரினர், கண்ணஞ் சேந்தனார்க்குத் தமப்பனார் என்றல் பொருந்தாது என்பது அறியக்கிடக்கின்றது.

இவையே செந்தமிழில் வெளிவந்த ஐயவியாசத்துள்ளே கூறப்பட்டவைகளாம்.

ஐய வியாசத்துள்ளே கூறப்பட்டுள்ள முடிபுகள் நிலைபெற வேண்டுமெனின், அவை அத்தொகைகளுக்காகிய நிலைமொழி வருமொழி புணருமாறு கூறிய சூத்திரங்களினாலே ஆதரிக்கப் படுவனவாதல் வேண்டும். ஆகலின் அச்சூத்திரங்கள் தம்மையே ஆராய்ந்து முடிவு காண்போம். அச்சூத்திரங்கள் வருமாறு:—

1. இயற்பெயர் முன்னர்த் தந்தை முறைவரின்
முதற்கண் மெய்கெட வகர நிலையும்
மெய்யொழித் தன்கெடு மவ்வியற் பெயரே.

2. ஆதனும் பூதனும் கூறிய வியல்பொடு
பெயரொற் றகரந் துவரக் கெடுமே.

3. சிறப்பொடு வருவழி யியற்கை யாகும்.

(தொல். எழுத். 347, 348, 349.)

என்பனவே அச் சூத்திரங்கள். இவை வேற்றுமை வழிப் புணர்ச்சியைக் கூறுவனவோ? அல்வழிப் புணர்ச்சி கூறுவன வோ? ஒருவழியும் விதவாமையின் இருவழியும் கூறியனவே என ஐபவியாசத்தார் கருதுகின்றனர். அவர் அவ்வாறு கருதியது,

"இலக்கண நூலார் ஆதன் என்னும் நிலைமொழியும்
தந்தையென்னும் வருமொழியும் கூடியவழி
ஆந்தையென மருவிற்றென்று இலக்கணமுடிபு
காட்டினாரன்றி, ஆதனுடைய தந்தையென்றேனும்
ஆதனுக்குத் தந்தையென்றேனும் வேற்றுமைவழியில்
விரித்துரைத்தாரல்லர்; ஆகலான் ஆதனாகிய தந்தை
யையுடையான்என அன்மொழித் தொகைப்பொருள்
கொள்ளுதல் இலக்கணத்துக்கு விரோதமாகாது"

(அநுவாதம் 2),

என்று எழுதியிருப்பதுகொண்டு தெளியப்படும்.

ஆயின் மேலேகாட்டிய சூத்திரங்கள் வேற்றுமைப்பொருட் புணர்ச்சியே கூறுவன என்பதற்கு, அவற்றுக்கு அடுத்த சூத்திரமே கரியாகும். அது வருமாறு :—

"அப்பெயர் மெய்யொழித் தன்கெடுவழியும்
நிற்றலு முரித்தே யம்மென்சாரியை
மக்கண் முறைதொகூஉ மருங்கினான" (தொல்.எழுத்.350)

என்பது. "முறைதொகூஉ மருங்கின் என்றது இன்னாற்கு மகன் என்னும் முறைப்பெயராய்ச் சேருமிடத்து; உதாரணம் கொற்றங்கொற்றன், சாத்தங்கொற்றன் என நிலைமொழி அன் கெட்டுழி அம்மு வந்தது. இவற்றிற்கு அதுவேன் உருபுவிரியாது அதன் உடைமைப் பொருள்விரிக்க. இது முறைப்பெயர்" என்றார் உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர். "அப்பெயர்" என மேலைச்சூத்திரங்களிற் கூறிய இயற்பெயர்களையே சுட்டியிருப்பதுமறியத்தகும்.

"அதுவேன் உருபுவிரியாது அதன் உடைமைப் பொருள் விரிக்க; இது முறைப்பெயர்" என்று கூறுதலின் அச்சூத்திரம் வேற்றுமைப் பொருட் புணர்ச்சியே கூறியதென்பது அவர் கருத்தாதல் புலனாம். ஆயின் மேலே காட்டிய சூத்திரமோ வேற்றுமைக்கென்றோ அல்வழிக்கென்றோ விதந்தோதியதில்லையாதலின் இருவழியிலும் சென்றதாகக் கூறவேண்டுமன்றோ? அவர் ஏனோ வேற்றுமை வழியொன்றுமே கொண்டார்? அதற்குக்காரணம் இன்னதெனப் பின்னர்க் கூறுவோம்.

நச்சினார்க்கினியர் கூறியாங்குக் "கொற்றங் கொற்றன்" என்பதற்கு அதுவேன் உருபு விரியாது அதன் உடைமைப் பொருள் விரித்தலாவது, சொல்லதிகாரத்து வேற்றுமை மயங்கியலில் ஆசிரியர் தொல்காப்பியனார் கூறியுள்ள,

"அதுவென் வேற்றுமை யுயர்திணைத் தொகைவயின்
அதுவெ னுருபுகெடக் குகரம் வருமே"

என்ற சூத்திரப்படி, கொற்றனுக்கு மகன் கொற்றன் என விரித்தலாம்.

இச்சூத்திரத்து, சேனாவரையர், ''நம்பிமகன்,'' ''நங்கை கணவன்'' என்னுந்தொகைகளை விரிப்புழி நம்பிக்கு மகன், நங்கைக்கு கணவன் என விரிந்தவாறு காண்க'' என்று வருமொழி முறைப்பெயராகிய தொகைகளையேகாட்டி, நிலைமொழியிலே நான்கனுருபுவிரித்து முடித்தவாற்றானும், ''மக்கள் முறைதொகூஉ மருங்கின்'' என்புழி நச்சினார்க்கினியர், அதுவேன் உருபுவிரியாது அதனுடைமைப் பொருள் விரிக்க'' என்றமையானும், உயர்திணை அஃறிணை என்னும் இருதிணைவயின் அதுவென் வேற்றுமை தொகவரும் தொகையாகிய முறைப்பெயரின் நிலைமொழி வருமொழி புணருமாறு கூறியது. ''அப்பெயர் மெய்யொழித் தன் கெடுவழியும்'' என்ற சூத்திரம் என்பதும், அதன்படி புணர்ந்த தொகைகள் உயர்திணையாயின் இவ்வாறு விரியும், அஃறிணையாயின் இவ்வாறுவிரியும், என அவை விரிக்கப்படுமாறு கூறியது, ''அதுவென் வேற்றுமை யுயர்திணைத் தொகைவயின்'' என்ற சூத்திரம் என்பதும் தெளிய வருதலால், வேற்றுமைப் பொருட் புணர்ச்சியே ''அப்பெயர் மெய்யொழித் தன்கெடு வழியும்'' என்ற சூத்திரம் கூறியது என்பது பெறப்படுகிறது.

கொற்றங் கொற்றன் என்னுந் தொகையில் நிலைமொழி தந்தையினுடைய பெயர்; வருமொழி மகனுடைய பெயர்; இடையே தொக்கது மகனென்னும் முறைப்பெயர். இத் தொகை, கொற்றனுக்கு மகனாகிய கொற்றன் என விரியும். மகன் என்னும் முறைப்பெயர் தொகாது முடிந்த நிலைமொழி வருமொழிகளாயின் அவை கோற்றன் மகன் கோற்றன் என நிற்கும். கொற்றன் மகன் யாவன் என்னும் அறியலுறவு வேண்டாத காலத்துக் கொற்றன் மகன் என்றுமட்டும் நிற்கும். அதுவும் கொற்றனுக்கு மகன் என்று உயர்திணைத் தொகைவயின் அதுவென் உருபுகெட அதன் உடைமைப் பொருள் பயக்கவரும் என்று சொல்லதிகாரச் சூத்திரத்தாலே பெறப்பட்ட குவ்வுருபே விரிய நிற்கும்.

இக்கொற்றங் கொற்றன் என்பதோடொக்குமது சீரங் கொற்றன் என்பதும். அது ஐய வியாசத்துள்ளே ''சீரனுக்கு

மகன் முறையாயினனாகிய கொற்றன்'' என்றுதான் விரிக்கப் பட்டிருக்கின்றது.

இங்ஙனம் மகன் முறைப்பெயர் வருமொழியாகிய தொகைகளேயன்றிக் கீரந்தைமனைவி, கீரன்றாய் என்னுந்தொகைகளும், கீரந்தைக்கு மனைவி, கீரனுக்குத் தாய் என்றே அவ்வைய வியாசத் துள்ளே விரிக்கப்பட்டுள்ளன.

இவ்வாறு மகன், மனைவி, தாய் என்னும் முறைப்பெயர்கள் வருமொழியாகிய தொகைகளை வேற்றுமை வழியாலேமட்டும் விரித்த ஐய வியாசத்துள், தந்தை முறைப்பெயர் வருமொழி யாகிய கொற்றந்தை, சாத்தந்தை, ஆந்தை என்பனவாதிய தொகைகள்மட்டும் அன்மொழிப் பொருளால் விரிக்கத்தகுவன என்று கூறப்பட்டிருப்பது ஆராயத்தக்க தாகின்றதன்றோ?

ஐயவியாசத்துள் ஆந்தையென்னுந்தொகை விரிக்கப்பட்ட முறையாலே, தந்தையென்னும் முறைப்பெயர் மகன் முறைப் பெயர்ப் பொருளைப் பயப்பதோன்றுகின்றது. ஆயின் அது மகன் முறைப் பெயர்ப் பொருள் பயந்தாற் போலவே தாயென்னும் முறைப்பெயர், மகள் முறைப்பெயர்ப் பொருளையும் தருங் கொலோ? என ஐயுறுவார்க்கு ஐயங்களைதற் கெழுந்த சூத்திர முண்டோ? மகள் முறைப்பெயர்ப் பொருளைத் தாராதெனின் விலக்குச் சூத்திரமுளதோ?

அன்றியும்,

“காதலுன்பெருங் கணவனை யஞ்சியக் கனிவாய்ச்
சீதை தந்தையுன் தாதையைத் தெறுகிலன்.''

என்புழிச் சீதை தந்தை என்னுந் தொகையையும், சீதையாகிய தந்தையையுடையன் என விரிக்கலாம்போலும்? ஆகாதெனின் அதனை விலக்குதற்கு விதியாண்டுள்ளது?

தொகை முடிபுகூறிய சூத்திரத்து “இயற்பெயர் முன்னர்த் தந்தை முறைவரின்'' என்று கூறியிருத்தலின் அது அன்னீற் றியற்பெயர் புணருமாறு கூறியது; ஆகலின், கொற்றந்தை யென்னுந் தொகையோடு சீதை தந்தை என்னுந் தொகையை

ஒரு தன்மையுடையதெனக் கொள்ள வியலாது எனின் அது பொருந்தாது.

என்னே? அன்னீற்றுப் பெயர் சில, தந்தை முறைவரின் திரிந்து முடிதலின் அத்திரிபு கூறிய எழுந்தது அச்சூத்திரம். மற்றுத் திரியாது முடிவனவற்றை விலக்கித் திரிந்து முடிவனவற்றை மட்டும் இருவழியிலுங் கோள்க என விதித்தற்கு எழுந்ததன்றும். ஆகலின் அது இயல்பு முடிபு பெற்றிருக்கும் கொற்றன்றந்தை முதலியவற்றையும் ஏனையாற்றின் பின்னர் இயல்பாய் முடிந்த சீதை தந்தை முதலியவற்றையும் "வேற்றுமை வழியில் மட்டுமே விரிக்க" எனக் கூறுதற்கெழுந்ததென்னுமாறில்லை.

அன்றியும் அச்சூத்திரத்திலே சாத்தன்றந்தை, கொற்றன்றந்தை என்னும் இயல்பு முடிபுகளை, "முதற்கண் மெய்கெட" என்ற மிகையாற் கொள்ளுமாறு நச்சினார்க்கினியர் உரைத்தார். அவர் கூறிய இயல்பு முடிபான தொகைகளை ஐயவியாசத்தார் இருவழியிலும் விரிக்கத்தகும் எனக்கொள்வரோ கொள்ளாரோ யாமறியேம்!

"முதற்கண் மெய்கெட" என்ற மிகையால் சாத்தன்றந்தை கொற்றன்றந்தையென்ற இயல்பு முடிபுங்கொள்க" என்று நச்சினார்க்கினியர் கூறியதுதானே ஏனையீற்றுப்பெயர் முன்னர் வரினும் அது இயல்பு முடிபாம் என்று கோடற்கும் விதியாகின்றது.

இவ்வாறு இயல்பு முடிபாகிய சீதைதந்தை என்னுந் தொகை சீதைக்குத் தந்தை என வேற்றுமை வழியாலேமட்டும் விரிக்கப்படுதல் போலவே அவ்விதியேபற்றி இயல்பு முடிபாகிய ஆதன்றந்தை, கொற்றன்றந்தை, சாத்தன்றந்தை, எயினன்றந்தை என்பனவும் வேற்றுமை வழியாலே விரிக்கப்படுவனவாமென்று போதருகின்றது.

இவை வேற்றுமை வழியிலேமட்டும் விரிக்கப்படுவனவாக, இவற்றின் திரிந்த முடிபாகிய ஆந்தை, சாத்தந்தை முதலியன மட்டும் அல்வழி வேற்றுமை என்னும் இருவழியிலும் விரிக்கத்

தகுவனவாம் என்றல் இலக்கண நூலோர் கருத்தொடு படுவ தன்றாம். ஆகவே ஆதன்+தந்தை=ஆந்தை எனப் புணரும் என்று கூறிய சூத்திரம் வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கட் படும் செய்கையே கூறியதென்று தெளியப்படும்.

(தொடரும்.)



# தமிழகத்தின் உழவின் நலமும் வாணிகத்தின் சிறப்பும்.

திரு. K. சோமசுந்தரம் பிள்ளை, B.A., B.L.,

(முற்றொடர்ச்சி துணர் 10. மலர் 3. பக்கம் 118.)

நம் தமிழகத்தே,

" எந்திரஞ் சிலைக்குந் துஞ்சாக் கம்பலை
விசயம டூஉம் புகை சூழாலை..........."

பலவிருந்தன. தமிழர் சர்க்கரை வியாபாரம் பிறநாட்டாருடன் செய்து வந்தனரெனத் தெரிய வருகின்றது. சிலர் கடலினுவர் நீரைப் பாத்திகளிற் பாய்ச்சி உப்பு விளைத்தனர். இவ்வுப்பினை விற்கும் உமணர், உப்பை பொதிபொதிகளாக பாண்டில்களி லேற்றி வேறு நாட்டில் வியாபாரத்தினிமித்தமாகச் செல்வதினை ஈண்டு நோக்குக.

" படலைக் கண்ணிப்பரேரெறுழ்த் திணிந்தோன்
முடலையாக்கை முழுவலி மாக்கள்
சிறுதுளைக் கொடுநுக நெறிபட நிரைத்த
பெருங்கயிற் றொழுகை மருங்கிற்காப்பச்
சில்பதவுணவின் கொள்ளை சாற்றிப்
பல்லெருத் துமணர் பதிபோகு நெடுநெறி "

இவ்வுமணர்கள் வெள்ளிய உப்பினது விலையினைக்கூறி அதற்கு அதன் விலையேற்றுள்ள அளவாக நெல்லையும் வாங்கிக் கொணர் வதை ஈண்டேயறிக.

“வெள்ளையும் பின்கொள்ளை சாற்றி
நெல்லொடு வந்தவல் வாய்ப்பஃறி”

மற்றும் வம்பலர் குடகுமலை மிளகினை கழுதைகளின் மேலேற்றி ஊருராய்க் கொண்டு சென்று விற்று வந்தனர். [‘கழுதைச் சாத்து’ — பெரும்பாணாற்றுப்படை. ‘சாத்தொடு போந்து’—சிலப்பதிகாரம்]. பாலைவெளியைச் சூழ்ந்து உறையும் மக்கள், அப்பாலை நிலத்தைக் கடந்து வாணிகம் நடாத்த பாலைநில விலங்காகிய ஒட்டகங்களுதவியை நாடுவரென அறியப்படும். இத்தகைய நிலத்தினிற் கழுதைகள் செல்லாததினால் அவைகளை வாணிகத்திற்காகப் பயன்படுத்தார். இதனான் அப்பாலை நிலத்திற்குரிய மக்கள் வாணிகம் நடாத்த அந்நிலத்திற்குரிய விலங்காகிய ஒட்டகத்தைப் பயன்படுத்தி வந்தார்கள். பண்டுதொட்டே தமிழகத்தில் ஒட்டகம் வழங்கியிருந்த உண்மை ‘ஒட்டகம் அவற்றோடு ஒருவழி நிலையும்’ என்ற தொல்காப்பிய ரது மரபியற் சூத்திரம் [கஅ] நன்கறிவிக்கும். பழந்தமிழ் மக்கள் பல்லூர்களுக்குப் பல்லடவிகளின் மூலமாய் வியாபாரத்தைச் சென்று செய்வதினான், அவ்வியாபார நெடுநெறிகளில் ஆங்காங்கே வியாபாரத்தினைக் காப்பாற்ற பல்சேனைகளுமிருந்தன. இச்சேனைகளின் செலவினிற்காக பற்பலவிடங்களில் சுங்கச் சாலைகள் அமைக்கப்பட்டுள்ளன. இதனை,

“....................நேரியற்
புணர்ப்பொறை தாங்கிய வடுவாழ் நோன்புறத்
தணர்ச்செவிக் கழுதைசாத் தொடுவழங்கு
முல்குடைப் பெருவழிக் கவலைகாக்கும்
வில்லுடைவைப்பு” என்பதினாலறிக.

நம் தமிழகத்தே செங்கோலோச்சிய முடியுடை வேந்தர் மூவரும் வாணிகர்களை மிகவும் மதித்து அவர்களது வியாபாரத்தினையும் பெருகச் செய்ய முயன்றனர். சேனாதிபதியருக்கு மன்னன் ‘ஏனாதி’ப் பட்ட மிடுவது போன்று, வணிகருள் சிறந்தார்க்கு ‘எட்டி’ யென்ற பட்டமும் தந்தருளி அதற்கடையாளமாக பொற்பூவினையும் கொடுத்தனரென்பது பின் வருபவற்றாலறிக.

'எட்டிப்பூபெற்று இருமுப்பதிற் றியாண்டு
ஒட்டியசெல்வத்து உயர்ந்தோ னுயினன்'
'எட்டிச்சாயலி னிருந்தோன் தனது
இட்டதானத்து எட்டியும் மனைவியும்
முட்டாவின்பத்து முடிவுலகு எய்தினர்.'

வியாபாரத்தினிமித்தம் தம் நாடு போந்து நம் தமிழகமடைந்து ஆங்கே குடியிருப்பினையுடையவராயுள்ள யவனர்கள் செல்வ வாழ்க்கையினில் தலைமைப்பட்டு வாழ்வதற்கேற்ற உயர் சிறப்பும் பெற்றதினை அறிந்து கொள்ள சிலப்பதிகாரமொன்றே சாலும். மற்றும் நம் தமிழகத்தின் கண்ணே 'போழ்கொடு கடைநரும்,' திருமணி குயினரும், இரும்புவேலை செய்யும் கொல்லரும், பருத்திநூல் சணல்நூல் முதலியவைகளைச் செய்யும் பட்டு சாலியரும், 'சூடுறு நன்பொன் சுடரிழை புனைநரும்,' உருக்கு தட்டாரும், பொன்உரை காண்மரும், கலிங்கம் பகர்நரும், செம்புநிரை கொண்மரும், வம்புநிறை முடிநரும், 'பூவும் புகையுமாயுமாக்களும்', 'எண்வகைச் செய்தியு முவமங் காட்டி நுண்ணிதினுணர்ந்த நுழைந்த நோக்கிற் கண்ணுள் வினைஞரும், மகத வினைஞரும், மராட்டக் கம்மரும், அவந்திக் கொல்லரும், யவனத் தச்சரும், கூர்ச்சரதேயத்து சிற்பாசாரிகளும், கலஞ்செய் கம்மியரும்

'......................வளைவிற் பொறியும்
கருவிர லூகமும் கல்லுமிழ் கவணும்
பரிவுறு வெந்நெயும் பாகடு குழிசியும்
காய் பொன்னுலையும் கல்லிடு கூடையும்
தூண்டிலுந் தொடக்கும் ஆண்டலை யடுப்பும்
கவையும் கழுவும் புதையும், புழையும்
ஐயவித்து லாமும் கைபெய லூசியும்
சென்றறி சிரலும் பன்றியும் பணியும்
எழுவிஞ் சீப்பு முழுவிரற் கணையமும்
கோலுங் குந்தமும் வேலும்.........................''

இன்னும் பலவகைகளைச் செய்ய வல்லாரும், அந்துகம்செய்யும் அற்புதரும், ஆரகூடம், இரசிதம், இரணியம், உதும்பரம்,

உறை, கரும்பொன் முதலியவைகளில் வேலைத்திறனைக் காண்பி விக்கும் கம்மாளரும் வேறுபிற சிறந்த கைத்தொழிலாளர்களும் தமிழ் மன்னர்களின் பாது காவலின்மேல் பீடுறவதிந்து இன் புற்றிருந்தனர்.

வாணிகத் தமிழ் மக்கள் உள்நாட்டிலேயல்லாது கடல் கடந்தும் வாணிபம் முதலியனசெய்து பெரும்பொருள் ஈட்டும் முயற்சியினை யுடையவராயிருந்தனர். சேரர் குடகடலில் பொன்னைத் தரும் மரக்கலத்தைச் செலுத்தி பொன் கொணர்ந் தாரென்றும் அவ்வாறு செய்தலில் அவரின் மிக்கார் யாவருமில ரென்றும், மற்றும் அக்கடலிலே வேறுசில மரக்கலம் போக மாட்டாத தன்மையையுமுடையவரென்றும், மலையமான் திரு முடிக்காரியைப் பாடிய மாறோக்கத்து நப்பசலையாரது புறப் பாட்டில் நன்குணரக் கிடக்கின்றது.

'நிலமிசைப் பிறந்த மக்கட் கெல்லாம்
புலனழுக் கற்ற அந்தணாளன்
இரந்து செல்மாக்கட் கினியிடனின்றிப்
பரந்திசை நிற்கப் பாடினன் அதற்கொண்டு
சினமிகு தானைவானவன் குடகடல்
புலந்தரு நாவாய் ஓட்டிய அவ்வழிப்
பிறர்கலம் செல்கலா தனையேம்'' [புறம். 126]

சரித் திரகாலத்திற்கு மேம்பட்டானாகிய கரிகால் பெருவளத்தானின் உரவோனாகிய முன்னோன் காற்று இயங்காததினால் கடலிலே தடைப்பட்ட மரக்கலத்தை, பின்னும் செலுத்த வளிச்செல்வனை வேண்டி அவனேவல் கொள்ளும் வலியினை யுடையானென்பதை கரிகால் பெருவளத் தானை பாடிய வெண்ணிக் குயத்தியாரது புறப்பாட்டால் [கூகூ]

"நளியிரு முந்நீர் நாவாயோட்டி
வளிதொழி லாண்ட உரவோன் மருக''!

நன்குணரலாகும். மற்றும் தமிழ் மக்கள் திரைகடலோடியும் திரவியந்தேடி கடல் வியாபாரத்தினைப் பெருக்கினதாலுண் டான நேர்மை எத்தகைய நீர்மையுடையதென்பது ஈண்டுவரும் மதுரைக் காஞ்சிவரிகள் புலப்படுத்தல் காண்க.

"வானியைந்த விருமுந்நீர்ப்
பேஎநிலைஇய விரும்பௌவத்துக்
கொடும்புணரி விலங்குபோழக்
கடுங்காலொடு கரைசேர
நெடுங்கொடி மிசையிதையெடுத்
தின்னிசைய முரசமுழங்கப்
பொன்மலிந்த விழுப்பண்ட
நாடாரநன் கிழிதரு
மாடியற்பெரு நாவாய்!"

பழந்தமிழ் மக்கள் கடல் கடந்து வாணிபம் முதலியன செய்து பெரும்பொருள் ஈட்டும் முயற்சி யுடையராயிருந்ததாதல்பற்றி, அஸ்ஸிரியா, பாபிலோனியா, எகுபதி, சாவகம், சீனு, யவனம் முதலிய தேயங்கள் தமிழகத்திலிருந்து ஆடை, ஆபரண உணவாதிகளை கைக்கொண்டு சென்று பிற்பட்டு தனிமைப்பட அவைகள் யாவும் நாகரீக நிலைமையினை யடைந்தன. காவிரிப் பூம்பட்டினத்திற் கருகாமையிலுள்ள கடற்கரையினில்,

"வம்பமாக்கடம் பெயர்பொறித்த
கண்ணெழுத்துப் படுத்தவெண்ணுப் பலபொதி" களை

ஏற்றுமதி இறக்குமதி முதலியவைகள் எவ்விதமாய் நடைபெற்ற தென்பதையும், பண்டகசாலைகளைப் பற்றியும், பிறநாட்டுக் கப்பல்கள் தங்கும் துறைகளைப் பற்றியும், சுங்கச் சாலைகளைப் பற்றியும் நாம் நேரிற் கண்டாற்போல உள்ளவாறே கடியலூர் உருத்திரங் கண்ணனர் எடுத்துக் காட்டியிருக்கின்ற பரிசை நோக்குமின்!

"நல்லிறைவன் பொருள்காக்குந்
தொல்லிசைத் தொழின்மாக்கள்
காய்சினத்த கதிர்ச்செல்வன்
றேர்பூண்ட மாஅபோல
வைகறொறு மசைவின்றி
யுல்குசெயக் குறைபடாது

வான்முகந்த நீர்மலைப்பொழியவு
மலைப்பொழிந்த நீர்கடற்பரப்பவு
மாரிபெய்யும் பருவம்போல
நீரினின்று நிலத்தேறவு
நிலத்தினின்று நீர்ப்பரப்பவு
மளந்தறியாப் பலபண்டம்
வரம்பறியா மைவந்தீண்டி
யருங்கடிப் பெருங்காப்பின்
வலியுடை வல்லணங்கினோன்
புலிபொறித்துப் புறம்போக்கி
மதிநிறைந்த மலிபண்டம்
பொதிமூடைப் போரேறி."

[பட்டினப்பாலை 120—137.]

ஆகவே, இதுகாறும் கவனித்ததில் பண்டைத் தமிழ் மக்கள் தமிழகத்தின் நன்மையினையும் சிறப்பினையும் நாடி, நாகரீக முன்னேற்றத்திற்கு ஓர் நாட்டைக் கொண்டுவரு மியல்புள்ள உழவுத் தொழிலையும் அதனை அடுத்துநிற்கும் வாணிபத் தொழிலையும், அதன்நலனும், சிறப்பும் முறையே யாவருமறியப் பெருக்கி, நீர்சூழ் நிலவரையிலுள்ள ஏனைய நாடுகளும் தமிழகத்திற்கு உவந்து வந்து 'நாகரீகம்' இத்தன்மைத்தெனவென அறிந்து கோடற்கு, தமிழகத்தை பல்பெருஞ் சீரும் சிறப்பு மெய்த எண்ணுதற்கரிய தனி முன்னேற்றத்திற்குக் கொண்டு வந்தனரெனப் பெற்றோம்.



# தம்பிரான்றோழர் தேவாரம்.



திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளை, தலைமைத்தமிழாசிரியர்,
உயர்தரக்கலாசாலை, நான்குநேரி.

முற்றொடர்ச்சி துணர் 9. மலர் 2. பக்கம் 55.

## உ. திருமால்.

திருமால் என்ற இத்தலைப்பின்கீழ் சுந்தரனார் திருமாலைப் பற்றிக் கூறுவனவற்றை ஆராய்வதோடு நான்முகனைப்பற்றி மொழிவனவற்றையும் ஆராய்வாம். திருமாலும் நான்முகனும் ஒருகாலத்தில் தம்முள் பகைகொண்டு போராடத் தொடங்கினர். நான்முகன் திருமாலின் உந்திக் கமலத்திற் பிறந்தவன். அதனால் அவன் திருமாலுக்கு மகன் முறையாவான். ஆதலின் திருமால் "தந்தையாகிய நானேபெரியவன்" எனமொழிந்தான். நான்முகனோ தான் திருமாலிடம் தோன்றினவனாயினும் திருமாலினும் பெரியவன் எனக் கூறினான். தன் கூற்றுக்குத்துணையாக விறகினையும் விறகிலிருந்து தோன்றும் தீயினையும் காட்டி, தீ எவ்வாறு தான் தோன்றி விறகினை எரிக்குமோ அவ்வாறே தான் திருமாலைவென்று அழிக்க வல்லவனெனப் புகன்றான். அவர் தம்முள் போர் மூண்டெழுந்தமையை உணர்ந்த சிவபெருமானார் அவர்களுக்கு உண்மையை உணர்த்துமாறு ஓர் ஒளிப் பிழம்பாக அவர்கள் முன்தோன்றி விண்மொழியாக "இச்சோதியின் அடியையாவது முடியையாவது யார்முதலில்பார்த்து வருகின்றனரோ அவனே பெரியவன்" எனக் கூறினர். அதனைக்கேட்ட மலரவனும் மாலவனும் தம்முள் போரினை ஒழிந்து அவ்வொளியின் அடிமுடி தேட முற்பட்டனர். திருமால் பன்றியுருவம் தாங்கி ஒளியின் அடியைத் தேடத்தொடங்கினான்; நான்முகன் அன்னவடிவம் கொண்டு முடியைக் காண முனைந்தான். அவர்கள் எத்தனை முயன்றும் வெற்றிபெற்றாரல்லர்; அப்போது சிவபெருமானார் அவர்கள் முன்தோன்றுதலும், அவர்கள்

தம்முன் ஒளிவடிவாய் நின்றவர் தம் இறைவரே என்பதை உணர்ந்து பலவாறு தொழுது போற்றிசைத்தனர். இவ்வரலாற்றைத் தம்பிரான்றோழர் தமது தேவாரத்தில் பல இடங்களில் குறித்திருக்கிறார். அவை வருமாறு :—

"மாணு உருவாகி ஓர் மண்ணளந்தான்
மலர்மேலயன் தேடியும் காண்பரியாய்"
திருநெல்வாயில் திருவறத்துறை.

"ஆடுங்காட்டில் அயனுமாலும் நணுகாவண்ணம் அனலுமாய
வேடங்காட்டித் திரிவதென்னே" திருவெண்காடு.

"மருதுகீறி ஊடுபோன மாலயனு மறியா" திருஎதிர்கோள்பாடி.

"கரியமால் அயனுந்தேடிக் கழலிணை காணமாட்டா
அரியனாய் நின்ற ஆரூர் அப்பனே" திருவாரூர்

"வணங்கித் தொழுவாரவர் மால்பிரமன்" திருப்புத்தூர்.

"திருமாலயனாலும் உருவுடையார்" திருப்பூவணம்.

"மாவாய்ப் பிளந்தானும் மலர்மிசையானும்
ஆவா அவர்தேடித் திரிந்தமைந்தார்" திருத்துறையூர்.

"மாலயனும் காண்பரிய மாலெரியாய் நிமிர்ந்தோன்"
திருக்கலயநல்லூர்.

"பண்டை மால்பிரமன் பறந்தும்இடந்தும் அயர்ந்தும்
கண்டிலராய் அவர்கள்கழல் காண்பரி தாயபிரான்"
திருக்கோளிலி.

"அட்ட புட்பமவை கொண்டடிபோற்றி நல்ல
கரியவன் நான்முகனும் அடியும்முடி காண்பரிய
பரியவன்" திருப்பழமண்ணிப்படிக்கரை.

"செய்யானும் கரிய நிறத்தானும் தெரிவரியான்" திருக்கழிப்பாலை

"புண்டரிகத் தயன்மாலவன் போற்றிசெய்யும் கனலே"
திருக்கற்குடி.

"அயனோ டன்றரியும் அடியும்முடி காண்பரியபயனே"
திருக்கடவூர்.

"சங்கேந் துகையானும் தாமரையின்மேலானும் தன்மைகாணக்
கங்கார்ந்த வார்சடைகள் உடையானை" திருக்கருப்பறியலூர்.

"நெடியானெடு நான்முகனும் மறிவொண்ணுப் படியான்"

திருக்கோடிக்குழகர்.

"அயன் நெடியமாலுக்கு நெடியரோ" நமக்கடிகளாகியஅடிகள்.

"வெள்ளத்து மாலயனும் வேதமுதலானும் அடியிணையும்
திருமுடியும்காண அரிதாய சங்கரனை" திருக்காணுட்டுமுள்ளூர்.

"அரியொடு பூமிசையானும் ஆதியும் அறிகிலார்"

முடிப்பது கங்கை.

"காண்டற்கரிய கடவுளாய், நீண்டவன் நீண்டவன் நாரணன்
நான்முகன்நேடவே" திருஆமாத்தூர்.

"நும்மைக் கண்டார்க்கும் காண்பரிதாய்க் கனலாகிநிமிர்ந்தீர்"

திருக்காரோணம்.

"செப்பரிய அயனெடுமால் சிந்தித்தும் தெரிவரிய
அப்பெரிய திருவினை" திருவாரூர்.

"முன்இருவர் நினைந்தினிதேத்தப் பெற்றுளனும் பெருமையனை"

திருவாரூர்.

"பேழ்வாயரவின் அணையானும் பெரியமலர்மேல் உறைவானும்
தாழாதுன்றன் சரண்பணியத் தழலாய்நின்ற தத்துவனே"

திருவாலங்காடு.

"தேடிமாலயன் காண்பரியானை" திருநீர்.

"நீற்றுத் தீயுருவாய் நிமிர்ந்தானை" திருக்கோலக்கா.

"பின்னைநம்பும் புயத்தான் நெடுமாலும் பிரமனும் என்றிவர்
நாடியும் காணுஉன்னை" நம்பியென்ற திருப்பதிகம்.

"மால்பிரமன் அறியாத மாத்தானை" திருவலிவலம்.

"மாலயன் காணுச் சம்புவை" திருநள்ளாறு.

"ஏனமோடன்னம் எங்கும்நாடியும் காண்பரியானை" திருநள்ளாறு.

"விரைதரு மலர்மேல் அயனெடு மாலும்
கவருவிட நீண்ட எம்மானே" திருவடமுல்லைவாயில்.

"இருவரால் அறியொண்ணு இறைவன்" திருவாஞ்சியம்.

"தேசவெந்தன் திருமாலும் மலர்மேலயனும் காண்கிலா"

திருவையாறு.

"தனகழலை அரிய திருமாலோ டயன்றானும் மவை அறியார்"
சீபர்ப்பதம்.

"பூஎந்திய பீடத்தவன்றானும் அடல்அரியும்
கோவேந்திய வினயத்தொடு குறுகப் புகல்அரியார்"
திருச்சுழியல்.

"மண்ணினை உண்டுமிழ்ந்த மாயனும் மாமலர்மேல்
அண்ணலும் நண்ணரிய ஆதியை" திருவாரூர்.

"ஊழிபடைத் தவனோடொள்ளரியும் உணரா அண்டனை"
திருக்கானப்பேர்.

"மழையானும் திகழ்கின்ற மலரோன் என்றிருவர்தாம்
உழையா நின்றவர்உள்க உயர்வானத் துயர்வானை"
திருவன்பார்த்தான் பனங்காட்டூர்.

"துரங்கன் வாய்பிளந்தானும் தூமலர்த்தோன்றலும் அறியாமல்
தோன்றி நின்று" திருப்பனையூர்.

"மாலயன் ஏத்த" திருவீழிமிழலை.

"அயன்மால் அரிதற்கரிய சோதியான்" திருநனிபள்ளி.

திருமாலைப்பற்றிய சில புராணக்கதைகளைக் குறிப்பாக நமக்குத் தெரிவிக்கிறார் சுந்தரனார்; மாபலியைத்தொலைப்பதற்காகத் திருமால் குள்ள வடிவொடு அவன் முன்தோன்றி அவனிடம் மூன்றடிமண் இரந்துபெற்று, பின்பேருருவம்கொண்டு உலகங்களையெல்லாம் அளந்தான் என்பது புராணம். இதனை,

"மாணா உருவாகி ஓர் மண்ணளந்தான்"
திருநெல்வாயில் அறத்துறை.

என்றும், "நெடுமால்," (திருமழபாடி) எனவும், "நெடியோன்" (திருமுதுகுன்றம்) என்றும், "நெடியான்," (திருக்கோடிக்குழகர்) என்றும், "நீண்டவன்" (திருஆமாத்தூர்) எனவும், "நெடியமால்" (நமக்கடிகளாகிய அடிகள்) எனவும், நம்பியாரூரர் கூறுகின்றார். "உலகையாளும் மன்னவனாகப் பிறப்பவன் திருமால்" என்ற கொள்கையை அவர் "தேசவேந்தன் திருமாலும்" எனத் திருவையாற்றுப்பதிகத்தில் ஓதியருளினார். அவன் பாம்பணையினன் என்பதை அவர், "படமாடும் பாம்பணையானுக்கும்" எனவும்,

(திருவெண்ணெய் நல்லூரும் திருநாவலூரும்) "பேழ்வாயரவினணை யான்" என்றும் (திருவாலங்காடு) குறித்தார். திருமால்கரிய நிறத்தவன் என்பதை அவர் பல இடங்களில் "கரியவன்," "கரிய நிறத்தவன்," "மழையான்" எனக் கூறுகின்றனர்.

திருமால் ஒருகாலத்தில் உலகை உண்டு பின் உமிழ்ந்தவன் என்ற புராணத்தைத் தம்பிரான்றோழர், "வையக முழுதுண்ட மால்" (திருக்கூடலையாற்றூர்) எனவும், "மண்ணினை உண்டுமிழ்ந்த மாயனும்" (திருவாரூர்) என்றும் குறித்தருளினார்.

பிரகலாதனுடைய தந்தையாகிய இரணியனைத் திருமால் சிங்க வடிவம் தாங்கிப் பிளந்தான் என்பது மற்றொரு புராணம். இதனைத் தம்பிரான்றோழர்,
"மாவாய்ப் பிளந்தானும்" (திருத்துறையூர்) என்றும், "அரியும்" (திருக்கடவூர் முடிப்பது கங்கை) எனவும் குறித்தார்.

சிங்க உருவந்தாங்கிய திருமால் மெய்கறந்து உலகத்தாரை அழிக்கத் தொடங்க அப்போது சிவபெருமான் தோன்றிச் சிங்கத்தை அழித்தருளினார் என்பதை அவர் திருவெண்காட்டுப் பதிகத்தில் "மடங்கலானைச் செற்றுகந்தீர்" எனப்புகன்றார். அரியாகத் தோன்றியமையாலேயே (அரி—சிங்கம்) திருமால் அரியெனப்பட்டான் போலும்!

திருமால் மண்ணில் கண்ணனாகத் தோன்றிச்செய்த திருவிளையாடல்கள் சிலவற்றைத் தமது தேவாரத்தில் நம்பியாரூரர் குறிக்கிறார். கண்ணன் மாடுமேய்த்தான் என்பதைக் 'கோவலன்' (திருவெண்ணெய்நல்லூரும் திருநாவலூரும்) என அவர் குறித்தார். தனது தாய் தன்னைக் கட்டிப்போட்டிருந்த உரலை இழுத்துக் கொண்டு இரண்டு மருத மரங்களிடையே போய் அவைகளை இழுத்துத் தள்ளினான் கண்ணன் என்பதைத் திருஎதிர்கோள் பாடிப் பதிகத்தில் "மருதுகீறி ஊடுபோனமால்" எனச் சுந்தரர் குறித்தார். தனது தாய் மாமனாகிய கஞ்சன் தன்னைக்கொல்வதற்காகத் தலைவாயிலில் நிறுத்தியிருந்த குவலயா பீடமென்ற பெயரையுடைய காட்டானையின் கொம்பை ஒடித்து அதனைக்

கண்ணன் கொன்ற கதையை அவர் திருவாழ்கொளிபுத்தூர்ப் பதிகத்தில், "கான ஆனையின் கொம்பினைப் பிழ்ந்த கள்ளப்பிள்ளை" எனமொழிந்தருளினர். இங்கே கண்ணன் கள்ளப்பிள்ளை எனக் குறிக்கப்பெற்றான். இது அவன் செய்த திருட்டுச்செயல்களை உணர்த்தும் போலும்!

திருமால் ஒரு கையில் சங்கு உடையவன் என்பதை அவர் "சங்கேந்து கையான்" எனத் திருக்கருப்பறியலூரில் குறித்தார். அவன் திருமகளுக்குக் கணவன் என்பதை, "திருமா மகள் கோன்" (திருஇடையாற்றுத்தொகை) எனவும், "திருவினாயக னாகியமால்" (திருவாழ்கொளிபுத்தூர்) என்றும், "பின்னைநம்பும் புயத்தான் நெடுமால்" (நம்பி என்ற திருப்பதிகம்) எனவும் அவர் மொழிந்தருளினர்.

திருமாலுக்கு மகனாவான் மன்மதன். சூரபதுமனால் துயருற்ற தோள்கள் வேண்ட மன்மதன் சிவபெருமானுடைய தவநிலையைக் கெடுக்க முயன்றான். அப்போது சிவபெருமான் திருமால் காண அவனை நெற்றிக்கண் தீயால் எரித்தருளினர். இவ்வரலாற்றை அவ்வடியார் திருவேண்காட்டுப் பதிகத்தில்,

"நீர்முன்கொண்ட உயர்தவத்தை அமரர்வேண்ட
அழிக்கவந்த காமவேளை அவனுடைய தாதைகாண
விழித்துகந்த வெற்றி என்னே!" எனக் குறிக்கின்றார்.

திருமால் ஒருகாலத்தில் நாடோறும் ஆயிரம் செந்தாமரை மலர்களைக்கொண்டு வந்து சிவபெருமானை வழிபட்டு வந்தான். ஒருநாள் ஒரு பூக்குறைந்தது; உடனே திருமால் தன் செந்தாமரைக் கண்ணில் ஒன்றைப் பிடுங்கி அருச்சித்தான். அவனுடைய அன்பின் பெருக்கைக்கண்ட சிவபெருமான் அவனுக்கு ஒளிபொருந்திய சக்கரத்தைத் தந்தருளினர். அச்சக்கரம் சலந்தரன் என்ற வீரனைக்கொன்று சிவபெருமான் தன்னிடம் வைத்திருந்த பெருமையது. இக்கதையினைப் பல இடங்களில் குறித்தார் நம்பியாரூரர். அவை வருமாறு:—

"திருமகள்கோன் நெடுமால் பலநாள் சிறப்பாகிய பூசனைசெய்
[பொழுதில்

ஒருமலர் ஆயிரத்திற் குறைவான் நிறைவாக ஓர்கண்மலர்
[சூட்டலுமே
பொருவிறல் ஆழிபுரிந்தளித்தீர்'' திருப்புத்தூர்.

"செருமேவு சலந்தரனைப் பிளந்த சுடர்ஆழி
செங்கண்மலர் பங்கயமாச் சிறந்தானுக்கருளி'' திருக்கலேயநல்லூர்

"ஆழி அளிப்பர் அரிதனக்கன்று'' திருக்கடவூர் மயானம்.

,'திருவினையகனுகிய மாலுக்கருள் செய்திடும் தேவர்பிரானை''
திருவாழ்கோளிபுத்தூர்.

"திகழுமாலவன் ஆயிரமலரால் ஏத்துவான் ஒருநீள்மலர்குறைய
புகழிஞல் அவன்கண் இடந்திடலும் புரிந்துசக்கரம் கொடுத்தல்
கண்டு'' திருவாவதுறை.

"அடல்ஆழி அன்று அரிதான்வேண்ட நீ கொடுத்தருள்புரி
[விகிர்தா'' திருவாவதுறை.

"பண்ணற் கரியதொரு படைஆழி தனைப்படைத்து
கண்ணற் கருள்புரிந்தான்'' திருநனிபள்ளி.

"பிலம்தரு வாயினெடு பெரிதும்வலி மிக்குடைய
சலந்தரன் ஆகம் இருபிளவாக்கிய சக்கரம்முன்
நிலந்தரு மாமகள்கோன் நெடுமாற்கருள் செய்தபிரான்''
திருநன்னிலத்துப் பெருங்கோயில்.

திருமாலும் நான்முகனும் ஏனைய தேவரோடு சிவபெருமானை வழிபட்டு அருள்பெற்றனர் எனத் தம்பிரான்றேழர் பல இடங்களில் இயம்புகின்றார். சிவபெருமான் அனைவருக்கும் தலைவர் என்பதையும், திருமாலும் நான்முகனும் தனித்தனி அவரை வழிபட்டுய்ந்தனர் என்பதையும் அவர் எடுத்துரைக்கின்றார். அவ்விடங்கள் வருமாறு:—

"பிரமற்கும் பிரான்'' திருவஞ்சைக்களம்.

"தண்கமலப் பொய்கை புடைசூழ்ந் தழகார்தலத்தில்
தடங்கொள் பெரும்கோவில்தனில் தக்கவகையாலே
வண்கமலத்தயன் முன்நாள் வழிபாடுசெய்ய
மகிழ்ந்தருளி இருந்தபரன்'' திருக்கலேயநல்லூர்.

"படமாடும் பாம்பணையானுக்கும் பாவைநல்லாள் தனக்கும்
வடமாடுமால் விடைஏற்றுக்கும் பாகனல் வந்தொருநாள்
இடமாடியார்" திருவெண்ணெய் நல்லூரும் திருநாவலூரும்.

"நெடுமால் அயன்போற்றி செய்யும் குறியே" திருமழபாடி.
(குறி—சிவலிங்கம்.)

"நெடியோன் நான்முகனும் இரவியொடும் இந்திரனும்
முடியால் வந்திறைஞ்ச முதுகுன் றமர்ந்தவனே" திருமுதுகுன்றம்

"திருமாமகள்கோன் திருமாலோன் கூறனார்"
திருஇடையாற்றுத்தொகை.

"விடையரவக் கொடியேந்தும் விண்ணவர் தம்கோனே"
திருக்கானட்டுமுள்ளூர்.

"நாரணன் பிரமன்தொழும் கறையூரில்"
திருப்பாண்டிக்கொடுமுடி.

"திருமால்பிரமன் இந்திரற்கும் தேவர் நாகர் தானவர்க்கும்
பெருமான்" திருக்கடவூர் மயானம்.

"கானஆனையின் கொம்பினைப்பீழ்ந்த கள்ளப்பிள்ளைக்கும்
காண்பரிதாய
வானநாடனே" திருவாழ்கொளிபுத்தூர்.

"பரக்கும்பார் அளித்துண் டுகந்தவர்கள்
பரவியும் பணிதற் கரியானே" திருக்கோலக்கா.

"திருமால் பிரமன்கூடிய தேவர் வணங்கும் அமரன்" திருவாரூர்.

"ஆழியார்க்கருள் ஆனைக்காவுடைஆதி" திருவானைக்கா.

"வந்துநாளும் வணங்கி மாலொடு நான்முகன்
சிந்தை செய்த மலர்கள்" திருக்கழுக்குன்றம்.

"வையக முழுதுண்ட மாலொடு நான்முகனும்
பைப்பிளவர்வல் குற்பாவை யொடும் முடனே"
திருக்கூடலையாற்றூர்.

"மறைமுதல் வானவரும் மாலயன் இந்திரனும்
பிறைநுதல் மங்கையொடும் பேய்க் கணமும்சூழ"
திருக்கூடலையாற்றூர்.

சிவபெருமான் மலைமகளை இடப்பாகத்தில் உடையார். அதுபோல, திருமாலைத் தமது வலப்பாகத்தில் வைத்திருக்கிறார். இவ்வுண்மையை நம்பியாரூரர் திருப்பனையூர்ப் பதிகத்தில், "மங்கைபாகமும் மாலோர் பாகமும் தாமுடையவர்" என அருளிச் செய்திருக்கிறார்.

சிவபெருமானுக்கு ஐந்து தலைகள். அவரைப் போலவே நான்முகனும் ஓர்காலத்தில் ஐந்து தலைகளை உடையவனாக இருந்தான். அதனால் அவன் தருக்கி யிருந்தனன். அதுகண்ட சிவபெருமான் அயனது ஐந்தாவது தலையைக்கிள்ளி எறிந்தார். அதை அவன் கையில் கொண்டு பலியேற்றுத் திரிந்தார். (பலி—பிச்சை) இவ்வரலாறு நம்பியாரூரரால் சில இடங்களில் கூறப்படுகிறது. அவை வருமாறு:—

"கடுகப் பிரமன்தலை ஐந்திலும் ஒன்றறுத்தாய்"
திருவஞ்சைக்களம்.

"அருமலரோன் சிரமொன்றறுத்தீர்" திருப்புத்தூர்.

"பார்படைத்தான் சிரம்அஞ்சி லொன்றைச் சேர்ந்தவர்"
திருநின்றியூர்.

"பிரமன் தலையில் பலிகொள் மறையார் வானவனே"
திருக்கடவூர்.

"அன்றயன் சிரமரிந்ததிற் பலிகொண்
டமரருக்கருள் வெளிப்படுத்தானை" திருக்கோலக்கா.

"பிரமன் சிரம் பீடழித்தான்" திருநன்னிலத்துப்பெருங்கோவில்.

"தாமரையோன் தலைகலனாக காமரம் முன்பாடி
உண்பலிகொண்டுழல் பரமன்" திருக்கலையநல்லூர்.

நான்முகன் சிவந்த நிறத்தையுடையவன். இதனைச் சுந்தரனார் திருக்கழிப்பாலையில் "செய்யானும்" என்று கூறுகின்றார். நான்முகன் கமலமலர்மேல் வாழ்பவன் என்பது பல இடங்களிலும் அவரால் கூறப்படுகிறது. "சிவபெருமான் ஒருவரே இவர் எல்லாருமாய் விளங்குகின்றார்" என்ற உண்மையை நம்பியாரூரர், "உம்பரான், ஊழியான், ஆழியான், ஓங்கி மலருறைவான்" என முப்பதுமில்லை என்ற தேவாரத்தில் மொழிந்

தருளினர். திருமாலே சிவபெருமானுக்கு ஊர்தியாகிய விடை என்பதை அவர், "செங்கண்மால் விடையானை" எனப் பல இடங்களில் அருள்கின்றார்.

பண்டைக்காலத்தில் மூன்று வீரர்கள் இருந்தனர். அவர்கள் சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்து அழியாத ஆயுளையும் நினைத்த இடம் செல்லும் மூன்று கோட்டைகளையும் பெற்றனர். அவர்கள் சின்னாளில் தமது செல்வச் செருக்கில் ஈடுபட்டு மதிமயங்கி உலகினரைத் துன்புறுத்தி வந்தனர். அதனால்அரி, அயன், இந்திரனாதியாய விண்ணவரனைவரும் துன்பம் பொறுக்கலாற்றாதவராய்ச் சிவபெருமானை நோக்கித் தம் குறை கூறிப் பணிந்து நின்றனர். அப்போது சிவனார் திருமாலை விடையாகக்கொண்டு ஏறி நின்று, மேருமலையை வில்லாகவும், ஆதிசேடன் என்ற பாம்பை நாணாகவும், எரியையும் திருமாலையும் அம்பாகவும் கொண்டு அவ்வீரர்மேல் அம்பெய்து, பின் சிரித்து அவர்களுடைய கோட்டைகளை அழித்தார். முப்புரங்களும் அழிந்தன. அப்போது தமது அறியாமையை உணர்ந்து அவ்வீரர் மூவரும் சிவனாரைத் தஞ்சமென்று பணிந்தனர், உடனே சிவனார் அவர்களுக்கு மேலான அருளைச் செய்து காத்தார். அவர்களில் இருவர் சிவனாரது திருக்கோவில் வாயில் காவலராயினர், மற்றவன் அரனார் திருக்கூத்தாடும்போது அவரருகே நின்று அழகிய முழா (மிருதங்கம்) வினைமுழக்கும்பேறு பெற்றான். இவ்வரலாற்றையும் சுந்தரனார் பல இடங்களில்கூறி மகிழ்கின்றார். அவ்விடங்கள் பின் வருவன:—

"நிற்பானும் கமலத்தி லிருப்பானும் முதலா
  நிறைந்தமரர் குறைந்திரப்ப நினைந்தருளி அவர்க்காய்
வெற்பார்வில் அரவுநாண் எரிஅம்பால் விரவார்
  புரமூன்றும் எரிவித்த விகிர்தன்" திருக்கலையநல்லூர்.

"கோவலன் நான்முகன் வானவர்கோனும் குற்றேவல்செய்ய
மேவலர் முப்புரம் தீயெழுவித்தவன் ஓர்அம்பினால்"
திருவெண்ணெய் நல்லூரும் திருநாவலூரும்.

"வன்நாகநாண், வரைவில், அங்கிகணை, அரிபகழி
தன்ஆகம் உறவாங்கிப் புரம்எரித்த தன்மையனை" திருவாரூர்.

"எண்ணார் புரமூன்றும் எரியுண்ண நகைசெய்தாய்"
திருவெண்ணெய்நல்லூர்.

"எற்றார் புரமூன்றும் எரியுண்ணச் சிலைதொட்டாய்" ஷ

"நொடிக்குமளவில் புரமூன்றெரியச் சிலைதொட்டவனே"
திருஅஞ்சைக்களம்.

"வாளரக்கர் வஞ்சமதில் மூன்றும் எரித்தவில்லி"
திருஎதிர்கோள்பாடி.

"கொடியுடை மும்மதில் வெந்தழியக் குன்றம்வில்லா
நாணியிற்கோல் ஒன்றினால்
இடிபட எய்தெரித்தீர் இமைக்குமளவில்
உமக்கார்எதிர் எம்பெருமான்" திருப்புத்தூர்.

"தொழுதுய்தும் எனாதவர்தம் புரமூன்றும் பொடிபடுத்தவில்லி"
திருக்கச்சி அநேகதங்காபதம்.

"முன்நினையார் புரமூன்றெரி யூட்டிய பொன்னனையான்"
திருப்பூவணம்.

"தூர்த்தர் மூவெயில்எய்து சுடுநனைப் பகழியதொன்றால்"
திருவாஞ்சியம்.

"திரியுமுப்புரந் தீப்பிழம்பாகச் செங்கண்மால் விடைமேல்
திகழ்வானை" திருவேகம்பம்.

"முற்றலார் திரிபுரம் ஒருமூன்றும் பொன்ற வென்றிமால்வரை
அரிஅம்பாக் கொற்றவில் அங்கை யேந்தியகோனை"
திருக்கோலக்கா.

"ஒக்கமுப்புரம் ஓங்கெரிதூவ உன்னைமுன்னிய மூவர்நின்சரணம்
புக்குமற்றவர் பொன்னுலகாளப் புகழினால் அருள்ஈய்ந்தமை
அறிந்து" திருவாவடுதுறை.

"மூவெயில் செற்றஞான்றுய்ந்த மூவரில்இருவர்
நின்திருக் கோயிலின்வாய்தல்
காவலாள ரென்றேவியபின்னை, ஒருவநீ கரிகாடரங்காக
மானைநோக்கியோர் மாநடமகிழ மணிமுழாமுழக்க அருள்செய்த
தேவதேவ நின்திருவடியடைந்தேன் செழும்பொழில் திருப்புன்
கூருளானே" திருப்புன்கூர்.

"திளைக்கும் தெவ்வர் திரிபுரம் மூன்றும் அவுணர்பெண்டிரும் மக்களும் வேவ வளைத்த வில்லியை" திருவாழ்கோளிபுத்தூர்.

திருமாலும் நான்முகனும் முதலிய விண்ணவரெல்லாரும் பணிந்து வேண்டச் சிவபெருமானார் கடலில்தோன்றிய நஞ்சை யுண்டு கண்டத்தே வைத்து நீலகண்டராயினர். இதனை நம்பியாரூரர் திருநின்றியூர்ப்பதிகத்தில், "மாலொடு நான்முகன் இந்திரன் மந்திரத்தால் வணங்க நீலநஞ்சுண்டவர்" எனக் கூறியருளினர். இனி சிவனர் நஞ்சுண்ட திறத்தை ஆராய்வாம்.

(தொடரும்.)

---

# கருதலளவைப் பகுதி

திரு. த. இராமநாதபிள்ளை அவர்கள், சாவகச்சேரி, இலங்கை.

(முற்றொடர்ச்சி துணர் 10. மலர் 5. பக்கம் 212.)

## 2-ம் அதிகாரம்.

### உடனனுமானம் (உடன்கருதல்) Immediate Inference.

### தாட்டாந்தப் பொருணிலை (Modality)

தாட்டாந்தங்களின் பொருள் நிலையை ஆராய்வாம். எழுவாய்க்கும் பயனிலைக்கும் உள்ள தொடர்பு எத்தன்மையதென ஆராய்தல் பயனுடைத்து. தாட்டாந்தங்கள் இயல்புத் தொடர்பு, நீக்கமின்றி நிற்குந் தொடர்பு ஐயத்தொடர்பென மூவகைத் தொடர்பை உணர்த்துவன, எ—ப ஆக இருத்தல் வேண்டும். முக்கோணங்கள் மூன்று கோணங்கள் உடையனவாகவிருக்கவேண்டும என்றாற்போல்வன நீக்கமின்றி நிற்குந் தாட்டாந்தங்கள். எ—ப ஆகவும் எ—ப அல்லதாகவுமிருத்தல் கூடும். மழை பெய்தலும் பெய்யாமலிருத்தலுங் கூடும், என்றாற் போல்வன ஐயத்தாட்டாந்தங்கள். இம் முறைவகுப்பால் தருக்க நூலிற்குப் பயனில்லை. தத்துவ நூலிற்குப் பயனுண்டு.

அளவைகளால் நினைவுலகப் பொருட்களையும் தோன்றி நின்றழியும் நிலவுலகப் பொருட்களையும் அளக்கின்றேமாகையால், இவ் வகுப்புமுறை இந்நூலிற் கூறப்பட்டது.

## 2 தன்மை: எண் (Quality, Quantity.)

தாட்டாந்தங்கள் வசனங்கள்போல உடன்பாடாகவும் எதிர்மறையாகவும் பொருளுரைப்பன. தன்மை நோக்கில் தாட்டாந்தங்கள் உடன்பாடு எதிர்மறையென்னும் இருவகுப்பிலடங்கும் உடன்பாட்டுத் தாட்டாந்தம் மனிதர் தேவர்; எதிர்மறைத் தாட்டாந்தம் மனிதர் தேவரல்லர். தாட்டாந்தம் கூறும் மொழிப்பு சிலரைப்பற்றியோ எல்லோரையும்பற்றியோ வென நிச்சயித்தல் அவசியம். எழுவாயின் பகுதியோ முழுவதோ (முதலோசினையோ) குறிக்கப்பட்டதென கூறிய வேண்டும். எழுவாயின் எண் நோக்கில் தாட்டாந்தம் பொது சிறப்பென இருவகையாகும். பொதுத்தாட்டாந்தம் புலவர் எல்லாரும் நுண்ணறிவுடையோர்; சிறப்புத் தாட்டாந்தம்-புலவர் சிலர் நுண்ணறிவுடையோர்; எல்லாப் புலவர் என்புழி ஒரு புலவரேனும் புறநீங்கலாயில்லை யென்பதை உணர்க. எல்லாரிலும் ஒருவர் குறைந்தாலும் சிலரென்றே சொல்லப்படும். எழுவாய் தன் வகுப்பைச் சேர்ந்தோர் யாவரையும் உணர்த்தும்போது தாட்டாந்தம் பொதுவெனப்படும். எழுவாய் தன் வகுப்பைச் சேர்ந்த சிலரையேனும் ஒருவரையேனும் உணர்த்தும்போது தாட்டாந்தம் சிறப்பெனப்படும். ஒரு புலவன் விவேகியென்றால் புலவர் சிலர் விவேகிகள் என்பது அளவைநூல் வழக்கு. ஒரு புலவனென்பது எழுவாயின் பகுதியைமாத்திரம் உணர்த்துகிறதாகையால் சிறப்பெனப்பட்டது. சின்மை பொதுமை குறிக்குஞ் சொற்களை உற்றுநோக்கித் தாட்டாந்தத்தின் எண்ணைப் பெறுக. தன்மையையும் எண்ணையும் ஒருங்கு அமைத்துத் தாட்டாந்தங்களை நான்குவகையாக வகுக்கலாம். இந்நான்கு வகையுள் அடங்காத தாட்டாந்தங்களில்லை. நடுநீக்கு நியமத்தால் உடன்பாட்டுக்கும் எதிர்மறைக்கும் நடு இல்லையென்பதும் சின்மைக்கும் பொதுமைக்கும் நடு இல்லையென்பதும் பெறப்படும். எல்லாத் தாட்டாந்தங்களும் இந்நான்கிலும் அடங்குதல் காண்க.

உதாரணங்கள். உ. உடன்பாட்டுத் பொதுத் தாட்டாந்தம் A.

எல்லாத் தமிழரும் கல்வியறிவுடையோர்கள்; இந்திய நாட்டு வேந்தர்கள் எல்லாரும் சமுகமளித்தனர்.

ஊ. உடன்பாட்டுச் சிறப்புத் தாட்டாந்தம் I.

தமிழர் சிலர் கல்வியறிவுடையோர்கள் இந்திய நாட்டு வேந்தர் சிலர் சமுகமளித்தனர்.

எ. எதிர்மறைப் பொதுத் தாட்டாந்தம் E.

ஒரு தமிழரும் கல்வியறிவுடையோரல்லர். இந்தியநாட்டு வேந்தர் ஒருவரும் சமுகமளிக்கவில்லை.

ஏ. எதிர்மறைச் சிறப்புத்தாட்டாந்தம் O.

தமிழர் சிலர் கல்வியறிவுடையோரல்லர் இந்திய நாட்டு வேந்தர் சிலர் சமுகமளிக்கவில்லை. உடன்பாடு எதிர்மறையில் முதலுயிர் எழுத்தாகிய உகரமும் ஏகரமும் தாட்டந்தகங்களைக் குறிக்கும். சிறப்புப் பொதுவில் அடங்குதலால் ஊகாரம் உகரத்திலும் ஏகாரம் எகரத்திலும் அடங்கும். உடன்பாட்டுப் பொது, உடன்பாட்டுச் சிறப்பு, என்பன தன்மையில் ஒரு இனமாகையால் உ ஊ என்னும் இனவெழுத்துக்களால் அவற்றைக் குறித்தோம். எதிர்மறைகளையும் இவ்வாறே எ, ஏ, என்னும் இனவெழுத்துக்களால் குறித்தோம். வசனங்களை த்தாட்டாந்த முறையாக மொழியும்போது எண்ணையும் தன்மையையும் செவ்விதாக விளக்குதற்கு வேண்டிய எல்லாரும் ஒருவரும் என்பவற்றிலுள்ள முற்றும்மைகளைச் சேர்த்து உரைக்கவேண்டும். அல்ல என்பது தன்மையை உணர்த்துகின்றது. அல்லாதது என்பது ஒரு பதமாகுமாகையால் அது தாட்டாந்தத்தின் தன்மையை யுணர்த்தாது. இந்திய நாட்டு வேந்தர் சிலரே சமுகமளித்தார் என்புழித்தேற்றேகாரம் சிலர் என்னும் எண்ணைக் குறிக்கின்றது. இந்தியநாட்டு வேந்தர் எல்லாரும் சமுகமளிக்கவில்லை என்புழிமுற்றும்மை ஓரே வழி எச்சமுமாதலால் தாட்டாந்தம் எதிர்மறைப் பொதுவன்றிச் சிலர் சமுகமளிக்கவில்லையென எதிர்மறைச் சிறப்பாகும். வேந்தர் சிலர் சமுகமளித்தாரெனக் கருதி உடன்பாட்டுச் சிறப்பாக்கலும் வழக்கு.

வசனங்களைத் தாட்டாந்த முறையாகக் கூறுதற்கு அதிகார முடிவில் காட்டப்படும். அப்பியாசங்களில் பழகுதல் நன்று. வசனப் பொருளை நன்குணர்ந்தால் வசனங்களைத் தாட்டாந்தங் களாக மாற்றல் இலகுவாகும்.

### 3. ஈதல் (வியாத்தி)

எழுவாய்ப்பதமும் பயனிலைப் பதமும் பொருள் விரியா னும் குணவிரியானும் ஒத்திருந்தால் அவை இரண்டும் ஒன்றுடன் ஒன்று வியாபகமெனப்படும். காட்டு மனிதன் பகுத்தறிவுள்ள பிராணி.

எழுவாய்ப் பதமும் பயனிலைப் பதமும் வியாபகமாய் இருக்கின்றவையோ வெனத் தெளிதல் அவசியம்.

பதங்கள் குறிக்கும் பொருட்களின் முழுவதையும்பற்றி தாட்டாந்தத்தில் மொழியப்பட்டுளதோவென ஆராய்தல் வியாபகவாராய்ச்சி எனப்படும். எழுவாய் பயனிலைகளின் பொருள் விரியைக் கூறுதல் வியாத்தியென்றும் ஈதலைக்கூற லொடு ஒக்கும் எழுவாய் பயனிலைகள் பொருள் விரியில் சமனோ இல்லையோ என்பதையும் நோக்குவாம். ஒரு பொருள் பண் புடைத்தென்புழி அப்பொருள் முழுவதும் அப்பண்புடைத்தோ அன்றி அப்பொருளின் ஒரு பகுதி அப்பண்புடைத்தோ என்பதை தெளிவாக மொழியவேண்டும் மலை, தீயுடையத் தென்புழி சில மலை தீயுடைத்தோ அன்றி எல்லா மலையும் தீயுடையவோவென ஆசங்கை நிகழுமாதலால் யூகத்தில் எழுவாய் பயனிலைகளின் வியாபகத்தை ஆராய்வாம். மலையில் தீயுடைத்தென்புழி யாண்டும் தீயுடைத்தோ சில சமயங்களில் மாத்திரம் தீயுடைத்தோ என்பதை தெளிவாக உணர்தல் அத்தியாவசியம். நாம் சிந்திக்கும் போதெல்லாம் தெளிவாகச் சிந்திப்போமாயின் எங்கள் தாட்டாந்தங்களும் யூகங்களின் பொருளைத் தெளிவாக மொழியும். தாட்டாந்தங்களின் எண்ணை வெளிப்படையாக காட்டுதற்காகவே உ ஊ எ ஏ என்று பெய ரிட்டோம். எழுவாய்ப் பதங்களின் எண்ணை (வியாபகத்தை)

முதல் ஆராய்வாம். உடன்பாட்டுப் பொதுவின் (உத் தாட்டாங் தத்தின்) எழுவாய் ஈந்திருக்கிறது. எழுவாய் உணர்த்தும் வகுப்பின் அங்கத்தவர் ஒவ்வொருவருக்கும் மொழியப்படும் பண்பு இல்லை என்பது வரையப்பட்டது. பொதுத் தாட்டாங் தங்களின் எழுவாய் ஈந்திருக்கும்.

உடன்பாட்டுச் சிறப்பின் (ஊத் தாட்டாங்தத்தின்) எழு வாய் ஈந்திராது. சிலர் என்பது எழுவாய் வகுப்பின் எப்பகுதி என்பதை உணர்த்தாது யாதோ ஒரு பகுதி என்பதையே அறிவோமாகலான் எழுவாயை ஈயாத பதமென்போம். எதிர் மறைச் சிறப்பின் (எத்தாட்டாங்தத்தின்) எழுவாய் ஈந்திராது. சிலர் என்பது யாதானும் ஒரு பகுதியைக் குறிக்கும். சிறப்புத் தாட்டாங்தங்களின் எழுவாய்ப் பதங்கள் ஈந்திரா. எழுவாய்ப் பதங்களின் எண்ணை எல்லாரும் ஒருவரும் சில என்னும் அடை களால் குறித்துள்ளோமாகலால் எழுவாயின் ஈதலை உரைத்தல் இலகு. எழுவாயைப் பொருள்விரியிலும் பயனிலையைக் குண விரியிலும் மொழிகிறோமாகையால் எழுவாய்க்குமாத்திரம் எண் குறிக்கின்றோம்.

அமில்ற்றன் (Hamilton) முதலிய சிலர் பயனிலைப் பதத் தையும் பொருள்விரிவில் ஆராய்கின்றனர். உ ஊ எ ஏ த் தாட்டாங்தங்களின் பயனிலையின் ஈதலை ஆராய்வாம். எல்லா மக்களும் பிராணிகள் என்புழி, எல்லா மக்களும் எல்லாப் பிராணிகளோ அன்றிச் சில பிராணிகளோ என ஐயுறுவோம். இவ்வாறு உடன்பாட்டுப் பொதுவின் பயனிலையின் ஈதலை அறியோமாகலான் அதை ஈயாத பதமென்போம்.

மக்கள் சிலர் பிராணிகள் என்புழியும் எல்லாப் பிராணி களுமோ அன்றிச் சில பிராணிகளோவென அறியோமாகலான் உடன்பாட்டுச் சிறப்பின் பயனிலையும் ஈயாதபதமெனப்படும். உடன்பாட்டுத் தாட்டாங்தங்களின் பயனிலை ஈயாத பதமே. எதிர்மறைப் பொதுவின் பயனிலை ஈந்திருக்கும் ஒரு மக்களும் மாக்களல்ல என்புழி மாக்கள் என்னும் வகுப்பின் முழுவதை யும் அறிந்தேம். எதிர்மறைச் சிறப்பிலும் மக்கள் சிலர்

மாக்களல்ல என்புழி மாக்களென்னும் வகுப்பின் உறுப்புக்களை அறிந்தோமாகையால் பயனிலையை ஈந்த பதமென்போம், எதிர்மறைத் தாட்டாந்தத்துப் பயனிலை ஈந்திருக்கும் தாட்டாந்தப்பதங்களின் வியாத்தியை (ஈதலை) வட்டங்களான் விளக்குவாம்.

எ—ப

எல்லா மக்களும் பிராணிகள் என்புழி எல்லா மக்களும் எல்லாப் பிராணிகளென அறிந்தோமாயின் ஒரு வட்டத்தால் தாட்டாந்தப் பொருளை உணர்த்தலாம். (ப எ)

எழுவாயும் பயனிலையும் பொருள்விரியிற்சமன் (முற்றும் வியாத்தி). பயனிலை ஈந்திருக்கிறது.

உத்தாட்டாந்தத்தின் பயனிலை ஈயாத பதமாகலான் பயனிலையைக் குறிக்கும் வட்டத்தின் வரையறையை அறியேம்,

மக்களெல்லாம் பிராணி வகுப்பைச் சேர்ந்தனர் என்பதை வட்டங்கள் உணர்த்தும்.




எதிர்மறைப்பொது.

எ—ப

நாய்கள் கரடிகள் அல்ல






உடன்பாட்டுச் சிறப்பு

எ—ப

மக்கள் சிலர் பிராணிகள்




எதிர்மறைச் சிறப்பு

சிலநாய்கள் கரடிகளல்ல






ப வட்டத்தின் வரையறையை அறிந்தோம்.

எ வட்டத்தின் வரையறையை அறிந்திலம்.

சில நாய்கள் கரடிகளாயிருத்தல் கூடும்.

(தொடரும்.)

# சோழன் கரிகால் வளவன்.

(ஒரு சிறு நாடகம்.)

திரு. சிவ. குப்புசாமிப் பிள்ளையவர்கள்,
தலைமையாசிரியர், கரந்தைத் தமிழ்ச்சங்கக் கல்லூரி, தஞ்சை.

(முற்றொடர்ச்சி 320-ம் பக்கம் பார்க்க.)

பால் வண்ணன் :—பானை கொணர்ந்தபொழுதே கொன்று விடக் கருதினனும். பொது மக்கள் தலைவரும் பிறமக்களும் கூடிச்செய்த செயலை மறுத்தால் தனக்கு நிலையின்மை விரைவில் வந்துறும் என்ற கருத்து அவன் உளத்தில் எழுந்ததாம். ஆகலால் இத்துணை நாள் காத்திருந்து மக்கள் மனத்தை மாற்றியுள்ளானும். எனினும், கொன்றுவிடக் கருதினல் அச்சம் தலைக்கொள்ளுகின்றதாம். ஆதலால் நம் மன்னன் மகன் அடைப்பட்டிருக்கும் சிறைச்சாலையைத் தீயிட்டுப் பொசுக்கிவிட்டால் மக்கள் யாவரும் தாய மக்கள் தலைவனிடத்து ஐயங்கொள்ளாசாய் விதிவலியால் மன்னன் மகன் தீவாய்ப்பட்டு இறந்தானென்று கருதிவிடுவார்களாம்.

நன்மொழிக்கூத்தன்:—அடா! கெடுவாய். என்னென்னகருதினய்? என்ன கொடுஞ் செயல்; ஆ, எத்தகைய இரக்கமற்ற நினைவு! ஏ, முருகா, களைகண் அற்றவரின்கரையே! நீ இவ்வாறு எம்மை வருத்தலாகுமா? இத்தகைய தீ நெறியாளரின் வாழ்க்கையை தான் இன்னும் நீட்டலாகுமா?

“மாற்றறி யாதசெ ழும்பசும் பொன்னே!
மாண்பிலாத் தாயத்தார் மதியற்ற முதல்வன்,
கூற்றறி யாதகொ டுஞ்செய லுற்று,
கொற்றவ னின்மகன் அற்றிட நினைந்தே,
ஏற்றறி யாததீ யெரியழல் கொண்டு
எம்மிறை மகன்சிறை எரியூட்டும் போது
சாற்றறி யாதவோர் தனிப்பெருந் துணையே
சார்ந்து புரந்திடும் சேர்ந்தவான் மணியே”

ஏ! நாயக! நின்னையல்லாது எங்கட்கு உற்றுருறவினர் எவருளர்? நின் பெருந்தகைமைபால் எங்கள் இறைவன் மகனை இடரினின்றும் அகற்றுவாய்.

பால்வண்ணன்:—பெரியீர்! நாம் இங்கு நிற்றல் ஆகாது. ஒற்றன் ஒளிமணியும் இதுபோது விரைந்து சென்று, இரும்பிடர்த் தலையாரிடம் இவை யாவற்றையும் உணர்த்தியிருப்பன். ஆதலால் நாமும் ஆவன கொண்டு அவருடன் துணை நின்று நம் இறைமகனை மீட்க வேண்டும்.

நன்மொழிக்கூத்தன்:—அவ்வாறே செய்வோம்; செல்வோம் வருக. ஏ! முருக! ஏரகத்துநாதா! நீயே எங்கட்குத் துணை நிற்பாய்.

(இருவரும் செல்லுதல்)

இரண்டாம் காட்சி முடிவு.

—∞∞—

இயல் க—காட்சி ௩.

உறுப்பினர்:—1. காவலன், 2. திருமாவளவன், 3. இரும்பிடர்த் தலையார்.

இடம்:—உறையூர்ச் சிறைக்கோட்டம்.

பொழுது:—நள்ளிரவு.

[இரும்பிடர்த்தலையார், தன் மருகன் திருமாவளவனைச் சிறையினின்றும் மீட்டல்]

[காவலன் உலாவிக்கொண்டே கொட்டாவி விடுதல்]

ஆ...........வ் முருகா! வெளியே சென்ற தப்பிலிப் பயல் இன்னும் வரவில்லை! எவ்வளவு நேரம் காவல் காத்திருப்பது? இனி, நான் வீடு செல்ல வேண்டும். பின்னர் உணவு கொள்ளல் வேண்டும். என்ன! என்னைப்பற்றி ஏதேனும் சற்றுக் கருத்திருந்தால் தானே வருவான்....[எட்டி, சிறைச்சாலையைக் கவனித்தல்] ந.ல்.ல.வேளை. அரசர் மகனும் அயர்ந்து தூங்குகின்றார்.

எவ்வளவு நேரம் நிற்பது? சற்று இப்படி அமர்கிறேன். [இருத்தல்] என்ன யிருந்தாலும் மன்னன் மகன் என்றால் எனக்கு மனம் நடுக்கந்தான். 'புலி பசித்தாலும் புல்லைத்தின்னாது' என்பது பொய்யா? உயர்ந்த குடியில்—உலகத்தையே ஆளும் மரபில்—அவர் பிறந்திருக்கின்றார் என்பது யாவரும் அவரை கண்ட அளவிலேயே புலனாகின்றது. எத்தகைய துன்பம் வந்தாலும் அவருடைய பெருமையும் சிறப்பும் சற்றும் குறையவே யில்லை. எப்பொழுதும் புன்னகைதவிழும்முகம்...இவரை, தாயத் தலைவன் கொஞ்சமும் ஈவிரக்கமற்று துன்புறுத்த நினைப்பது அடாத செயல்தான். சிறைக்கூட ஆணையோ மிகவும் கடுபிடியாக யிருக்கிறது. என்.ன.மோ, என்மனம் அதற்கெல்லாம் இணங்குவதில்லை. சிறுவராயிருந்தாலும் கண்ட அளவிலேயே நான் யாவற்றையும் மறந்து அவர் சொல்லுக்கு அடங்கியவனாகின்றேன். நல்ல தோற்றம், அவரது மலர்ந்த முகம், விரிந்த மார்பு, உயர்ந்த தோள், நீண்ட கைகள், கருணை ததும்பும் கண்கள், ஆ, இவற்றைக் கண்டவர்கள் மன்ன! என்று, அழைப்பதை தவிர்த்து வேறு என்ன மொழியைக் கூறக்கூடும்? எத்தனை நாட்களுக்கு இத்தகைய துன்பமோ? ஆண்டவன்தான் கருணைக் காட்டவேண்டும். (திடுக்கிட்டு விழித்து) எ! அப்பா! நமக்கென்ன இந்தப்பேச்சு. கிணற்றுத் தவளைக்கு நாட்டு வளப்பமா வேண்டும்? சிவனே என்று இருப்பதை விட்டு தாயத் தலைவன் கருத்துக்கு மாறாகப்பேசி, எ அப்பா! நம் தலை போனாலும் போகும். யாவற்றிற்கும் கடவுள்தான் காப்பு. எனக்குச் சற்று உறக்கம் வருகிறது. இப்படிப் படுக்கிறேன்.

[*தலைப்பாகைத் துணியை அவிழ்த்து உடையை நிலத்தில் விரித்துப் படுத்துக் காலாட்டிக்கொண்டிருந்து பின்னர் குறட்டைவிடுதல்—சிறைக்குள் படுத்திருந்த திருமாவளவன், மெதுவாக எழுந்திருந்து முகத்தைத் துடைத்துக்கொண்டு, இரு கைகூப்பி உளத்தினுள்ளேயே வணங்கிப் பின்னர் எழுந்து சிறைக்கூடக் கதவில் சாய்ந்து நின்று*]

**திருமாவளவன்:**—திருவேரகத்துத்தேவ! திக்கற்றவர்க்கு உற்றவோர் பற்றுக்கோடே! எத்துணை நாளைக்குத்தான் இத்தகையசிறைத்துன்பம். பெரும! துன்பத்தில் நடுங்காத உளமும்

துக்கத்தில் படியாத உயிரும் கவலையில் வாடாத உடலும் இவ்வுலகில் காணுவது முயற்கொம்பாய் முடிகின்றதே. நாட்டின் நிலையறிந்து நாடோடியாக யிருந்து ஊர்க்குருவிபோல உள்ளக் கிளர்ச்சியுற்று கருவூரில் கரந்து நின்று யாவரும் அறியாதவாறு அன்று உறைந்த வாழ்க்கையாவது இனி கிட்டுமா? நம்பினவர் நட்டாற்றில் சென்றதை யொப்ப, அரசு கட்டிலே அவாவி ஆனை எருத்தத்து இவர்ந்துவந்த யான், இன்று உறையூர்ச் சிறைக் கோட்டத்துள், உரிமையை யிழந்து, என் உயிர்க்கு இறுதியை நாடுபவரிடத்து என் உடலை ஒப்படைத்து, உறையுமாறு ஆயிற்றே! என்னைப்பற்றி ஏதேதோ பலவாறாக, இங்கு காவலர்கள் பேசிக்கொள்வதை நோக்கின், ஆ! எனக்கு இறுதி அண்மையிலிருப்பதாகவே அறியவேண்டியிருக்கின்றது. என்னைச் சிறையின்றும் வெளிப்படுத்த முயன்ற என் மாமன் இரும்பிடர்த்தலையாரும், இன்று 'நாட்டின்றும் தாயத்தார்க்கு அஞ்சி மறைந்திருக்கின்றார்,' என்றும் உரையாடிக் கொள்ளுகின்றனர். இவற்றை யெல்லாம் நோக்கின், இனிமேல் எனக்குப் பிழைப்பு என்பதே இல்லைபோலும். என்றால் இனி என்ன செய்ய இயலும். இரு மூன்று திங்களாக, சிறையில் இடர்ப்பட்டிருக்கின்ற என்னை, மீட்டுச் செல்ல என் மாமன் இரும்பிடர்த்தலையாராலும் இன்னும் இயலாது போயின், இனிமேல் அவ்வளவுதான். மக்கள் உணர்ச்சியும் நாளேற, நாளேற மழுங்கிப் போய்விடும். பின்னர் என் மாற்றலர் சீற்றமும் வெற்றி கொள்ளும்.... (சற்று சிந்தித்து) ஏ! முருக! நின் அருளால் நன்மையே வரினும் வருக! அன்றித் தீமையே வரினும் வருக! இனி எதற்கும் அஞ்சேன்; யாமார்க்கும் குடியல்லேம். நின் கொய்மலர்ச் சேவடி யிணையே கொண்டேன்.

(பாடுதல்)

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே

[சிறைக்கதவின்மீது சோர்ந்து சாய்தல். இரும்பிடர்த்தலையார் விரைந்து சிறைக்கோட்டத்துள் புகுதல்.]

இரும்பிடர்த்தலையார்:—என் மருக! திருமாவளவ! இதோ வந்துவிட்டேன்! அஞ்சேல் (பூட்டைப் பற்றி உடைத்தல்)

திருமாவளவன் [திடுக்கிட்டு விழித்து] என் இனியமாம! இனி அஞ்சேன். (விரைந்து வந்து இரும்பிடர்த்தலையாரைத்தழுவி கொள்ளுதல்)

காவலன்:—(கண்விழித்து விரைந்து எழுந்து நாக்குழற) பெரும! யான் யாதும் அறியேன்! ஏழை (நடுங்கி நிற்றல்)

திருமாவளவன்:—அடே! ஓடிப்போ! இங்கு நில்லாதே. (காவலன் விரைந்து ஓடி மறைதல்)

இரும்பிடர்த்தலையார்:—மருக! இதோ இவ்வாளைப்பற்றுவாய். (வாளைக் கொடுத்தல்) இவண் சென்று எதிர்படும் பகைவரை வெல்லுவோம். ஆ!! அதோ பார் நம்பகைவர் நாம் வெளியேறாத வாறு இச்சிறைக் கோட்டத்தைத் தீமூட்டிவிட்டனர். நாம் விரைந்து செல்வோம்; இவண் வருவாய். [இருபுறமும் தீச்சுடர் எரியும்போது இருவரும் தீயினுக்குத்தப்பி வெளிவர முயலுதல்.]

மூன்றாம் காட்சி முடிவு.

(தொடரும்.)

---

உ

# கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை

## இருபத்து நான்காவது ஆண்டு விழா.

தமிழன்பரீர்,

தமிழ்த்தாயின் தண்ணருளால் நிகழும் பவ ஆண்டு மாசித்திங்கள் ரு, சு ஆம் நாட்கள் (1935 பிப்ரவரி 16, 17) ஆகிய சனி, ஞாயிற்றுக்கிழமைகளில் இச் சங்கத்தின் இருபத்துநான்காவது ஆண்டுவிழா உயர்திருவாளர், மகாவித்துவான், ரா. இராகவையங்காரவர்கள் தலைமையில் இச்சங்கக் கட்டிடத்தில் பிற்காணும் நிகழ்ச்சிக்குறிப்பிற் காணுமாறு நிகழும்.

தாங்கள் தமிழன்பர் பலருடன் வந்திருந்து விழாவினைச் சிறப்பிக்க வேண்டுகின்றேன்.

தங்கள் அன்பன்

க. த. சங்கம், பவ, தை, உரு } த. வே. உமாமகேசுவரம் பிள்ளை, சங்கத்தலைவர்

# கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை

## இருபத்து நான்காவது ஆண்டுவிழா

### முதல் நாள் நிகழ்ச்சி

**பவ, மாசி, ரு, சனிக்கிழமை 16—2—1935**

பிற்பகல் உஉ௯ நாழிகை (மாலை 3 மணி)க்குத் தொடக்கம்

க. கடவுள் வாழ்த்து, தமிழ்த்தெய்வ வாழ்த்து

உ. தலைவரவர்களை வரவேற்றல்

ஈ. அறிக்கை படித்தல்

ச. தலைவரவர்கள் முன்னுரை

ரு. சம்பந்தரும் மகளிரும்

*திரு. வித்துவான். T. P. மீனுட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் M.A.,B.L., வழக்கறிஞர், சென்னை.*

சு. குறுந்தொகை

*திரு. S. வையாபுரிப்பிள்ளையவர்கள் B.A.,B.L., பல்கலைக்கழகத் தமிழகராதிப் பதிப்பாசிரியர், சென்னை.*

எ. ஓய்வு

அ. நினைவுலகம்

*திரு. பண்டிதமணி. மு. கதிரேசச்செட்டியாரவர்கள், தமிழ்ப்பேராசிரியர், அண்ணமலைப் பல்கலைக்கழகம்.*

கூ. தலைவரவர்கள் முடிப்புரை

ய. வாழ்த்து.

# கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை

## இருபத்துநான்காவது ஆண்டு விழா

### இரண்டாம் நாள் நிகழ்ச்சி

பவ, மாசி, ௫. ஞாயிற்றுக்கிழமை, 17—2—35

பிற்பகல் ௨௨௭ நாழிகை (மாலை 3 மணி)க்குத் தொடக்கம்

க. கடவுள் வாழ்த்து, தமிழ்த் தெய்வ வாழ்த்து

உ. தலைவரவர்கள் முன்னுரை

௩. மாணவர்க்குப் பரிசு வழங்கல்

௪. தொல்காப்பியத்துட் சில பகுதிகள்

திரு. S. சோமசுந்தரபாரதியாரவர்கள் M.A., B.L.,
தமிழ்ப் பகுதித் தலைவர், அண்ணாமலைப்பல்கலைக்கழகம்.

௫. தஞ்சைப் பேரியகோயில்

திரு. J. M. சோமசுந்தரம் பிள்ளையவர்கள் B.A.,B.L.,
தஞ்சையரசர் அறநிலையப் பாதுகாப்பாளர்.

௬. ஓய்வு

௭. தமிழ் மக்கள்

திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள்,
"நவசக்தி" ஆசிரியர், சென்னை.

௮. தமிழரசு

திரு. மகாவித்துவான். ரா. இராகவையங்காரவர்கள்.

௯. தலைவரவர்கள் முடிப்புரை

௰. நன்றி கூறல், வாழ்த்து.

உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத்
திங்கள் வெளியீடு.

துணர்-ம } பவ—மார்கழி. { மலர் - கூ.

க. கருதலளவைப் பகுதி 361
திரு. த. இராமநாத பிள்ளையவர்கள்,

உ. தம்பிரான்றோழர் தேவாரம் 369
திரு. இ. மு. சுப்பிரமணிய பிள்ளையவர்கள்,

ந. ஓர் செய்யுள் 375
திரு. செ. சின்னத்தம்பியவர்கள்,

ச. ஆழ்வார்பாரதமும் பண்டைத் தமிழ்நூல்களும் 377
திரு. கோமான். ம. வி. இராகவன் அவர்கள்,

ரு. சோழன் கரிகால் வளவன் 382
திரு. சிவ. குப்புசாமி பிள்ளையவர்கள்,

சு. வீரசோழிய உரையாசிரியர் காலம் 387
திரு. E. R. நரசிம்ம அய்யங்காரவர்கள் B.A., B.L.,

எ. சிலசொற்களின் பொருள்கள் 393
திரு. வே. வேங்கடராசலு ரெட்டியாரவர்கள்,

அ. தமிழ்ச்செய்திகள் 399
பொழிற்றொண்டர்.

செந்தமிழ்ப்புரவலர்,

த. வே. உமாமகேசுவரம் பிள்ளை, பொழிற்றொண்டர்.

தஞ்சைக் கூட்டுறவுப் பதிப்பகம், கரந்தை.



உ


# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு

| துணர் ம | பவ, மார்கழி | மலர் கூ |
| --- | --- | --- |


உ

## கருதலளவைப் பகுதி


திரு. த. இராமநாதபிள்ளை அவர்கள், சாவகச்சேரி, இலங்கை.


### 2-ம் அதிகாரம்.


(முற்றொடர்ச்சி துணர் 10. மலர் 8. பக்கம் 355.)


#### 4. இகலியைபு (Opposition)

பூகங்களெல்லாம் நான்கு வகையாகுமாகலின், ஒரு பண்பிக்கும் அதன் ஒரு பண்பிற்குமுள்ள தொடர்பு நால்வகையுள் அடங்கும். ஒரு பொருளைப்பற்றிக் கூறும் உ ஊ எ வ என்னும் நால்வகைத்தாட்டாந்தங்களின் எழுவாயும் பயனிலையும் நான்கிற்கும் பொதுவே. இந்நால்வகைத் தாட்டாந்தங்களின் இகலையும் இயைபையும் இயம்புவாம்.

மக்கள் பிராணிகளென்னும் யூகத்தை தன்மை எண்ணோடு கூறில் உடன்பாட்டுப்பொது உடன்பாட்டுச்சிறப்பு எதிர் மறைப்பொது எதிர்மறைச்சிறப்பென நான்காகக் கூறலாம்.

(எதிர்மறை விரோதம்)




இயலியைப்புச் சதுரம்.

உ வும் எ யும் தன்மையில் விரோதம்

ஊ வும் ஏ யும் தன்மையில் விரோதம்

உ வும் ஏ யும் தன்மையாலும் எண்ணாலும் மாறுகோள்.

ஊ வும் எ யும் தன்மையாலும் எண்ணாலும் மாறுகோள்.

ஊ உ வில் உறுப்பாய் அடங்கும்.

ஏ எ யில் உறுப்பாய் அடங்கும்.

எல்லாக்குயில்களும் கூவுகின்றன. இதன் விரோதம் ஒரு குயிலும் கூவுகிறதில்லை. எல்லாக் குயில்களும் கூவுகின்றன. உ தன் மாறுகோள், சிலகுயில்கள் கூவுகின்றனஅல்ல. எல்லாக் குயில்களும் கூவுகின்றன என்பதை பிழையெனக் காட்டுதற்கு ஒரு குயிலைக்காட்டி இது கூவுகிறதில்லை என்றாற்போதும்.

உ உண்மையானல் எ உண்மையானல் ஊ உண்மையானல்

எ பொய் உ பொய் உ ஐயம்

ஏ பொய் ஊ பொய் ஏ ஐயம்

ஊ உண்மை ஏ உண்மை எ பொய்

ஏ ! உண்மையானல்

எ ஐயம்

ஊ ஐபம்
உ பொப்

ஊ உண்மையென அறிந்ததனுல் உ உண்மையெனத் துணிய வியலாது. ஒரு பகுதியைப்பற்றி அறிந்தால் முழுவதைப் பற்றி அறியாதிருத்தல் கூடும். சினையை அறிந்தும் முதலை உண்டெனக் கூறவியலாது. ஊ வினது எழுவாய் ஈயாத பதமாகலானும், உ வினது எழுவாய் ஈந்த பதமாகவும் இருத்தலான், சிறப்பிலிருந்து பொதுவைத் துணிதல் ஈயாதபதத்தை ஈந்த பதமாக்குதலாகும். ஈயாத பதத்தை ஈந்த பதமெனக் கோடல் போலி. சிறப்புண்மையிலிருந்து ஒரு பொதுப் பிரமாணத்தை எய்தல் போலி. இந்த மலை தீயுடையது என்னும் உண்மையால் எல்லாமலையும் தீயுடையவென மொழியவியலாது. உ விலிருந்து ஊ வைத் துணியலாம். ஈந்தபதத்தை ஈயாத பதமாகக்கொள்ளலாம். எல்லா மலைகளும் தீயுடைய என்பதினுல், இம்மலை தீயுடைத்தென்பது பெறப்படும். ஊ உண்மையானுல் எ ஐயமாகும். சிலர் விவேகிகள் என்பதிலிருந்து எஞ்சிய சிலர் விவேகிகள் அல்லரெனத் துணியவியலாது. எஞ்சிய சிலர் விவேகிகள் என்றுந் துணியவியலாது. எஞ்சிய சிலரைப்பற்றி ஒன்றுஞ் சொல்ல முடியாது. உடன் பாட்டுச் சிறப்பின் உண்மையைக் கொண்டு எதிர்மறைச் சிறப்பின் உண்மை பொய்மையை நாட்டவியலாது. எதிர்மறைச் சிறப்பின் மூலமாக உடன் பாட்டுச் சிறப்பின் உண்மை பொய்மையையும் துணியவியலாது.

### 5. உடனனுமாநம் (உடன் கருதல்)

ஒரு தாட்டாந்தத்திலிருந்து அவ்வுண்மை நாட்டும் வேறோர் தாட்டாந்தத்தைக் கருதல் உடன் கருதல் என்பர். ஒரு தாட்டாந்தப் பொருளைப் பலவிதமாய்ச் செப்புதல் உடன் கருதலாகும். ஒரு தாட்டாந்தத்தின் பொருளை அத்தாட்டாந்தத்தின் எழுவாய் பயனிலைகளாலேனும் அவற்றின் மாறுகோட் பதங்களாலேனும் புதியதோர் தாட்டாந்தத்தால் மொழிதல் உடன் கருதல் எனப்படும். உடன் கருதல் முறைகளாலே

ஒரு உண்மையைக் கூறும்போது அவ்வுண்மை விகற்பமடையக் கூடாது. மலேதியுடைத்தென்பது உண்மையானால் அவ்வுண்மையை பலவாறாகவும் நோக்கி மொழியலாம். எ—வி என்னும் பதங்களேயுடைய ஒரு தாட்டாந்தத்தைப் வி—எ; எ—வி; வீ—எ; ஏ—வி; வி—ஏ; ஏ—வீ; வீ—ஏ, என்னும் பல பதங்களே உடைய தாட்டாந்தங்களாகச் செப்பலாம். (ஏகாரம் எ யினது மாறுகோள். வீகாரம் வி யினது மாறுகோள்). உடன் கருதல் முறைகளுள் நான்கு பிரதானம். அவை இடமாற்றல், வெதிரேகித்தல்; வெதிரேகித்திடமாற்றல்; கவிழ்த்தல் என்பன. இடமாற்றல் வெதிரேகித்தல் என்னும் இருமுறைகளான் ஏனைய முறைகளே எய்தலாம். கருதல் முறைகளில் ஈயாதபதத்தை ஈந்த பதமாக்கலாகாது.

### 6. இடமாற்றல் (Conversion.)

இடமாற்றல் என்பது ஒருதாட்டாந்தப்பொருளே ஆதித்தாட்டாந்தத்தின் எழுவாயை பயனிலேயாகவும் பயனிலேயை எழுவாயாகவும் அமைக்கப்பெற்ற புதியதோர் தாட்டாந்தத்தால் கூறுதலே. எ—வி என்பது வி—ப என இடமாறும். இடமாற்றல் முறையில் தாட்டாந்தமும் அதன் உடன்கருதலாகிய இடமாற்றமும் தன்மையில் வேற்றுமையாகா. அவை எண்ணால் விகற்பமடைதலுண்டு. உதாரணம், எ—ஒரு மக்களுந்தேவரல்லர்; எ—ஒரு தேவரும் மக்களல்லர். எழுவாயும் பயனிலேயும் ஆதித்தாட்டாந்தத்தில் ஈந்திருக்கின்றன. இடமாற்றிப் பெற்ற தாட்டாந்தத்திலும் ஈந்திருக்கின்றன. இது தனியிடமாற்று எனப்படும். ஊ மக்கள், சிலர் தேவர். தனியிடமாற்றாக ஊ தேவர் சிலர் மக்கள். உ எல்லா மக்களும் தேவர் என்பதைச் சில தேவர் மக்களெனவே மாற்றலாம். தேவர் ஆதித்தாட்டாந்தத்தில் ஈயாதபதமாகையால் இடமாற்றிப்பெற்றதிலும் ஈயாதபதமாகவே இருத்தல்வேண்டும். உடன்பாட்டுப் பொதுவினது இடமாற்றும் உடன்பாட்டுச் சிறப்பாகும். இது குறையிட மாற்றெனப்படும். எதிர்மறைச் சிறப்புத்தாட்டாந்தத்தை இடமாற்றவியலாது. மக்கள் சிலர் தேவரல்லர் என்பதைத் தேவர் சிலர் மக்களல்லர் என இடமாற்றல்

போலியாகும். மக்கள் சிலர் என்னும் ஈயாத எழுவாய் ஈந்த பயனிலையாய் இடமாற்றத்தில் வருதலால் இவ்விடமாற்றல் போலி. மக்கள் சிலர் தேவரல்லரெனச் செப்பினேமொழிய எஞ்சிய மக்களைப்பற்றி ஒன்றுஞ் சொல்லா தொழிந்தோம். எஞ்சிய சிலர் தேவராகவும் அல்லாதாராகவும் இருக்கலாம். அவரைப்பற்றி ஒன்றுந் துணிய வியலாது; இப்போலியிடமாற்றலை ஓர்ந்து உணர்க.

ஒரு இயற்பெயரை எழுவாயாக உடையது தனித் தாட்டாந்தமெனப்படும். தனித்தாட்டாந்தம் உடன்பாட்டுப் பொதுவாகவே மொழியப்படுதலால் தனியிடமாற்றை ஏற்காது குறையிடமாற்றை ஏற்கும்.

வஞ்சிப்பத்தன் கோவலனைக் கொன்டான், என்புழி எவ்வகையாயினும் வஞ்சிப்பத்தன் கோவலனைக் கொன்றான் எனப் பொருள்தரும். இதன் குறையிடமாற்று கோவலனைக்கொன்ற ஒருவர் வஞ்சிப்பத்தன் எனப்படும். இது உடன்பாட்டுச்சிறப்பே. யாண்டுப்புகை ஆண்டுத்தீ என்பது ஒரு உடன்பாட்டுப் பொதுவாகலான் அதன் இடமாற்று சில வேளைகளில் தீயுடைமை புகையுடைமையை உணர்த்தும் என்பதே.

யாண்டுத்தீ ஆண்டுப்புகை என இடமாற்றினுல் போலியாகும். அதை நாட்டுதற்கு வேறு அளவைகள் வேண்டப்படும். யாண்டுப் புகையின்று ஊண்டுத்தியின்று என்பது எதிர்மறைப் பொதுவாகலான் ஒருபோதும் தியுடைமை புகையுடைமை உணர்த்ாதென இடமாறும். யாண்டுத் தீயின்று ஆண்டுப்புகையின்றென தனியிடமாற்றாக வுரைக்கலாம்.

## 7. வேதிரேகித்தல் (Obversion.)

ஒரு ஆதித்தாட்டாந்தத்தின் பொருளை ஆதித் தாட்டாந்தத்தின் எழுவாய் புதிய தாட்டாந்தத்தின் எழுவாயாக இருக்கத் தன்மையை மாற்றிமொழிதல் வெதிரேகித்தல் எனப்படும். தன்மையை மாற்ற, பொருள் மாறாதிருத்தற்காக, அதின் பயனிலையின் மாறுகோட்பதத்தை புதிய தாட்டாந்தத்துப்

பயனிலையாக்கவேண்டும். வெதிரேகித்தல் என்பது ஒரு தாட்டாந்தத்தின் தன்மையை மாற்றிப் பயனிலைக்காக அதன் மாறுகோட் பதத்தை அமைப்பதே. எ—வி என்பது எ—வீ ஆகும். உதாரணம் உ எல்லாமக்களும் பிராணிகள் என்பது. எ ஒருவரும் பிராணியல்லாதவர் அல்லர் என வெதிரேகமாகும். யாண்டுப்புகை ஆண்டுத்தீ என்பதன் வெதிரேகம் ஒருபோதும் புகை தீயின்மையைக் காட்டாது என்பதே. ஊ சில உரை நூல்கள் போற்றத் தக்கவை. இதன் விரோதம் ஏ சில உரை நூல்கள் போற்றத் தகாதவை அல்ல. ஏ சிலர் அறிவுடையோர் அல்லர் என்பது. ஊ சிலர் அறிவில்லாதோர் எனவரும். சில நாய்கள் கரடிகளல்லவென்பது சில நாய்கள் கரடிகளல்லாத பிராணிகள் எனவரும். அல்ல என்பது தன்மையைக் காட்டும் குறிப்பு வினைச்சொல். அல்லாதது என்பது ஒருமொழியோடு சேர்ந்து பெயர்ச்சொல்லாகும். எல்லாப் பாம்புகளுஞ் சீறும், யாதியாது பாம்பு அதுவது சீறும் என்னும் இருவசனங்களும் ஒருபொருளுடையன. இவற்றின் வெதிரேகங்கள் ஒரு பாம்புஞ் சீறாத பிராணியல்ல; யாதியாது பாம்பன்று அதுவது சீறாதது அன்று. யாண்டுப் புகை ஆண்டுத்தீயின் வெதிரேகமாக யாண்டுப்புகையின்று ஆண்டுத் தீயின்று எனமொழியக்கூடாது. பின்னையது முன்னையதின் எதிர்மறைக்காட்சி. எதிர்மறைக் காட்சியை வெதிரேகம் என மயங்கலாகாது. ஒரு தாட்டாந்தத்தின் வெதிரேகம் அத்தாட்டாந்தவுண்மையை உணர்த்தும். ஒருதாட்டாந்தத்தின் எதிர்மறைக்காட்சி அத்தாட்டாந்தத்தின் உண்மையைக் கூறாது.

### 8. வேதிரேகித்திடமாற்றல் (Contraposition.)

ஒரு தாட்டாந்தப்பொருளை ஆதித்தாட்டாந்தப் பயனிலையின் மாறுகோட்பதத்தை எழுவாயாகவும் எழுவாயைப் பயனிலையாகவுமுடைய புதிபதோர் தாட்டாந்தமாகக் கூறுதல் வெதிரேகித் திடமாற்றல் எனப்படும்.

எ—வி என்னும் நிலை வீ—எ ஆகும். ஆகித்தாட்டாந்தத்தை முதல் வெதிரேகித்து பின்னர் அவ்வெதிரேகித்ததை

இடமாற்றல், வெதிரேகித்திடமாற்றல் எனப்படும். உ எல்லா யானைகளும் துதிக்கையுடையன வெதிரேகித்தால் எ ஒரு யானையும் துதிக்கையில்லாததல்ல எனவரும். இவ்வெதிரேகித்ததை இடமாற்ற எ—ஒரு துதிக்கையில்லாத பிராணிகளும் யானையல்லவெனவரும்.

ஊ சில யானை துதிக்கையுடையன எ—வி

ஏ சில யானைகள் துதிக்கையில்லாதன அல்ல எ—வீ

உடன்பாட்டுச் சிறப்பை வெதிரேகித்திட மாற்றவியலாது.

எ ஒரு யானையும் துதிக்கையில்லாத பிராணி அல்ல எ—வி

உ எல்லா யானையும் துதிக்கைப்பிராணி எ—வீ

ஊ சில துதிக்கைப் பிராணி யானை வி—எ

இவ்வண்ணம் எதிர்மறைப் பொதுவை வெதிரேகித்திட மாற்றலாம்.

ஏ சில யானை துதிக்கையில்லாதனவல்ல. ஊ சில யானை துதிக்கையுடையன. ஊ சில துதிக்கைப்பிராணிகள் யானைகள். ஏதிர்மறைச் சிறப்பை மாற்றலாம்.

## 9. கவிழ்த்தல் (Inversion.)

ஒரு ஆதித்தாட்டாந்தத்தின் பொருளை அத்தாட்டாந்தத்தின் எழுவாயின் மாறுகோட்பதத்தை எழுவாயாகவும் பயனிலையைப் பயனிலையாகவுமுடைய புதியதோர் தாட்டாந்தமாக மொழிதல் கவிழ்த்தல் எனப்படும். வெதிரேகித்தலையும் இடமாற்றலையும் ஒன்றன்பின் ஒன்றுய்மாற்றி ஏனைய உடன் கருதல்கள் தோன்றும். இடமாற்றித் தொடங்கினும் வெதிரேகித்துத் தொடங்கினும் ஏ ஊ என்னும் சிறப்புத் தாட்டாந்தங்களைக் கவிழ்த்தலாக மாற்றவியலாது உடன் பாட்டுப் பொதுவினது கவிழ்த்தலைப் பெறுதற்கு வெதிரேகித்துத் தொடங்குக. எதிர்மறைப் பொதுவைக் கவிழ்த்தற்கு இடமாற்றித் தொடங்குக. எ—வி என்பது ஏ—வி எனமாறும். கவிழ்த்துழி இடையே புரட்டல் உருட்டல் முதலிய சில உடன் கருதல்கள் தோற்றும். அவற்றினை பொருட்படுத்தாது செய்க. ஏ—வீ நிலையான புரட்டலை வீ—எ நிலையான உருட்டலையும் கூறுதொழிகின்றனம்.

## 10. கவிழ்த்தல் உதாரணங்கள்.

எ—வி என்பது எல்லா எ காரங்கங்களும் வி காரங்கள் என்பதைக் குறிக்கும். அதில் எ எழுவாய் வி பயனிலை, வி, வி யினது மாறுகோள்.

| | | | | |
|---|---|---|---|---|
| உ: | எ—வி | ஆதித்தாட்டாந்தம் | | வெதிரேகித்தலால். |
| எ: | எ—வி | ஆகும்: | இது | இடமாற்றலால். |
| எ: | வீ—எ | ஆகும்: | இது | வெதிரேகித்தலால். |
| உ: | வீ—எ | ஆகும்: | இது | இடமாற்றலால். |
| ஊ: | எ—வீ | ஆகும்: | இது | வெதிரேகித்தலால். |
| எ: | எ—வி | ஆகும்: | இது | கவிழ்த்தல். |

காட்டு.

எல்லா ஓநாய்களும் நாய்கள். உடன்பாட்டுப்பொது.
ஒரு ஓநாயும் நாயல்லாதது அல்ல. எதிர்மறைப்பொது.
ஒரு நாயல்லாத பிராணியும்....ஓநாயல்ல. எதிர்மறைப்பொது.
எல்லா நாயல்லாத பிராணியும்....ஓநாயல்லாத பிராணிகள். [உடன்பாட்டுப்பொது.
சில ஓநாயல்லாத பிராணிகள்....நாயல்லாத பிராணிகள். உடன் [பாட்டுச்சிறப்பு.
சில ஓநாயல்லாத பிராணி....நாயல்லாத பிராணியல்ல. [எதிர்மறைச்சிறப்பு.

உடன்பாட்டுப் பொதுவை இடமாற்றித் தொடங்கினுல் கவிழ்த்தல் கிடையாது. எதிர்மறைப் பொதுவை வெதிரேகித்துத் தொடங்கினுல் கவிழ்த்தல் கிடையாது.

| | |
|---|---|
| எ: எ—வி என்னும் ஆதியை | ஒருநாயும்....ஓநாயல்ல. |
| எ: வி—எ இடமாற்ற ஆகும் | ஒருஓநாயும்....நாயல்ல. |
| உ: வி—எ வெதிரேகித்தல் ஆகும் | எல்லா ஓநாயும்....நாயல் [லாத பிராணி. |
| ஊ: எ—வி இடமற்ற கவிழ்த்தலாகும் | சிலநாயல்லாத பிராணி....ஓநாய்கள். |

இவ்வுடன் கருதல்களால் பயனில்லையெனமலையற்க. அரசாங்கத்தினருடைய நியாயப் பிரமாணங்களை விளக்குதற்கும் அவற்றின்பொருளை மந்தபுத்தியுடைய நீதிபதிகளுக்குப் புலப்படுத்து

தற்கும் பெரிதும் பயன்படும். ஒரு எழுவாய்க்கும் பயனிலைக்கு முள்ள தொடர்பை வேறோர் பதத்தின் உதவியின்றிக் கருதுகிறோமாகையால் உடன் கருதல் எனப் பெயரிட்டோம். வேறு சில உடனனுமானங்கள். சினைப்பதத்தால் கருதல். குதிரை நாற்கால் மிருகம், ஆகையால் குதிரைத்தலை ஒரு நாற்கால் மிருகத்தினது தலையாகும். இனப்பதத்தாற் கருதல். மெய்கண்ட தேவர் அருணந்தி சிவாச்சாரியரின் மாணவரென்றால் அருணந்திசிவாச்சாரியார் மெய்கண்டதேவரின் குருவே. பகரம் மகரத்தினும் வன்மையானதென்றால் மகரம் பகரத்தினும் மென்மையெனலாம். பண்புடன் கருதல். எ—விக்கு சமமானல் எ என்பது வி என்பதற்கு சமன்.

ஒருவால் வெள்ளிபூத உடம்புடையதாகின் ஒரு கட்புலனாகிய வால் வெள்ளி கட்புலனாகும், பூத உடம்புடையது. இம் முறைகளின் போலி நிகழ்தல் உண்டு. வேந்தரெல்லாம் மனிதர், ஆகையால் தகுதியற்ற வேந்தர் தகுதியற்ற மனிதர் என்பது போலி. ஒருவன் வேந்தன் ஆதற்கு தகுதியல்லனாயினும் நல்ல மனிதனாகவிருக்கலாம். ஒரு குடிசை ஒரு இல்லம். ஆகையால் ஒரு பெரிய குடிசை ஒரு பெரிய இல்லம். இல்லமென்பது வீடு, மாளிகை, கோயில், முதலியவற்றை உணர்த்தும் பொதுப்பெயர். குடிசை எவ்வளவு பெரிதாயினும் பெரிய இல்லமாகாது. (தொடரும்)

---

# தம்பிரான்றோழர் தேவாரம்.

திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளை, தலைமைத்தமிழாசிரியர்,
உயர்தரக்கலாசாலை, நான்குநேரி.

முற்றொடர்ச்சி துணர் 10. மலர் 8. பக்கம் 350.

## ௩. நஞ்சு.

அமுதம்பெற்று உண்டு மாயா வாழ்க்கையைப் பெறுவான் தேவர்களும் அசுரர்களும் ஒன்று சேர்ந்து பண்டொரு நாள் பாற்கடலைக் கடைந்தார்கள். அப்பாற்கடலைக் கடைவதற்கு

அவர்கள் மந்தரம் என்ற மலையை மத்தாகவும் வாசுகி என்ற பாம்பைக் கடை கயிறாகவும் கொண்டார்கள். அவர்கள் கடையத்தொடங்கிய வுடனே வலி பொறுக்கமாட்டாமல் பாம்பு நஞ்சைக் கக்கிற்றாக, அந்நஞ்சு அனைவரையும் அழிக்கத்தொடங்கிற்று. அந்நஞ்சினை ஆலாலம் என்றும், ஆலகாலம் என்றும், காளகூடம் எனவும் சொல்லுவார்கள்.

அப்போது தேவர்களும் பிறரும் அஞ்சி நடுங்கி, தம்மைப் பாதுகாத்தருளும் பொருட்டுச் சிவபிரானாரை நோக்கி அருந்தவங் கிடந்தார்கள். அன்று தான் ஏகாதசி நாள். அதனாலேயே இந்துக்களில் பலர் இன்றும் ஏகாதசி நாளன்று உணவு கொள்ளாமல் பட்டினி கிடக்கின்றனர்.

அவர்களுடைய அருந்தவம் கண்டு மனமிரங்கிய சிவனார் உடனே அவர்கள்முன் தோன்றியருளி, தமது அருகில் நின்ற சுந்தரரைப் பார்த்து அந்நஞ்சினைக் கொண்டு வரும்படி கட்டளையிட்டருளினார். சுந்தரனார் தமது கையை நீட்டலும், நஞ்சு கடுகளவாகி அவரது அங்கையில் வந்திருந்தது. அவர் அதனைப் பெருமானார் கையில் பணிந்து கொடுக்க, சிவனார் அதனை வாங்கி உலகங்களெல்லாம் உய்யும் பொருட்டு உண்டு கழுத்திலே வைத்தருளினார். சுந்தரர் ஆலாலத்தைக் கொண்டு வந்து கொடுத்த பெருமையினால் அன்றுதொட்டு ஆலால சுந்தரர் எனப் பெயர் பெற்றார். சிவனாருடைய கழுத்து ஆலாலம் தங்கிய தன்மையால் நீலநிறத்தையடைந்து அழகாக விளங்கிற்று. இவ்வரலாற்றைச் சுந்தரனார் தமது தேவாரத்தில் பின் வருமாறு கூறுகின்றார் :—

"கடலைக் கடந்திட்டதோர் நஞ்சையுண்டீர்"

திருக்கோத்திட்டையும் திருக்கோவலூரும்.

"நஞ்சுண்டு தேவர்க்கமுதம் கொடுத்தநல மொன்றறியோம்"

திருக்கோத்திட்டையும் திருக்கோவலூரும்.

"கறுத்தாய் கடல்நஞ்சமுதுண்டு கண்டம்" திருஅஞ்சைக்களம்.

"விடமிடற்றில் வைத்ததென்னே?" திருவேண்காடு.

"கடிக்கும் அரவால் மலையால் அமரர் கடலைக்கடைய எழுகாள
[கூடம்
ஒடிக்கும் உலகங்களை என்றதனை உமக்கே அமுதாக உண்டீர்
[உமிழீர்" திருப்புத்தூர்.

"மொய்த்தெழுந்த வேலைவிடம் உண்ட மணிகண்டன்"
திருக்கலையநல்லூர்.

"காருங்கருகடல் நஞ்சமுதுண்டு கண்டங்கறுத்தார்"
முப்பதுமில்லை.

"அமரர் அடிபரவச் சங்கையை நீங்கஅருளி, தடங்கடல் நஞ்ச
[முண்டார்" திருநின்றியூர்.

"வேலைவிடம் அறியாமல் உண்டுகண்டங் கறுத்தாய்"
திருக்கழிப்பாலை.

"காருலாவிய நஞ்சையுண் டிருள்கண்டர்" திருப்பைஞ்ஞீலி.

"சங்கலக்கும் தடம்கடல் வாய்விடம் சுடவந் தமரர்தொழ
அங்கலக்கண் தீர்த்தவ்விடம் உண்டுகந்த அம்மான்" திருவாரூர்.

"வங்கமலி கடல்நஞ்சை வானவர்கள் தாமுய்ய
நுங்கி அமுதவர்க் கருளி" திருவாரூர்.

"கோலமால் வரைமத்தென நாட்டிக் கோளரவு சுற்றிக் கடைந்
[தெழுந்த
ஆலநஞ்சுகண்டவர் மிகஇரிய அமரர்கட் கருள்புரிவதுகருதி
நீலமார்கடல் விடந்தனையுண்டு கண்டத்தேவைத்த பித்தநீசெய்த
சீலம்கண்டுநின் திருவடியடைந்தேன் செழும்பொழில் திருப்புன்
[கூருளானே" திருப்புன்கூர்.

"காரிருள்போன் றகறையணிமிடறுடையடிகளை" திருக்கழுமலம்.

"ஆலந்தா னுகந்தமுது செய்தானை" திருவேகம்பம்.

"வேலைநஞ்சுண்ட வித்தகன் றன்னை" திருவேகம்பம்.

"விஞ்சைவானவர் தானவர்கூடிக் கடைந்தவேலையுள் மிக்கெழுந்
[தெரியும்
நஞ்சமுண்ட நள்ளாறனை அமுதை" திருநள்ளாறு.

"வானவர்கள் பூசவிடக் கடல்நஞ்சுண்ட கருத்தமரும்
கொண்டலெனத் திகழும் கண்டமும்" திருக்கானப்பேர்.

"வார்கடல்நஞ், சுண்டதனுக் கிறவாதென் றுமிருந்தவனை"
திருக்கானப்பேர்.

"பிறையணி வாள்நுதலாள் உமையாளவள் பேழ்கணிக்க
நிறையணி நெஞ்சனுங்க நீலமால் விடமுண்டதென்னே"

திருநாகேச்சரம்.

சிவபெருமானுருடைய அணுக்கத்தொண்டராயிருந்த பேறு பெற்றவர் சுந்தரனுர். (அணுக்கத்தொண்டர்—அந்தரங்க அடியார்.) அவர் தம் தலைவராகிய சிவனுர் சென்ற விடமெல்லாம் உடனேகி, திருநீறுதாங்கும் பணியுடையார். அதனுல் பெருமானுர் நஞ்சுண்ணச் சென்றபோது அவரும் உடனேகினுர். முன்னர் விசயனுக்குப் பாசுபதந் தருவதற்காக வேட்டுவனுகிச் சிவபெருமான் சென்றபோது சுந்தரரும் உடன் சென்றமை அவருடையே திருவாழ்கொளிபுத்தூர்த் தேவாரத்தால் இனிது காட்டப்பெற்றது.

தேவர்களனைவரும் கூடிக்கொண்டு தம்முன் தோன்றிய சிவனுரைநோக்கிநஞ்சைஉண்டருளும்படி வேண்டிக்கொண்டார்கள். அதுகண்ட சுந்தரனுர் மனம் வெதும்பி அவர்களது வஞ்சகச் செயலுக்காக இரங்கினுர். அப்போது பிரானுர் அவரைப் பார்த்து நஞ்சைக் கொண்டுவரும்படி ஆணையிட, அதனைமறுக்க அஞ்சி, சுந்தரனுர் ஆலாலத்தைக் கொண்டுவந்து தலைவரிடம் தந்து வணங்கினுர். அதனைவாங்கிய சிவனுர் உண்டு கண்டங் கரியதாகப்பெற்றுர். "ஐயோ! சில வஞ்சகர்கள் கூடிக்கொண்டு தாம் தப்பிப் பிழைப்பதற்காக நஞ்சையுண்ணும்படி வேண்டிக் கொள்ள மனமிரங்கி இவர் அதனை உண்கின்றுரே! என்னே இவர் பேதமை!" என உள்ளம் உருகினுர் ஆலால சுந்தரனுர்.

அவர் திருவானைக்காப் பதிகத்தில்,

"வங்கமேவிய வேலைநஞ்செழ வஞ்சகர்கள் கூடித்
தங்கள்மேலடராமை உண்ணென உண்டிருள் கண்டன்"

என இவ்வுண்மையை வலியுறுத்துகின்றுர். திருப்புன்கூரில் "கண்டத்தே வைத்த பித்த" என்று கூறியதற்கேற்ப, அவர் திருச்சோற்றுத்துறையில் பெருமானைநோக்கி,

"ஓதக்கடல் நஞ்சினை உண்டிட்ட
பேதைப் பெருமான்" என மொழிகின்றுர்.

எம்பெருமானுர் செய்த் திருவிளையாடல்களில் மிக்க அருள் நலத்தால் தோன்றியது நஞ்சையுண்டு உலகத்தைப் பாதுகாத்ததே. அதனை உடனிருந்து கண்டு அவ்வருட்செயலில் ஈடுபட்டவர் சுந்தரர்; ஆதலால் அதனை நினைந்து நினைந்து அடிக்கடி மனமுருகி வந்தார். அதனுல் அவர் பெரும்பாலும் தாம் சென்ற விடங்களிலெல்லாம் "நீலகண்டரே" என விளித்தே தேவாரம் பாடி மகிழ்ந்தார். அவர் பாடியனவாக இன்று கிடைக்கும் தேவாரத் திருப்பதிகங்கள் நூற்றில் அறுபத்திரண்டு பதிகங்களில் இவ்வருட் செயல் அவரால் கூறப்படுகின்றது. அவற்றுள் பதினென்கிடங்களில் இவ்விரண்டு முறையும், ஆறிடங்களில் மும்மூன்று முறையும் அவர் இச்செயலைப் புகன்றருளினர். மேலும், அவர் திருவெற்றியூரை நீங்கியவுடன் இரண்டு கண்களையும் இழந்து திண்டாடியபோது திருவெண்பாக்கத்தைச்சேர்ந்து, "ஆலாலத்தை உண்டு உலகத்தைக் காத்தருளிய கருணைக் கடலாகிய சிவபெருமான் எனது பிழையைப் பொறுத்து என் கண் தாரானே?" என உருதவார் அவ்வொரு பதிகத்திலேயே நான்கிடங்களில் இவ்வருட் செயலைக்கூறிப்பிரானுரைப் புகழ்கின்றூர்.

"கறைமிடற்றன்" (4-ம் பாட்டு)
"கார்நிலவு மணிமிடற்றீர்" (7-ம் பாட்டு)
"காரிடங்கொள் கண்டத்தன்" (8-ம் பாட்டு)
"காராரு மிடற்றானே" (11-ம் பாட்டு)

அருட்கடலாகிய நம்பிரானுரின் இவ்வருட்செயலை நினைந்து ஈடுபட்டு இடைவிடாது "திருநீலகண்டம்" "திருநீலகண்டம்" எனக் கூறிவந்த பெருமையாலே திருநீலகண்ட நாயனுர் எனப் பெயர் பெற்ற அடியாரது திருப்பெயரைத் திருத்தொண்டத் தொகையில் தமது திருவாக்கின் முதன்மைபெற அமைத்ததும் சுந்தரனுர் திருநீலகண்டத்தில் வைத்திருந்த ஒப்புயர்வற்ற பற்றுப் பற்றிலேபோலும்!

"தில்லைவாழந்தணர்தம் அடியார்க்குமடியேன்
திருநீலகண்டத்துக் குயவனுர்க்கடியேன்" திருத்தொண்டத்தொகை இதில் முதலில் இருப்பது சிவனுர் திருவாக்கு; இரண்டாவதிருப்பதே நாயனுர் திருமொழி.

தம்பிரான்தோழர் திருநீலகண்டத்தைப் பற்றிக் குறித்த அறுபத்திரண்டு பதிகங்களில் மேலே குறித்தன போக ஏனைய இடங்களையும் அன்பர்கள் தேடாமற் கண்டின்புறுமாறு கீழே குறிக்கின்றோம்.

''நீலகண்டர்'' திருஎதிர்கோள்பாடி; ''நஞ்சுலாங் கண்டத்தெங்கள் நாதனை'' திருவாரூர்; ''மைகொள் செம்மிடற்றீர்'' திருப்புத்தூர்; ''கறைக்கண்டன்'', ''கண்டமுடைக் கடுநஞ்சை நுகர்ந்தபிரான்'' திருக்கச்சியனே சதங்காபதம்; ''கண்டன்,'' ''காளகண்டன்,'' ''மைகொள்கண்டன்'' திருநாட்டுத்தொகை; ''நஞ்சடைகண்டர்,'' ''மணிபடுகண்டனை'' திருப்பாச்சிலாச்சிராமம்; ''நஞ்சேர்கண்டா'' திருநாட்டியத்தான்குடி; ''நஞ்சங்கொண்டார்'' திருவெண்ணெய் நல்லூரும் திருநாவலூரும்; ''திருநீலமிடற்றெம்பிரான்'' திருப்பழ மண்ணிப்படிக்கரை; ''கருமாமுகில்போல் மிடற்றாய்'' திருக்காளத்தி; ''திருநீலமிடற்றினனே,'' ''திகழ்நீல்மிடற்றினனே'' திருக்கற்குடி; ''கறையாரும் மிடற்றாய்,'' ''காராரும்மிடற்றாய்,'' ''மையார்கண்டத்தினாய்'' திருக்கடவூர்; ''கறையார்ந்தகண்டத்தன்'' திருக்கருப்பறியலூர்; ''கருக்க நஞ்சமுதுண்ட கல்லாலன்'' திருஇடையாற்றுத்தொகை; ''முன்றான் கடல் நஞ்சமுண்ட வதனாலோ'' திருக்கோடிக்குழகர்; ''கறைக்கண்டரோ'' நமக்கடிகளாகிய அடிகள்; ''கறைகொண்ட கண்டத்தெம்மான்,'' ''மைம்மானமணிநீல கண்டத் தெம்பெருமான்,'' ''மைஞ்ஞவிலுங் கண்டத்தெண்டோள் எம்பெருமானை'' திருவதிகைத் திருவீரட்டானம்; ''கறைக்கண்டன்'' திருத்தொண்டத்தொகை; ''கறைக் கண்டா'' திருக்கச்சூர் ஆலக்கோவில்; ''எம்கறைக் கண்டத்தீசனை'' முடிப்பதுகங்கை; ''மையணிகண்டனை'' திருஆமாத்தூர்; ''நஞ்சணி கண்ட'' திருப்பாண்டிக்கொடுமுடி; ''மைஅளவு கண்டத்து வளர் சடை எம்ஆரமுதை'' திருவாரூர்; ''மையார் கண்டமுடையானே' திருஆலங்காடு; ''காரார்கடலின் நஞ்சுண்டகண்டர்'' திருக்கடவூர் மயானம்; ''காரதார் கறைமிடற்றானை,'' ''கண்டமும் கறுத்திட்டபிரானை'' திருநீேர்; ''நஞ்சமுண்டு கண்டங் கறுத்தானை,'' ''மைகொள் கண்டனை'' திருவாழ்கொளிபுத்தூர்; ''குழைக் கருங் கண்டனை'' திருக்கழுமலம்; ''கண்டநஞ்சுடைக்கம்பன்'' திருவே

கம்பம்; "முழங்கும் கடல்நஞ்சம் அருந்தும்நம்பி" நம்பியென்ற திருப்பதிகம்; "பெரியநஞ்சமுதுண்டதும்" திருவலிவலம்; "கரிய கண்டன்" திருநள்ளாறு; "தடங்கடல் நஞ்சுண்ட கண்ட" திருவடமுல்லைவாயில்; "பொங்குமாகடல் விடமிடற்றானே" திருவாவடுதுறை; "அல்லுறுகண்டன்" திருமறைக்காடு; "ஒலிகடல் நஞ்சமுதுண்ட ஈசன்" திருவாரூர்; "மைகொள் கண்டர்" திருவாஞ்சியம்; "கறைக்கண்டன்," "கரிய கறைக்கண்டன்" திருக்கேதீச்சரம்; "காளகண்டன்," "விடமுடையமிடறன்" திருக்கழுக்குன்றம்; "எழுகடல் நஞ்சுண்டே" திருச்சுழியல்; "வானவர்தம் கண்டனை" திருக்கானப்பேர்; "வேலையில்நஞ்சுண்டு" திருக்கூடலையாற்றூர்; "விடங்கொள்மாமிடற்றீர்" திருவீழிமிழலை; "கறைக்கண்டனே," "காரேறு கண்டனை" திருப்புக்கொளியூர் அவிநாசி; "காரூர் கடலில் விடமுண்டு" திருநறையூர்ச்சித்தீச்சரம்; "காரூர் கண்டத்து" திருவாரூர்; "நஞ்சேருநன்மணிகண்டமுடையானே" "காரூர் முகில்போல்வதோர் கண்டத்தெங் கூற்றானே" திருவாரூர்ப்பரவையுண்மண்டளி; "கருநீலமணி மிடற்றான்" திருநன்னிலத்துப் பெருங்கோயில். இனி, நான்காவது தலையாகிய மறை என்பதுபற்றி ஆராய்வாம்.

---

உ

## இரவீந்திரநாத தாகூர் இயற்றிய கீதாஞ்சலியின் ஒரு செய்யுளைத் தழுவி எழுதியது.

---

அச்சங் களைந்த சிந்தைய ளாதலும்,  
ஆட்சி யோங்கிட மாட்சி மிகுந்திட  
சென்னி நிமிர்த்திச் செம்மாந் திருத்தலும்,  
செந்தமிழ் மொழியொடு இந்திய மண்ணிடை  
வந்திடு மெல்லா மொழிகளு மோங்கச்  
சுதந்திர அறிவே சூரிய ஒளி விட,  
அன்னியர் தம்மொழி ஆட்சி குன்றிட,  
அம்ம இவ் விந்தியா அமைதல் என்றெனை  
அறைகுவன் கேண்மோ !

அவரவர் நலமே அவர்கருத் தாக
உண்மை தவிர்த்து உள்ளங் குறுகி
வன்கண் படைத்து வாளமரு ருளுற்றத்
தீதுற கலாம்பல தினந்தினம் விளைய,
சிறுசிறு துண்டாய்ச் சிதறிக் கிடக்கும்
மறுவில் கற்பின் மாதிவள் என்றோ
ஒன்றாய்த் திரண்டு ஒளிபெற விளங்கல் !!
உரைப்பன் கேண்மோ !!
உள்ளத் துண்ணின் றொளிருநல் லுறுதி
விள்ளுபல் லுண்மை வெளிப்பட லென்றோ!
ஓயா துழைக்கின் வாயா திலையென்
றாய்ந்தபல் கேள்விய ரனைவரு மொருமித்
தீங்குறு தீமை யாவையுங் கொன்று
தேங்கிய செம்மைத் திறங்கண் டென்றோ!
இறுமாந் துலகி லிணையாய் யிருத்தல்
அறிவனு பவமென ஆயபல் லாற்றான்
நெறிபிற ழாநன் னேர்மையில் நின்று
பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையினு னென்று
ஒவ்வா வழக்கம் ஒழித்தலு மென்றோ!
சிந்தையுஞ் செயலும் தினந்தின மகன்றில்
விந்திய நாடோ ரெழில் நாடென்னத்
திருவொடு மருவுந் திருநாள ளதுதான்,
விடுதலை யார்ந்து வீறுபெற் றெந்தாய்
நாடெழிற் சிங்கா தனமிருந் துலகிற்
பீடுற விளங்கும் பெரியநன் னாளே.!!!

சே. சின்னத்தம்பி, அமைச்சன்,
ஜவகர் வாசகசாலை, பாகனேரி.



# "ஆழ்வார் பாரதமும் பண்டைத் தமிழ் நூல்களும்"

கோமான். ம. வி. இராகவன்,
ஔவைத் தமிழகம், திருவத்திபுரம்.

பிற்காலத்தெழுந்த நூலாசிரியர் பலரும் தாமியற்றும் நூல் சிறப்பும் வனப்பும்பெற்று மிளிர்வான் வேண்டிப் பண்டைத் தமிழ் நூல்களிலமைந்து கிடக்கும் சீரிய கருத்துக்களையும், சொல் சொற்றொடர்களையும், தமது நூல்களில் ஆங்காங்கு அமைத்துக் கொள்ளுவாராயினர். இது, முன்னூல்களையும் பின்னூல்களையும் முறையே ஆராய்ந்தறிந்த அறிஞர் பலருங் கண்டதொன்றாம். இம்முறையைக் கையாண்ட புலவர் பலருள் தெந்தமிழ் நாடுபோற்றும் தண்டமிழ்ப் புலவர் பெருமகனாகிய வில்லிபுத்தூராழ்வாரும் ஒருவராவர். யான் சில நாட்களுக்கு முன்னர் இந்நல்லிசைப் புலவர் இயற்றியருளிய "பாரதம்" என்னும் தொடர்நிலைச் செய்யுளை யொருமுறை யூன்றிப்படித்து வந்தேன். அங்ஙனம் படித்து வருங்கால், பண்டைத் தமிழ் நூல்களின் கருத்துக்களும் சொற்றொடர்களும் அந்நூலில் அமைந்து விளங்குவதைக் கண்டு, அவற்றைத் தொகுத்து வெளியிடுவது தமிழகத்திற்குப் பெரிதும் பயன் படுவதாகு மெனக் கருதினேனாகலின், இதுபோது இது எழுதுவே னாயினேன்.

தெய்வத் திருவருள் பெற்று விளங்கிய பொய்யில் புலவ ராகிய திருவள்ளுவப் பெருந்தகையாரால் திருவாய் மலர்ந்தரு ளப்பெற்ற திப்பிய நூலாகிய "திருக்குறள்" என்பது திட்ப நுட்பம் பொருந்திய கருத்துக்களை யுட்கொண்டு மிளிர்வதொரு தனித்தமிழ் நூலாகும். இதன் மாட்டே எந்நாட்டினர்க்கும், எம்மொழியினர்க்கும், எக்கொள்கையினர்க்கும், எம்மதத் தினர்க்கும் சம்மதமாய கருத்துக்களும், கொள்கைகளும், வழக்க

வொழுக்கங்களும் பொதிந்துளவென நம்நாட்டுத் தண்டமிழ் வல்லுநரே யன்றித் தமிழ்மொழியை நன்கன் ஆராய்ந்தறிந்த புலவர்களாகிய டாக்டர். போப் (Dr. Pope), கால்டுவேல் (Dr. Caldwell) முதலிய மேனுட்டுப் பேரறிஞர்கள் பலரும் கொண்டாடுவர். இது பண்டைத் தண்டமிழ் நூல்கள் பலவற்றுள்ளும் முன்னுள்ளுஞ் சிறப்பிற்றுய், அறம்பொருளின்பங்களைத் திறம் பெறக் கூறுவதொரு பொதுமறை யாகுமென்பது யாவர்க்கும் ஒப்பமுடிந்த முடிபாம்.

இந்நூலின்கண் திகழும் ஒவ்வொரு குறட்பாவும் கடல் போன்று பரந்த பல்வகைப் பொருளையும் தன்னகத் தடக்கிச் செவ்வன் ஆடியின் விளக்கும் பெற்றி வாய்ந்திருத்தலின், இந்நூல், "பொருண்மொழி" என்றும் போற்றப்படுகின்றது.* பொருண்மொழியாவது விழுமியபொருளைத் தன்னகத்துச் செறித்துக்கொண்டு சுருங்கி வருவதாம். சான்றோர் செய்யுட்களுட் பெருகியும் பயின்றுளவாயெனின் சுருங்கி வருதலே சிறப்புடைத்தும் பெரும்பான்மையுமாம். ஒவ்வொரு திருக்குறளும் சின்மென்மொழியான் விழுமிய பொருளைத் தன்னகத் துடைத்தாய், தொட்டனைத்தூறும் மணற்கேணியைப் போலக் கற்றனைத்தூறும் பொருளாழமுடைத்தாய் மிளிர்தலின் திருக்குறள் பொருண்மொழியாதலில் பல்லாற்றுனும் முற்பட்டுத் திகழ்கின்றது. இவ்வுண்மையைச் செவ்வன் ஆராய்ந்தறிந்த பெரியாரிற் சிலர் "கடுகைத்துளைத் தேழ்கடலைப் புகட்டிக் குறுகத் தறித்த குறள்" என்று இத்திருக்குறளைப் புகழ்வாராயினர். பொருண்மொழியியல்புகளை யாராய்ந்தறிந்த மேனுட்டுப் புலவர்களும், பொருண்மொழிக்கண்வரும் பொருள் தத்தம் உள்ளத்தின்கண் முளைத்தெழுந்த பழுத்த எண்ணங்களாகவும், பரந்த உலகின்கண் நிலவும் சிறந்த பொருள்களைப் புலமையாற் கண்டு ஆராய்ந்து தெளிந்த முடிபுகளாகவும் இருத்தல் வேண்டுமென்பதும், அவை தாம் ஒருசில சொற்களாலாகிய சொற்றொடர்களாயும், ஆராயுந்தோறும் பயன்தருவனவாயுமிருத்தல்வேண்டுமென்றும் கூறிப்போந்துள்ளனர்.

---

* "பொய்யில் புலவன் பொருளுரை" (மணி-22. 61).

இங்ஙனம், சொற் சுருக்கமும் பொருட் பெருக்கமும் கொண்டு, தமிழ்மொழியின் சொல்வளத்தையும் மொழியாற்றலையும் விளக்கும் மேன்மையுடைமையால் இதனைக் கற்றவர்களும் மற்றவர்களும் பொன்னேபோற் போற்றுவாராயினர். அன்றியும், இதன் கண்ணுள்ள ஒள்ளிய கருத்துக்களைத்தொன்று தொட்டுப் பல தமிழ்ப் புலவரும் தத்தம் பாடலுக்கிடையே வேண்டுழி வேண்டுழி யெடுத்தாளுவாராயினர். அம்மட்டினும் அமையாது "முன்னோர் மொழிபொருளே அன்றியவர் மொழியும், பொன்னே போற்போற்று" வாரகித், "தெய்வந்தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள், பெய்யெனப் பெய்யும் (பெரு) மழை" யென்றவப், பொய்யில் புலவன் பொருளுரை * என்று சீத்தலைச்சாத்தனாரும், "சார்புணர்ந்து சார்புகெட வொழுகின்" 1 எனவும், "வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை" 2 எனவும், திருக்களிற்றுப்படியாருள் உய்யவந்ததேவரும், "தலைப்பட்டார் தீரத்துறந்தார் மயங்கி, வலைப்பட்டார் மற்றையவர்" 3 என நெஞ்சு விடுதூதில் கோற்றவன்குடி உமாபதி சிவாசாரியரும், "தொழுத கையினுள்ளும்...................படையுடனொடுங்கும்" † என்பது போலப் பலவிடங்களில் திருத்தக்க தேவரும், "அறை பறை யன்ன நீரார் அருமறைக் காவரோதான்" என்றாங்குப் பலவிடங்களிற் கம்பநாட்டாழ்வாரும் சொற்றொடர்களும் முழுச் செய்யுட்களுமாகிய மணிகளைக்கொண்டு தத்தம் நூலின்கண் வைத்திழைத்து அழகு செய்துக் கொள்ளுவாராயினர். பொதுவாகத் தமிழ் நூலாசிரியருள் அருட்பாவலரின் குறட்பாக்களையும், சொற்றொடர்களையும் சொற்களையும் கருத்துக்களையும் எடுத்தாளாதார் யாருமே யில்லையென்னலாம்.

இம்முறை பொருண்மொழியைப் பலவாறு எடுத்தாண்ட புலவர் பெருமக்களுள், தனக்கு நிகர் தானேயாய் தமிழகம் முழுதும் தன்பெயர் பரவத் தருக்கித் திரிந்த நல்லிசைப் புலவராகிய வில்லிபுத்தூரார் என்பாருமொருவர். அருந்தமிழ்ப் பெரும் புலவராகிய சனியூராசான் இயற்றியருளிய "பாரதம்"

---

* மணி. 22. 59-61. குறள் 65. † சீவக. 1891. குறள். 828.
1. குறள் 369. 2. குறள் 362. 3. குறள் 348.

என்னும் அரும்பெருந் தொடர்நிலைச் செய்யுளில், திருக்குறள் சொற்றொடர்களும், சொற்களும், கருத்துக்களும் அழகுற அமைக்கப் பெற்றுள்ள செய்யுட்கள் பலவுள. ஆயினும் அவற்றுள் எனது ஆராய்ச்சியிற் கண்ட சில செய்யுட்களை முதற்கண் எடுத்துக்காட்டி, பின்னர் ஏனைய நூல்களைப்பற்றி யாராய்ந்து கூறுவேன்.

திருதராட்டிரன் மக்களாகிய நூற்றுவரும், பாண்டு மக்களாகிய ஐவரும் கலையரங்கேறியஞான்று பாண்டுமக்களில்இடையவனும் கடைபோகா ஆற்றலும் வீரமும் படைத்தவனுமாகிய பார்த்தனும், துரியனுக்கு உயிர்த்தோழனான கன்னனும்தம்முள் மாறுபட்டாராக, அவ்வவையின்கண் அமர்ந்திருந்த கோதம முனிவன் "சூதன் மகனான கன்னன் அரசன் மகனான அருச்சுனனோடு எதிர்க்கத் தக்கவனல்லன்" எனப் பழிக்க, அது பொறாத சுயோதனன் கழறியதாகவரும்,

1 "கற்றவர்க்குங் கலனிறைந்த கன்னியர்க்கும் வண்மைகை,
யுற்றவர்க்கும் வீரரென் றுயர்ந்தவர்க்கும் வாழ்வுடை
கொற்றவர்க்கு முண்மையான கோதில்ஞான சரிதராம்
நற்றவர்க்கு மொன்றுசாதி நன்மைதிமை யில்லையால்"

என்னுஞ்செய்யுளில், "மேற்பிறந்தாராயினும் கல்லாதார் கீழ்ப் பிறந்தும், கற்றாரனைத்திலர்பாடு" * எனவரும் வள்ளுவர் வள்ளுரையின் கருத்து அமைந்து மிளிர்கின்றது. அன்றியும்,

2 "களர்நிலத்துப் பிறந்த உப்பினைச் சான்றோர், விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வர், கடைநிலத்தோ ராயினும் கற்றறிந் தோரைத், தலைநிலத்து வைக்கப்படும்" எனவரும் நாலடியார் கருத்தும் கொண்டுள்ளமை காண்க.

வஞ்சனைக்கு நிலைக்களனாய நெஞ்சினனாகிய திருதராட்டிரன் சமைத்துத் தந்த அரக்குக்கோயிலில் பாண்டவர் குடிபுக்கு வாழ்ந்து வருங்கால், அவர்கட்கு அம்மாளிகையைக் குறித்து ஐயமெழ, இஃதேதோ கைதவச்செயலெனத் தோற்றுகின்றது என்று தம்முட் கூறிக் கொண்டதாகவரும்,

---

1 வி-பாரதம். வாரணா. 68. * குறள் 409. 2 நாலடி 133.

3 "மெழுகி னனமக் காலயம் வகுத்ததும் விரகே
ஒழுகு கின்றநன் ஒழுக்கமும் வஞ்சனை யொழுக்கே
யெழுக டற்படை யாவையு மிவன்வழி யனலே
தொழுத கையுளும் படையுள சூழ்ச்சியும் பெரிதால்"

என்னும் பாவிலுள், 4 "தொழுதகையுள்ளும் படையொடுங்கு மொன்னார், அழுதகண்ணீரும் அனைத்து" என்ற பொருண் மொழியின் சொற்றொடரையும் கருத்தையும் பெய்துக் கொண்டனர்.

செய்தற்கரிய இராயசூய வேள்வியை யினிது செய்து முடித்தானாகலின் தருமனே இவ்வுலகிற் சிறந்து தலைமையெய்தி னானாக, அது பொறாத துச்சாதனன் என்பான் தன் முன்னோனை நோக்கிக் கூறியதாகவரும்,

1 "இனியவன் சின்னாட்செல்லி னெம்மனோர் வாழ்வுங்கொள்ளும்
துனைவரு புரவித்திண்டேர்த் துணைவருஞ் சூரரானோர்
முனைவரு கூர்முள்வேலை முளையிலே களையினல்லால்
நனிவர வயிர்த்தபோது நவியமுமடியு மன்றே"

என்னும் செய்யுளிலும், மகனுக்கிணங்கித் திருதராட்டிரன் தருமனாதியர்க்கு அழைப்புத் தாள்விட அதுகண்ட தருமன் அத்தன் ஆணையை மறுக்க அஞ்சி அத்தினாபுரம் செல்வான் ஒருப்பட்டுத் தம்பிமாரை யழைத்து அவர் தம் கருத்தை வெளி யிடுமாறுகூற, வீமன் அவனுக்கிணங்காது "அவரின் விலகியன்றி மருவிவாழ்தல் ஆகாது" எனக் கூறியதாக வரும்,

2 "முளையி லேயுயிர் கொல்வதோர் கடுவிட முற்றிவன் காழேறி விளையி லேதுசெய் யாதுமற் றவருடன் விழையுநண் பினிவேண் டா, வளையி லேதமே புரிந்துமேன் மலைந்திடும் வன்படை கொடு மோதிக், களையி லேநமக் கிருப்புள தென்றனன் காற்றருள் கூற்றன்னான்"

---

3 வாரண. 119. 4 குறள் 828. 1 சூது. 11. 2 ஷ 71.

என்னும் செய்யுளிலும், 3 "இளைதாக முண்மரம் கொல்ககளையு நர், கைகொல்லும் காழ்த்தவிடத்து" என்னும்பொருளுரையின் சொற்றொடர்களையும், கருத்தையும் வைத்திழைத்து அழ குறுத்தியுள்ளார். (தொடரும்.)

---

# சோழன் கரிகால் வளவன்.

(ஒரு சிறு நாடகம்.)

திரு. சிவ. குப்புசாமிப் பிள்ளையவர்கள்,
*தலைமையாசிரியர், கரந்தைத் தமிழ்ச்சங்கக் கல்லூரி, தஞ்சை.*

(முற்றொடர்ச்சி 360-ம் பக்கம் பார்க்க.)

## இயல் க,—காட்சி ச.

உறுப்பினர்:—1. காவலன் 2. இரும்பிடர்த்தலையார். 3. திருமாவளவன் 4. வீரர்கள்.

இடம்:—உறையூர் நெடுவீதி

பொழுது:—வைகறையாமம்

[சிறைக் காவலன் தாயத்தலைவனிடம் நடந்தன கூறச்செல்லுதல். தாயத்தலைவனை வெற்றிகொள இரும்பிடர்த்தலையார் தொடர்தல்]

காவலன் [ஓடிவந்து நிற்றல்] நல்லவேளை தப்பிப் பிழைத்தேன். மன்னர் மகன் இல்லையாயின் என் மண்டை இரண்டு பட்டிருக்கும். ஏதோ, எனது நல்வினைச் செயல்! அடேயப்பா இன்னேரம், சிறைச்சாலை வெந்துபோயிருக்கும். என்ன விரைவில் கொளுத்தினார்கள்! எங்கேபார்த்தாலும் அனற் கொழுந்தா? அரசர் குமாரரும், அவர் மாமனும் என்னஆகி யிருப்பார்கள்? ஒருவேளை, நெருப்பிலே....அகப்பட்டு—இல்லை

---

3 குறள் 889.

யில்லே! ஆற்றலுடையவர்களல்லவா?—என்னைப்போல தூங்கு மூஞ்சியா?—வெளியே வந்திருப்பார்கள்! [சுற்றிப் பார்த்து] ஆ! அதோ வந்துவிட்டார்களே. நான் ஓடிப்போய் தாயமக்கள் தலைவனிடம் சொல்லுகிறேன்.

[ஓடிமறைகிறன் அங்கு மாமனும் மருகனும் துணைவரோடு வருதல்]

இரும்பிடர்த்தலையார்:—வீரர்களே! வாருங்கள்: நாம் விரைந்து செல்லவேண்டும். நம் சிறுவன் உறைந்த சிறைச் சாலையைத் தீ மூட்டிய தாயமாக்கள் அனைவரையும் சிறை செய்ய வேண்டும். முதலில் அவரது யிருக்கையை முற்றுகை யிடுவோம். பின்னர் அவர்களை வளைத்துப் பிடித்து விலங்கிட்டுப் பிணிப்போம். [இரும்பிடர்த்தலையார் பின் யாவரும் செல்லல்]

காட்சி முடிபு.

---

இயல் க,—காட்சி ரு.

உறுப்பினர்:—1. தாயத்தலைவன். 2. அமைச்சன். 3. காவலன். 4. இரும்பிடர்த்தலையார். 5. திருமாவளவன். 6. வீரர்கள்.

இடம்:—சோழமன்னர் அத்தாணி மண்டபம்.

பொழுது:—காலைப்பொழுது.

[தாயத் தலைவனைச் சிறையிலிட்டுத் திருமாவளவனைக் கரிகால் வளவனுக்கி முடிசூட்டல்]

அமைச்சன்:—தாயப்பெரு மக்கள் தனித்தலைவ! வணக்கம். முன்னமேயே மன்னர் மகன் உறையும் சிறைக்கூடம் சென்று தீக்கொளுவச்சென்ற நமதுபடைஞர் இன்னும் திரும்பாமைக்கு உரியன தெரிந்திலதே! இரும்பிடர்த் தலையாரும் இதுவரையில் எங்கேயோ ஒளித்துக்கொண்டு இருந்தவர், இதுபோது நம் நகர்ப்புறத்தில் தோன்றியுள்ளார். அவர் துணைவர்களாக, ஐந்நூற்றுவர்க்கு மிகுந்த, படைக்கருவி தாங்கிய வீரர்களும் அவரைச் சூழ்ந்துள்ளார்கள் என்று நம்புதற்குரிய செய்தி கிட்டுகிறது.

தாயத்தலைவன்:—அமைச்ச! அதனால் நீ, அஞ்சுகின்றாயோ? நன்று! நன்று! தாயமுறையில் இத்தரணியை ஆளும் பேற்றை, யான் பெறவில்லையா? நம் துணைவர்களும், அவர்கள் படைகளும் இங்கு யிருந்தவரையில் அவன் தலைமறைந்து யிருந்தனன்போலும்; பேதை! அவன் வீரனாயின், அவனது மருகனைச் சிறைப் பற்றிய அன்றல்லவோ நம்முடன் பொருத முன்னுறவேண்டும். வீரங்கெட்டவன். இவனால் என்ன ஆகும்? நம் துணைவர் படை நம்மைவிட்டுச் சென்றதால் நமக்குப் படைவலி குறைந்தது என்று எண்ணினான்போலும் அம்மதியிலி. அவனது ஐந்நூறு ஆட்களும் இங்கு என்னசெய்ய இயலும்? நம்படைஞர்கள் முன் அவர்கள் பஞ்சுபடும்பாட்டைப் பெற மாட்டார்களா?

அமைச்சன்:—பெருந்தகையே! மன்னித்தருள வேண்டும். எனக்குத்தெரிந்த சிலவற்றை தங்கள்பால்தர, அருள வேண்டுகிறேன்.

தாயத்தலைவன்:—[சற்று சினத்துடன்] என்ன நீவிர் அறிந்திருக்கின்றீர்?

அமைச்சன்:—பெரும! நாம் இரும்பிடர்த்தலையாரைப்பற்றி அவ்வளவு எளிதாகக் கருதிவிடக்கூடாது. மன்னன் இளஞ்சேட்சென்னியின் தலைமையில் அவர் வெற்றிகொண்ட போர்கள் மிகப் பலவாகும். தன் வலிமை குறைந்துள்ளது என்று கருதிய நாட்களில் தலைமறைந்து திரிந்து, இதுபோது அவர் வெளி வந்து உலவுவதை நோக்கின் தனது வலிமையைப் பெருக்கிக் கொண்டுள்ளார் போலும். இவர் தன்னளவில் ஒரு பெரும் வீரனாக விளங்குவதோடு அமையாது, நெஞ்சு படபடக்க அஞ்சும் தன்மையரையும் அடுபோர்ப் படைஞராக ஆக்கவும் வல்லவர். ஆதலால் ஐந்நூற்றுவரோடு கூடி தோன்றியுள்ளார் என்றால் அதனால் விளையும் அல்லல்கள்தான் என்னென்னவோ?

[காவலன் ஓடிவந்து நின்று வாய்மூடியவண்ணமாக வணங்குதல்.]

தாயத்தலைவன்:—யாரடா அவன்? காவலனா? என்ன செய்தி கொண்டு வந்தாய்?

காவலன்:—[படபடப்புடன்] எங்கள் தலைவ! என்னசொல்வேன்? நான் தப்பி வந்ததே ஒரு பெருஞ் செயலாகும்.

தாயத்தலைவன்:—என்னடா கூறுகின்ருய்? மடையா! எங்கேடா தப்பினுய்? நின்னை யார் என்னடா செய்தார்கள்?

காவலன்:—நாயக! நான் சிறைக்கோட்டத்தைக் காவல் புரிந்துகொண்டிருந்தேன், நான் என்ன சொல்லப்போகின்றேன். ஐயோ எனக்கு அச்சமாக இருக்கிறதே.

தாயத்தலைவன்:—என்னடா அச்சம் சொல்லடா ?

காவலன்:—எவர் வைத்த கொள்ளியோ....இந்நேரம் சாம்பலாய் போயிருக்கும்.

தாயத்தலைவன்:—அஃ அஃ அஃக! [நகைத்தல்] அடே! சிறைச்சாலை தீயால் வெந்துபோய் விட்டதென்றுதானேடா சொல்லுகிருய் !

காவலன்:—ஆம் பெரும.

தாயத்தலைவன்:—அது தொலையட்டுமடா. சிறைச்சாலை வெந்துபோனுல் வேறொன்று அமைத்துக்கொள்ளலாம். அஞ்சாதே! ஆமாம், அதிலிருந்த திருமாவளவன் இந்நேரம் வெந்து, பொசுங்கிப் பொடியாய்ப் போயிருப்பானல்லவா?

காவலன்:—அந்த நெருப்புக்கு அவர் போய்த்தானிருக்க வேண்டும். ஆனுல்....

தாயத்தலைவன்:—பின்னர் என்னடா ஆனுல் ?

காவலன்:—அதற்குள் பழைய அரசர் மைத்துனர்—இரும்பிடர்த்தலையார் உள்ளே நுழைந்து, சிறையை உடைத்து, அவரை வெளியே கொண்டுவந்துவிட்டார்.

தாயத்தலைவன்:—ஆ! கெட்டேன்! கெட்டேன்! அத்திருட்டுத் திருமாவளவன் வெளியே வந்துவிட்டானு? அமைச்ச! நீ கூறியன யாவும் உண்மையாய் முடிந்தன. நன்று. இருக்கட்டும். நாம் விரைவில் நம் படையைத் திட்டஞ்செய்து, அவர்களை எதிர்த்து இன்றே கொல்ல வேண்டும். அமைச்ச! படையைத்

திட்டம் செய்யும். நான் இதோ சென்று போர்க்கோலம் பூண்டு வருகின்றேன்.

[இருக்கை விட்டு எழுந்து விரைந்து அடிவைத்தல். இரும்பிடர்த்தலையார் திருமாவளவனும் படைகளும் சூழ உள் நுழைதல்.]

ஆ! திருமாவளவன்!! திருமாவளவன்!!!

இரும்பிடர்த்தலையார்:—[விரைந்து தாயத்தலைவனைப்பற்றி பின்புறம் கட்ட அவன் திகைப்புற்று நிற்றல்]

நன் மதிகெட்ட நாட்டின் வஞ்சக! எங்கே செல்லுகின்றாய்? யாங்கள் அறியாதவாறு இச்சிறுவனை முதலில் இவ்வுறந்தையி னின்றும் அகற்றிப், பின்னர் வந்தவனைச் சிறையிலடைத்து வாட்டியதோடும் நில்லாது, அவனை உயிருடன் கொல்ல தீமூட்டியவனு நீ? ஏ! கொடிய! ஒரு சிறு புறவின்பொருட்டு அதன் எடையுள்ள தசையைத் தன் தொடையிலிருந்து அறுத்துத்தந்த பெருமைசால் சோழமன்னன் வீற்றிருந்த அரியணைமீது, தன் மக்கள் யாவரும் ஒருங்கே மனம் வருந்த அவர்களை நாளும் வருத்தித் தீத்தொழில் புரிந்து, பாலொடு அடிசில் உண்டு, பஞ்சணையில் துயின்று மகிழ்ந்த, ஏ! பழிகார! நீ அரியணை ஏறுதற்குத் தகுந்தவனோ? [முதல் படைவீரனை நோக்கி] கூடல்வீர! இந்நாயினைச் சங்கிலியால் பிணைத்துச் சிறை கொண்டு சென்று அடைப்பாய். [அமைச்சனை நோக்கி] அறிவு கெட்ட அமைச்ச! நீயல்லவோ அவனுக்கு உற்றவனாக யிருந்து இவ்வாறு உதவினாய். [இரண்டாம் படை வீரனைப் பார்த்து] வஞ்சிக்கொண்டான்! இவனையும் அவருடன் இணைத்துச் செல்.

[தாயத்தலைவனும் அமைச்சனும் பிணிக்கப் பெற்று சிறைக்குக் கொண்டு செல்லப் பெறுதல்]

இரும்பிடர்த்லையார்:—[திருமாவளவனை நோக்கி] ஏ! மன்னர் மகனே! நீ இன்றே இந்நாட்டிற்கு மன்னனானாய்! நீ சிறையில் எழுந்த தீயினின்றும் தப்ப முயன்று, சிறைமதிலைத்தாவி, வெளி வந்தபோது நின்கால் சிறிது கரிந்து போயிருப்பதாலும், நின் கால் கரிந்த அன்றே நினது பகைவரும் ஒழிந்தனர் ஆதலாலும்

பகைவர் கவர்ந்த நின் வளமிக்க நாடும் இன்று நின் கால் கரிந்த வழியில் நீ மறுபடியும் வாகைசூடிப் பெறுதற்கு அமைந்ததாலும் இன்றுமுதல் நின்பெயர் திருமாவளவன் என்பதோடு கரிகால் வளவன் என்பதாகுக. [மற்றவர்களை நோக்கி] பெருமக்களே! நாம் இன்றுமுதல் நம் மன்னனை, கரிகால் வளவன் என்றே கூறுவோம். கரியால் தந்த ஆட்சியைப் பெற்ற நம் கரிகால் வளவன் வாழ்க! [பெருமக்கள்:—வாழ்கவே!] தாயமாக்களைத் தகைந்து தனியாட்சிப் பெற்ற நம்தலைவன் வாழ்க!! [பெருமக்கள்:—வாழ்கவே!!] அகிலம் களிகூற அரசு கட்டில் ஏறிய நம் அரசன் வாழ்க!!! [பெருமக்கள்:—வாழ்கவே!!!]

காட்சி முடிவு.

இயல் க. முற்றும்.

---

# வீரசோழிய உரையாசிரியர் காலம்

E. R. நரசிம்ம அய்யங்காரவர்கள், B.A., B.L., சேலம்.

ஆக்குவித்தோன் பெயரெய்திய நூல்களில் வீரசோழியமும் ஒன்றாகும். இந்நூலை இயற்றியவர் புத்தமித்திரனார் என்னும் புலவராகும். இவ்வாசிரியர் வீரராசேந்திரன் என்னும் தமது மன்னன் மறுபெயராகிய வீரசோழன் என்னும் நாமத்தை தமது நூலுக்கு மகுடமாகச் சூட்டி வீரசோழியமெனப் பெயரிட்டார். இவ்வரசன் கி. பி. 1062ம் ஆண்டு முதல் 1070ம் ஆண்டு வரை செங்கோல் செலுத்தினன். இந்நூலுக்கு பெருந்தேவனார் என்னும் பெருந்தகையார் உரைசெய்தார். கம்பர் காலத்தையும், யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை முதலிய நூல்களின் காலத்தையும், ஆராய்ச்சி செய்பவரும் இவ்வுரையாசிரியர் காலத்தை அடிப்படையாகக்கொண்டு தமது முடிபுரைத்தார்கள். இவ்வறிஞரனைவரும் வீரசோழிய வாசிரியருக்கு உரையாசிரியர் மாணாக்கராதல் வேண்டுமென்று கொண்

டார்கள். இவ்வறிஞர்கள் வீரசோழியம் பதிப்பாசிரியர் கருத்தையே பின்பற்றினரெனினும் தமது முடிபுக்கு வேறு காரணங்களும் கூறியுள்ளார். "ஞானபோதினி' என்னும் பத்திரிகை வாயிலாக வெளிவந்து "செந்தமிழ்" 7ம் தொகுப்பிலும் பதிப்பிக்கப்பட்ட அணி இலக்கண வாராய்ச்சியில் வீரசோழிய வுரை எட்டாரைச்சக்கர உதாரணத்தில் வந்துள்ள காவேரி வல்லவன், கரிகால கன்னன் முதலிய பெயர்கள் வீரராசேந்திரனைக் குறிக்குமென்று ஓர் ஆதரவுமின்றி திரு. குருராயரவர்கள் கூறினர். வீரசோழிய வுரையாசிரியர் புத்தமித்திரனர் காலத்திற்குப் பிற்பட்ட நூல்களிலொன்றையும் ஆட்சி புரியவில்லை யென்று மற்றொரு காரணமுங் காட்டி இவ்வுரையாசிரியர் காலம் 11ம் நூற்றாண்டென்று திரு. மு. இராகவையங்காரவர்களும் கூறியுள்ளார். தண்டியலங்காரத்தின் சிறப்புப்பாயிரமும் களவியற்காரிகையும் காரிகை நூலைக்குறித்த சாசனங்களும் வெளிப்பட்டபின்னர் இவ்வறிஞர்கள் முடிபையேற்றுக்கொள்வது பிழையின்பாற்படு மென்பதை ஈண்டுக் கூறலுற்றேன்.

வீரராசேந்திரன் காலத்திற்குமுன் பயிலப்பட்டு வந்த அவிநயம், யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை முதலிய நூல்களினும், வீரசோழியம் எத்துணையினும் சிறந்ததன்றென்பது ஒருதலை. தலைவி கூற்றுக்குரிய சூத்திரம் எழுதுவோரால் வீழ்ந்ததென்று இளம்பூரணவடிகள் கூறியிருப்பது அகத்திய நூல் கடல்கோளாலழிந்ததென்று கூறுவார் கூற்றை யொக்குமெனினும், தொல்காப்பியத்தைப் பயில்வோர் சிலராவரெனக் கோடல் பொருத்த முடைத்தாகும். சிறந்த நூலின் நிலையே இத்தகையதாக விருந்ததெனின் வீரசோழியம் புலவரால் புறக்கணிக்கப்பட்டதென்பது கூறாமலே விளங்கும். வெண்பாப் பாட்டியல் உரைகாரர் ஆக்கியோன் பெயரெய்திய நூல்களுக்குதாரணம் கூறுமிடத்துத் தொல்காப்பியம், அவிநயம், கல்லாடம் எனக் காட்டினரே யன்றி வீரசோழியத்தைக் கூறாது விடுத்தது போதிய சான்றாகும். "பழையன கழிதலும் புதியனபுகுதலும்" என்னும் விதி இலக்கண வரலாற்றுக்கும்

அமையுமென்றூலும் புலவரால் மதிக்கப்படாத புதியநூல்கள் காலக்கடலை நீந்துவதரிதாகும். போற்றுவாரின்றி யிருந்த நூலுக்குப் பெருந்தேவனர் உரையியற்றிப் புத்துயிர்கொடுத்தா ரெனக் கூறுதல் வழுவாகாது.

இலக்கண நூலுக்குரையியற்றும் ஆசிரியர்கள், மாணக்கர் எளிதிலுணருமாறு தமக்கு முந்திய வாசிரியர்கள் ஆட்சிபுரிந்த உதாரணங்களையே காட்டித் தமது மதவுடம்பாட்டைத் தெரிவிப்பதும், மதம் வேற்றுமைகொள்ளுமிடத்துப் பிற வுதாரணங்களைக் காட்டுவதும், ஆசிரியர்கள் தொன்றுதொட்டு அனுட்டித்துவரும் வழக்காகும். தண்டியலங்காரவுரை, யாப்பருங்கலக் காரிகையுரை, வீரசோழியவுரையாகிய இந்நூல்களில் கூறப்பட்ட உதாரணங்கள் ஒத்துளவாதலின் இவ்வுரையாசிரியர்கள் இவ்வழக்கை அனுசரித்தார்கள் என்பது புலனுதலால் இவ்வுரையாசிரியர்கள் காலக்கிரமத்தை யறிதல் எளிதாகும். முற்கூறிய வாராய்ச்சியாளர்கள் இம்முறையில் ஆராயவில்லையெனத் தோன்றுவதால் அவர்களது முடிபு பிழையுடையதாகும். இவ்வுரையாசிரியர்களில் எவ்வாசிரியர் முந்தியதென்பது ஆராய்வாம்.

" அதுவே,
அடையும் பொருளும் அயல்பட மொழிதலும்
அடையும் பொதுவாகி யாங்ஙன மொழிதலும்
விரவத் தொடுத்தலும் விபரீதப் படுத்தலும்
எனநால் வகையினு மியலுமென்ப".

இது தண்டியலங்கார வாசிரியர் கூறிய ஒட்டணிச் சூத்திரமாகும். இவ்வணியை வீரசோழிய வாசிரியர் சுருக்கணி யென்பர். வீரசோழியம் 2ம் சூத்திரவுரையில் "அது அடையும் பொருளும் அயல்பட மொழிதலும் அடைபொதுவாக்கி வேறுபட மொழிதலும், அடை விரவி வேறுபட மொழிதலும், அடை விபரீதப்பட்டு வேறுபட மொழிதலும் என நான்குவகையான் வரும்" எனத் தண்டியலங்காரச் சூத்திரத்தை உரைநடையாக வரைந்தனர். தண்டியலங்கார வுரையிற்கூறப்பட்ட உதாரணங்களையும் வீரசோழிய உரைகாரர் ஆட்சிபுரிந்தார். மற்றும்

தண்டியலங்கார வுரையில் தொழிலதிசயத்திற்குக் காட்டப் பட்ட,

"ஆளுங் கரியும் பரியுஞ் சொரிகுருதி
தோளுந் தலையுஞ் சுழித்தெறிந்து—நீள் குடையும்
வள்வார் முரசு மறிதிறைமேற் கொண்டொழுக
வெள்வா ளுறைகழித்தான் வேந்து" என்னும்.

வெண்பாவை வீரசோழிய வுரைகாரர் துணிவதிசயத்திற்குக் காட்டி "இதனைத்தொழிலதிசய மென்பாருமுளர்," என்றார். இங்குத்தண்டியலங்கார வுரையாசிரியரைப் பின்பற்றியும் மறுத்துமிழிப்பதால் வீரசோழிய வுரைகாரர் முற்கூறிய வாசிரியருக்குப் பிற்பட்டவராகல் வேண்டுமென்பது போதரும்.

இனித் தண்டியலங்கார வுரையாசிரியர் காலத்தை ஆராயக் "கண்டனலங்காரம்" என்னும் நூல் வழிகாட்டியாகும். "கலா நிலயம்" என்னும் பத்திரிகை வாயிலாக வெளிவந்துள்ள "களவியற்காரிகை" என்னும் புனைபெயருடைய நூலில் கண்டனலங்காரம் என்னும் நூல் மேற்கோளாகக் காட்டப்பட் பட்டுளது. இந்நூலினைச் சார்ந்த,

"ஊசல் தொழிலிழக்கும் ஒப்பும் மயிலிழக்கும்
வாசஞ் சுனையிழக்கும் வள்ளலே—தேசு
பொழிலிழக்கு நாளையெம் பூங்குழலி நீங்க
எழிலிழக்கு மந்தோ விவண்" என்னும்

வெண்பா இரங்கல் விலக்குக்கு உதாரணமாக தண்டியலங்கார வுரையிலும், வீரசோழி வுரையிலும் காணப்படுகிறது. கண்ட னலங்காரம் மற்றிருவுரைகளுக்கும் முற்பட்டதென்பது வெளிப் படை. எனவே கண்டனலங்காரமும், தண்டியலங்காரமும் அதன் உரையும், வீரசோழிய வுரையுமாகிய இம்மூன்று நூல்களும் முதல், இடை, கடை யென்னும் காலக்கிரமமாதல் தெற்றென விளங்குதல் காண்க.

கண்டனலங்கார நூலின் காலத்தை யதன் அகச்சான்று களே விளக்குமாதலான், களவியற் காரிகையில் மேற்கோளாகக் காணப்படும் செய்யுள்களில் மூன்றை ஈண்டுக் காட்டுவாம்.

குழைமுகத்தாற் கொங்கை மலைபு மருங்கால்
விழியரிய நாட்டத்தால் வென்ற—பொழிலெல்லாம்
புல்லார்ப் புறங்கண்ட கண்டன் புகாரனைய
நல்லாளே யாகும் நமக்கு''
''பண்சிலம்ப வண்டாடும் பைந்தார்ச் சகநாதன்
வண்சிலம்பிற் கூடல் வளைந்தாலும்—தண்சிலம்ப
மான்பாயும் வேங்கையிலும் மாறு தலைத்திடுமித்
தேன்பாயும் வேங்கை சிவந்து''
சீத விரைக்கனகச் செந்தா மரைப்பொகுட்டு
மாதனையீ ரம்பொடு வந்ததோ—சோதிப்
பொருதாரை வேற் கண்டன் பூபால தீபன்
கருதாரி லிங்கோர் களிறு''

இக் கண்டனலங்காரம் ஓர் கோவை நூலாதலின், பாட்டுடைத் தலைவன தியற்பெயர் கூறப்படாதென்ற விதியால், கண்டன், சகநாதன், தீபன் எனச் சிறப்பிக்கப்பட்ட பெயர்கள் காரணப் பெயர்களாகும். இப்பெயர்களில் கண்டன் என்னும் பெயரையே சிறப்பாகக் கொண்டு நூலுக்கும் ஆசிரியர் வழங்கினர். இக் கண்டன் புகாருக்குரியவன் என்பதும் விளங்குகிறது. இராசராசன் II இங்குக் கூறப்பட்ட பட்டங்களை வகித் திருந்தானென்பது:—

அடல் திகிரிக்
கன்னன் கனகள்வன் கண்டன் கதிரோனுந்
தன்னொன் கவிகைச் சகநாதன்
என இராசராசன் உலாவில் (756)

கண்டன், சகநாதன் எனவும்,
''குலநேடி ரவிபோல வலநேமி தனிகோலு குலதீபனே'' எனவும்
''குலதீபனெழுதீவு முடனாளவே'' எனவும், தக்க யாகப்பரணி 2, 4 கண்ணிகளில், தீபன் எனவும் சிறப்பிக்கப்பட்டிருத்த லால் விளங்கும். இவ்விராசராசன் புகாரை வாசத்தலமாகக் கொண்டு வீற்றிருந்தானென்பது:—

''கூடற்,
பெரும்பெருமா ளெவ்வேந்து முன்போதப் பின்பு
வரும் பெருமாள் வந்தனர் பாரீர்'' எனவும்,

(இங்கு கூடல் என்பது புகாரை)

"தென்மாடக் கூடற் சிறைமீட்ட கார் புகார்ப்

பொன்மாட வீதிப் பொடியடக்க" எனவும், இராசராசனுலாவில் கூறப்பட்டிருத்தலினாலும், தக்கயாகப்பரணிப் பதிப்பாசிரியர் குறிப்புரையாலும் புலப்படும். எனவே கண்டனலங்காரத்தில் சிறப்பிக்கப்பட்டவன் 2ம் இராசராசசோழன் என்பது விளங்குதல் காண்க. இம்மன்னன் கி. பி. 1146 முதல் 1163 வரையில் அரியணையில் வீற்றிருந்தான். எனவே கண்டனலங்காரம் 12ம் நூற்றாண்டினிடையில் இயற்றப்பட்டதாகும். 2ம் இராசராசன் தந்தை, மூதாதை முதலியயோரை அபயன், அகளங்கன், அநபாயன் என முன்னிலைப்படுத்தித் தண்டியலங்காரத்தில் காணப்படும் செய்யுட்களும் கண்டனலங்காரத்தைச் சார்ந்தவையாகுமென்று "களவியற்காரிகை" பதிப்பாசிரியர் கருதுவதும் பொருத்தமுடைத்தாகும். முற்கூறிய "சீதவிரைக்கனகச் செந்தாமரை" என்னும் முதலையுடைய கண்டனலங்காரச் செய்யுளை மேற்கோளாக நாற்கவிராச நம்பியகப்பொருளில் வந்துளது காண்க. (கெடுதிலினுதல் சூ 140 உரை) மற்றும்,

"கம்ப மதயானைக் கண்டன் கடற்றோன்றிக்
கொம்பர் விழிக்குவமை கூறுவதே—னம்பு
கரிநீலஞ் செங்குவளை காலன் வேலாலம்
பெருநீர்மை தோற்றழிந்த பின்" என்னும் செய்யுளும்

(இவ்வாசிரியர் தலைமகளவயம் சாற்றற்கருமை காட்டியிருப்பது) கண்டனலங்காரத்தை சார்ந்ததென்னலாம். நாற்கவிராச நம்பி நூலியற்றி உரையும் செய்து பாண்டியன் குலசேகரன் (கி. பி. 1162—1180) அவையில் அரங்கேற்றினாரெனச் சிறப்புப்பாயிரத்தால் விளங்கும். எனவே கண்டனலங்கார நூல் வீரசோழியவுரைகாரர் தண்டியலங்கார வுரைகாரரன்றி நாற் நாற்கவிராச நம்பியாலும் நன்குமதிக்கப்பட்டதென்பது தெளிவாம். (தொடரும்.)



# சிலசொற்களின் பொருள்கள்.

திரு. வே. வேங்கடராசலு ரெட்டியார் அவர்கள்,
தமிழ்ப்போராசிரியர், சென்னைப் பல்கலைக்கழகம்.

முற்றொடர்ச்சி துணர் 10. மலர் 4. பக்கம் 183.

மன்று

மன்று என்னுஞ்சொல் மன் என்பதனடியிற் றோன்றியது என்று 'தமிழ்லெக்ஸிக'னில் குறிக்கப்பட்டுளது. மன் என்னுஞ் சொல்லின் பொருள்களுள் 'நிலைபெறுதல்' என்னும் பொருளையே இவ்வகராதி மேற்கொண்டிருக்கலாம் எனத் தோன்றுகின்றது. ஆயின், மன்று என்பது நிலைபெறுதலை யுடையது என்னும் பொருளினதாகும். இப்பொருள் சிறவாமையின், மன்று என்பதுமன் என்பதனடியாகப் பிறந்தது என்றல் அமைவுடையதாகத் தோன்றவில்லை.

பண்டைச் செய்யுட்களில் மன்று என்னுஞ் சொல் வருமிடங்களை நோக்கின், அது, யாதேனும் ஒருமரத்தின் அடியிடத்தது* என்னும் பொருள் புலனாகும்.

'இரத்தி நீடிய அகன்றலை மன்றத்து' (புறம். 34.)

'மன்றப் பலவின் மாச்சினை' (புறம். 128.)

'மன்ற வேம்பின் ஒண்குழை' (புறம். 79.)

'மன்ற விளவின் மனைவீழ் வெள்ளில்' (புறம். 181.)

'மன்றத்துப் புன்னை போல' (அப்பர் தேவாரம் 1. 27. 8.)

என்பவற்றில், மன்றினைக் கூறியவழி யாதேனுமொரு மரத்தினைக் கூறியிருத்தல் அறியத்தக்கது.

---

* மன்றம் என்பதற்கு, 'ஊர்க்கு நடுவாய் எல்லாரும் இருக்கும் மரத்தடி' (முருகாற். 226) என்று நச்சினார்க்கினியர் எழுதியிருப்பது அறியத்தகும்.

50

இனி, மன்று என்பது மரனை யுடையது என்றும் பொருள் தருதல் யாங்கனம் என்று ஆழ்ந்து நோக்கின், அச்சொல்லின் உண்மைவடிவம் **மார்ன்று** (மார்ன் + து) என்பதாகும் என அறிதல் கூடும். **மார்ன்** என்பது இடையே அகரவுயிர் தோன்றப்பெற்று **மரன்** என்று வழங்கலாயிற்று. இவ்வாறே சொற்களின் இடையில் அகரம் முதலிய உயிரெழுத்துக்கள் தோன்றிநிற்றல் உண்டு.

வண்மை (வள் + மை)—வளமை
அண்மை —அணிமை
வன்மை (வல் + மை) —வலிமை
இன்பு —இனிப்பு
என்பு (எல் + ன் + பு)—எலும்பு
கட்டல் (கள் + தல்) —களைதல்

என்பவற்றில் அகரம் முதலிய உயிர்கள் தோன்றி நிற்றல் காண்க. இவ்வழக்கு, தெலுங்குமொழியில் பெரிதும் காணப்படும். இனி,

தழீஇ (தழ் + இ) —தழுவி
வழீஇ (வழ் + இ) —வழுவி
மரீஇ (மர் + இ) —மருவி
வெரீஇ (வெர் + இ) —வெருவி

என்பவற்றை நோக்கின், பண்டைத் தமிழில் தனிக்குறிலையடுத்தும் ரகர ழகர மெய்யெழுத்துக்கள் நின்று வழங்கினமை புலனாகும். பொழுது, கழுதை என்பனபோல (தனிக்குறிலையடுத்து) உகரத்தோடு வழங்குஞ் சொற்கள் பழங் கன்னடத்திலும் உகரமின்றி மெய்யெழுத்தனவாய் வழங்குதலை நோக்கின் இவ்வுண்மை வலியுறும்.

| தமிழ் | பழங்கன்னடம் | தெலுங்கு |
|---|---|---|
| பொழுது | பொழ்து | பொர்து 1 |
| கழுதை | கழ்தெ | காட்தெ 2 |
| கொழுவு | கொர்வு 1 | கொர்வு 1 |

1. ழகாரத்திற்குமாறாக ரகாரம் உளது.
2. ழகாரம் டகாரமாய்த் திரிந்துளது.

| | | |
|---|---|---|
| பருத்தி | பழ்தி 3 | பர்தி |

என்று வருதல் காண்க. இனி, தமிழிலும் திரிதர்கின்றேன், உழிதர்கின்றேன், ஓர்நாள் என்பனபோல் பவற்றில் ரகரமெய் தனிக்குறிலையடுத்து வந்திருத்தல் காண்க. இவற்றால், மரன் என்பதன் தொல்வடிவம் மர்ன் என்பதாதல் உணரப்படும். ஆதலின், மர்ன்று என்பது, ரகரமெய்கெட, மன்று என்று மருவிற்று என்றல் அமைவுடையதாதல் கூடும். இனி,

| தமிழ் | பழங்கன்னடம் | தெலுங்கு |
|---|---|---|
| மருந்து | மர்து | மந்து |
| விருந்து | பிர்து | விந்து |
| பொருந்து | பொர்து | பொந்து |
| திருத்து | திர்து | தித்து |
| செருப்பு | கெர்பு | செப்பு |

என்பவற்றுள், தமிழ்ச்சொற்களில் ரகரமெய், உகரம் பெற்றிருத்தலும், கன்னடச் சொற்களில் ரகரமெய் உகரம்பெறு திருத்தலும், தெலுங்குச் சொற்களில் ரகர மெய்யே இல்லாமையும் நோக்கின், தமிழில் மருந்து விருந்து என்பனபோல வழங்குஞ்சொற்கள் பண்டைக் காலத்தில் மர்ந்து விர்ந்து என்பன போல வழங்கியிருத்தல் வேண்டும் என்றும் அவற்றிலுள்ள ரகரமெய் கெட்டு, மந்து விந்து என்பன போலத் தெலுங்கில் வழங்கின என்றும் உய்த்துணர்தல் கூடும். இவ்வாறு ரகரமெய் கெட்டு வழங்குஞ் சொற்கள் தமிழிலும் உளளன. அவற்றை நோக்குவோம்.

தா, வா, என்று வழங்குஞ் சொற்கள்,

| | | | |
|---|---|---|---|
| தரல் | வரல் | தருவது | வருவது |
| தரவு | வரவு | தருகை | வருகை |
| தருதல் | வருதல் | | |

---

3. ரகாரத்திற்கு மாறாக ழகாரம் உளது. இவ்வாறே அருந்தி என்பது அழ்தி என்று வழங்குகின்றது. அழ்தி என்பதுவே சரியானது என்றும் அதனை அர்தி (அருத்தி) என்று வழங்குதல் தவறானதே என்றும் கன்னட இலக்கண நூல் கூறுகின்றது.

என்று தொழிற் பெயர்களிலும்,

| | | | |
|---|---|---|---|
| தருகின்றான் | வருகின்றான் | தருகின்றேன் | வருகின்றேன் |
| தருகின்றாள் | வருகின்றாள் | தருகின்றோம் | வருகின்றோம் |
| தருகின்றார் | வருகின்றார் | தருகின்றாய் | வருகின்றாய் |
| தருகின்றது | வருகின்றது | தருகின்றீர் | வருகின்றீர் |
| தருகின்றன | வருகின்றன | | |

என்று நிகழ்கால வினைமுற்றுக்களிலும்,

தருவான் வருவான்

முதலியனவாய் எதிர்கால வினைமுற்றுக்களிலும்,

தரும் வரும்

என்று செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்றிலும்

தருக வருக

என்று வியங்கோள் வினை முற்றிலும்,

தர வர தரின் வரின்

என்று வினையெச்சங்களிலும்

தாரான் வாரான் தாராமல் வாராமல்

தாராத வாராத தாராக்கால் வாராக்கால்

என்று எதிர்மறை வினைகளிலும் ரகரத்தோடு கூடியிருத்தலின்,

தந்தான் வந்தான்

என்பனபோன்ற இறந்தகால வினையில்மட்டும் ரகரமெய் கெட்டுளது என்பது எளிதின் அறியப்படுமன்றே. தரீஇ (தந்து) என்னும் பண்டைக்காலத்துச் சொல்லை நோக்கின், இறந்தகால வினைக்கண்ணும் ரகரமெய் கெடாதிருந்தமை புலனாகும். தர்ந்தான், வர்ந்தான் என்பவற்றில் மெல்லெழுத்தும் வல்லெழுத்தும் இணைந்து வந்தமையின் ரகரமெய் கெட்டது எனக்கொள்க. இனி, தா, வா, என்னும் பகுதிகள் கன்னடமொழியில் தர், பர், (வர்) என்று காண்டலானும், வா என்பது தெலுங்கில் ரா (வா) என்று வழங்குதலானும் இப்பகுதிகளும் பண்டைக் காலத்தில் ரகரமெய்யோடு வழங்கின என்பது உணரப்படும். தந்து, வந்து என்பனபோல ரகரம்கெட்டு வழங்குஞ் சொற்கள் இன்னுஞ் சில உள்ளன. அவற்றை வேறொரு கட்டுரையில் விரித்தெழுத எண்ணியுளேன்.

இதுகாறும் கூறியவற்றால், மரன்று (மரன்+து) என்னுஞ் சொல், ரகரமெய் கெட்டு, மன்று என்றாதல் கூடும் என்பது அறியப்படும். ஆகலின் மன்று என்பது மரனையுடையது, மரனிடத்து என்னும் பொருளினதாதல் புலனாகும். மன்றில் (மரனடியில்) முதியரும் செல்வரும் கூடி, வழக்குத் தீர்த்தல் இயல்பாயிருந்தமையின்,* மன்று என்பது நீதித்தலம் என்னும் பொருளில் வழங்குவதாயிற்று. மரத்தினடியில் மக்கள் இனிதிருத்தற்பொருட்டு ஆங்குத் திண்ணை கட்டுதலும் † உண்டு. ஆயின் அதற்குக் கூரைவேய்தல் இல்லை. ‡ கூரைவேயப்படின், அது, பொதியில் (பொதிந்தஇல்) என்று வழங்கப்படும். மன்றும் பொதுவிடமே; பொதியிலும் பொதுவிடமே, அவற்றின் வேறுபாடு கூரையின்மையும் உடைமையுமே.

மேற்கூறியவற்றால், மன்று என்னுஞ் சொல்லின் உண்மை வடிவமும், அதன் பொருளும் புலனாதல் கூடும். மன்று என்னுஞ் சொல்லே சங்க நூல்களிற் காணுதலின், அதன் தொல் வடிவம் மாறியது நெடுங்காலத்தின் முன்னரேயாகும். ஆகலின், 'மன்ற வேம்பு' முதலிய இடங்களில், மன்று என்பதன்பொருள் அமைவுறுதல் இல்லை என்று அறிந்து கொள்க.

மாந்தர்

மாந்தர் என்பது உயர்திணைப் பலர்பாற் சொல். இது,

'மாந்தர் மக்கள் என்னும் பெயரும்' (சொல் பெயர் 9)

என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தாலும் அறியப்படும். இச் சொல், ஆண்பாலார் பலரைக் குறிப்பதுவோ, பெண்பாலார் பலரைக் குறிப்பதுவோ, அன்றி அவ்விருபாலரையும் பொதுவாகக் குறிப்பதுவோ என்று நோக்குவோம்.

'மகளிர்தோள் சேர்ந்த மாந்தர் துயர்கூற நீத்தலும்'

(நெய்தல். 28)

---

* இன்றும் சிறியவூர்களில் இவ்வாறு நடைபெறுகின்றது.

† இத்தகைய திண்ணை பல ஊர்களிலும் உளது.

‡ 'குயில்காழ் சிதைய......நல்லிறைப் பொதியிலானே' (அகம்.167) என்பது காண்க.

என்று கலித்தொகையிலும், 'மாந்தர்க்கும் மகளிர்க்கும்' என்று பரிபாடல் உரையிலும் (பக்கம் 74)

'காந்தர்ப்பம் என்ப துண்டால் காதலிற் கலந்த சிந்தை
மாந்தர்க்கும் மடந்தை மார்க்கும் மறைகளே வகுத்த கூட்டம்'
(சூர்ப்பணகைப். 54)

என்று கம்பராமாயணத்திலும்,

'வேந்த ரீண்டினர் வேதிய ரீண்டினர்
மாந்த ரீண்டினர் மங்கைய ரீண்டினர்'
(விவாக காண்டம். 201)

என்று அரிச்சந்திர புராணத்திலும் வந்திருத்தலை நோக்கின், மாந்தர் என்னுஞ் சொல், ஆடவர் பலரைக் குறிக்குஞ் சொல் என்பது தெளிவாகும். ஆயின், 'மாந்தர் என்பது இருபாலரையும் பொதுவாகக் குறிக்குஞ் சொல்லே என்றும்; இவ்விடங்களில், பெண்பாலை யொழித்து ஆண்பால்மேல் நின்றது என்றும் கொள்ளலாகாதோ? எனின், ஆகாது. என்னை யெனின் இருபாலாரையுங் குறிக்குஞ் சொல்லாகிய மக்கள் என்பது,

'ஆயிரம் மக்கள் தாவடி சென்றார்'

என்னுமிடத்து ஆண்பாலாரையும்,
'பெருந்தேவி பொறையுயிர்த்த கட்டிற்கீழ் நால்வர் மக்கள் உளர்' என்னுமிடத்துப் பெண்பாலாரையும் குறித்து வருதல் போல மாந்தர் என்பது பெண்பாலாரைக்குறித்து வருதல் வேண்டும்; அவ்வாறு வந்துள்ளது அறியப்படாமையானும், மாந்தன் என்று ஆண்பாலொருமைக்கண் வந்துள்ளதனானும் என்க.

'அறைக்கண் மாந்தனுக் கதிதியங் தொழிலினில் அமர்ந்தார்'
(தூது. 40)

என்று சூளாமணியில் வந்துளது காண்டுகொள்க. இனி மாந்தர் என்னுஞ் சொல்லின் அமைதியை நோக்கினும் இஃது ஆண்பாலாரைக் குறிப்பதுவேயாகும் என்பது நன்கு விளங்கும்.

(தொடரும்.)

# தமிழ்ச் செய்திகள்.

கரந்தைத் தமிழ்ச் சங்கம்:—இந்நகரில் பெருந் திருவினரா யுள்ள திருவாளர். வ. மருதப்பா பிள்ளையவர்கள் கரந்தைத் தமிழ்ச்சங்கக் கல்லூரியின் சீரிய தொண்டைப் பாராட்டி, சங்க ஆசிரியர், மாணவர், அன்பர் பலரையும் 9—1—35 பன்று தமது இல்லத்திற்கு அன்புடன் அழைத்து, நல்விருந்தாற்றி, கல்லூரி வளம்பெறற்பொருட்டு ஒரு நூறு வெண்பொற்காசினைச் சென்ற ஆண்டிற்போலவே சங்கத்தலைவரிடம் மனமுவந்து நன்கொடை யாக வழங்கினர். அன்றியும் சங்கத்தார் தொடங்கி நடத்தி வரும் திக்கற்ற மாணவர் இல்லத்தின் நலங்கருதி திரு. S. A. சாம்பசிவம் பிள்ளை அவர்களிடம் அதன் பொருட்டாக ரூபா பத்து நன்கொடை தந்தனர். இவை தமிழ் மக்கள் போற்றுதற் குரிய சிறந்த அறச் செயல்களாகும். இப்பெரியார் நீட்டிய வாழ்வும், நிறைந்த செல்வமும் பெற்று, சங்கம் இன்றியமை யாது வேண்டிநிற்கும் அறங்களைப்புரிந்து புகழும், புண்ணியமும் எய்துமாறு எல்லாம் வல்ல இறைவன் திருவருள் புரிவாராக.

புலவர்களும் அரசியலாரும்:—தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், வடமொழி ஆதிய நாட்டுமொழிகளைப் பேணிவளர்ப் பதில் நம்மவர் நெடுங்காலமாய் கருத்து வைக்கவில்லை. ஆத லால் அங்கிலக் கல்லூரிகளில் அவற்றிற்கு ஒரு ஒதுக்கிடம் தரப்பட்டும் அவற்றைக் கற்பிக்கும் கணக்காயர்களை தாழ்ந்த தரத்தில் வைத்தும் நடத்திவந்தனர். சிலகாலமாக நாட்டு மொழிகளைப் பேணுதல் இன்றியமையாதெனுங்கருத்து வளரத் தலைப்பட்டதன் பயனாய்; அவற்றைக் கற்பிக்கும் புலவர்கட்கு சிறிதளவு ஊதியம் உயர்த்தப்பட்டது. தமிழ்ப் புலவர்கள் Oriental Titles Examination, மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் பண்டிதத்தேர்வு, முதலிய தகுதிகள் பெற்றும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் போதனாமுறையில் தேர்வுபெற்றும் வரத் தலைப்பட்டனர். என்றாலும் அங்கிலமொழிப் போதகர்கள் பெற்று வந்த ஊதியத்தினும் மிகமிகக் குறைந்த ஊதியமே

தமிழ் ஆதிய நாட்டுமொழிப் புலவர்கள் பெற்று வந்தனர். இவ்வாறாக நாட்டுமொழிப் புலவர்களை இழிவு படுத்துவது அடாத செயல் என நாட்டில் கிளர்ச்சிகள் நிகழ்ந்து கொண்டிருக்க, இப்புலவர்களின் ஊதியம் இன்னும் குறைக்கப்பட வேண்டுமென G. O. No. 4619 (L and M) 21-10-34 உத்தரவு அரசியலாரால் ஆட்சிக்குக்கொண்டு வரப்பட்டிருக்கின்றது. இது அடாத கொடுஞ் செயலென நாடெங்கும் கருதப்படுவதுடன் சில மாநாட்டுக் கூட்டங்களிலும் கண்டிக்கப்படுகிறது.

கல்வித் தலைவர்களே புலவரிடம் போதிய அளவு மதிப்பு வைப்பதில்லை. நாட்டாண்மை, நகராண்மைக் கழகங்களின் தலைவர்களும் இவர்களைப் பொருட்படுத்துவதில்லை. சட்டசபை உறுப்பினரைப்பற்றிப் பேசுவானேன். இம்முத்திறத்தினரும் உண்மையாக நாட்டுமொழியிடத்துப் பற்றுவைத்திருந்தால் புலவர்களின் நிலை பாதுகாக்கப்பட்டிருக்கும்; முறையீடுகளும் கவனிக்கப்பட்டிருக்கும். ஆதலால் செவிடன் காதில் சங்கு ஊதுவதில் பயனில்லை என உணர்ந்து, தமிழ்க் கலையை வளர்க்கும் கழகங்களின் நன்முயற்சிகள் வளம்பெறுதற்குரிய தொண்டுகளை மேற்கொள்ள நாட்டுமொழிப் புலவர்கள் ஊக்கத்துடன் முற்பட்டால் இழிதகவு நீங்கும்; இன்னன் முயற்சி திருவினையும் ஆக்கும்.

---

உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத்
திங்கள் வெளியீடு.

துணர்-ய } பவ—தை. { மலர் - ய.


க. விரையாக்கலியும் விடேல் விடுகும் 401
திரு. T. V. சதாசிவப்பண்டாரத்தாரவர்கள்,

உ. ஆந்தையென்னுந் தொகைவிரியுமாறு 410
திரு. பண்டித, சிவசுப்பிரமணியன்,

ங. கருதலளவைப் பகுதி 418
திரு. த. இராமநாத பிள்ளையவர்கள்,

ச. சிலசொற்களின் பொருள்கள் 426
திரு. வே. வேங்கடராசலு ரெட்டியாரவர்கள்,

ரு. வீரசோழிய உரையாசிரியர் காலம் 428
திரு. E. R. நரசிம்ம அய்யங்காரவர்கள் B.A., B.L.,

சு. சோழன் கரிகால் வளவன் 434
திரு. சிவ. குப்புசாமி பிள்ளையவர்கள்.



செந்தமிழ்ப்புரவலர்,

த. வே. உமாமகேசுவரம் பிள்ளை, பொழிற்றொண்டர்.

தஞ்சைக் கூட்டுறவுப் பதிப்பகம், கரந்தை.



உ


# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு

| துணர் ௰ | பவ, தை | மலர் ௰ |
|---|---|---|


உ

## விரையாக்கலியும் விடேல் விடுகும்.


திரு. T. V. சதாசிவப்பண்டாரத்தாரவர்கள்,

தமிழாசிரியர், வாணாதுறை ஐஸ்கூல், கும்பகோணம்.


### I விரையாக்கலி.

சென்ற ஆண்டில், திருப்புறம்பியத்திலுள்ள சிவாலயத்தில் காணப்படும் கல்வெட்டுக்களுள் சிலவற்றை யான் எழுதி வந்த போது மூன்று கல்வெட்டுக்களில் 'விரையாக்கலி' என்பது குறிக்கப் பெற்றிருத்தலைக் கண்டேன். இம்மூன்றனுள் ஒன்று முதல் இராசராச சோழனது ஆறும் ஆண்டில் பொறிக்கப் பெற்றதாகும். அது, விரையாக்கலியேன்னும் நிறைகோல் ஒன்று திருப்புறம்பிய ஆலயத்தில் இருந்தது என்று உணர்த்து கின்றது. மற்றொன்று, கங்கைகொண்ட சோழன் என்று வழங் கப்பெறும் முதல் இராசேந்திரசோழனது பதினாறும் ஆண்டில் வரையப்பெற்றது. அது திருப்புறம்பியத்தில் அந்நாளிலிருந்த ஒருதெரு விரையாக்கலிப் பெருந்தெரு என வழங்கி வந்தது

என்று தெரிவிக்கின்றது. மூன்றாங் கல்வெட்டு, குலோத்துங்க சோழன் காலத்தியது. அதில் குறிக்கப்பெற்றவன் முதற் குலோத்துங்கசோழன் அல்லன் என்பது வெளிப்படை; எனவே, மற்ற இருவருள் ஒருவன் ஆதல்வேண்டும். அக்கல்வெட்டின் இறுதியில் 'திருவாணை—திருவிரையாக்கலி' என்பது காணப்படு கின்றது. முதல் இரண்டு கல்வெட்டுக்களால் ஒருநிறைகோலும் ஒருதெருவும் விரையாக்கலி என்ற பெயரோடு வழங்கப்பெற் றன என்பது புலனாகின்றது. சோழ மன்னர்களது பெயர்க ளிட்டு வழங்கப்பெற்ற பெருந்தெருக்கள் பல அந்நாளில் தஞ்சாவூர், கங்கைகொண்டசோழபுரம், சிதம்பரம், திருவரங்கம் முதலிய நகரங்களில் இருந்துள்ளன என்பது சயங்கொண்ட சோழப் பெருந்தெரு, வீரசோழப் பெருந்தெரு, திருவிக்கிரமன் திருவீதி, குலோத்துங்கன் திருவீதி என்பவற்றால் நன்கு அறி யப்படுகின்றது. விரையாக்கலிப் பெருந்தெருவென்றதொடரில் விரையாக்கலி என்பது எவ்வேந்தனையும் குறிக்கவில்லை. ஆத லால் அஃது ஆராய்ந்துணர்தற்குரியதாகும். மூன்றாம் கல் வெட்டில் திருவிரையாக்கலி என்பதற்கு முன்னருள்ள திரு வாணை என்னுந் தொடர்மொழி அஃது இன்னது என்பதை இனிது புலப்படுத்துகின்றது. திருவருள் என்பது கடவுளது அருளைக் குறிப்பதுபோல் திருவாணை என்பதும் ஈண்டுக் கடவு ளது ஆணையைக் குறிக்கின்றது. எனவே, சிவபெருமானது ஆணையே திருவிரையாக்கலி எனும் பெயருடையதாயிருத்தல் காண்க. ஆகவே, விரையாக்கலி என்பது சிவபெருமானது ஆணை யேயாதல் அறிந்து கோள்ளற்பாலது. இச்செய்தி, ஒட்டுடன் பற் றின்றி உலகைத் துறந்த செல்வராகிய பட்டினத்துப் பிள்ளை யார் அருளிய கோயில் நான்மணி மாலையிலுள்ள ஒரு பாட லாலும் உறுதியெய்துகின்றது. அஃது,

"உரையின் வரையும் பொருளின் அளவும்
இருவகைப்பட்ட எல்லையுங் கடந்து
தம்மை மறந்து நின்னை நினைப்பவர்
செம்மை மனத்தினுந் தில்லைமன் றினும்நடம்
ஆடும் அம்பல வாண! நீடு

குன்றக் கோமான் தன்திருப் பாவையை
நீல மேனி மால்திருத் தங்கையைத்
திருமணம் புணர்ந்த ஞான்று பெரும! நின்
தாதவிழ் கொன்றைத் தாரும், ஏதமில்
வீர வெள்விடைக் கொடியும், போரில்
தழங்குந் தமருகப் பறையும், முழங்கொலித்
தெய்வக் கங்கை யாறும், பொய்தீர்
விரையாக் கலியெனும் ஆணையும், நிரைநிரை
ஆயிரம் வகுத்த மாயிரு மருப்பின்
வெண்ணிறச் செங்கண் வேழமும், பண்ணியல்
வைதிகப் புரவியும், வான நாடும்,
மையறு கனக மேருமால் வரையுஞ்,
செய்வயல், தில்லையாகிய தொல்பெரும் பதியுமென்
றொருபதி னுயிரந் திருநெடு நாமமும்,
உரிமையிற் பாடித் திருமணப் பந்தருள்
அமரர் முன்புகுந் தறுகு சாத்திநின்
தமர்பெயர் எழுதிய வரிநெடும் புத்தகத்
தென்னையும் எழுத வேண்டுவன் நின்னருள்
ஆணை வைப்பிற் காணுணு அணுவும்
வானுற நிமிர்ந்து காட்டுங்
கானில்வால் நுளம்புங் கருடனு தலினே:— என்பதாம்.

சிவபெருமானுக்குத் தசாங்கம் கூறவந்த அடிகள், 'பொய்தீர்— விரையாக்கலியெனும் ஆணையும்' என்று தீஞ்சுவையொழுகும் அவ்வாசிரியப்பாவில் அவ்விறைவனது ஆணையின் திருப்பெயரைக் குறித்திருப்பது அறிந்து கொள்ளுதற் குரியதாகும்.

இனி, திருப்புறம்பியத்திலுள்ள திருக்கோயிலிலிருந்து யான் எழுதிவந்த அக்கல்வெட்டுக்கள் மூன்றும் சரித ஆராய்ச்சியாளர்களுக்குப்பெரிதும் பயன்படுமாதலின் அவற்றை அடியில் வரைகின்றேன்.

### 1. முதல் இராசராசசோழன் காலத்தியது.

(1) ஸ்வஸ்தி ஸ்ரீ கோ ராஜராஜகேசரி வன்மற்கு யாண்டு ௬ ஆவது ஸ்ரீ திருப்புறம்பியமுடைய மகாதேவர்க்குத் திரு

(2) மஞ்சன நீராடியருள ஸ்ரீகண்டன் மதுராந்தக தேவரான ஸ்ரீஉத்தமசோழ தேவர்க்காக இ(த்) தேவரை

(3) த் திருவயிறு வா(ய்)த்த உடைய பிராட்டியார் தந்த வெள்ளிக் கலசம் ஒன்று அலகுநிலே நூற்று நாற்பத்துமு

(4) க் கழஞ்சே முக்காலே இரண்டு மஞ்சாடி. இதுக்கு விரையாக்கலி யென்னுந் நிறைகோலால் நிறை

(5) பதின்மூன்றெழுக்கை மிசூ ஒரு பலம் பதின் கழஞ்சே காலாக இவ்வூர்க் கல்லால் விற்ற

(6) நிறை நூற்றுநாற் பதின்கழஞ்சே முக்காலே மூன்று மஞ்சாடியும் அறுமா இவைபன்

(7) மாகேஸ்வர ரக்ஷை.

(2) கங்கைகொண்ட சோழன் காலத்தியது.

ஸ்வஸ்திஸ்ரீ திருமன்னிவள ரிருநில மடந்தையும்
போர்ச்செயப் பாவையுஞ் சீர்த்தனிச் செல்வியுந்
தன்பெருந் தேவிய ராகி இன்புற
நெடிது யருழியு ளிடைதுறை நாடுந்
தொடர் வனவேலிப் படர்வன வாசியுஞ்
சுள்ளிச் சூழ்மதிட் கொள்ளிப் பாக்கமு
நண்ணற் கருமுரண் மண்ணைக் கடக்கமும்
பொருகட லீழத் தரைசர்த முடியு
மாங்கவர் தேவியர் ஓங்கெழில் முடியும்
முன்னவர் பக்கல் தென்னவர் வைத்த
சுந்தர முடியு மிந்திர னாரமும்
தென்றிசை ஈழ மண்டல முழுதும்
எறிபடைக் கேரளர் முறைமையிற் சூடுங்
குலதன மாகிய பலர்புகழ் முடியும்
செங்கதிர் மாலையுஞ் சங்கதிர் வேலைத்
தொல்பெருங் காவற் பலபழந் தீவும்
செருவிற் சினவி இருபத் தொருகால்
அரைசுகளை கட்ட பரசு ராமன்
மேவருஞ் சாந்திமத் தீவரண் கருதி

இருத்திய செம்பொற் றிருத்தகு முடியும்
பயங்கொடு பழிமிக முயங்கியில் முதுகிட்
டொளித்த சயசிங்கன் அளப்பரும் புகழொடும்
பீடியல் இரட்டப் பாடி ஏழரை
இலக்கமும் நவநிதிக் குலப்பெரு மலைகளும்
விக்கிரம வீரர் சக்கரக் கோட்டமு
முதிர்பட வல்ல மதுரை மண்டலமும்
காமிடை வள நாமணைக் கோணமும்
வெஞ்சின வீரர் பஞ்சப் பள்ளியும்
பாசடைப் பழன மாசுணி தேசமும்
அயர்வில் வண்கீர்த்தி ஆதிநக ரவையில்
சந்திரன் தொல்குலத் திந்திர திலதனை
விளையமர்க் களத்துக் கிளையொடும் பிடித்துப்
பலதனத் தொடுநிறை குலதனக் குவையும்
கிட்டருஞ் செறிமிளை ஒட்ட விஷையமும்
பூசுரர் சேர்நற் கோசலை நாடும்
தந்ம பாலனை வெம்முனை யழித்து
வண்டுறை சோலைத் தண்ட புத்தியும்
இரண சூரனை முரணுறத் தாக்கித்
திக்கணை கீர்த்தித் தக்கண லாடமும்
கோவிந்த சந்தன் மாவிழிந் தோடத்
தங்காத சாரல் வங்காள தேசமும்
தொடுகடற் சங்கு வொட்ட மகிபாலனை
வெஞ்சமர் வளாகத் தஞ்சுவித் தருளி
ஒண்டிறல் யானையும் பெண்டிர் பண்டாரமும்
நித்தி............................................................மும்
அலைகடல் நடுவுட் பலகலஞ் செலுத்திச்
சங்கிராம விசயோத் துங்க வன்ம
னாகிய கடாரத் தரைசனை வாகையம்
பொருகடற் கும்பக் கரியொடு மகப்படுத்
துரிமையிற் பிறக்கிய பெருநிதிப் பிறக்கமும்
ஆர்த்தவ னகநகர்ப் போர்த்தொழில் வாசலில்

விச்சாதிரத் தோரணமு முத்தொளிர்
புனமணிப் புதவமும் கனமணிக் கதவமும்
நிறைசீர் விசயமுந் துறைநீர்ப் பண்ணையும்
நன்மலை யூரெயிற் றொன்மலை யூரும்
ஆழ்கட லகழ்சூழ் மாயிரு டிங்கமும்
கலங்கா வல்வினை லிலங்கா சோகமும்
காப்புறு நிறைபுனல் மாப்பப் பாளமும்
காவலம் புரிசை மேவுலிம் பங்கமும்
விளைப்பந் தூருடை வளைப்பந் தூரும்
கலைத் தக்கோர்புகழ் தலைத்தக் கோலமும்
திதமா வல்விறல் மதமா லிங்கமும்
கலாமுதிர் கடுந்திறல் இலாமுரி தேசமும்
தேனக்க வார்பொழில் மாநக்க வாரமும்
தொடுகடற் காவற் கடுமுரட் கடாரமும்
மாப்பெருந் தண்டாற் கொண்ட கோப்பரகேசரி

வன்மரான உடையார் ஸ்ரீராஜேந்திர சோழ தேவர்க்கு யாண்டு ௰௬-வது வடகரை ராஜேந்திர சிங்கவளநாட்டு அண்டாட்டுக் கூற்றத்து நின்று நீங்கிய தேவதானம் திருப்புறம்பியத் தாதித்தீஸ்வரமுடைய மஹாதேவர்க்குச் சந்திராதித்தவல் சந்திவிளக்குச் சிறுகாலை அஞ்சும் உச்சியம் போதஞ்சும் எரியக் கடவவாக வைத்த வெண்ணெய் உழக்கு இவ்வெண்ணெய் உழக்குக்கும் வெளாநாட்டு நெற்குப்பை உடையார் வெண்காடன் குடிதாங்கி தேவர் பண்டாரத்து வைத்த காசைம்பது இக்காசைம்பதும் இததேவர் தேவதானம் பிரம்பில் விரையாக்கலிப் பெருந்தெருவிற் சங்கரப்பாடியோம் இத்தேவர்கன்மிகள் வசங்கொண்ட காசைம்பது இக்காசைம்பதுங்கொண்டு நிசதம் உழக்கெண்ணெய் சந்திராதித்தவல் அட்டக்கடவோம் விரையாக்கலிப் பெருந்தெருவிற் சங்கரப் பாடியோம்........................

(3) குலோத்துங்க சோழன் காலத்தியது.

(1) ஸ்வஸ்திஸ்ரீ குலோத்துங்கசோழதேவற்கு..............

(2) வடகரை விக்கிரம சோழ வளநாட்டு அண்டாட்டுக் கூற்றத்து நின்று நீங்கிய தேவ (3) தானம் திருப்புறம்பியத்து

உடையார் திருப்புறம்பியமுடையார் கோயில் அமுதுபடியாக புகுநா (4) அமுது செய்தருளுவது பூரியாதலால் இப்படியாக ...............இத்தேவற்கு ஆருவது ஆயிரத் தளியா (5) னமீனவன் மென்கண்ட சோழபுரத்தெழுந்...................கும்பிட்ட நக்கன் (6) ஆட்கொண்ட நாயகன் விண்ணப்பஞ் செய்து உடையார் திருப்புறம்பிய முடையாரும் ஆளுடைய நாச்சியாரும் (7) சென் னெல் அமுது செய்தருளப்பண்ணி அமுது செய்து வருகையால் பின்பு உள்ளு.......எழுந்தருளியிருக்குந் தேவர்க (8) ள் அமுது செய்வது...............பூரியே சங்கிராதித்தவல் அமுது செய்தரு ளப் பண் (9) ணவேணுமென்று திருப்புறம்பியத்தில் வெள்ளா ளரையும் குலோத்துங்க (10) சோழமங்கலத்து காணியாளரை யும் வெள்ளாளரையும் மற்றும் புறம்புள்ள தேவதான (11)த்துக் காணியாளரையும் வேண்டிக்கொள்ள இப்படி இவர்கள் சம் மதித்து இந்நெல்லு (12) அளக்க இசைந்திட்டு இட்டமையில் சென்னெல்லும் வெள்ளையுமல்லதுபூரி (13) அமுது செய்விப் பார்-திருவாணை திருவிரையாக்கலி-இது பன்மாகேஸ்வரரக்ஷை.

## II விடேல் விடுகு.

காஞ்சிமா நகரைத் தலைநகராக்கொண்டு தொண்டை மண் டலத்தையும் சோழ மண்டலத்தையும் ஆட்சிபுரிந்த பல்லவ மன்னர்களுள் தெள்ளாறு எறிந்த நந்திவர்மன் என்பவனும் ஒருவன் ஆவன். சரித ஆராய்ச்சியாளர்கள் அவனை மூன்றாம் நந்திவர்மன் என்பர். அவன் கி. பி. 830 முதல் 854 வரை அர சாண்டவன். தற்காலத்தில் வெளிவந்துள்ள பாரதவெண்பா அவ்வேந்தன் காலத்தில் எழுதப்பெற்றதாகும். அதன் ஆசிரி யர் பாயிரத்தில் அவனைப் புகழ்ந்து ஒருவெண்பா கூறியிருத்த லோடு ‘பல்லவர் கோமான் பண்டிதராலயன்’ என்னும் உரை நடையில் அவனைப் பாராட்டியுள்ளனர். சிறந்த செந்தமிழ்ப் புலமையும் ஒப்பற்ற சிவபத்தியும் வாய்ந்த அவ்வேந்தன் புலவர் பெருமக்கள் பால் பேரன்பு பூண்டு அன்னோரைப் பெரிதும் ஆதரித்து வந்தான். அவன் காலத்தில் நிலவிய புலவர் பெரு மான் ஒருவர் அவன்மீது ஒரு கலம்பகம் பாடியுள்ளார். அது நந்திக் கலம்பகம் எனப்படும். கலம்பகங்களுள் மிகவும் பழமை

வாய்ந்தது அதுவேயாகும். அன்றால் அவ்வேந்தனை 'அவனி நாராயணன்' எனவும் 'மல்லைவேந்தன்' எனவும் 'மயிலைகாவலன்' எனவும் 'விடேல்விடுகு' எனவும் புகழ்ந்து கூறுகின்றது. அவற்றுள், விடேல் விடுகு என்னும் சொற்றொடர் மூன்று பாடல்களில் வந்துளது. அப்பாடல்களுள் ஒன்று,

'நெஞ்சா குலமுற்றினனே மெலிய நிலவின்கதிர் நீளெரியாய்
[விரியத்
துஞ்சா நயனத்தொடு சோருமிவட் கருளா தொழிகின்றது
[தொண்டைகோலோ
செஞ்சாலி வயற்படர் காவிரிசூழ் திருநாடுடை நந்திசினக்
[கலியின்
வெஞ்சாயன் மறைத்த தனிக்குடையான் விடைமண் பொறி
[யோலை விடேல்விடுகே'
(நந்திக்கலம்பகம் பா. 11)

என்பது. ஈண்டு விடேல் விடுகு என்பது நந்திவர்மனை யுணர்த்துதல் அறியத்தக்கது. அன்றியும், 'வினைவார்கழல் நந்தி விடேல் விடுகு' என்பதும், 'விண்டொடு திண்கிரியளவும் வீரஞ் செல்லும் விடேல்விடுகு' என்பதும் பல்லவ வேந்தனாகிய நந்திவர்மனையே குறித்தல் காண்க. அவ்வேந்தனது தந்தையாகிய தந்தி வர்மனது ஆட்சிக் காலத்தில் குவாவன் சாத்தன் என்ற தலைவன் ஒருவன் விடேல் விடுகு முத்தரையன் என்னும் பட்டத்துடன் புதுக்கோட்டை நாட்டைச் சார்ந்த ஒரு பகுதியில் வாழ்ந்து வந்தான். (Inscriptions of Pudukkottai State No. 18) அவன் பல்லவமன்னர்களுக்குத் திறை செலுத்திவந்த ஒரு குறுநில மன்னனாதலின், விடேல் விடுகு என்னும் பட்டம் அவனுக்கு அவ்வரசர்களால் வழங்கப்பெற்றுளது. அன்றியும், விடேல் விடுகு விக்கிரமாதித்த சதுர்வேதி மங்கலம் என்னும் ஊர் ஒன்று, நந்திக் கலம்பகங்கொண்ட தெள்ளாறு எறிந்த நந்திவர்மன் காலத்தில் தொண்டை மண்டலத்தில் திருவல்லத்திற்கு அண்மையில் இருந்துளது. (South Indian Inscriptions Vol II No. 43.) இவற்றையெல்லாம் ஆராயுங்கால் பல்லவ மன்னர்கட்கு உரியனவாய் அக்காலத்தில் வழங்கி வந்த பட்டங்களுள் விடேல் விடுகு என்பதும் ஒன்று என்று எண்ணவேண்டியிருக்

தது. அத்தொடர்மொழி உண்மையாக எதனையுணர்துகின்றது என்று அறிந்துகொள்ள இயலாமையின் அது பல்லவர்க்குரிய பட்டங்களுள் ஒன்று என்றே யானும் கருதியிருந்தேன். காஞ்சிமா நகரில் பரமேச்சுரவிண்ணகரத்திற் பொறிக்கப்பெற்றுள்ள ஒருகல்வெட்டை அண்மையில் யான் ஆராய்ந்து பார்க்க நேர்ந்தபோது விடேல் விடுகு என்பது பல்லவ மன்னர்களது ஆணையைக் குறிக்கும் ஒரு தொடர்மொழி என்றுணர்ந்தேன். அக்கல்வெட்டிற் காணப்படும் அப்பகுதி:—

1 "மந்திரி மண்டலமும் மகாசாமந்தரும் உபயகணத்தயாரும் கடகயாருகள் நந்திவன்மனென்று அபிஷேகஞ்செய்து தொர்க்கேய்ச் சத்திரிகரிவயும் சமுத்திரகோஷத்து (2)........கட்வாங்கத்வஜமும் விருஷபலாஞ்சனமு மிறக........டிகளாற் கூட்டி விடேல் விடுகேன்னுந் திருவாணை நடாவி அபிஷேகஞ் செய்திருந்த இடம்." (S. I. I. Vol. IV Ins. No. 135) *

என்பதாம். அது பல்லவ மல்லன் என்று வழங்கப்படுவோனாகிய நந்திவர்மன் என்பான் தான் முடிசூடிய நாளில் பல்லவ அரசர்களுக்குரிய சமுத்திர கோஷம் என்னும் முரசத்தையும் கட்டுவாங்க துவசத்தையும் இடப முத்திரையையும் எய்தி, விடேல் விடுகு என்னும் ஆணையை நடாத்தினான் என்று கூறுகின்றது. ஈண்டுக்குறிக்கப்பெற்ற நந்திவர்மப் பல்லவமல்லன் என்பான் கி. பி. 717 முதல் 779 முடிய நம் தமிழகத்திற் பெரும் பகுதியை ஆட்சிபுரிந்த பல்லவ அரசன் ஆவான். இவனது பேரனே நந்திக் கலம்பகம் கொண்டவனும் பாரதவெண்பாவைப் பாடுவித்தவனும் தெள்ளாறு எறிந்தவனும் ஆகிய நந்திவர்மன் என்பவன். ஆகவே, நந்திக்கலம்பகத்திலும் கல்வெட்டுக்களிலும் பயின்றுவரும் விடேல்விடுகு என்னும் தொடர்மொழி முற்காலத்தில் பல்லவ அரசர்களது ஆணையைக் குறித்தமை நன்கு புலப்படுதல் காண்க.

---

* குறிப்பு:—இக்கல்வெட்டிற் காணப்படும் வடமொழி எழுத்துக்கள் தமிழ் எழுத்துக்களாக மாற்றி வரையப்பெற்றுள்ளன.

உ

# I ஆந்தையென்னுந் தொகைவிரியுமாறு.

திரு. பண்டித, ஆ. சிவசுப்பிரமணியன்,
உதவித்தமிழாசிரியர்,
இராமேசுவர தேவத்தான வடமொழிப்பாடசாலை, மதுரை.

(முற்றொடர்ச்சி 333-ம் பக்கம்)

இனி, தொல்காப்பிய எழுத்ததிகாரத்து, 347, 348, 349, 350 என்னும் இலக்கமுள்ள இச்சூத்திரங்கள் வேற்றுமைக் கென்றோ அன்மொழிக்கென்றோ விதந்தோதாமையின் இரு வழிக்கண்ணும் படுஞ்செய்கையே கூறியது. கூறினும் இருவழி யாலும் விரிக்கத் தகுதியுடையவற்றை இருவழியாலும் விரித் தாற்படும் இழுக்கென்னை? எனலாம். ஆதலின் எவ்வழிப் புணர்ச்சி எனக் காண்போம்.

"இயற்பெயர் முன்னர்த் தந்தை முறைவரின்" என்ற சூத்திரம் எழுத்ததிகாரத்து 347-ம் சூத்திரம்.

"வேற்றுமையாயின் ஏனை யெகினொடு
தோற்ற மொக்கும் கன்னென் கிளவி"

என்ற சூத்திரம் 346 வது. ஆகவே "இயற்பெயர் முன்னர்த் தந்தை முறைவரின்" என்ற சூத்திரத்திற்கு மேலைச் சூத்திர மாகிய "வேற்றுமையாயின்" என்ற சூத்திரத்தாற் கூறிய வேற்றுமைப் பொருட் புணர்ச்சியின் அதிகாரம் உண்டு.

அம்மட்டோ? 346-ம் சூத்திரத்துள்ள வேற்றுமை அதி காரம், 347, 348, 349, 350, 351, 352 என்னும் ஆறு சூத்திரங் காறும் உண்டு என்பதற்கு, 353-ம் சூத்திரத்து,

"வேற்றுமையல்வழிக் குறுகலுந் திரிதலும்
தோற்றமில்லை யென்மனார் புலவர்"

என்புழி **வேற்றுமை யல்வழி** என்பதே ஞாபகமாகும். இந்த 353-ம் சூத்திரத்திலே, "இஃது அல்வழிக்கண் இயல்பாக என்றலின் எய்தாதெய்துவித்தது" என்று நச்சினார்க்கினியர்

அச்சூத்திரம் முதலியது கூறியது கொண்டும் அதற்கு மேலைச் சூத்திரங்களாக உள்ளன வேற்றுமைப் பொருட் புணர்ச்சியே கூறின என்பது அவர் கருத்தாதல் புலனாகவில்லையா?

அன்றியும், "இயற்பெயர் முன்னர்த் தந்தை முறைவரின்" என்ற சூத்திரம் இவ்வழிக்கென விதவாமையின் இருவழியும் கூறியதேயாம் எனின், "அப்பெயர் மெய்யொழித் தன்கெடு வழியும்" என்ற சூத்திரமும் இவ்வழிக்கென விதவாமையின் இருவழியும் கூறியதெனல் வேண்டும். வேண்டவே, அச்சூத் திரத்துக்கு உதாரணமாகும் கீரங்கோற்றன் என்பது கீரனுக்கு மகனாகிய கொற்றன் என விரிக்கப்படுதலோடு, கீரனாகிய மகனை யுடைய கொற்றன் என அன்மொழிப் பொருளால் விரிப்பினும், வழுவன்றாகல் வேண்டுமன்றோ?

ஆயின், கீரங்கோற்றன் என்னும் பெயருக்குக் கீரனுக்கு மகனாகிய கொற்றன் என்று நக்கீரன் மகன் பெயரை ஐயவியா சத்தார் விரித்தாங்கு விரியாது கீரனாகிய மகனையுடைய கொற் றன் என அவர் கூறும் அன்மொழிப் பொருள்பட விரிக்கலுறின் அது மரபொடு பொருந்தும் பொருள்பயப்பதாகுமோ?

"இன்னாற்கு மகன் என்னும் முறைப்பெயராய்ச் சேரு மிடத்து" என்று அச் சூத்திரத்திலே நச்சினார்க்கினியர் விளங்க உரைத்ததும் நாம் மறக்கத்தகுவதன்று.

அன்றியும், அல்வழியில் அன்மொழிப் பொருளுமுடைய தெனச் சாத்தந்தை, ஆந்தை முதலியவற்றைக் கொள்ளின், நிலைமொழி தந்தையின் பெயராம். வேற்றுமைப் புணர்ச்சிக்கண்ணே வெனில் நிலைமொழி மகனுடைய பெயராம்.

சாத்தந்தை என்பது அன்மொழித்தொகையெனின், அது பண்புத் தொகைப்புறத்துப் பிறந்ததொன்றாகல் வேண்டும். வேண்டவே அது அன்மொழித்தொகைப்பொருள்பட நில்லாத காலத்தே சாத்தந்தை யென்பது சாத்தனாகிய தந்தை எனப் பண்புத்தொகையாதல் வேண்டும். ஆயின் முறைப்பெயர் வரு மொழியாகிய தொகை எதுவேனும் பண்புத் தொகையாய்ப் பயின்றவாறு காட்டவியலுமோ?

தாழ்குழல், பொற்றொடி முதலிய தொகைகள் அன்மொழியில் நோக்கமின்றாயின், தாழ்ந்தகுழல் பொன்னாலாகிய தொடி யென அன்மொழித் தொகைக்கு நிலைக்களமாகிய தொகைப் பொருளனவாகவே யிருத்தல்போலவே யன்றோ சாத்தந்தை யென்பதும் சாத்தனாகிய தந்தையெனப் பண்புத்தொகைப் பொருள்பட விரிதல் வேண்டும்? அவ்வாறு பண்புத் தொகைபட வந்த வருமொழி முறைப்பெயராகிய தொகை உண்டோ?

ஏன்? தந்தை யென்னும் முறைப்பெயர் வருமொழியாயும் அன்மொழித் தொகைப் பொருள் பயப்பதாயுமுள்ள இச் சாத்தந்தை, ஆந்தை யென்னுந் தொகைகளே அன்மொழியில் நோக்கமில்லாதபோது பண்புத்தொகைகளாம் எனின், ஆசிரியர் தொல்காப்பியனார்க்குச் சில குற்றங்கள் ஏற்றத்துணிய வேண்டும் அவை வருமாறு:—

1. வேற்றுமையில் இன்னாற்கு இன்னமுறையுடையான் என்ற பொருள் பயக்கும் சாத்தன் றந்தை என்பதன் றிரிபாகிய சாத்தந்தையும், சாத்தனாகிய தந்தையையுடையான் என்ற பொருள் பயக்கும் சாத்தந்தையும் வெவ்வேறியல்பின.

2. ஒன்று வேற்றுமை வழியால் விரிக்கப்படும்; மற்றொன்று அல்வழியால் விரிக்கப்படும்.

3. வேற்றுமை வழியால் விரிக்கப்படுவதனுள்ள நிலைமொழி மகனுடைய பெயராகும்; அல்வழியால் விரிக்கப்படுவதனுள் நிலைமொழி தகப்பனுடைய பெயராகும்.

4. இத் தந்தை முறைப்பெயர் வருமொழியாகியவிடத்தும் ஏனையீற்றுப் பெயர்கள் நிலைமொழிகளாயின், அப்பொழுது அவை வேற்றுமைத் தொகையே யாவனவன்றி, அன்மொழித் தொகைகளாகா. (சீதைதந்தை முதலியவற்றை அவ்வழியிற் செல்லாதெனத் தடுக்க வேண்டும்.)

5. அன்னீற்று இயற்பெயராகிய நிலைமொழிக்கு முன்னர்த் தந்தை முறைப்பெயர் வந்து முடிந்ததொகை அல்வழியில் மகன் முறைப் பெயர்ப் பொருளைக் கொடுக்கும். தாய் முதலிய வருமொழிகள்வரின் அல்வழியிற் செல்லும் அல்லது செல்லாது.

6. அன்னீறியற் பெயர் நிலைமொழியாயும், மகன் முறைப் பெயர் வருமொழியாயும் புணர்ந்த தொகைகள் அல்வழியில் தந்தை முறைப் பெயர்ப் பொருள் பயக்கும் அல்லது பயவாது. (என்னை? சாத்தன் மகன் = சாத்தனாகிய மகனையுடையான் என விரித்தலாகாது என்றற்கு விதியில்லையாய்விடுமன்றோ?)

7. தாய், மனைவி, தங்கை, தம்பி முதலிய முறைப்பெயர்கள் வருமொழியாய் நிலைமொழிகளோடு புணரின் அவை வேற்றுமை வழியில் மட்டுமே புணரும்; அல்லது அல்வழியிலே மட்டும் புணரும்; அல்லது இருவழியிலும் புணரும்; அல்லது இவற்றுள் இன்ன இன்ன பெயர், இன்ன இன்ன வழியாற் புணரும்.

என்றின்னோரன்னவற்றை ஆசிரியர் தொல்காப்பியனார் விளங்கக் கூறாது குன்றக்கூறியொழிந்தார் என்ற ஒரு முடிபு திடமாய் உரைத்தாக வேண்டுமன்றோ?

அன்றியும், "இயற்பெயர் முன்னர்த்தந்தை முறைவரின்" என்ற சூத்திரம் வேற்றுமைப் பொருட் புணர்ச்சியே கூறியதெனக் கொள்ளாக்கால், கீரன்றாய், இராவணன்றங்கை, வாலி தம்பி முதலிய தொகைகளும் அன்மொழிப் பொருளால் விரிக்கத்தகுவனவேயாம் என வாதிடுவார்க்கு அது குற்றமாகாமையும், அங்ஙனம் ஆகாதேன்று விலக்குதற்கு விதியின்மையும், அவையன்மொழித் தொகையாய் மரபொடு பொருந்தப் பொருள் பயவாமையுமாகிய இடர்ப்பாடுகள் தோன்றுகின்றனவாகும்.

ஆயின் வேற்றுமைப் பொருட்புணர்ச்சியே கூறியதென, "இயற்பெயர் முன்னர்த் தந்தை முறைவரின்" முதலிய சூத்திரங்களைக் கொள்ளின் இவ்விடர்ப்பாடுகள் இல்லையாமோ எனின் இல்லையாம் என்க. தந்தை, மகன் என்னும் முறைப் பெயர்கள் வருமொழியாகிய தொகைகள் வேற்றுமை வழியாலே விரிக்கப் படுவனவாகவே அவை சொல்லதிகாரத்து

"அதுவென் வேற்றுமை உயர்திணைத் தொகைவயின்
அதுவென் உருபுகெடக் குகரம் வருமே"

என்ற சூத்திரப்படி நிலைமொழியிலே இவ்வுருபு விரித்துரைக்கப் படும். படவே, சாத்தன்றந்தை—சாத்தனுக்குத் தந்தை, ஆதன்றந்தை = ஆதனுக்குத் தந்தை, இராவணன்றங்கை = இராவணனுக்குத் தங்கை, கீரன்றாய் = கீரனுக்குத்தாய், வாலி தம்பி = வாலிக்குத் தம்பி, சாத்திதந்தை = சாத்திக்குத் தந்தை, கீரன்மகன் = கீரனுக்கு மகன், என்றின்னவாறு விரிதல்காண்க.

ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொண்ட சூத்திரங்களாலே தந்தை முறைப் பெயரும், மகன் முறைப் பெயரும் வருமொழியாகிய தொகைகளே கூறப்பட்டனவேனும் அவை உபலக்கணமாய் ஏனை முறைப்பெயர்கள் வருமொழியாயினும் அவை வேற்று மைப் பொருட் புணர்ச்சியனவேயெனவும் அவையும் சொல்லதி காரச் சூத்திரப்படியே விரிக்கப்படுவன எனவும் அறிக.

இவற்றாலே வருமொழி முறைப்பெயராகி முடிந்த தொகை கள் வேற்றுமைத் தொகையாவனவன்றி அன்மொழித் தொகை களாகுமாறில்லை எனத் தெரியலாம். இம்முடிபு; அநுவாதம் 1, 2 ஐயும் நிராகரிக்கின்றது. இதுதானே அநுவாதம் 3ஐயும் பொருந்தாதென உணர்த்தும்.

இனி, ஐயவியாசத்துள், "ஆந்தை யென்பது அல்வழிப் பொருளும் உடன்கொள்ளக்கிடக்கும் இயற்பெயராதலால், அதற்கு எந்தையென்பது காட்டாக மாட்டாது" என்றவோர் முடிவு கூறப்பட்டிருக்கின்றது. (அநுவாதம் 4)

அம்முடிபின்படி ஆந்தையென்பது இயற்பெயர் ஆகலின் அது அன்மொழிப்பொருளும் உடன் கொள்ளக் கிடக்கும் தொகைச் சொல்லாகுமாறுண்டோ? "இயற்பெயராவன சாத்தன், கொற்றன் என வழங்குதற் பயத்தவாய், நிமித்தமின்றிப் பொருளே பற்றிவரும் இடுபெயர்" எனச் சேனவரையர் கூறியிருப்பது சிந்திக்கத்தகும்.

வழங்குதற்பயத்தாய், நிமித்தமின்றிப் பொருளேபற்றி வந்த இடுபெயராகிய ஆந்தை, சாத்தந்தையும் வேறு; இயற்பெயராகிய ஆதன் சாத்தன் என்னும் நிலைமொழியும் முறைப்பெயராகிய தந்தையென்னும் வருமொழியும் புணர்ந்து முடிந்து, முறை

யாகிய நிமித்தம் பற்றிய காரணப் பெயராகிய ஆந்தையும், சாத்தந்தையும் வேறு. இவற்றுள் முன்னது இயற்பெயராகிய ஒரு சொல். பின்னது முறைப் பெயராகிய தொகைச்சொல். (அஃதாவது இருசொல் ஒரு சந்தியுடையது).

இவ்விருவேறியல்புடைய பெயர்களையும் ஒன்றெனக் கொண்டு, ''ஆந்தைக்கு எந்தை யென்பது காட்டாக மாட்டாது'' எனக் காட்டியதுதானே, விகாரப்பட்ட நிலைமொழியதும், எந்தை என்பதுபோலவே முறையாகிய நிமித்தம் பற்றியதும், தந்தை யென்னும் முறைப்பெயரையே வருமொழியாக உடையதும், தொகைச் சொல்லானதுமாகிய ஆந்தை யென்பது, வேற்றுமைப் பொருளொன்றே தோன்ற முடிந்த தொகைச் சொல்லாம் எனக் காட்டுமாறுணர்க. இதனால் அநுவாதம் 4 நிலைபெறுமாறில்லையாகின்றது.

இனி, ''சாத்தந்தையார் மகனார் கண்ணஞ் சேந்தனார் என்னும் பெயராலே சாத்தனுக்குத் தந்தையென்று பொருள் பயக்கும் சாத்தந்தைப் பெயரினர், கண்ணஞ் சேந்தனார்க்குத் தமப்பனார் என்றல் பொருந்தாது'' என்று, வேற்றுமை வழியால் பொருள் விரிப்பதிலுள்ள இடர்ப்பாட்டை யுணர்த்த ஓர் உதாரணம் கொடுக்கப்படுகிறது. (அநுவாதம் 7)

ஐபவியாசத்தார் கருத்து, சாத்தந்தை என்பது (சாத்தனுக்குத் தந்தை என்ற பொருளுண்டாயின்) அப்பொழுது அவன் மகன் சாத்தனாதல் வேண்டும். சாத்தந்தையார் மகனார் கண்ணஞ்சேந்தனார் ஆதல் கூடாது. ஆகவின் அன்மொழித் தொகைப் பொருள்தான் கொள்ளவேண்டும் என்பதே. அதனையும் ஆராய்வோம்.

சாத்தந்தையார் என்பது அன்மொழித் தொகையென விரிப்பதே இயலாத தன்மையதாக இருக்கும் நிலைமையைக் காட்டுதும்.

சாத்தந்தை என்பது சாத்தனாகிய தந்தையையுடையான் அஃதாவது சாத்தன் மகன் என்பதே பொருளெனின், ''சாத்தந்தையார் மகனார் கண்ணஞ் சேந்தனார்'' என்றல் பொருந்துவதாகுமோ? சாத்தந்தையார் கண்ணஞ் சேந்தனார்

என்றாலே சாலுமே? இடையே மகனார் என்னும் முறைப் பெயர் எதற்கோ? எளிதிற் பொருள் விளங்குதற்கெனின், சாத்தனார் மகனார் கண்ணஞ் சேந்தனார் என்பதே சாலாதோ? இடையே மகனார் விழுந்தமைபாலே சாத்தந்தையார் என்பது வழங்குதற் பயத்ததாய் நிமித்தமின்றிப் பொருளே பற்றி வந்த இடு பெயர் என்றும், வருமொழி முறைப் பெயராகிய அன்மொழித் தொகையாகிய காரணப்பெயரன்று என்று மறுக்க. அற்றன்று. கண்ணஞ் சேந்தனார் சாத்தந்தையார் மகனார். அச்சாத்தந்தை யார், சாத்தனாகிய தந்தையையுடையார். ஆகவே, சாத்த னுடைய மகனார்க்கு மகனாகிய கண்ணஞ் சேந்தனார் என்பது, அஃதன் பொருள் ஆவது: சாத்தன் பாட்டன் பெயர், சாத் தந்தை தந்தை பெயர்; கண்ணஞ் சேந்தன் என்பது மகன் பெயர் எனின், இவ்வாறு கூறுதல் ஒன்றைவிட்டுப் பிறிதொன் றைப் பற்றுதல் என்னும் தோல்வித்தானமாம்.

அன்றியும், இச்சாத்தந்தையோடொக்குமது சிலப்பதிகா ரத்துக் கூறப்படும் கீரந்தை என்னும் பெயரும். அதனையும் நிமித்தமின்றிப் பொருளே பற்றி வந்த இடுபெயர் எனக்கொள்ளு மிடத்து யாதோர் இடர்ப்பாடுமின்றிக் கீரந்தைக்கு மனைவி எனக் கீரந்தை மனைவி என்னும் தொகை, பொருள் பயக்கு மாறும் அறிக. இவற்றால் 6, 7, (அநுவாதம்) மறுக்கப்பட்டன.

அவ்வாறின்றி, அன்மொழித் தொகையெனக் கொள்ளின் அதனை அன்மொழித் தொகையாகக் கொள்ளுதற்குச் சூத்திரம் இடங்கொடுத்தல் நிரூபிக்கப்படல் வேண்டும். வேற்றுமைப் பொருட் புணர்ச்சியே அச்சூத்திரங் கூறினமை மேலேகாட்டி னோம்.

அன்றியும், கீரந்தை மனைவி என்னும் தொடருள், கீரந்தையென்பது கீரனுக்குத் தந்தையெனப் பொருள் பயந்த் தெனின், கதையால் அவனுக்கு அப்படி ஒரு மகனிருந்ததாகத் தெரியவில்லையாதலின் அவ்வாறு கொள்ளுதல் பொருந்தாது என்று ஐயவியாசத்துள் கூறப்பட்டிருக்கிறது. நன்று. அன் மொழித் தொகைப்பொருள் விரித்தாலும் அத்தகைய இடர்ப் பாடில்லையா யொழியுமாறுண்டோ?

கீரனாகிய தந்தையையுடையான் மனைவி என அதற்குப் பொருள் விரித்தால் காசிக்குச் சென்ற அவ்வந்தணனைத், தந்தையையுடையனாக அடிகள் குறித்தாராதல் வேண்டும். வேண்டவே அவள் தன்மாமனாரின் பாதுகாவலையுடைளாயிருந்தேயும் துணையில்லாதவளாகக் கூறப்பட்டிருப்பது உலகமலைவாகாதோ?

இனி, ஆந்தை, பூந்தை முதலிய தொகைகளும் சாத்தந்தை கீரந்தை முதலிய தொகைகளோடொத்த இலக்கணமுடையன. அவை, சாத்தன், கொற்றன் என்னும் இயற்பெயர்போலாது, "பெயரொற்ற கரந்து வரக்கெடும்." இயல்பினவாகலின் சிறப்பு விதிபெற்றன.

சிறப்புவிதிபெற்று முடிந்த இத்தொகைகள் தாமும் சாத்தந்தை, கொற்றந்தை முதலியனபோலவே வேற்றுமை வழியிலேதான் விரிக்கப்படும் இயல்பினவாம்.

ஆகவே இவை ஆதனுக்குத் தந்தை, பூதனுக்கு என்றே தான் விரிக்கப்படும். ஆதலின் இவற்றால் அன்மொழித் தொகைப் பொருள்பட விரித்தலே மிகையுடைத்தாம் என்பதும் புலனாம். ஆகவே அநுவாதம் 5 நிலைபெறாது.

இவ்வாறு சிறப்புவிதிபெற்று முடிந்த தொகையாகிய ஆந்தையென்னும் காரணப் பெயரும் வேறு; நிமித்தமின்றி வரும் இடுபெயராகிய ஆந்தையும் வேறு; இவ்விரண்டையும் ஒன்றெனக் கொள்ளும்போதுதான் இடர்ப்பாடுகள் தோன்றுகின்றன.

இதுகாறுங் கூறியவாற்றால், வருமொழி முறைப்பெயராகிய தொகைகளை வேற்றுமைத் தொகைகளாகவே கொள்ள வேண்டும் என்பதும் அவற்றை விரிக்குமிடத்து உயர்திணைத் தொகைவயின் அதுவென் உருபு விரியாது அதன் உடைமைப் பொருள் பயக்கவரும் எனப்பட்ட இவ்வுருபே கொடுத்து விரிக்க வேண்டுமென்பதும், ஆந்தை, சாத்தந்தை என்பன நிமித்தம் பற்றிய காரணப் பெயர்கள் என்பதும், இவற்றை அன்மொழிப் பொருள்படவிரித்தல் இலக்கணகாரர் கருத்தோடு மாறுபடுவதாம் என்பதும் இக் காரணப் பெயர்களை வடிவால் ஒக்கும்

இயற்பெயர்களும் உண்டு என்பதும் அவற்றையும் இவற்றையும் ஒன்றெனக் கொண்டு ஆராய்வது இடர்படுத்தும் என்பதும் பிறவும் கூறப்பட்டன.

இலக்கணக்கொத்து, பிரயோக விவேக முதலிய நூல்களுள்ளும் ஆந்தை முதலிய தொகைகள் வேற்றுமைத் தொகையென்றே கூறப்பட்டிருத்தலும் நாம் உளங்கொளத் தகும்.

இவற்றுள் பொருந்தாதன உளவெனில் (வசை மொழியின்றித்) எடுத்துக்காட்டித் திருத்தின் மெய்ப்பொருள் அறிந்து என்போலும் இளையோர் பெரும்பயன் எய்துவர்.

## கருதலளவைப் பகுதி.



திரு. த. இராமநாதபிள்ளை அவர்கள்,
சாவகச்சேரி, இலங்கை.

## 2-ம் அதிகாரம்.

(முற்றொடர்ச்சி 369-ம் பக்கம்)

### 11. வகுத்தற்றிருட்டாந்தம். புணர்த்தற்றிருட்டாந்தம் (Analytic and Synthetic.)

ஒரு தாட்டாந்தம் வகுத்தலறிவையோ புணர்த்தலறிவையோ உணர்த்துகின்றதென்பதை விளக்குதற்கு உளநூலே உரித்துடையது. வகுத்தலறிவு என்னவோவெனின் கூறுதும். தான் உணர்ந்ததோர் யூகத்தை ஆசிரியன் வகுத்துக் காட்டும் ஞானசக்தி என உளநூலார்கூறுப. கற்பிக்கும்போது மனிதன் ஒரு பகுத்தறிவுள்ள பிராணி என்புழி மனிதனது பண்பும் பிராணியினது பண்பும் ஒன்றென்பதும் மனிதனுடைய பல பண்புகளில் பிராணித் தன்மை ஒரு பண்பென்பதும் மனிதன் பகுத்தறியும் ஆறறிவுடைய பிராணிகளின் இனத்தை சேர்ந்தவன் என்பதும் ஆசிரியரால் வகுத்து மொழியப்படுமாகலால் ஆசிரியருக்கு அது வகுத்தலறிவே. இனி ஒருவன் தனது

ஞான சக்தியால் உள்ளக் காட்சிகளைப் புணர்த்தி ஒரு யூகத் தைத் தேர்வானுயின் அவ்யூகம் புணர்த்தலறிவாகும். மாண வன் பிராணியென்னும் காட்சியையும் மனிதனென்னும் காட்சி யையும் விடயித்து இரண்டன் பொதுத் தன்மையை யூகித்து உணர்ந்தமையால் அது மாணவனுக்குப் புணர்த்தலறிவாயிற்று. பயிர்நூலோர் இன்ன இன்ன பயிர்கள் இன்ன இனத்தைச் சேர்ந்தவையெனப் பயிர் வகுப்புக்களை வகுத்தே காட்டுகின்ற னர். பயிர்நூல் கற்போர் நூலிற் கூறப்படாத ஒரு பயிரைக் கண்டு அதன் பண்புகளை ஆராய்ந்து இது இன்ன இன்ன இனத் தைச் சேர்ந்ததென மொழிதல் புணர்த்தல் யூகமாகும். தத்துவ நூலோர் தம் பிரமாணங்களை வகுத்தல்யூகமாகவே மொழி கின்றனர். முதன்முறை ஒரு உணர்வை உணர்ந்தபோது தத் துவஞானிகளும் புணர்த்தல் முறையாகவே உணர்ந்திருப்பர். தத்துவம்அசி=(நீ அதுவே ஆகின்றாய்) என்புழி அவ்வனுபூதி தானே கண்டறிந்தும் பிறர்க்கும் சொல்லவியலாதுமாக லான் புணர்த்தல் அறிவே. இங்ஙனம் அறிவு புணர்த்தல் முறையாகத் தோற்றி ஆராய்ச்சி பெருகப் பெருக வகுத்தல் முறையாக விளக்கப்படும்.

## 12. கூட்டுத்தாட்டாந்தம் (Compound Proposition.)

ஒரு வசனம் இருதாட்டாந்தமுடையதாயின் அவற்றைப் பிரித்து மொழிதல்வேண்டும். பொன்னும் வெள்ளியும் விலை யுயர்ந்தவை என்பது பொன் விலையுயர்ந்தது வெள்ளி விலையுயர்ந் தது என விரியும். அகப்பொருளன்றிப் புறப்பொருளும் கற் றற்குரியது என்பது அகப்பொருள் கற்றற்குரியது, புறப் பொருள் கற்றற்குரியதென இருதாட்டாந்தமாகும். கந்தனும் வந்தான் என இறந்ததுதழூஉவியவெச்சவும்மை வந்துழி, பிறரும் வந்தார் கந்தனும் வந்தான் என இருதாட்டாந்தமாகப் பிரித் துரைக்க. பிற வசனங்களையும் ஏற்றபெற்றி விரித்துரைக்க.

## 13. பிரிநிலைத் தாட்டந்தம் (Exceptive Proposition.)

ஒரு வசனத்தின்கண் ணமைந்த பிரிநிலை ஏகாரம் பிரி நிலைத்தாட்டாந்தங்களை உணர்த்தும். பண்டிதர்களே தகுதி

யுடையோர் என்பது பண்டிதர்கள் எல்லாரும், குறிக்கப்பட்ட ஒரு தொழிலுக்குத் தகுதியுடையோர் என்பதை உணர்த்துமெனின், அற்றன்று மக்கள் வகுப்புகள் பலவுள. அவற்றுள் பண்டித வகுப்புச் சேர்ந்தோருட் சிலர் இத்தொழிலுக்குத் தகுதியுடையோராவர் என்பது பொருள். தெரிவு செய்யும் போது பண்டித வகுப்புச் சேர்ந்தோரே தகுதியுடையோராகத் தீர்மானிக்கப்படும். எல்லாப் பண்டிதர்களும் அத்தொழிலுக்குத் தகுதியுடையோரென நிச்சயிக்கப்படவில்லை. பிரி நிலைத் தாட்டாந்தத்திற்கு இருமுறையாகப்பொருள் உரைக்கலாம். பண்டிதரல்லாதோர் தகுதியற்றவர் என்பது பிரதானமான பொருள். அன்றியும் பண்டிதர்கள் சிலர் தகுதியுடையோரென்பதும் பெறப்படும். பண்டிதரல்லாதோர் ஒருவரும் தகுதியுடையோரல்லர் என எதிர்மறைப்பொதுவாய்ப் பொருளுரைப்பதே வழக்கு.

## 14. தாட்டாந்தத்தின் உள்ளுறை (Import of Proposition.)

தாட்டாந்தம் ஒரு யூகத்தின்பொருளை யுணர்த்துகிறதோ அன்றி ஒரு எழுவாய்க்கும் ஒருபயனிலைக்கும் உள்ள தொடர்பை உணர்த்துகின்றதோவென ஐயம் எழும். நினைவுலகில்தோன்றும் ஓர்யூகத்தையே தாட்டாந்தம் மொழிகின்றதென்பது திண்ணம் பதங்கள் எழுவாயாகவும் பயனிலையாகவும் தம்முள்ளியைந்து ஒரு யூகப்பொருளை உணர்த்தும். தாட்டாந்தத்திற்கு நால்வகை மதம் பற்றிப் பொருளுரைக்கலாம். பொருள்விரி யுள்ளுறை குணவிரியுள்ளுறை, உரிநிலையுள்ளுறை, பயனிலையுள்ளுறை என நான்கு மதமுண்டு. உள்ளுறை எனினும் பொருள்கோள் எனினும் ஒக்கும். எழுவாயையும் பயனிலையையும் முறையே குணவிரியிலும் பொருள்விரியிலும் இரண்டிலும் ஆராய்ந்தால் இம்மத வேறுபாடு உண்டாகும். இந்நான்குமதங்களுள் பொருள்விரி மதமும் பயனிலை மதமும் சிறந்தனவென்பதைக் காட்டுவாம். யூகங்களை நால்வகை மதத்துள் ஒருநெறி பற்றித் தாட்டாந்தமாக உரைக்கலாம். எம்மதம் தழுவுதல் சிறந்ததென்பது தேர்தற்குரியது.

## 15. பொருள்விரியுள்ளுறை மதம் (Denotative View:Class View.)

ஒருசாரார் எழுவாயையும் பயனிலையையும் பொருள்விரியில் நோக்கி உள்ளுறையை உரைத்தலே முறையெனத் தம்மதம் நாட்டுகின்றனர். எழுவாயும் பயனிலையும் இருவகுப்புக்குள்ள தொடர்பையே உணர்த்துகின்றன. ஆதலின் அவற்றின் பொருள் விரியை நிச்சயிக்கவேண்டும். மக்கள் இறக்குந் தன்மையர் என்புழி மக்கள் ஒருவகுப்பென்றும் இறக்குந்தன்மையர் ஒருவகுப்பென்றும் இருவகுப்புக்குள்ள தொடர்பே குறிக்கப் படுகின்றதென்றும் மொழிவர். இறக்குந் தன்மையர் என ஒரு வகுப்பு இயற்கையில் இல்லையாகையால் இத்தாட்டாந்தத்தைப் பொருள்விரி மதந்தழுவி விளக்கலாகாதெனச் சிலர் கண்டிப்பர். இது நிற்க. கோட்டான்கள் பறவைகள் என்புழி இருவகுப்பு களுக்குள்ள தொடர்பே தாட்டாந்தவுள்ளுறை என்பது பொருந் தும். கோட்டான் என்னும் எழுவாய் ஈந்திருக்கிறதென்றும் கோட்டான் ஒவ்வொன்றின் இயல்பும் தெளியப்பட்டதென்றும் பல கிளைவகுப்புகளை உடைய பெரியதோர் வகுப்பே பறவை வகுப்பென்றும் இம்மதத்தோர் செப்புவர். கோட்டான்கள் தம்மினத்தைச் சேராத யாதானும் ஓர் வகுப்பைச் சேர்ந்தன வல்லனவென்பது தெற்றெனவிளங்கும். இங்ஙனம் இக்கோட் டான் பறவை இக்கோட்டான் பறவையெனப் பலகாட்சிகளைக் கொண்ட ஒரு கூட்டுத் தொகையே எல்லாக் கோட்டான்களும் பறவை என்னும் தாட்டாந்தம். இவ்வாறு ஒரு முதல் வகுப் புக்கும் அதன் சினை வகுப்புக்குமுள்ள தொடர்பையே யூகிக் கிறேம். எழுவாய் ஒரு வகுப்பையும் பயனிலை வேறோர் வகுப் பையும் குறிக்கும். இவ்விரு வகுப்பும் வியாபக வியாப்பியமாய் ஒன்று ஒன்றனுள் அடங்குமாயின் அச்சம்பந்தத்தை ஒருயூக மாக மொழிகிறேம். தாட்டாந்தம் எழுவாய் வகுப்பு பயனிலை வகுப்பில் ஒடுங்குவதைக் குறிக்கின்றதென பொருள்விரியுள் ளுறை மதத்தோர் செப்புகின்றனர்.

இம்மதம்இழுக்குடைத்து. குற்றுயிர்கள் உயிரெழுத்துக்கள் என்புழி ஐந்து குற்றுயிரும் பன்னிரண்டு உயிர்களுள் அடங்கு மென்பதை மாத்திரம் உணர்த்துகிறேமன்றி ஐந்து குற்றுயிர்

களும் நெட்டுயிர்களோடு இனமுடையனஎன்பதையும் உணர்த்துகிறேம். குற்றுயிர்களும் நெட்டுயிர்கள்போல உயிர்த்தன்மையுடையன எனப்பொருள் கோடல்தகும். யூகம் ஒரு பொருளுக்கும் அதன் பண்புக்குமுடைய தொடர்பைக் குறிக்குமென்பதைப் பொருள் விரியுள்ளுறை மதத்தோர் விளக்காதொழிந்தனர். ஆதலின் பொருள் விரியுள்ளுறை மதத்தைச் சார்தல் ஒருபாற் கோடுதலாகும். கருதல் முறைகளை இளைஞருக்கு விளக்குதற்கு இப்பொருள் விரியுள்ளுறை மதம் போற்றப் படுகின்றது.

## 16. குணவிரியுள்ளுறை மதம் (Connotative View.)

சிலர் எழுவாயையும் பயனிலையையும் குணவிரியுடையனவாகப் பொருளுரைத்து தாட்டாந்தவுள்ளுறை இருபண்புகளுச்குள்ள தொடர்பேயென மொழிவர். மனிதன் இறக்குந் தன்மையன் என்புழி. மனிதனது தன்மை அழியுந்தன்மைத்து என்பர். யூகம் யாக்கை நிலையாமையை உணர்த்திற்று. இம் மதத்தோர் மக்கள் இறக்குந் தன்மையர் என இருவகுப்புக்கள் உலகில் இல்லை எனச் செப்புவர். யூகங்கள் பண்பிக்கும் பண்புகளுக்குமுள்ள தொடர்பை மொழியாவென்றும் இருபண்புகளுக்குமுள்ள தொடர்பை மொழியுமென்றும் சொல்வர். இம் மதம் இழுக்குடையது.

மனிதன் இறக்குந் தன்மையன் என்புழி, பொருளுக்கும் அதன் பண்புக்குமுள்ள தொடர்பையே யூகம் சுட்டுகிறது. மனிதனென ஒரு பண்பில்லை. மனிதனென ஒரு பண்பு உண்டெனின், இருபண்புகளுக்குள்ள தொடர்பே மொழியப்படும். குணவுலகிற்கு வேருய் பொருளுலகம் உண்டென்பது உண்மையாகையால் இம்மதந் தழுவிப் பொருளுலகத் தொடர்புகளை மொழிய வியலாது. புணர்த்தலறிவை உரைக்கும் வடிவக் கணிதம் முதலியவற்றின் தாட்டாந்தங்களுக்கு இம்மதந்தழுவிப் பொருளுரைக்கலாம். எழுவாய் பயனிலை என்னும் பதங்களில் ஒன்றேனும் பொருள்விரியில் ஆராயப்படாதிருப்பின் வகுத்தலறிவை மொழிய வியலாது. குணவிரி பொருள்விரி எனும்

இருமதத்தையும் ஒருவாறு சாரும். பயனிலை மதந்தழுவினால் வகுத்தலறிவையும் புணர்த்தலறிவையும் தாட்டாந்தமாக மொழியலாம்.

### 17. உரிநிலையுள்ளுறை மதம் (Attributive View.)

உரிநிலை யுள்ளுறை மதமேற் கொள்வோர் எழுவாயைக் குணவிரியிலும் பயனிலையைப் பொருள் விரியிலும் கருதி உள்ளுறையை உரைக்கின்றனர். சில பண்புகள் தொகுதியாக நின்று ஒரு பொருளைச் சுட்டும் என்பதை உணர்த்துவதே தாட்டாந்தம். பண்புத் தொகுதிக்குரியது பண்பி. குட்டியீனுதல், பால்சுரத்தல், பயிர்களை உணவாகத் தேடுதல், நாட்டில்உலாவுதல், என்னும் பல பண்புகளை உடையது பசு. மில் என்னும் தருக்க ஆசிரியர் இம்மதந் தழுவி காரண காரியத் தொடர்பை மொழியலாமெனப் பகர்ந்தனர். மனிதன் இறக்குந் தன்மையன் என்புழி மனிதத்தன்மை அழிபொருள் ஒன்றின் சமுதாயத்தைச் சுட்டுமென்பர். இம்மதம் இழுக்குடையது.

மனிதத் தன்மையென ஒரு பண்பில்லை. பல பண்புகள் தொகுதியாக நின்றே மனிதனைச் சுட்டுமாகலான் மனிதன் என்னும் எழுவாய் பொருள்விரி குறித்துத் தேரப்பட்டது. மேலும் இம்மதத்தோர் எழுவாயாகிய மனிதனை முறை பிறழப் பயனிலையாகவே மொழிகின்றனர். இம்மதம் பயிர் நூல், விலங்கியல், நூல்களில் பெரிதும் பயன்படுமென மொழிந்தனர். அவ்வுரை பொருந்தும்பயிர்களை வகுப்புகளாக வகுத்தற்கு பண்புகளை தொகுத்து இத்தொகுதி யின்ன சாதிப் பயிர்களை குறிக்குமெனவே பயிர் நூலார் கூறுகின்றனர்.

இனி இம்மதந் தழுவிய சிலர் பயனிலை ஒரு வகுப்பையன்றிப் பல வகுப்புக்களையுடைய ஒரு வகுப்பைக் குறிக்குமென மில்லின் மதமேற்கொண்டு களைகின்றனர். பல வகுப்புகளடங்கிய ஒரு வகுப்பு மில் கூறும் ஒரு பொருளைச் சுட்டுமென்பது பொருந்தாது. பல வகுப்புகளைக் குறிக்கும் பயனிலை தொகுதியாக நிற்கும் பண்புகளுக்குரிய பண்பியைச் சுட்டாது. அன்றி எழுவாயும் பயனிலையும் இருவேறு பண்புத்தொகுதிகளை உணர்த்துமாயின் இம்மதம் பொருள்விரி யுள்ளுறை மதமாக மயங்கும்.

## 18. பயனிலை யுள்ளுறை மதம் (Predicative View.)

இனிப் பெரும்பாலும் நல்லுரை யெனப்படும் பயனிலையுள்ளுறை மதத்தின் சொரூபத்தைக் கூறுதும். எழுவாயின் பொருள் விரியைத் தேர்ந்தும் பயனிலையின் குணவிரியை ஆராய்ந்தும் ஒரு யூகத்தின் உள்ளுறையை உரைத்தலே அரிஸ்தாதிலினது மதம். இம்மதந் தழுவியே தாட்டாந்தங்களைப் பொது, சிறப்பு, உடன்பாடு, எதிர்மறை, என வகுத்தேம். மனிதன் இறக்குந் தன்மையன் என்புழி, மனிதனது ஒரு பண்பு இறக்குந்தன்மை என்பதே உள்ளுறை. அப்பண்பு உண்டென உடன்பட்டு, உடன்பாட்டுத்தாட்டாந்தமாக எமது எண்ணத்தை மொழிகிறோம்; அப்பண்பு இல்லையென மறுத்து எதிர்மறையாகவும் மொழிகிறோம். எல்லாரும் இறக்குந் தன்மையரோ அன்றிச் சிலர் இறக்குந் தன்மையரோவென சிந்திக்கிறோமாகையால், எழுவாயின் பொருள் விரியை ஆராய்கிறோம். இம்மதந்தழுவி வகுத்தலறிவையும் புணர்த்தலறிவையும் மொழியலாம். தாட்டாந்தம் எழுவாய்க்கும் பயனிலைக்கும் உள்ள தொடர்பை மறைத்து தாட்டாந்த வுள்ளுறையை ஒருயூகமாக மொழியவேண்டுமாகலான் இம்மதம் சிறப்புடையது. ஒருயூகம் பலசிந்தனைகளை சாதனமாகக்கொண்டு பெறப்படும். கருதலளவை முறைகளில் இம்மதம்பற்றியே கருதுகிறோம். இம்மதத்தைச் சிறிது விகற்பித்து எழுவாயையும் பயனிலையையும் பொருள்விரியில் நோக்கி யூகப்பொருளை விளக்கல் இலகுவாகும். அவ்வாறு பொருள்விரி குணவிரி இரண்டையும் நோக்கியே வரைவிலக்கணங்கள் வரையப்படும். இம்மதந்தழுவிக் காரண காரியத் தொடர்புகளையும் மொழியலாம். இம்மதந் தழுவியே பயனிலைகளின் இயல்பையும் எழுவாய்ப்பொருள்களின் பொருள் விகற்பங்களையும் அரிஸ்தாதில் கிளந்தனர்.

## 19. அப்பியாசம்.

ஒரு வசனத்தின் பொழிப்பு நன்கு புலப்படினும் உடன் கருதலில் அப்பியாசிக்கு முன்னர் வசனங்களைத் தாட்டாந்த முறையாக மாற்றுதல் அவசியம்.

எழுவாயையும் பயனிலையையும் ஆராய்ந்து அவற்றின் எண்ணைக் குறித்துத் தாட்டாந்தத்தின் தன்மையை ஆராய்க. வசனத்தை தாட்டாந்தமாக்கத் தாட்டாந்தப் பொருள் தெளிவாகும்.

1 இரக்கம் இயல்பாக எழும் மெய்ப்பாடு.

எப்பொழுதும் இரக்கம் இயல்பாகவெழும் மெய்பாடென உடன்பாட்டுப் பொதுவாதலறிக.

2 அறிவு என்பது ஞாபகமே.

எல்லா அறிவும் ஞாபகம் என உடன்பாட்டுப் பொதுவாகும்.

3 மதுரைத் தமிழ்ச் சங்கம் பழையது.

எல்லா வகையானும் மதுரைத் தமிழ்ச்சங்கம் ஒருபழைய கல்லூரி. இத்தாட்டாந்தம் உடன்பாட்டுப் பொதுவாகும்.

4 அளவை நூல்களை உணர்தல் அருமை. ஒருபொழுதும் தருக்கநூல் இலகுவாய் விளங்காது என எதிர்மறைப் பொது வாகும்.

5 ஆற்றல் என்பது அறிவு. உடன்பாட்டுப்பொது.

6 பழைய முறைகளே நல்ல.

சில முறைகள் நல்லவை எனச் சிறப்பாகும்.

7 ஒன்றன் பழக்கத்தால் உணர்ச்சிகெடுகின்றது. (பொது)

8 அரசனைத் தவிர வீரர் யாவரும் ஓடினர்.

அரசனும் ஒரு வீரனுகையால் வீரர் சிலர் ஓடினுரெனச் சிறப் பாகும்.

9 சிலவேளைகளில் எங்கள் முயற்சிகள் வீண்.

சில முயற்சிகள் வீணனவை எனச் சிறப்பாகும்.

10 எல்லாரும் விவேகிகள் அல்ல.

சிலர் விவேகிகளல்ல என எதிர்மறைச் சிறப்பாகும்.

11 ஒடுங்கின சங்காரத்தினன்றி உற்பத்தியில்லை. யாண்டும் உற்பத்தி ஒடுங்கின சங்காரத்திலுள்ள ஒரு பொருளென உடன்பாட்டுப் பொதுவாகும். ஒடுங்கின சங்காரமல்லாத

54

ஒன்றும் உற்பத்தியை உடையதல்ல என எதிர்மறைப் பொது வாகவும் கூறலாம்.

12 வான் விழுமாயின் வானம்பாடிகளைப் பிடிப்போம். வானம் விழும்போதெல்லாம் வானம்பாடிகள் பிடிக்கப்படும் பொருள்கள் என உடன்பாட்டுப் பொதுவாகும்.

13 வாழ்க அந்தணர் என்புழி எல்லா அந்தணரும் வாழக் கடவர் என்பது பொருள். வேந்தனும் ஓங்குக என்புழி நம் வேந்தன் எல்லா முறையானும் ஓங்குக எனப்பொருள் தருத லால் தனித்தாட்டாந்தமாகும்.

(தொடரும்.)

## சிலசொற்களின் பொருள்கள்.

திரு. வே. வேங்கடராசலு ரெட்டியார் அவர்கள்,
தமிழ்ப்பேராசிரியர், பல்கலைக்கழகம் சென்னை.

(முற்றொடர்ச்சி துணர் 10. மலர் 9. பக்கம் 398.)

மாந்தர் எனனுஞ் சொல்லில் பலர்பால் விகுதியாகிய அர் நீங்கின், மாந்து என்பது எஞ்சி நிற்கும். இதில் து—சாரியை எனக் கொள்ளத் தகும். (இதனைக் குறித்துப் பின்னர் ஆராய் வல்). இனி, மாந் என்பது மகன் என்னுஞ் சொல்லின் மரூஉ வாகும். மருகன் என்பது மருமான் என வருதல் அறிது மன்றே! ஆகவே, மகன்+து+அர் என்பதை மாந்தர் என்று பின என்பது போதரும். ஆயின், மகன்+து+அர் என்பவை மகன்றர் என்றாகும். அது மருவின் மான்றர் என்றே நிற்கும். அது மாந்தர் என்றாதல் அமையாதே எனின் கூறுவல். பின் என்னுஞ் சொல்லோடு து—சேரின், பின்று என்றாகும். அது பின்றினன் என்று இறந்தகால வினையில் வருதல் கூடும். அதுவே, பிந்து என்றும், பிந்தினன் என்றும் வருதல் யாங்கனம் அமையும்? இவ்வாறே, முன் என்னுஞ் சொல்லோடு து—சேரின் முன்று என்றும், அஃது இறந்தகாலவினையில் முன்றினன்என்றும்

வருதல் வேண்டுமே? அவ்வாறு வந்துள்ளனவோ? பழைய நூல்களில், முந்து என்றல்லாதே முன்று என்று வந்திலதே.

'முந்துவளி தோன்றி' (தொல் பிறப்பு 1.)
'முந்துகிளந் தன்ன' ( ,, உயிர் 84.)
'அருள்முந் துறுத்த' ( ,, கற்பு 20.)
'பற்று மாக்களிற் பரிவு முந்துறுத்த' (புறம். 29)
'அறிவனை முந்துறீஇ' (குறிஞ்சிக்கலி 3.)

என்பன போல்பவை காண்க. இனி,

'வந்தடி பொருந்தி முந்தை நிற்பின்' (புறம் 10)
'முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பின் (நற். 355)

என்பன போன்ற இடங்களில், முந்தை (முன்+து+ஐ) என்றல்லாதே முன்றை என்று வந்திலதே! இவற்றால், மான்றர் என்று வாராது, மாந்தர் என்று வருதலே வழக்காறுதல் பெறப்படும்.

இவ்வாறே, உயர்திணைப் பெயர்களுக்கு முன் பலர்பால் விகுதியாகிய *இர் என்பது வந்துசேருமிடத்து, அவற்றின் இடையே து—சேர்ந்த உருவம் கன்னட மொழியில் காண்கின்றது.

அண்ணo திர்—அண்ணந்திர்
மாவo திர் —மாவந்திர்
பாவo திர் —பாவந்திர்
அய்யo திர் —அய்யந்திர்
அக்கo திர் —அக்கந்திர்
அவo திர் —அவந்திர்
இவo திர் —இவந்திர் என்பன காண்க.

இனி தமிழிலும் பெயர் முதனிலைக்கும் விகுதிக்கும் இடையே து—சேர்ந்த சொல் வழங்குகின்றது.

ஒருத்தன்—(ஒரு+து+அன்)
ஒருத்தி —(ஒரு+து+இ)

---

* இர்—என்பதனை விகுதி எனக்கொள்ளாமல், திர் என்பது விகுதி என்று இலக்கண நூலார் கூறியுள்ளனர். இது தமிழில் பெண்டிர் என்பதில் திர் என்பது விகுதி என்றலை யொக்கும்.

என்னுஞ் சொற்களில் து—சேர்ந்துளது காண்க. இனி, ஆடூஉ, மகடூஉ, அழிதூஉ என்பவற்றிலும் து—சேர்ந்துள்ளமை அறியத்தகும். இவ்வாறு வந்துள்ள து—என்பதே தெலுங்கு மொழியில் ஆண்பால் விகுதியாகக் கொள்ளப்பட்டுள்ளது.

(மகன் + து = மகன்று—) மகண்டு (கணவன்)
(அவன் + து = வான்று—) வாண்டு
(இவன் + து = வீன்று—) வீண்டு
(ராமன் + து = ராமன்று—) ராமுண்டு

என்று தெலுங்கில் வழங்குதலின், இவற்றில் விகுதியாயிருப்பது, து—என உண்மை அறியகில்லராய், டு—என்பதுவே ஆண்பால் விகுதி என்று அம்மொழியின் இலக்கண நூலார் கூறுவாராயினர். இன்னுந் தெலுங்கில்,

(மகண்டு + ர் =)மகண்ட்ரு—(மகன் + து + ர்)
(வாண்டு + ர் =)வாண்ட்ரு—(அவன் + து + ர்)

என்று வழங்கும் பன்மைச் சொல்லை நோக்கின், கன்னட மொழியிற் போலவே பலர்பால் விதிக்குமேல் து—சேர்ந்துளது என்று அறிதல் கூடும்.

இதுகாறும் கூறியவற்றால், மாந்தர் என்னுஞ் சொல்லில் மான் (மகன்) என்பதன் முன் 'து' சேர்ந்து வருதல் கூடும் என்பது நன்கு அறியப்படும்.

---

## வீரசோழிய உரையாசிரியர் காலம்.

---

திரு. E. R. நரசிம்ம அய்யங்காரவர்கள் B. A., B. L., சேலம்.

---

முற்றொடர்ச்சி துணர் 10. மலர் 9. பக்கம் 392.

இனித் தண்டியலங்காரச் சிறப்புப் பாயிரத்தால் தண்டியாசிரியரை யறிதலன்றி வேறு நூதன விஷயங்களும் அறியலாகும்.

"வடதிசை யிருந்து தென்மலைக் கேகி
மதிதவழ் குடுமிப் பொதிய மால்வரை

இருந்தவன் றன்பா லருந்தமி ழுணர்ந்த
பன்னிரு புலவரின் முன்னவன் பகர்ந்த
தொல்காப் பியநெறி பல்காப் பியத்தும்
வடநூல் வழிமுறை மரபினின் வழாஅது
ஈரிரண் டெல்லையி னிகவா மும்மைப்
பாரத விலக்கணம் பண்புறத் தழீஇத்
திருந்திய மணிமுடி செம்பிய னவையத்
தரும்பொருள் விளங்க யாப்பின் வகுத்தனன்
ஆடக மன்றத்து நாடக நவிற்றும்
வடநூ லுணர்ந்த தமிழ்நூற் புலவன்
பூவிரி தண்பொழிற் காவிரி நாட்டு
வம்பவிழ் தெரிய லம்பி காபதி
மேவருந் தவத் தினிற் பயந்த
தாவருஞ் சீர்த்தி தண்டியென் பவனே.''

தண்டியலங்காரச் சிறப்புப்பாயிரம்.

இச்சிறப்புப் பாயிரத்தால் அலங்கார நூலின் ஆசிரியர் தண்டியாரென்பதும், இவர் தந்தையின் நாமம் அம்பிகாபதியென்பதும், இத்தந்தையார் வடமொழியில் வல்லுநராய தமிழ்நூற் புலவரென்பதும், இவர் காவிரி நாட்டில் ஓரூருக்குரியவரென்பதும் நாடகத்தொழில் பூண்டவரென்பதும் விளங்குகின்றன.

தண்டியலங்காரவுரையில் இருபொருள் வேற்றுமைச் சமத்திற்குக் காட்டிய,

“சென்று செவியளக்குஞ் செம்மையவாய் சிந்தையுள்ளே
நின்றளவி லின்ப நிறைப்பவற்றுள்—ஒன்று
மலரிவருங் கூந்தலார் மாதர்நோக் கொன்று
மலரிவருங் கூத்தன்றன் வாக்கு” என்னும் வெண்பாவில் கூத்தன்புலவர் மலரியூருக் குரியவராகப் புகழப்பட்டிருத்தல் காண்க. சிறப்புப்பாயிரத்தில் இம்மலரியூரின் பெயரை “வம்பவிழ் தெரியல்” எனப் பரியாயமாகவும் சமத்காரமாகவும் கவி கூறினரெனக் கொள்ளக் கிடக்கின்றது காண்க. இங்குக் கூத்தன் எனக் குறிக்கப்பட்டவர் நாடகத் தொழிற்பூண்ட அம்பிகாபதியாவர். எனவே 12-ம் நூற்றாண்டினிடையில் செய்யுள்

ஒட்டிப் பாடுவதில் புகழ்பெற்ற ஒட்டக் கூத்தரும், நாடகத் தொழிலிற் சிறந்த அம்பிகாபதிக் கூத்தரும் என இருகூத்தர் 2-ம் இராசராசனவையில் வீற்றிருந்தாரெனத் தெரிகின்றது. இவர்களை வேறுபடுக்கவே இங்கு மலரிவருங் கூத்தனென்றார் போலும். இங்குக் கூறிய "கூத்தன்" என்பவர் ஒட்டக் கூத்தராகுமென்று அறிஞர் கூறுவாருளரெனின்,

"துளைபடு மாமர மோரேழு மெய்தவன் தூதுகவி
வளைபடு வாரிதி யொன்றே கடந்த தொளிர்தரள
வளைபடு ஆலி மணவைமன் கூத்தன் வகுத்தகவி
தளைபடு காலுட னேகட லேழையுந் தாண்டினதே"

என்னும் தனிப்பாடற்றிரட்டுச் செய்யுளால் ஒட்டக்கூத்தர் ஆலிநாட்டிலுள்ள மணவூரினராவரென விளங்குதலால், மறுக்க. மற்றும் ஒட்டக் கூத்தர் காழியூரினராவரென,

"கம்பனென்று தாதனென்றும் காழியொட்டக்கூத்தனென்றும்"

என்னும் முதலையுடைய செய்யுளைக் காட்டுவாருமுளர். கம்பனோடு தாதனும், நம்பிகாழிப் புலவரோடு ஒட்டக்கூத்தரும் கவிப்போர் நடத்தினரெனக் கூறும் கதையைக் குறிக்கும். காழியென்பது சீகாழியைக் குறிக்குமெனினும் காழியும் ஆலி நாட்டைச் சார்ந்ததாகலின் மணவையெனக் கூறியிருப்பதும் இழுக்காது. மலரிக்கூத்தராகிய அம்பிகாபதி காவிரி நாட்டினராகவும் ஒட்டக்கூத்தர் ஆலி நாட்டினராகவும் வழங்கப்பட்டது தெளிவாம். "மலரிவருங் கூத்தன்றன் வாக்கு" எனக் கூறப்படுதலால் இவ்வம்பிகாபதிக் கூத்தனார் இயற்றிய நூல்கள் யாவையென ஆராயவேண்டும்.

"ஆரவார விலக்கண நூலைந்து முழங்க வதிற் கெதிர்நூல்
பாரின்மீது தமிழ்க்கூத்தன் பாடியமைத்தான் பயனோர்க்தே
வீர சோழ னுடனிருந்து வியந்தே வீர சோழியநூல்
வார மேற வரங்கேற்றி வைத்தார் சோழ மண்டலமே"

என்னும் சோழமண்டல சதகத்தால் (95-ம் செய்) இவ்வம்பிகாபதிக் கூத்தர் ஐந்திலக்கணநூல் இயற்றினரென்பது அறியலாகும். தமிழ் கூத்தன் எனக் கூறப்பட்டதால் அம்பிகாபதி என்பது திண்ணம், இவர் தமது புதல்வர் தண்டியாரைக்கொண்டு

அலஙகார நூல் பாடுவித்தாரென்றும் மற்றை நான்கிலக்கண நூல் இவர் இயற்றினரென்றும் கொள்ளுதலமையும். தண்டியலங்காரவுரையியற்றினவர் சிறப்புப்பாயிரத்தில் அம்பிகாபதிப் புலவரைப் புகழ்ந்ததுமன்றி உரையிலும் "சென்று செவியளக்கும்" என்னும் முதலையுடைய செய்யுளிலும் இவரைப் புகழ்தலால் உரையியற்றிவருக்கு இப்புலவர் ஞானசிரியராவரென்னலாம். இவ்வம்பிகாபதியே கண்டனலங்காரம் இயற்றியவாசிரியரென்று ஊகிக்க இடமுண்டாதலான் முற்கூறியவாறு கண்டனலங்காரச் செய்யுட்களையே உதாரணமாக தண்டியலங்காரவுரையில் உரையாசிரியர் அமைத்தாரெனலும் அமையும். எனவே தண்டியலங்காரமும் அதன் உரையும் சமகாலத்தினவாகல் வேண்டுமென்பதும் 12-ம் நூற்றாண்டினிடைக் காலத்தியவென்பதும் புலனாகும். இக்காலத்து இயற்றப்பட்ட வேறு நூல்களுக்கும் இவ்வம்பிகாபதிப் புலவர் ஆசிரியராக ஊகிக்கவுமிடமுண்டு.

தக்கயாகப்பரணி. இந்நூலுக்கு ஆசிரியர் ஒட்டக்கூத்தராவரென்பதற்கு ஆதாரம் நூலில் இல்லை. உரையாசிரியர்,

செருத்தற் தரித்துக் கலிங்கரோடத்
　　தென்றமிழ்த் தெய்வப் பரணிகொண்டு
வருத்தந் தவிர்த்துல காண்டபிரான்
　　மைந்தற்கு மைந்தனை வாழ்த்தினவே,"

என்னும் 776ம் கண்ணியுரையில் "இப்பரணி பாடினர் ஒட்டக்கூத்தரான கவிச்சக்கரவர்த்திகள், இப்பரணி பாட்டுண்டார் விக்கிரமசோழ தேவர்," என வியக்தமாக கூறியுள்ளராதலால், தக்கயாகப் பரணிக்கு ஆசிரியர் வேறொரு கூத்தனரென்பதாக உரையாசிரியர் கொண்டாரென்பது தெளிவாம். இக்காலத்தில் கூத்தனரெனப் பெயரிய புலவரிருவர் திகழ்ந்தனராதலின் "ஒட்டக் கூத்தரான" வென்று கூறினர். இந்நூல் இயற்றியவரும் கவிச்சக்கரவர்த்தி கூத்தனரெனப்படுதலால் இக்கூத்தனர் அம்பிகாபதியாகும். தக்கயாகப் பரணிபாடியவர் ஒட்டக்கூத்தரெனின் தாம் யியற்றிய நூலை தாமே புகழ்வது தற்புகழ்ச்சியாதல் காண்க. ஒட்டக்கூத்தர் விக்கிரமசோழன் செய்த

போரைப் புகழ்ந்து பரணியொன்று இயற்றி "பெரும்பரணி" ஒன்னும் பெயரிட்டார் என்பது

"விரும்பரணில் வெங்களத்தீ வேட்டுக் கலிங்கப்
பெரும்பரணி கொண்ட பெருமாள்—தரும்புதல்வன்
கொற்றக் குலோத்துங்கச் சோழன்" குலோத்துங்கன்

உலாவால் விளங்கும். இம்முரண்பாட்டை செந்தமிழ் 29, 353-64ல் ஸ்ரீமாந் ரெ. அப்புவையங்கார் எடுத்துக் காட்டினு ராயினும் உரையாசிரியர் ஜெயங்கொண்டாரென்பதற்கு ஒட்டக் கூத்தரென்று தவருக எழுதினுரென்ருவது எழுதுவோரால் இப்பிழை நேர்ந்ததென்ருகவாவதுக் கொள்ளவேண்டுமென்ருர். இவ்வறிஞர் தக்கயாகப் பரணிக்கு ஆசிரியர் ஒட்டக்கூத்தரென்ப தற்கு இலக்கியச் சான்றுளதோவென அறிய முயன்றனரல்லர். ஈட்டி யெழுபதில் ஒட்டக்கூத்தர் பரணிபாடினுரெனக் கூறப் பட்டிருந்தாலும் தக்கயாகப் பரணி யியற்றினுரெனப்பொருள் படாது. முற்கூறிய விக்கிரமசோழனைப் பற்றிய பரணியையும் குறிக்கும். எனவே தக்கயாகப் பரணிக்கு ஆசிரியர் அம்பிகா பதியாகிய கூத்தனுரெனவே உரையாசிரியர் கொண்டாரென்பது பொருத்தமுடைத்தாதலோடு முரண்பாடு ஏற்படுவதற்கிடமின் றெனவும் கூறலாகும். இதற்குச் சான்ருக,

"ஆக்கம்பெருக்கு மடந்தை வாழியே
ஆற்றங்கரை சொற்கிழத்தி வாழியே,
கோக்கும் தமிழ்க்கொத் தனைத்தும் வாழியே
கூத்தன் கவிச்சக்கர வர்த்தி வாழியே,"

"வாழி தமிழ்ச்சொற் றெரிந்த நூற்றுறை
வாழி தமிழ்க்கொத் தனைத்து மார்க்கமும்
வாழி திசைக்கப் புறத்து நாற்கவி
வாழிகவிச்சக்கர வர்த்தி கூத்தனே."

என 813, 814ம் கண்ணிகளில் கூறியிருத்தல் காண்க.

813ங் கண்ணியின் குறிப்புரையில் பதிப்பாசிரியர் கூத்த னூரென்று ஓர் ஊர் அரிசிலாற்றங்கரையில் இருப்பதாகவும், இவ்வூர் முற்றூட்டாக ஓர் புலவருக்களிக்கப்பட்டதாகவும் கூறி யிருப்பதைநோக்கின் இவ்வம்பிகாபதிப் புலவர் ஊரும் அரிசி லாற்றங்கரையிலிருப்பதாகத் தெரிவதால் இவ்வம்பிகாபதிப்

புலவருக்கு இம்முற்றூட்டு அளிக்கப்பட்டதாகக் கோடல் பொருந்தும். இக்கூத்தர் அவைத் தலைமை வகித்தாரெனவும் இவர் ஆதரவில் நூல்கள் தொகுக்கப்பட்டனவென்பதும் "தமிழ் நூற்புலவன்" எனச் சிறப்புப் பாயிரத்திலும் "கூத்தன்றன் வாக்கு" என்று தண்டியலங்கார வுரையினும் கூறப்பட்டிருத்தலால் விளங்கும். தக்கயாகப் பரணியில் "கோக்கும் தமிழ்க் கொத்தனைத்தும் வாழியே" என்று கூறியதும் இக்கருத்தை வலியுறுத்தும். ஒட்டக்கூத்தர் பொற்காசுப் பரிசு பெற்றாரென

"தெள்ளித்தம்,
முன்னாயக ரிலவன் மூதுலாக் கண்ணிதொறும்
பொன்னா யிரஞ்சொரிந்த பூபதியும்" என்று சங்கர சோழனுலாவினும்

"கூத்தனெதிர் நுண்ணியோர் கண்ணிக்
கொராயிரம் பொனீர்ந்த வுலாவும்" என்று தமிழ்விடு தூதினும் அறியக்கிடத்தல் காண்க. அம்பிகாபதிப்புலவர் முற்றூட்டும், ஒட்டக்கூத்தர் பொற்காசும் பெற்றவராவர், அம்பிகாபதி கவிச்சக்கரவர்த்தி கூத்தனாரெனவும், ஒட்டக் கூத்தர் கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தரெனவும் வழங்கப் பட்டவராவரெனவுங் கொள்ளலாம். தண்டியலங்காரம் 12ம் நூற்றாண்டினிடையில் இயற்றப்பட்டதாகவும் வீரசோழியவுரை தண்டியலங்காரத்திற்கும் பிற்பட்டதாகவும் முற்கூறினாம். இனி இவ்விரு நூல்களுக்கும் இடைப்பட்ட காலத்தை ஆராய்வாம். இக்காலத்தை இவ்விருநூல்களில் காணப்படும் செய்யுட்களின் பாடபேதமே ஒருவாறுணர்த்தும்.

"இகன்மதமால் யானை யநபாய னெங்கோன்
முகமதியின் மூர னிலவால்—நகமலர்வ
செங்கயற்க ணல்லார் திருமருவு வாள்வதனப்
பங்கயங்கள் சாலப் பல." என்னும் செய்யுள் இருநூல்களினும் அயுத்தவேதுவுக்கு உதாரணமாகக் காணப் படினும் வீரசொழியவுரையில் "அநபாயன்" என்னும் பெயர் நீக்கப்பட்டு "இணைவரா" என்னும் சொல் செருகப்பட்டபாடம் காணப்படுகிறது. மற்றும்

மலையி னலைகடலில் வாளரவின் வெய்ய
தலையிற் பயின்ற தவத்தாற்—றலைமைசேர்
அம்மாதர் புல்லு மபயன் புயம்புணர
எம்மா தவம்புரிந்தேன் யான்'' என்னும்

வெண்பா காரகவேதுவுக்கு உதாரணமாக இருநூல்களினும் காணப்படினும் வீரசோழிய வுரையில் 3வது, 4வது அடிகள்

"பொன்மாது புல்லுபுகழ்ச் சோழன் புயம்புணர
என்மா தவம் புரிந்தோம் யாம்'' என்ற

பாட பேதத்துடன் வந்துளது. எழுதுவோரால் பிழைகளேற் படுவதியற்கை. இச்செய்யுட்கள் கண்டனலங்காரத்தைச் சார்ந் தவையாகுமென முற்கூறினும். இச்செய்தியறியாத ஓர் புலவர் எழுதுவோரால் ஏற்படும் பிழைகளை நீக்கி பொருள் பொருந்து மாறு அடிகளை மாற்றிவிட்டாரெனக் கோடலமையும். இவ்வாறு ஓர் நூலின் வரலாறு கரந்து போவதற்கும், நூல் திருத்தம் பெறுவதற்கும் பலவாண்டுகளாகுமென ஊகிக்கலாம்.

(தொடரும்.)

---

# சோழன் கரிகால் வளவன்.

(ஒரு சிறு நாடகம்.)

---

திரு. சிவ. குப்புசாமிப் பிள்ளையவர்கள்,
*தலைமையாசிரியர், கரந்தைத் தமிழ்ச்சங்கக் கல்லூரி, தஞ்சை.*

---

(முற்றொடர்ச்சி 387-ம் பக்கம் பார்க்க.)

## இயல் உ—காட்சி க.

உறுப்பினர்:—1. கூடல்வீரன், 2. முதியவர் இருவர், 3. பணியாளன்.

இடம்:—உறையூர்ப் பெருந்தெரு

பொழுது:—முற்பகல்

[கூடல்வீரன் கரிகால்வளவனின் வெற்றியைப் புகழ்ந்து பாடுதல், வழக்குடைப்பெரியார் இருவர் கரிகால்வளவனிடம் வழக்குத்தர உளமிலாது திரும்பும்போது காவலனின் அழைப்பு]

கூடல்வீரன்:—

பாட்டு.

செந்தமிழ்சூழ் சோழநாட்டை சேரபாண்டியர் துதிக்க
வந்தகரி கால்வளவன் எங்கள்துரைமகன்
வரிப்புலியைக் கொடியில்கொண்டான் எங்கள்பெருமகன்
சீர்பெருகு சோழர்குடிசெம்மையுடனே சிறக்க
பார்முழுதும் ஆளவந்தான்பாங்காய்க் கரிகாலும்
பண்டு நின்ற குறைகள் போக்கிஎங்கும் மகிழ் ஓங்க
வடக்கே இமயமலைவாழ்குமரி தெற்கெல்லையாம்
குடகுணமே வார்கடலாய்க்கொண்டான் குவலயம்
குக்குடத்தைக் கொடியில்கொண்டகோலன் அருளிஞல்
சேரருடன் பாண்டியரும் சிங்களவராரியர்கள்
சார்ந்த பல மன்னர்களும்சேர்ந்து பின்னடவே
சண்டை பல புரிந்துவென்முன்எங்கள் புகழ்மன்னன்
இமையமதில் புலிபொறித்துஎன்றும் தன் வடக்கெல்லையாய்
அமையவே பொருத்தி வைத்தான்ஆணைவழிவந்தான்
அவன் புகழே நின்று ஓங்கிஎன்றும் வாழ்கவே

முதியோர்:—யாரப்பா நீ? என்ன மிகவும் மகிழ்ச்சியாகக் காணப்படுகின்ருய்! நீ எங்கிருந்து வருகின்ருய்?

கூடல்வீரன்:—நாஞ! என் பெயர் கூடல்வீரன். நமது சோழ மன்னர்கரிகால் வளவற்கு நான் பாடிக்காவலன். தாயத் தலைவனிடமிருந்து தனது நாட்டை மீட்டதும் எம்பெருமான் கரிகால்வளவன் தனது படைவலியும், தோள்வலியும் யாவரும் அறியுமாறு நாடு சுற்றி வந்ததையும் நீவிர் அறியீரோ?

முதியோர்:—வீர! எங்கள்ஊர் இதுவல்ல. எங்கட்கு நாட்டில் குழப்பம் என்பதுதான் தெரியும். பின்னர், 'நமது நாட்டிற்குரிய வர் அரசுரிமையைப் பெற்றுவிட்டார், இனி அச்சமில்லை' என்று யாரோ ஒருவர் கூறியதைமட்டும் கேட்டோமேயன்றி வேறு எதுவும் அறிந்திலேம். என்ன நிகழ்ந்தது: யாங்கள் அறிதற்குரிய தாகுமா?

கூடல்வீரன்:—பெரியீர்! கூறுவன் கேட்பீராக. நமது நாட்டின் மன்னர் இதுபோது கரிகால்வளவன் ஆகும். அவர் ஆட்சியை அடையாதவாறு கலாம் விளைவித்து, அவரையும் சிறைக் கோட்டம் புகுத்தி, பின்னர் அதில் தீயிட்டு என்னன்னவோ கொடுமைகளெல்லாம் செய்தார்கள் அவரது தாயமாக்கள். [முதியோர் :— அடாடா என்ன கோடுமை] எனினும் விதி வலியது ஆதலின் மன்னர் அதனின்றும் தப்பிப் பகைவர்கள்

யாவரையும் வென்று அரசு கட்டில் ஏறினர். [முதி:—வாழ்க அரசன். எங்கேயோ மூலையில் கிடக்கும் எங்கட்கு இத்தகைய செய்தி எவ்வாறு கிட்டப்போகிறது] மேலும் அரசுகட்டில் ஏறியதும் நம் மன்னன் தக்க படைத்துணையோடு மற்றைய தமிழ்நாட்டு மன்னர்களாய பாண்டிய சேரர்களையும், இலங்கையின் இர்சுவாகுவையும் வென்று பின்னர் வடநாடுகளை நோக்கி இமயமலை வரையிற் சென்றார். [முதி:—அப்படியா] இடையிலுள்ள எல்லா நாடுகளின் அரசர்களும் தனது அடி பணியச் செய்து அவர்கள் தந்த கையுறைகளையும் பெற்றார். [முதி:—நன்று, நன்று] நம் பரதகண்டத்து வடக்கெல்லையாயுள்ள இமயமலை, நம்கரிகால்வளவனை மேலும் செல்லாது தடுத்து வானளாவி நின்றமையால், வருந்தி அம்மலையின்மீது தன் வெற்றிக்கு அறிகுறியாகத் தனது புலிக்கொடியைச் செதுக்கி தனது வீரவளை முழங்க நாடு திரும்பியுள்ளார். [முதியோர்:—என்ன சிறப்புடைய மன்னர்: இவை யாவும் அறியோமே] இத்தகைய போர்களும் பிறவும் நிகழ்ந்தபோது நான் அவரோடு கூடவே இருந்து மிகுந்த பரிசுகளும் சிறப்பும் பெற்றேன் [முதி:—அப்படியா] எனது உறவினர்களையும், நண்பர்களையும் பிரிந்து பல ஆண்டுகள் போரிற் கழித்தமையால் இதுபோது அவர்களைக் காணுதற்குச் செல்லுகின்றேன். அதனாற்றான் இவ்வாறு எங்கள் தலைவனுடைய புகழை எனக்குத் தெரிந்தவரையில் மகிழ்ந்து பாடிக்கொண்டு செல்லுகின்றேன்.

முதியோர்:—நீ இனிதே வாழ்க, நின் வீரமும் தொண்டும் நம் நாட்டின் அரசற்கு ஆகுக.

கூடல்வீரன்:—இவ்வாறு கேட்ட தாங்கள் யார் என்பதை எனக்குக் கூறலாகாதோ?

முதியோர்:—நன்றாகக் கூறுகின்றோம். நாங்கள் இருவரும் உடன்பிறந்தார்கள். எங்களது ஊர் மறைக்காடாகும். எங்களுக்குள் ஓர் வழக்குளது: அஃதைத் தீர்த்துக்கொள்ளவே தக்காரை நாடிச் செல்கின்றோம். இதுபோது நின்னல் நமது அரசர் பெருமைகள் யாவும் நன்கு எங்களுக்கு உணர்த்தப்பெற்று இருப்பதால் எங்களது வழக்கை அவரிடமே சொல்லலாமெனக் கருதுகின்றேன். நினது கருத்தென்ன?

கூடல்வீரன்:—நன்றாகக் கூறலாம். எங்கள் தலைவரைப் போன்ற பேரறிஞர் இந்நிலவுலகிலேயே கிடையாது. முறை வழங்குவதில் அவருக்கு இணை 'வெள்ளியும்' ஒவ்வார் எனில் மேலும் கூறவும் வேண்டுமோ?

முதியார்:—வீர ! நன்று ! யாங்கள் சென்று எங்கள் வழக்கை கரிகால்வளவனிடமே கூறி முறைபெறுவோம். நீ இனிதே வாழ்க. யாங்கள் சென்று வருகின்றோம்.

கூடல்வீரன்:—வணக்கம் பெரியீர் ! சென்றுவாருங்கள் ! உங்கள் அன்பு எனக்கு என்றும் ஆகுக. எப்பொழுதாவது உறையூர் வர நேரின் எனது இல்லத்தை மறவாதீர்கள்.

முதியோர்:—நன்று. சென்று வருகின்றோம்.

[முதியோர் செல்கின்றனர்—வீரன் மறைகின்றான்]

[பின்னர் முதியோர் தோன்றுகின்றனர்]

முதியார் க:-தம்பி! என்ன கருதுகின்றாய்? பல நாடுகளையும் வெற்றிகொண்டான் என்று கூறியதனால் அனுபவம் நிறைந்துவிடுமா? உலகத்தில் நெடுநாள் வாழ்ந்து அரசுரிமையைப்புரந்து வந்தவன் தவிர, போரில் தனது உடற்பலத்தால் வெற்றி கொண்ட இச்சிறுவனலா, அறிவுமிக்க, அநுபவம் நிறைந்த, யாண்டில் முதிர்ந்த ஆன்றோர்களாலன்றி முடிவுகட்டுதற்கு இயலாத, நம்வழக்கு தீர்க்க இயலும்?.

முதியார் உ:—ஆம், அண்ணா! அரசன் என்றதும் உயர்ந்த தோளும் நிறைந்த மீசையும் முதிர்ந்த யாண்டும் பெற்றவன் என்றே கருதினேன். இச்சிறுவனால் நம் வழக்கை அறிதற்குக் கூட இயலாது.

பணியாளன்:—ஐயா! பெரியார்களே! [கைதட்டல்] உங்களை எங்கள் அரசர் அழைத்து வரச்சொன்னார். விரைந்து வாருங்கள்.

முதியவர் க:—உங்கள் அரசரா ? ஏன் ?

பணியாளன்:—நீங்கள் வழக்குக் கொணர்ந்தவர்களா ?

முதியவர்:—ஆமாம்.

பணியாளன்:—அதனால் உங்கள் வழக்கை உசாவி அஃதைத் தீர்த்தற்பொருட்டே அழைத்துப்போக வந்தேன்.

முதியவர் உ:-அப்படியா, நல்லது. உங்கள் அரசர் சிறுவராகயிருப்பதால் உலகப்பயிற்சி குறைந்தவராவர். எங்கள் வழக்கோமுறையே நூற்பயிற்சியும் அநுபவமும் நிறைந்த பெரியோர்களாலன்றி தீர்த்தற்கு இயலாதது ஆகும். ஆதலால் அச்சிறுவரிடம் எங்கள் வழக்கைக் கூற யாங்கள் விரும்பவில்லை. அன்பு கூர்ந்து பொறுத்தருள்க.

பணியாளன்:—அடாடா! என்ன ஐயா நீங்கள்! சிறுபையனு! எங்கள் மன்னர்பிரானது பேரப்பிள்ளையைப் பார்த்து விட்டு வந்துவிட்டீர்களோ?

முதியவர் க:—என்ன! பேரப்பிள்ளையா?

பணியாளன்:—ஆமாம் எங்கள் மன்னருக்குத்தான் இப்பொழுது அறுபத்திரண்டு யாண்டுகள் ஆகின்றனவே! இரண்டாண்டிற்கு முன்னர் தானே அவரது அறுபதாம் ஆண்டு நாண் மங்கலம் நிறைவேறிற்று.

முதியோர்:—ஓ! அப்படியா! ஒரு சிறுவன் அரசுகட்டிலின் பக்கல் இருந்ததைக் கண்ணுற்ருேம். அவனே மன்னனென மயங்கி இவ்வாறு வெளிவந்தோம். பொறுத்தருள்க. இதோ வருகின்ருேம்.

[இருவரும் காவலனின் பின் போதல்]

இயல் உ. காட்சி க. முடிபு.

---

இயல் உ—காட்சி உ.

உறுப்பினர்:—1. கரிகால்வளவன் 2. காவலன் 3. முதியவர் 4. இரும்பிடர்த்தலையார்.

இடம்:—சோழனது அவைக்கூடம்.

பொழுது:—முற்பகல்.

[முதியவன் வடிவுதாங்கி கரிகால்வளவன் வழக்கு முடித்தல்—தன் ஆணை வழி நில்லாத பிரதாபருத்திரனின் செருக்கை அழித்தல்.]

காவலன்:—உலகம் புகழும் ஓங்குசீர்ச் சோழ! தங்கள் திருவடித்தாமரை என்முடிக்கு அணியாகுக. இங்கு முதியவர் இருவர் தங்களுக்குள் நிகழ்ந்த வழக்கை முறைப்படுத்த தங்கள்பால் வந்துளர்.

கரிகாலன்:—நன்று காவல! அவர்களை இங்கு வரவிடுவாய்.

(முதியவர் இருவரும் அவையை அடைதல்)

முதியவர் க:—மகன் எனவும் கருதாது மணிநெடுந்தேரால் ஊர்ந்த மாமனுவின் வழியிற்ருேன்றிய மன்ன! எங்களது நெடு வணக்கம் உரியதாகுக.

கரிகால்:—நன்று பெரியீர்! உங்களது வழக்கு யாது? விளங்கக் கூறுவீர்.

முதியவர் க:—பெருந்தகையே! யாங்கள் இருவரும் உடன் பிறந்தாராவோம். எங்களுக்குள் யானே முதல்வன் ஆவேன். அக்கரை சென்று மிக்க பொருள்வளம் உற்று இற்றைநாள் இங்கு திரும்பினேன். எனக்கோ மக்கள் எவரும் இலர். இங்கு வந்த நாள் தொட்டு எனது இளையோனுகிய இவன், என் தந்தை இவன்பால் விடுவித்துச்சென்ற, ஒன்று ஒராயிரம் பொன் மதிப்பிடற்குரிய ஒன்பது மணிகளுள், ஓர் ஐந்தை யான் ஏற்குமாறு வற்புறுத்துகின்ருன். யான் பொருளிடத்து அவா அடங்கியவனும் மக்கட்பேறு அற்றவனும் இருப்பதால் எனக்குத் தர விரும்பும் ஐந்து மணிகளையும் அவனுக்குரிய மூன்று மக்களுமே பெறுமாறு ஏற்பாடியற்ற விழைகின்றேன். இதுவே எனது வழக்காகும்.

முதியவர் உ:—கரிகால் பெரும, எங்களது தந்தையர் உயிர் நீக்கமுறுந் தருவாயில் என்னை நோக்கி 'எனது வீடும், நிலமும் நான்கு மணிகளும் நீ பெற்றுக்கொண்டு, நின் தமையன் வந்ததும் எஞ்சிய ஐந்து மணிகளையும் அவன் பங்கின் பொருட்டு அளிப்பாய்' என என்னிடம் உறுதிமொழி பெற்ருர். தந்தை சொன்மிக்க மந்திரமில்லையாதலின் அம்மணிகள் ஐந்தும் என் தமையனுக்கே உரியனவாம். மேலும் எனக்கு உற்ற மக்கள் மூவர் ஆவர். அவருள் ஒருவர் கல்வி நிரம்பியவராய் அறிவால் மாண்புறும் புலவராயுளர். இரண்டாமவர் எத்தொழிலிலும் ஏற்றமுடையதாகவும் எங்குலத்துக்கு உரியதாகவுமுள்ள உழவுத்தொழிலில் ஈடுபட்டு புகழ்பட வாழ்கின்ருர். மூன்ருமவர் திருமண மாகாத நங்கைப் பருவத்தினர். இவர்கள் யாவரும் 'போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து' எனும் பெருமொழியின்படி ஒழுகுபவர் ஆவர். ஆதலால் எனக்கு உற்ற நான்குமணிகளும் நிலமும் வீடும் இவர்கட்குப் போதுமானது. நான் என் தந்தை மொழிப்படி நடவேனுயின் என் கடமையை நிறைவேற்ருது பிறர்பொருளை முறையில்லாது வைத்திருந்து அனுபவித்த குற்றத்திற்கு உள்ளாகி என்றும் மீளாத பழிக்குழியில் மாண்டுழல நேரிடும். இத்துடன் அமையாது என் தமையனுர் அவர் தேடிய பொருளையும் எனக்காக்கி ஒரு பெரிய பாவ மூட்டையை என் தலை மீது சுமத்தப் பார்க்கின்ருர். ஆதலினுல் ஏ! தலைவ! எனக்கு இவற்ருல் எத்தகைய தீவினையும் வராத வழியில் நல்வழக்கு தர நாடுகின்றேன்.

**கரிகால்:**—முதன் முதிய! நீவிர் ஏதேனும் இனிமேல் கூறுதற்கு ஆகுமோ?

முதியவர் க:—தலைவ! கூறுவன். என் தம்பி தந்தையர் கூறிய வழி நடப்பதை யான் தடை செய்யவில்லை. ஆனால் அவர் எனக்குத் தந்த மணிகளையே எனது தம்பியின் மக்களுக்கு ஆக்குகிறேன். அவ்வாறு செய்வதால் எங்களது உரிமைச் செல்வமும் யாங்கள் அரிதிற் தேடிய பொருளும் அழிவுறாமல் எங்கள் குலத்திற்கு ஆகும்.

கரிகால்:—பெரியோர்களே! நீவிர் ஒவ்வொருவரும் உங்களது தந்தையின் சொற்படியே நடத்தற்குரியவராவீர். உங்களுள் முதல்வராவார் ஐந்து மணிகளையும், பின்னவர் நான்குமணிகளோடு நிலமும் வீடும் பெறுக. பின்பு உங்களுள் ஒருவர்க்கு மக்கள் இல்லாமையால் உங்கள் இருவர்க்கும் வழித்தோன்றலாக உள்ளவர்கள் ஒரு மூன்று மக்களே யாவார்களாதலால் நீங்கள் உங்களுக்குரிய பொருளை அம்மூவர்க்குமே பொதுவாகப் பகுத்திடவேண்டும். மக்கள் அனைவரும் மனம் நிறைந்தவராய் இருத்தலினால் அவர்கட்கு உற்றபொருளை அவர்கள் பெறாத வழியில் அமைப்பது அறியாமையே யாகும். ஆதலினால் உங்களது மக்களுள் மூத்தவர் புலவராயிருப்பதால் மூன்று மணிகளும் வீடும் அவர் பாலாக்குக. அவர் அறிவு மிக்கவராதலால் உணவு குறையாது உலகவாழ்க்கையினை இனிது நடத்த உணர்ந்திருப்பார். மற்றவர் உழவர் ஆதலின் அவர்பால் நிலனும் மறு மூன்று மணிகளும் சேரட்டும். இரண்டாமவர் வேளாண்மைப் பயனை உணர்ந்தவராதலின் அவர்க்குரிய வசதிகளை அவர்செய்து கொள்ளக்கூடும். மூன்றாவது பிள்ளையோ திருமணமாகாத ஒரு பெண்ணாக இருத்தலால் அப்பெண்ணுக்கு உரிய நாயகனை மணம் புரிவித்து எஞ்சிய மூன்று மணிகளோடு திரைகடலோடித் தேடிய அத்திருவாழ்வையும் அவட்கு அமைத்திடுவீராக.

இச்செயலால் உங்களது பொருளுக்கு அழிவு வராது, உங்களது மக்களே அவற்றையடைந்து வாழ்வர். இவ்வாறு பகுத்துக் கொடுத்த பின்னர் நீங்கள் இருவரும் அவர்கட்கு உற்ற துணையாக அவர்களை இவ்வுலக இயலிலுள்ள அனுபவமிக்க நல்ல துறைகளிற் பயிற்றுவித்து, இந்நாட்டினிடத்தும் நம் இனியமொழியிடத்தும் அரசு முறை வழுவாத அறிவுசால் நெறியிடத்தும் பெரும் பற்றுடையராக இருந்து, உங்களது அடிகளைப் பணிந்து இன்புற்று வாழும் பேரமக்களாக்கி மகிழ்வீர்களாக. (தொடரும்.)

உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத்
திங்கள் வெளியீடு.

துணர்-ம | பவ—மாசி. | மலர் - மக.


க. கரந்தைத் தமிழ்ச் சங்கம் ஆண்டுவிழா . . 441
பொழிற்றொண்டர்

உ. வாழ்த்துப்பா 448
திரு. சர்க்கரை, இராமசாமிப்புலவர்

௩. வீரசோழிய உரையாசிரியர் காலம் 449
திரு. E. R. நரசிம்ம அய்யங்காரவர்கள் B.A., B.L.,

ச. ஆழ்வார்பாரதமும் பண்டைத் தமிழ்நூல்களும் 458
திரு. கோமான். ம. வி. இராகவன் அவர்கள்

ரு. சாத்தனார் கோயில்கள் 466
திரு. வை. சுந்தரேசவாண்டையார்

சு. திருக்குறணுதலிய நெறிமுறை 470
திரு. K. சோமசுந்தரம் பிள்ளை

எ. சோழன் கரிகால் வளவன் 477
திரு. சிவ. குப்புசாமி பிள்ளையவர்கள்

அ. தமிழ்ச்செய்திகள்


செந்தமிழ்ப்புரவலர்,

த. வே. உமாமகேசுவரம் பிள்ளை, பொழிற்றொண்டர்.

தஞ்சைக் கூட்டுறவுப் பதிப்பகம், கரந்தை.

கரந்தைத் தமிழ்ச் சங்கம் இருபத்துநான்காவது
ஆண்டுவிழாத் தலைவர்.



சேதுநாட்டவை மகாவித்துவான் உயர்திருவாளர்,
ரா. இராகவையங்கார் அவர்கள்.



உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு

| | | |
|---|---|---|
| துணர் ய | பவ, மாசி | மலர் யக |

உ

தமிழ்த்தாய்வாழ்க.

## கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை.

### இருபத்துநான்காம் ஆண்டுவிழா.

நமது சங்கத்தின் இருபத்துநான்காம் யாண்டு நிறைவுவிழா நிகழும் பவஆண்டு மாசித்திங்கள் ரு, சு (16, 17—2—1935)ஆம் நாட்களாகிய சனி, ஞாயிறுகளில் சங்கக்கல்லூரியின் பெருமன்றத்தில் அண்ணமலைப் பல்கலைக்கழகத் தமிழாராய்ச்சிக் குழுத்தலைவர், சேதுநாட்டவைப் புலமை, மகாவித்துவான் உயர் திருவாளர், ரா. இராகவையங்கார் அவர்களது சீரிய தலைமையிற் கொண்டாடப்பெற்றது. விழா சனிக்கிழமையன்று பிற்பகல் மணி ங-க்குத் தொடங்கப்பெற்றது.

விழாத் தலைவர் அவர்கள் விழா நடைபெற்ற கல்லூரியின் தலைவாயிலை அணுகியபோது, சங்க அமைச்சர் அவர்கள் மணமலர் மாலை சூட்டியதும் கல்லூரி மாணவர்களுள் நூற்றுக்கு

மேற்பட்டார் இருமருங்கும் அணிவகுத்து நின்று, தமிழ்த்தாய் வாழ்த்தொலி பரவ இன்னிசை கெழுமிய இனிய பாக்களைப் பாடிக்கொண்டு வரவேற்றனர்.

தலைவரவர்கள் மாணவர்களது இன்னிசைவழியே இவர்ந்து விழாமன்ற மேறி தலைமையிடங்கொண்டதும், மாணவ, மாணவிகளால், கடவுள் தமிழ்த்தெய்வ வணக்கப்பாக்கள் பாடப்பெற்றன. பின்னர், நமது சங்கத்துப் பேரன்பர் கூடலூர் திருவாளர் இராமசாமி வன்னியரவர்களால் சங்க வரவேற்புப் பாக்கள் மிகவும் இனிமை பயக்கும் முறையால் பாடப்பெற்றதும், அப் பாக்களில் கூறப்பெற்றுள்ள தலைவரவர்களைக் குறிக்கும் சிறப்பியல்கள் யாவையும் சங்க அமைச்சரவர்கள் விளக்கமாகக்கூறி, அப்பாவை எழுதியருளிய நமது சங்கப்புலவர் திருவாளர். R. வேங்கடாசலம் பிள்ளையவர்களை அறிமுகப்படுத்தி தலைவரவர்களை வரவேற்றனர்.

உ

## கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை

### இருபத்துநான்காவது ஆண்டுவிழாவில்

தலைமைதாங்கும் சேது நாட்டவை மகாவித்துவான்

### உயர்திருவாளர், ரா. இராகவையங்கார் அவர்கட்குச்

சங்கத்தார் கூறும் வரவேற்பு.

திருவளரும் தமிழ்மன்னர் சேதுநாட் டேர்புலவன்! செழிய கல்விக்
கருவளரண் ஞமலையின் கலைக்கூடத் தாய்ச்சிநெறிக் கலைஞன், நாளும்
மருவளரும் தமிழ்மணக்கும் வாய்வள்ளல்! இராகவப்பேர் வாய்ந்த செல்வன்!
வருகவவன்! வருகவிவண்! வளரூழி பலவாழி! வருக மாதோ!

இவ்வுலகிற் கெழிறருவ திந்தியா மற்றிதற்கோ எழிற்றென் னாடு
செவ்விதன் சீர்க்குறுகால் செந்தமிழ்த்தாய் செப்புமிதன் செவிலித் தாயர்
பவ்வமதிற் பவங்காணுப் பார்மன்னர் பாற்கான்முன் னனைபல்லோர்
எவ்வுலகும் அவர்சீரை எய்துவிப்போன் இராகவனும் எங்கள் ஏறே.

செந்தமிழின் முதற்றலைவன் செய்தனவாம் தாய்த்தொண்டு செப்பற்பாற்
முந்தியநூல் செய்யுள்பல முறையாக வச்சிட்டான்; முயலா தாரும் [ரோ!
பிந்தியகள் ளிருட்காலப் பிணக்கமெலாம் நுழைந்தாய்ந்து பிறக்கும் உண்மை
தந்திடுவான் ஐயங்க டமையறுப்பான் ஆய்ச்சிமுறை தருவான் அம்மா

கண்டின்மிக வினிக்கின்ற கட்டுரைகள் பலதந்தான்; கருத்து மிக்க [தான்;
எண்டொகையுள் அகத்திற்கு கியலுரையுள் ளுறைதோன்ற இயற்றிவைத்
வண்டிறலார் வடகடலுள் கலமுகந்து தமிழ்க்கடலுள் வார்த்துக்கொள்வான்
தண்டமிழ்த்தேன் ஒழுக்கமெனும் தாழிசைசெய் தோங்குமிசை தானுங்
[கொண்டே

சந்தமுறு ரகுவம்சம் சாகுந்த லம்கீதை சார மெல்லாம்
தந்திடுபா ரதநீதி பல்லடன்றன் சதகமிவை தந்தான்; செந்தேன்
உந்தும்ஒரு துறைக்கோவை ஒருகோடி தனிச்செய்யுள் உவையுந் தந்தான்;
எந்தவுயர் பாவலன்ருய்க் கிராகவன்போற் பன்னெறித்தொண் டியற்றி
[னனே!

எத்தனையோ புலவர்களை இப்புவித்தாய் பெற்றேற்றம் எல்லாம் செய்தான்;
அத்தனைபேர் தங்களிலவ் வன்னையினுக் கொருமாலை யன்பி னீந்த
வித்தகரை யாமறியேம்: வியன்ஞால விரிவஞ்சி விடுத்தார் போலும்:
புத்தமுதம் எனப்புனைந்தான் புவியெழுப தெனுமாலை புலவர் கோவே!

வள்ளன்மைப் பெரும்பாரி வளர்புகழன் எனப்புலவர் வரைவர்; அங்கன்
விள்ளுமது வினைத்தொகையா விரிஞாலத் திஞ்ஞான்றும் விளங்கும் வண்
பல்புலவர் உடன்புணர்ந்து பழகிநரும் பாடாத பண்பை யெல்லாம் [ணம்,
சொல்வளங்கூர் வெண்பாவிற் சொற்றவன்றன் ருய்த்தொண்டிற் றூய
[துண்டே!

வண்ணமுறு செந்தமிழும் வடமொழியும் மற்றைமொழி யுலகும் வாய்ந்த
எண்மலியுங் கலையுருவி யிரும்புலவர் கருத்துருவி இற்றை நாளில்
மண்ணினிசழ் மாண்புருவி வருமமிர்தாம் இராகவன்றன் வாயின் செல்வம்
திண்ணியபே ரறிஞரொடு சிறுவர்தம துள்ளத்தும் தித்திக்கு மாலோ!

நாட்டினர்க்காம் அரியவிலை நன்கலனென் கலைக்கூடம் நாட்டும் வள்ளல்,
ஈட்டுமணி தமைந்தேர்ந்தங் கிருஞ்சிறப்பு நல்லுரையென் றின்ன செய்து,
நாட்டுமணி நகரமணி நாயகப்பா ரதிமணிகள் நாடி, மன்னர்
மாட்டலது மேவாவிம் மணிபெறவே மன்னனெனும் மாண்புற் ருனே.

மூவேந்தர் வழிமுறைக்கு முன்பொருகால் அவைப்புலமை முன்னுங்கூத்தன்
நாவேந்து பாவலனுய் நற்குருவாய் நற்றுணையாய் நாடி நின்ருன்;
பாவேந்தர் வேந்தனவன் பண்பெல்லாம் படைத்தனன்நம் பாவல்லோனும்;
காவேந்து தமிழ்நாடு கருதுசிறப் பளித்துயர்த்துங் கடமைத் தன்றே.

வாழியரோ தமிழ்த்தாயின் மைந்தனிரா கவப்பெயர்கொள் மாண்பன் வாழி!
வாழியரோ சேதுபசர் வளர்புகழ்சா லவைத்தலைமை மன்னு சீரோன்!
வாழியாண் ணுமலையார் மாண்புறுநற் கலைக்கூட வாழ்வாம் செவ்வன்!
வாழியரோ நம்சங்க மலியன்பு வளர்ந்திடுகன் மகிழ்ச்சி யோனே!

பிறகு ஆண்டு அறிக்கை படிக்கப்பெற்றது. அதற்குமேல் விழாத்தலைவர் திரு. ரா. இராகவையங்காரவர்கள் மிகவும் சொல் பொருள் நயமிக்க, கேட்டார் பிணிக்கும் தகைமைத்த, அரிய முன்னுரையை யளித்தனர். அம்முன்னுரையில் மகாவித்துவா னவர்கள், தமிழ்மொழியின் சிறப்பு, அதன் தனித்தியங்கும் பெற்றி, மொழிப்போக்கு, எக்கருத்தையும் வெளியிடுதற்குற்ற ஆற்றல், தூரத்தப்பட்டது எனும் பொருளாலமைந்த திராவிடம் என்ற சொல், இனிமை என்ற பொருள்தரும் தமிழ் என்ற சொல்லோடு பொருளாலும், வடிவாலும், ஒலியாலும் ஒவ்வா திருக்குந்திலை, ஆகியவற்றை விளக்கிக் காட்டினார்கள்.

பிறகு அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பேராசிரியர் திருவாளர். S. சோமசுந்தர பாரதியாரவர்கள் 'தொல்காப்பியத் துட் சிலபகுதிகள்' என்பது பொருளாக தொல்காப்பியப் பொருளதிகாரச் சூத்திரங்கள் சிலவற்றிற்கு ஆராய்ச்சி முறை யில் எவரும் வியப்புறும்வண்ணம் தனக்குற்ற மொழிவன்மை யால் புதுப்பொருள்கூறி அவையை அணிபெறச் செய்தார்கள். அதன் பின்பு சென்னை வழக்கறிஞரும், தமிழ் வித்துவானுமாகிய திருவாளர், T. P. மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் M. A., B. L., 'சம்பந்தரும் மகளிரும்' என்பது விரிவுரைப் பொருளாகக் கொண்டு மிகுந்த எடுத்துக்காட்டுகளுடன் தேவார மேற்கோள் களை விளக்கி ஒருசொற்பொழிவு நிகழ்த்தியதும், தலைவரவர்கள் அன்றைய விழாச்சிறப்பு மேம்பாட்டுகளை விளக்கியதும் தமிழ்த் தாய் வாழ்த்து விண்ணிடை பரவ முதல்நாள்விழா இனிது நிறை வேறிற்று.

இருபத்துநான்காம் நிறைவுவிழாவின் இரண்டாம்நாட் கொண்டாட்டம், மகாவித்துவான் உயர்திரு, ரா. இராகவையங் கார் அவர்கள்தலைமையில் மறுநாள், ஞாயிறன்றுமாலை ரு௦மணிக் குத் தொடங்கிற்று. அதுபோது கல்லூரி மாணவர்கள் மிகவும் இனிமையாக யாவரது உள்ளமும் களிதுளும்ப சங்க வாழ்த்துப் பாக்களையும் தெய்வவணக்கப் பாக்களையும் பாடினர். பிறகு கரந்தைத் தமிழ்ச்சங்கக் கல்லூரி மாணவர்கள் பலருக்கு, ஆண் டுத்தேர்ச்சியில் தமிழ், முதலிய பாடங்களில் முதற்கண் நின்

றமைக்குரிய பரிசுகளைத் தலைவரவர்கள் அன்புடன் அளித்து அவர்கள் கல்வியிற் சிறக்க வாழ்த்தினார்கள். இதற்கடுத்தபடி யாக சங்க அமைச்சர் திரு. நீ. கந்தசாமிப் பிள்ளையவர்கள் M.R., A.S., அடுத்த ஆண்டில் இச்சங்கத்தில் நடக்கப்போகும் 'வெள்ளிவிழா'க் கொண்டாட்டத்தின் விரிவை யாவரும் அறியு மாறு வெளியிட்டார்கள். அவ்விழாவின்போது இச்சங்கசார்பில் 'முத்தமிழ்த் துறையும், மருத்துவக்கலையும்கொண்ட ஒருவித்து வான் கல்லூரியும், சோழர் பொருட்காட்சிக்கூடமும், நல்ல இலக்கிய நூல்வெளியீடும் அமைக்கவேண்டும்' என்றும் அதற்கு உறுப்பினர்களும், தமிழ்ப் பெரியார்களும், தமிழன்பர்களும் பிறரும் தங்களாலியன்ற தொண்டுகளைப் புரியவேண்டும் என்றும் வேண்டிக்கொண்டனர். அவ்வுரையை ஒட்டித் தலைவர் மகா வித்துவானவர்கள், தமிழ் நாட்டின் பண்டைய பெருமைகளைக் காக்கவும், தமிழ்மொழியின் மேன்மையைப் பெருக்கவும் பெருந் தொண்டாற்றிவரும் இச்சங்கத்தின் உயரிய நோக்கத்திற்கு யாவரும் துணையாமாறு வேண்டிக்கொண்டதோடு, தம் சார்பில் வெள்ளிவிழா நன்கொடையாக ரூபா நூறு தருவதாகவும் அவை யினில் வெளியிட்டார்கள்.

பிறகு, தஞ்சை அரசர் அறநிலையப் பாதுகாப்பாளர் திரு வாளர். J. M. சோமசுந்தரம் பிள்ளையவர்கள் B. A., B. L., 'தஞ் சைப் பெரியகோயில்' என்பது பொருளாக, தஞ்சை நகர்க்கும் சோழமன்னர்கட்கும் உள்ளதொடர்பு, சோழ மன்னர்களது காலவரையறை, அவர்களது மரபின் மேன்மை; கரிகால்வளவ னின் ஆட்சியில் சோழரது விஞ்சிய வாழ்வு, அவர்களின் நடுக் காலத்தாழ்வு, பிற்றைநாளில் விசயாலய சோழனது மரபு தஞ்சைநகரில் வேரூன்றற்குரியவசதி, இராசராசசோழனின் தோற்றம், அவனது ஆட்சியின் சிறப்பு, அவன் தஞ்சை இராச ராசேச்சுரத்தில் பெரியகோயிலை கட்டிய காலம், முதலிய தலைப் பின்கீழ் அரிய வாராய்ச்சி நிரம்பிய விரிவுரை ஒன்று நிகழ்த்தி னார்கள். அதன் பின்னர் 'நவசக்தி' ஆசிரியரும், நாட்டுத்தொண் டருமாகிய திருவாளர். திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர் கள் 'தமிழ் மக்கள்' என்ற தலைப்பின்கீழ் மிக்க செவ்விய நடை

யில் ஒரு சொற்பொழிவு புரிந்தார்கள். அதில் அவர்கள், தமிழ் மக்கள் பண்டைநாளில் தமிழர் கொண்ட பழக்கவழக்கங்கள் வீரச்செயல்கள், கல்வியின்மேன்மை, விரிந்தநோக்கம், இயற்கை யோடு இயைந்த வாழ்விலீடுபடுந்திறன், இறைவணக்கம் ஆகிய சிறப்பியல்புகளையும்; நடுக்காலத் தமிழ்மக்களது மொழி, நாட்டுப் பற்று, வீரம், கல்விநிலை முதலியன எவ்வாறு முற்காலத்தினின் றும் மாறுபாடுபெற்றனவென்றும்; இக்கால தமிழ் மக்களாவார், நாடு, மொழி, இவற்றிற்காய தொண்டுகளையும், இயற்கைக்கு மாறுபாடில்லாத பண்டைய தமிழ்நாட்டு நாகரீகமான எந்நாட் டவரும் ஏற்றுக்கோடற்குரிய வாழ்க்கை முறைகளின் சிறப்பு களையும், எவ்வாறு புரிதல் வேண்டுமென்றும் யாவரும் இன் புறும் வண்ணம் பலப்பல மேற்கோள்களுடன், தொல்காப்பியம் புறநானூறு போன்ற சங்க நூல்களின் வழிநின்று எடுத்துக் காட்டினார்கள்.

மூன்றாவதாக அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ் விரி வுரையாளர் திருவாளர். பண்டிதமணி, மு. கதிரேசச்செட்டியா ரவர்கள் 'நினைவுலகம்' என்ற உயரிய பொருள்பற்றி ஓர் அரிய பெருமொழிப்பொழிவால் அவையை யழகுபெறச்செய்தார்கள். அஃதில், பண்டிதமணியாரவர்கள் நினைவின் வகை, நினைவினால் ஏற்படும் நிகழ்ச்சி, நினைவாற்றலுடையாரின் பேறு, நினைவாற்ற லற்றார்க்குறும் பயன், உள்ளம் உணர்ச்சியிற் பொருந்தி தான் கொண்ட வினையிலீடுபட்டுழைக்கும்போது அதற்குற்ற இடர்ப் பாடு, அதை நீக்கும்நெறி, உள்ளத்தினுள்ளே ஓர்கோயில் எடுப் பித்த பூசலார் நாயனாரது பெருமையானது, கச்சிச்சோழனின் பெருங்கோயிற்றிருப்பணியினும் மேன்மையுற்றதற்குரிய கார ணம் ஆகிய பலகருத்துக்களை மிகவும் தெளிவுபட சொல்நயமும் பொருள் வளமும் தோன்ற பல அகப்புறச் சான்றுகளோடு உரைத்தார்கள்.

கடைசியாக, அவைத்தலைவரவர்கள் 'தமிழரசு' என்றஅரிய பொருள்பற்றி, கேட்குந்தொறும் தெவிட்டாததாய், உன்னுந் தோறும் உள்ளத்துள் பெருமகிழ்வு தருவதாய், சொல்லழகும் பொருளமைப்புங் கூடியதாய் அமைந்துள்ள ஒரு சொன்மழை

11P

பொழிந்தனர். அதில் மகாவித்துவான் ஐயங்காரவர்கள் தமிழ் மக்கள் என்பார் யாவர், அவர்கட்கென உரித்ததான விருந்தோம்பல், அறத்தாறுநிற்றல், இல்லறத்தை நல்லறமாக்கல் போன்ற சிறந்த பண்புகளின் மேன்பாடுகள் எவை, என்பனவும் தமிழ் மக்களாவார் பண்டை நாளில் கொண்டிருந்த கடமைகள், அவர்கள் தம் நாட்டு அரசரிடங்கொண்ட அன்புடைமை, பணிவுடைமை முதலியனவும்; பண்டைத் தமிழரசர்கள் தம் குடிமக்களைத் தம்மக்களெனவேக் கருதிப் பணியாற்றிய பண்பும், அவர்களது செங்கோன்மை கொற்றம், குடை, அரியணை ஆதிய இவற்றின் மாண்பும், குடியாட்சி கருதுபவரும் முடிவில் ஒரு தனி மகனின் ஆட்சியின் கீழ் அடங்கி வாழுதலே காணப்பெறுவதால் தோன்று தொட்டுவரும் நற்பண்பும் பேரறமும், சீரிய ஒழுக்கமுமிக்க மரபின் வழியடித் தோன்றும் முடியாட்சியே எவ்வகையானும் சிறப்புறூஉம் தகைமைத்தென்றும்; உரிமைவேட்கையுடையாரெனப்படுவார், எவ்வாறு கல்வியின் நலமும், தன்னலமற்ற பாங்கும், எளிமை வாழ்க்கையிலின்பமும், விரிந்த உள்ளமும், பரந்த நோக்கமும் கொள்ளவேண்டும் என்பனவும் போன்ற பல சிறந்த கருத்துக்கள் நிரம்பிய பொருளுரையை அழகுபெறப் புகன்ற பின்னர், விழாவின் இரண்டு நாட்களிலும் சொற்பொழிவுகளாற்றிய புலவர்களது பொருளுரைகளைப்பற்றிச் சிறப்பித்து அவற்றுள் காணப்பெற்ற நலங்களை எடுத்துக் காட்டி, சங்கமும், அதன் தொண்டுகளும் சீர்பெற்று உயருமாறு இறைவனை இறைஞ்சி விழாவினை இனிது நிறைவேற்றினர்கள். முடிவாக சங்க அமைச்சரவர்கள், விழாத்தலைவர் சொற்பொழிவாளர்கள், தொண்டர்கள், அவையோர் முதலாய அனைவருக்கும் நன்றி கூறியதும், தமிழ்த்தாயின் வாழ்த்தொலி யாண்டும்பரவ, நம் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் இருபத்து நான்காம் ஆண்டு நிறைவுவிழாவாகிய பெருநாள் இனிது நிறைவேறிற்று. நலம்!

உ

## கரந்தைத் தமிழ்ச் சங்க ஆண்டுவிழா,
## வாழ்த்துப்பா.

—∞✲∞—

பூவிற் சிறந்த தாமரையிற் புவியிற் சிறந்த சோணாட்டிற்
பொன்னிற் சிறந்த கரந்தையிலெப் போதுமோங்குந் தமிழ்ச் சங்கம்
புரிந்து வளர்க்கு முபகாரி புலவர் போற்று மவுதாரி
பொறுமை வாய்மை தனையடக்கம் புலமை மிகுந்த தகையாளன்

காவிற் சிறந்த மலர்க்கையான் கலையிற் சிறந்தோர் கவிகையான்
கண்டோர்க் கினியான் வறியவரைக் காக்க முனியான் றூன்றெடுங்
கனக மனைத்தும் யாவருக்கும் களிப்போ டுதவி வருவோனங்
கண்ணே யனைய தண்ணளியான் கார்நேர் உமாமகேசுரமால்

பாவிற் சிறந்த புகழொடுமிப் படியிலூழி வாழி யன்னோன்
பாங்கி லுறையும் நாவலரும் பாவல்லாரும் அமைச் சுரிமை
பரித்திச் சங்கம் இசைபரப்பும் படிசெய் கந்தசாமி யெனும்
பாரி யனைய சீரியனும் பாரிலுயர் வொப் பில்லாத

தேவிற் சிறந்த வமுதமழை சிந்துங் கவிசேகர னெங்கள்
செல்வச் சேது வேந்தர்கவி திலகமெனுரா கவ கவியும்
சீலமிகு பண்டித மணியுந் தீரத்துடன் சொற்பொழி வோரும்
செழிக்குஞ் சங்கத் தன்பர்களும் சேர வொருங்கு வாழியரோ!

இங்ஙனம்,

பல்கலைக்கழகம்
அண்ணாமலைநகர்,
17—2—35.

சர்க்கரை, இராமசாமிப்புலவன்,
தமிழாசிரியர்.

———

# வீரசோழிய உரையாசிரியர் காலம்.

திரு. E. R. நரசிம்ம அய்யங்காரவர்கள் B. A., B. L., சேலம்.

முற்றொடர்ச்சி துணர் 10. மலர் 10. பக்கம் 434.

இனி வீரசோழிய உரையிற் காணப்படும் பெயர்களைக் கொண்டும் இவ்வுரையின் காலத்தையாராய்வாம். மானதன் என்றபெயர் (120, 133-ம் பக்கங்களில் 1895-ம் வருஷப்பதிப்பு)

மன்னன் நேரியன்—சென்னி மானதன்
கன்னி காவலான்—பொன்னி நாயகன்,

என்னும் செய்யுள் வஞ்சித் துறைக்குக் காட்டியதிலும்,

"இணைமாத ரேசவே யிரங்கி மோத வேலைமா
னுணங்குலாவு வாளியான் அணிந்த சாப மாயமா
லுணங்கி மேனி வாடுமா லுறந்தையாளு மானதா
வணங்கி னவி காவணீ யளித்தவார மாகுலம்"

என்னும் (140 பக்கத்தில் காட்டிய) செய்புளிலும் வந்துளது, இப்பெயர்

"மீனதன் மீனவ ரேக விடுபடை
மானதன் மானபராயணன் வாழியே"—தக்க 8056லும்
"வாரிக் களிறு முழங்கவே மானதன்
மூரிக் களிறு முழங்கியது" இராச. உலா 323-4லும்
"மல்லன் மலயக்கால் வீசவே மானதன்
மெல்லென் கவரிக்கால் வீசியது" ஷை 331-2லும்
"வயிராகர மெறிந்த மானதன் கண்டன்
அயிரா பதமே மதமே யாக" ஷை 519-20லும்

கூறப்பட்டுளதால் 2-ம் இராசராசன் கண்டன், சுநாதன், தீபன் என்ற பட்டங்களன்றி மானதன் என்னும் பட்டமும், வகித்திருந்ததாகத் தெரிகிறது. வீரசோழியவுரையில் குறிக்கப்பட்டவனும் 2ம் இராசராசனாகல்வேண்டும்.

இலக்கணநூல் வுரையாசிரியர்கள் புகழ்பெற்ற புலவர், வீரர் மன்னர், பெயர்களையும் அவர்கள் செய்கைகளையும் உதாரண

மாகக் கூறுவது வழக்காதலான் வீரசோழியவுரையிற் காணப் படும் பெயர்களின் காலத்தைக் கல்வெட்டுகளின் ஆதரவைக் கொண்டு அறிய முயலுவாம்.

**குடிதாங்கி.** இப்பெயர்கொண்டவர் தொண்டைமண்டல சதகத்திலும், சோழமண்டல சதகத்திலும், பாண்டிமண்டல சதகத்திலும் புகழப் பட்டிருத்தலால் இவர் ஓர் சிறந்த கொடை யாளியெனத் தெரியவருகிறது. இக்குடிதாங்கியின் பெயர் முதற் குலோத்துங்கன் சாசனமொன்றில் காணப்படுவதாக இலக்கண விளக்க பரம்பரை திருவாளர். சோமசுந்தர தேசிகர் செந்தமிழ் 14; 488ல் வரைந்திருப்பது காண்க.

**புகழேந்தி** (வீரசோழியம் பக்கம் 51) இப்புலவர் 2-ம் குலோத்துங்கன் பெருந்தேவியின் சீதனமாக சோழன் அவைக் களத் தெய்தினர். இப்புலவர் ஒட்டக்கூத்தருடன் கவிப்போர் புரிந்தது அறியாதாரிரார். இவர் சோழன் அவைக்களத்தில் வீற்றிருந்தது 12ம் நூற்றுண்டின் முற்பகுதியிலாகும்.

**பழியஞ்சி** (வீரசோழியம் பக்கம் 51). இப்பெயர் ஓர் சிறந்த வீரனைக் குறிக்கும். 2-ம் இராசாதிராசன் ஆட்சியில் பொறிக்கப்பட்ட திருவாலங்காட்டில் காணப்படும் ஓர் கல்வெட் டில் (468 of 1905) அம்மையப்பன் பழியஞ்சிப் பல்லவரையன் எனும் பெயர் வந்துளது. அம்மையப்பன் என்னும் பெயர் ஓர் சேதி மன்னன் குடியைக் குறிக்கும். பல்லவரையன் என்பது சேனுதிபதியைக் குறிக்கும் பெயராகும். பழியஞ்சி என்பது பட்டப்பெயர். இவ்வீரன் ஓர் அரிய செயல் செய்து இப்பட்டம் பெற்றனன் போலும். இவ்வாறு பட்டம் பெறும் வழக்கு, 3-ஆங்குலோத்துங்கன் காலத்திருந்த பழிதீர்த்தானுன சோழ சம்புவராயன், என்னும் வீரன் பெயராலும் அறியலாகும். 2-ம் இராசாதிராசன் கி. பி. 1163-முதல் 1178 வரையில் ஆட்சி புரிந்தான்.

**காவேரி வல்லவன்.** ஓர் வல்லபன் ராசத்துரோகம் செய் தானென்று 2ம் இராசாதிராசன் 12ம் யாண்டுக் கல்வெட்டு ஒன்றில் பொறிக்கம்பட்டிருக்கிறது (468 of 1905). இக்கல் வெட்டு கி. பி. 1175ல் ஏற்பட்டதாகும். விக்கிரசோழனுலாவில்

"கோட்டாறுங் கொல்லமுங் கொண்ட கொடைநுளம்பன்
வாட்டாறு மதயானை வல்லவனும்" என

வாட்டாற்றில் வல்லவன் வெற்றிகொண்டான் எனவும் தக்கயாகப் பரணியில்,

"கட்டரணம் வல்லவனை நடைகொண்டார் காவிரிப்பூம்
பட்டினமும் பாடாதார் பசியன்ன பசியினமே"

என வந்திருத்தலில், வல்லவன் சோழவரசனுக்கு விரோதமாகக் கிளம்பினவனைப் பணிந்து நடக்குமாறு செய்தவரைப் புகழப் பட்டிருத்தல் காண்க. வீரசோழிய உரையில் எட்டாரைச் சக்கிர வுதாரணத்தில் கூறப்பட்டிருக்கும் வல்லபன் இவ்வல்ல பனேயென ஊகிக்கலாம். இவ்வல்லபன் மீண்டும் இராசாதி ராசன் காலத்தில் சோழனுக்குப் பகைவரான சிங்களவரோடு சேர்ந்துகொண்டான்போலும். இவன் காவேரி நாட்டுக்குடை யானதலால் காவேரி என்னும் அடையான் கூறப்படுவான் போலும். இவ்வரசன் தோன்றலொருவனை சந்தக்கவி அருண கிரிநாதரும் "கலிசைவரு காவேரி சேவகன்," "வீராபுரி வருங் கோவே" "கலிசை வாழவரு காவேரி சேவகன்" எனப் புகழ்ந் திருத்தலும் காண்க.

**கரிகால கன்னன்.** சார்வ பௌம சக்கரவர்த்தி வீரராம நாததேவன் என்னும் கன்னடவரசன் 12ம் ஆண்டு கல்வெட்டு (40 of 1913) ஒன்று நாமக்கல் தாலூகா கார்குடியில் பொறிக்கப் பட்டுள்ளதில் **கரிகால கன்னவளநாடு** என ஓர் நாட்டின் பெயர் காணப்படுகிறது. இவ்வரசன் கி. பி. 1254ல் ஆட்சிபுரிய ஆரம் பித்தானதலால் கல்வெட்டின் காலம் கி. பி. 1266 ஆகும். இவ்வள நாட்டின் பெயர் பிற்காலத்திலும் விஜய நகரவரசன் காலத்து விருத்தாசலத்தில் உள்ள ஓர் கல்வெட்டிலும் (1 of 1913) குறிக் கப்பட்டிருக்கிறது. அரசர்கள் பெயரையும் பட்டங்களையும் நாட்டுக்கிடும் வழக்கு, ராஜராஜவளநாடு, ராஜ கம்பீர வளநாடு என்னும் பெயர்களால் அறியலாகும். கரிகால கன்னன் என் பதும் ஓர் அரசன் பெயராகும். இப்பட்டம் பூண்ட சோழ வரசர் ஒருவருமில்லையெனத் தெரியவருகிறது. எனவே முற் கூறிய கன்னடவரசன் இப்பெயர் வகித்திருந்தானெனலமையும்.

எனவே வீரசோழிய வுரையாசிரியர் 13ம் நூற்றுண்டினிறுதிக் காலத்திருந்தவராவர்.

பரிமேலழகர். திருக்குறள் வினைத்தூய்மை யதிகாரத்தில்,

"சலத்தாற் பொருள்செய் தேமார்த்தல் பசுமட்
கலத்துணீர் பெய்திரீஇ யற்று" என்னும்

செய்யுளினுரையில் "பிறரெல்லாம் ஏமாத்தல் என்று பாடங் கொண்டார்" என்றுபரிமேலழகர் கூறினராதலின் "ஏமார்த்தல்" என்ற பாடம் முதன்முதல் பரிமேலழகர் கொண்டாரென விளங்கும். வீரசோழியவுரை (வேற்றுமை-சூ 6லும், அலங்கார-சூ 38லும்)யில் இருமுறை பரிமேலழகர் கொண்டபாடம் வந்திருத்தல் காண்க. எனவே வீரசோழியவுரைகாரருக்கும் பரிமேலழகர் முற்பட்டவராவர்.

வீரசோழிய வுரையாசிரியர் 11ம் நூற்றுண்டினரெனக் கொண்டு ஆராய்ச்சியாளரனைவரும் யாப்பருங்கலம், யாப்பருங்கல விருத்தி, யாப்பருங்கலக்காரிகை, காரிகை முதலிய நூல்களின் காலவரையறை கூறினர். இதுகாறும் கூறியவாற்றால் வீரசோழியவுரை 13ம் நூற்றுண்டுக்கு முற்பட்டதாகாதெனல் தெளிவாம். எனவே முற்கூறிய நூல்களின் காலங்களை ஈண்டு ஆராய்வாம்.

யாப்பருங்கல விருத்திகாரர் யாப்பருங்கலத்திற்குப் பிற்பட்டவராதல் வெளிப்படை. யாப்பருங்கலக் காரிகைச் சூத்திரங்களைப் புறனடையாகக் கொண்டாராதலின் காரிகைநூலுக்கும் இவ்வாசிரியர் பிற்பட்டவராவர். இவ்விருத்திகாரர் கொள்கையை இளம்பூரண வடிகள் மறுத்திருப்பதால் இளம்பூரண வடிகளுக்கு இவர் முற்பட்டவராவர். நேமிநாதம் இயற்றிய குணவீர பண்டிதர் திரிபுவன தேவன் காலத்தவராவர். முதற் குலோத்துங்கச் சோழன் திரிபுவன தேவன் என்னும் பட்டத்தை கி.பி. 1084 க்குப்பின் பூண்டான். நேமிநாத இலக்கண நூல் இளம்பூரணவடிகள் உரையைத் தழுவி இயற்றப் பட்டதாகும். எனவே யாப்பருங்கல விருத்திகாரரும் இளம்பூரண வடிகளும் முதற் குலோத்துங்கன் காலத்திற்கு முற்பட்டவராகலாம். மற்றும் யாப்பருங்கல விருத்தியில் வந்துள்ள

"குலாவணங்கு வில்லெயினர் கோன்கண்டன் கோழி
நிலாவணங்கு நேர்மணன்மே னின்று—புலாலுணங்கல்
கொள்ளும்புட் காக்கின்ற கோவின்மையோ நீபிறர
துள்ளும்புக் கியாப்ப துரை" என்னும்

செய்யுளில் கண்டன் என்னும் பெயர் காணப்படுகிறது. இப் பெயர் ஓர் அரசன் பெயர் ஆகும். வீரசோழிய வுரையில் (141-ம் பக்கம்)

துற்றுற்றன்றி வெம்போர்செய்த விற்கைப் பன்மன்
முன்போடவோர் தத்திற்றுன்றுவன் பாய்பரி யுய்த்துத்
தன்மை கொண்டோடிய,
வெற்றுச்செம்பியன் பார்புகழ் கொற்கைக் கண்டன்வன்
பாரத வெற்புக்கொண்டு திண்போர் புரிந்த
கோப்பத்தன்றெதிர்ந் தோர்வெறு,
கொற்றத் தொங்கல் சிங்காசனமொற்றைச் சங்குவெண்
சாய்மரை குத்துப் பந்தர்முன் பாவிய முப்பந்தி
முன்றுன்மகி
ழொற்கூறப் பெண்டிர் பண்டார மொடொற்றைத்தன்
பெருஞ் சேனையு மிட்டிட் டன்றுடைந்தான்
வசைப்பட்டுக் கொண்ட வங்காரனே"

என்னும் செய்யுளிலும் கண்டன்பெயர் வந்துளது. இக்கண்டன் கொப்பத்துப் போர்வென்றது இச்செய்யுளில் புகழப் பட்டிருக்கிறது. 2-ம் இராசேந்திரன் மெய்க்கீர்த்தியிலும்

செப்பருந் திறத்த கொப்பத் தகவையில்
.... .... .... ....
.... .... .... ....
தொடுகழல் வீரர்கள் மடியவும் வகையா
லொருதனி யநேகம் பொருபடை வழங்கியம்
மொய்யமர் சளுக்கி தம்பிஜய சிங்கனும்
போர்ப்புல கேசியுந் தார்த்தச பன்மனும்
மானமன் னவரில் மண்டலிய சோகையனும்"

எனக் கூறப்பட்டிருப்பதால் கொப்பத்துப் போரில் பன்மனே வென்று கீர்த்திபெற்றவன் 2-ம் இராசேந்திரனெனத் தெரிதல் காண்க. இவ்வரசன் கண்டன் என்னும் பட்டம் பூண்டிருந்தானென்பது வீரசோழியத்திற் காணும் செய்யுளால் விளங்கும். யாப்பருங்கல விருத்தியில் கூறப்பட்டவனும் 2-ம் இராசேந்திரனுகல்வேண்டும். இவ்வரசன் கி. பி. 1052-ம் ஆண்டு முதல் 1062-ம் ஆண்டுவரையில் ஆட்சிபுரிந்தான் எனவே யாப்பருங்கல விருத்திகாரர் 11ம் நூற்றுண்டின் பிற்பகுதியிலிருந்தவராவர்.

யாப்பருங்கலம், காரிகை. ஆராய்ச்சியாளர் திருமுறை கி. பி. 1011ல் தொகுக்கப்பட்டதென்று கூறுவர். இக்காலத்தில் கலித்துறையை விருத்தமாக வழங்கப்பட்டதால் திருப்பாட்டுகளில் சில பதிகங்களே திருவிருத்தமென்று வகுக்கப்பட்டிருப்பன காண்க. நம்மாழ்வார் திருவிருத்தமும் கலித்துறையின் பாற்படும். இக்காலத்திற்குப் பிறகு கலித்துறையைக் கட்டளேக் கலியென வழங்குவாராயினர். திருமுறை வகுத்த காலத்திற்கு முன்னிட்டு கலித்துறை காரிகையென வழங்கப் பட்டதாகும். எனவே யாப்பருகலக் காரிகை 10ம் நூற்றுண்டின் பிற்பகுதியிலும், யாப்பருங்கலம் 10ம் நூற்றுண்டின் முற்பகுதியிலும் இயற்றப் பட்டிருக்கலாமெனக் கொள்ளலாம்.

யாப்பருங்கலக் காரிகை யாசிரியரைக் குறித்த ஓர் கல்வெட்டில் காணப்படும் செய்யுளே ஈண்டு வரைவாம்.

"எண்டிசை யுலகை யொருகுடை நிழற்கீழிருத்திய
சோழற்கி யாண்டோரு முப்பத் தேட்டினிற்
சோணுட்டிசை வளர் இந்தளூர் நாட்டு(ள்)

(உண்டை) நீடியசீ ரேருமையொடு (மு)லாவின
சிவபெருமானுக்குவந்து (வெண்கபி)லேமலே
யெனச் சிலேயாலுத்தம விமான மிங்கமைத்தான்

தண்டமிழமித சாகரமுனியைச் சயங்கொண்ட சோழ
மண்டலத்துத் தண்சிறுகுன்ற நாட்டகத்
திருக்தி(ச்சந்த) நூற்காரிகை யவனுற்

கண்டவன் மருமான் காரிகைக் குளத்தூர்க்காவல
னிலாவிஞ னெவர்க்குங் கருணையு(நிதியுங்) காட்டிய
மிழலைநாடட்டுவேன் கண்டன் மாதவனே''

இச்சாசனம் செந்தமிழில் பெருந்தொகை 1219ம் செய்யுளாக வெளிவந்துளது. இக்கல்வெட்டு முதற் குலோத்துங்கன் 38-ம் ஆண்டில் (கி. பி. 1108ல்) பொறிக்கப் பட்டதாகும். கண்டன் மாதவன் என்பவன் முன்னோன் ஒருவன் அமுதசாகரரைக் கொண்டு காரிகைநூல் இயற்றுவித்தானெனப் புலப்படுகிறது. மருமான் என்பதற்குத் தந்தை என்று ஓர் ஆராய்ச்சியாளர் பொருள்கொண்டு காரிகைநூல் முதற் குலோத்துங்கன் காலத் தியற்றப் பட்டதாகுமென்ருர். இக்கூற்றை மறுத்து காரிகை உரையாசிரியராகிய குணசாகரர் ராஜராஜன் காலத்திற்கும் முற்பட்டவராகுமென்றும் சயங்கொண்ட சோழமண்டலத்தி லுள்ள குளத்தூரில் காரிகை இயற்றப்பெற்றதென்றதால் சாசனத்திற் கூறும் செய்தி பிழையினதாகும் என்றும் கூறினர். சயங்கொண்ட சோழமண்டலம் என்னும் பெயர் முதல் ராசராசன் காலத்தில் தொண்டைமண்டலத்துக் கிடப்பட்டதாலும் முற்கூறியவாறு உரையாசிரியர்காலமே ராசராசன் காலத்திற்கு முற்பட்டதென்ற கொள்கையாலும் சாசனம் பிழைபட்டதென் பார். யாம் இங்குக் கூறியவாறு கல்வெட்டில் கூறிய செய்தி பொருத்தமாகவிருத்தலால் யாப்பருங்கலக் காரிகை 10-ஆம் நூற்ருண்டின் பிற்பகுதியில் இயற்றப்பட்டதெனல் வலியுறும். ஆகையால் சாசனத்திற் கூறும் செய்திகள் முழுதும் உண்மை யெனக் கொள்ளவேண்டும்.

யாப்பருங்கலக் காரிகை உரையாசிரியர் யாப்பருங்கல விருத்திகாரருக்குப் பிற்பட்டவர் என்று முற்கூறினும். யாப் பருங்கல விருத்திகாரர் யாப்பருங்கல சிறப்புப்பாயிரத்துக் குரை கூறியவிடத்தும் ஆசிரியர் பெயர் கூறிஞரிலர். இவ் வாசிரியர் தமதுநூலில் மேற்கோளாசிரியர் பெயரையும் நூலின் பெயரையும் விரித்துக் கூறுவர். இவ்வாசிரியர் ஆராய்ச்சித் திறமை வாய்ந்தவரென்பது யாப்பருங்கல விருத்தியே போதிய சான்ருகும். இவ்விருத்திகாரருக்கும் யாப்பருங்கலவாசிரியர்

பெயர் அறியக் கூடவில்லையென்று கொள்ளுதல் பொருத்த முடைத்தாகும். இவ்விருத்திகாரர் யாப்பருங்கலம், காரிகை யாகிய இருநூலுக்கும் ஆசிரியர் ஒருவரெனக் கூறியிருப்பதைப் பிற்பட்ட வாசிரியர் பின்பற்றினர். காரிகை நூலின் ஆசிரியர் பெயர் அமுதசாகரரென்று முற்கூறிய கல்வெட்டினால் தெரிய வந்த பின்னிட்டு ஆசிரியர்களனைவரும் இருநூலுக்கும் ஆசிரியர் அமுதசாகரரெனக் கொண்டார். எனவே அமுதசாகரர் பெயரைக் கூறும் நூல்களெல்லாம் கி. பி. 1108க்குப் பின்னர் இயற்றப்பட்டதெனக் கோடல் பொருந்தும். யாப்பருங்கலக் காரிகை உரையும் 11ம் நூற்றூண்டுக்குப் பிற்பட்டதாகும். இவ்வாசிரியர் கூறிய உதாரணங்களை வீரசோழிய வுரைகாரர் ஆட்சிகொண்டாராதலால் இவ்வாசிரியர் வீரசோழி உரையாசிரியருக்கும் முற்பட்டவராதல் வேண்டும். மற்றும் யாப்பருங் கலக் காரிகையுரையில்,

"காதம சூகவிறு திதுனி கண்புருவஞ்
சீதமுகங் கொங்கை திரண்டவா—யோதக்
கரும்பார் மழபாடிக் காங்கேயன் பட்டத்
தரும்பார் குழலளகத் தார்க்கு"

என்னும் செய்யுளில் (எழுத்து நிரனிறைக்குதாரணம்) மழபாடி காங்கேயன் என்று ஒருவர் பெயர் வந்துளது. இக்காங்கேயன் காலத்துக்கும் காரிகை யாசிரியர் பிற்பட்டவரெனக் கூறலாம். இக் காலம் ஆராயத்தக்கது. காரிகையாசிரியர் வேறு ஆதரவு கிடைக்கும்வரையில் 12ம் நூற்றூண்டினரெனக் கோடல் பொருந்தும்.

யாப்பருங்கலம், காரிகையாகிய இவ்விரு நூல்களுக்கும் ஆசிரியர் ஒருவரென யாப்பருங்கல விருத்திகாரர் கூறியிருப்பதை அறிஞரனைவரும் பின்பற்றினர். இவ்விரு நூலின்கண் மதவேற்றுமை யிருப்பதாகத் தோன்றுவதை ஈண்டுரைப்பாம்.

அசைக் குறுப்பாக யாப்பருங் கலக்காரர் 15 எழுத்துக்கள் வேண்டினர். காரிகையாசிரியர் 13 எழுத்துக்கள் வேண்டினர்.

சீர்—உரிச்சீரைப் பொதுப் பெயராகக்கொண்டு அகவலுரிச்சீர், வெண்பாவுரிச்சீர், வஞ்சியுரிச்சீர் என காரிகையாசிரியர்

கூறினர். நாலசைச் சீர்வேண்டி, வாய்பாடுங் கூறி, தளையுங் கூறினர். யாப்பருங் கலக்காரர் உரிச்சீரை சிறப்புப் பெயராக மூவசைச் சீருக்கு வழங்கினர். நாலசைச்சீர் வேண்டினாரலர். இதனானே யாப்பருங்கல விருத்திகாரர் நாலசைச்சீர் நீக்குவதற்குபாயமாக

"குற்றுகர மொற்றுக்கிக் கூன்வகுத்துச் சிந்தியற்றி
மற்றை நெடிலும் வகையுளியுஞ்—சொற்றதன்மேல்
மேலசைசீர் நாட்டி யளபெடையை யீறழித்தால்
நாலசைச் சீர்க்கில்லை நடை." என்று

மேற்கோள் சூத்திரங் கூறினர்.

**பாக்களின் வகை** யாப்பருங் கலக்காரர் பாக்கள் நான்கு வகையென்றார். காரிகையாசிரியர் மருட்பாவையும் சேர்த்து பாக்கள் ஐந்து வகையென்றார்.

**வெண்பாவின்** இலக்கணம் வெவ்வேறு வகையாகக் கூறியிருத்தல் காண்க. இறுதிச் சீருக்கு வாய்பாடுகள் காரிகையாசிரியர் கூறியிருப்பதும் யாப்பருங் கலக்காரர் இறுதிச்சீரைக் கூறாததும் காண்க.

**வெளி விருத்தம்** நான்கடியானும் வருமென யாப்பருங்கலக்காரர் கூறக் காரிகையாசிரியர் மூன்றடியானும் வருமென்று கூறினர்.

**நிலைமண்டில** வாசிரியப்பாவில் யாப்பருங்கலக்காரர் ஒற்றிறுதி வேண்டக் காரிகையாசிரியர் ஒற்றிறுதி கூறவில்லை.

**வண்ணம்** நூறென்று காரிகை யாசிரியர் அவிநயத்தைப் பின்பற்றி சூத்திரங் கூறினர். யாப்பருங்கலக்காரர் வண்ணத்தின் வகைகூறவில்லை.

**சித்திரகவிக்கு** யாப்பருங்கலங்காரர் சூத்திரங்கூறினர். காரிகையாசிரியர் வேண்டவில்லைபோலும். இங்குக் கூறியவாற்றால் காரிகையாசிரியர் சுருக்கமாகக்கூறினரெனினும் சிலவிடத்து விருத்தியாகவுங் கொள்ளலாம். காரிகையாசிரியர் மதவேற்றுமையுடையராகத் தோன்றுவதால் இருநூல்களுக்கும் ஆசிரியர் ஒருவர் என்பது பொருந்தாது.



———

# ஆழ்வார் பாரதமும் பண்டைத்தமிழ் நூல்களும்.

கோமான். ம. வி. இராகவன், ஔவைத் தமிழகம், திருவத்திபுரம்.

(முற்றொடர்ச்சி 382-ம் பக்கம்)

இராயசூய மகம் முற்றுவித்து உயர்வுற்று விளங்கும் தருமனைத் தாழ்வுறுத்துவான்வேண்டிச் சுயோதனன், கன்னன், சகுனி, திருதராட்டிரன் ஆதியோர் ஒன்று கூடித் தருமனை வஞ்சனையாலழைத்துச் சூதாடி அவனுக்குரிய பல்வகைச் செல்வங்களையும் கவரவுன்னி, அதற்கேற்ற நெறி சூழுங்கால் ஆங்கு அமர்ந்திருந்த விதுரன் என்னும் சதுரன், 'இவ்வாறு செய்தல் எவ்வாற்றானும் தீங்கே பயப்பதாகும்' எனக் கூறிப் பலவகையாக உறுதி பயப்பன எடுத்துரைத்து, கடையில் 'என் கடமையை யான் செய்தேன்' என முடிவுரை கூறியதாகவரும்

1 "ஆதலா லுறுதி சொன்னே னுமுறை யறிந்து கோடி
ஏதிலார் போல யானு மினியுனக் கியாதுஞ் சொல்லேன்
தீதலா துணரா வஞ்சச் சிந்தையார் பரிந்து கூறும்
கோதலா துளக்கிங் கேலா தெனச் சில கூறினானே"

இப்பாவில் 2 "அறிகொன் றறியா னெனினு முறுதி, யுழையிருந்தான் கூறல் கடன்" என்னுமிப் பொன்னுரையின் கருத்துத் திகழ்ந்தொளிருகின்றது. அன்றியும், இச்செய்யுள், 3 "மூரித்தேந் தாரினுய்நீ முனியினு முறுதிநோக்கிப், பாரித்தேன் தரும நுண்ணூல் வழக்கது வாதல் கண்டே" எனவரும் சிந்தாமணிப்பாவினோ டொக்கின்றது. இக்கவியின் பின்னிரண்டடியும், 4 "காதலார் சொல்லுங் கடுஞ்சொல் உவந்துரைக்கும், ஏதிலாரின் சொல்லிற் றீதாமே" என்னும் நாலடிச் செய்யுளை நினைப்பிக்கின்றது.

திருதராட்டிரன் அழைப்புக்கிணங்கி அத்தினபுரம்செல்லுதற்கொருப்பட்ட தருமனைநோக்கி, அங்ஙனம் செல்லலாகாதென வீமன் விலக்கிக் கூறியதாகவரும்,

1. சூது 40. 2. குறள் 638. 3. சீவக 214. 4. நாலடி 73.

* "தேறலார் தமைத் தேறலுந் தேறினர் தேறலாமையுமென்று
மாறலாருடன் மலைதலு மாறுடன் மருவிவாழ் தலுமுன்னே
ஆறலாதன வரசருக் கென்று கொண்டரச நீதியிற்சொன்னூர்
கூறலாதன சொல்வதென்செல்வதென்கொடியவனருகென்றான்"

இப்பாவில், 1 "தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும், தீராவிடும்பை தரும்" எனவரும் திருக்குறளின் சொற்றொடரை அதே பொருளிலமைத்துக் கொண்டுள்ளார்.

துரியன் பாஞ்சாலியைத் தன் மடிமீதிருத்து மாறுபணிக்க அதுபோது பாஞ்சாலி யாதியோர் பலவாறு வஞ்சினங்கள் கூற, அது கேட்டஞ்சிய திருதராட்டிரன், சூதாட்டத்தாற் கவர்ந்த செல்வமனைத்தையும் தருமனைப் பெறுமாறு கூற, அவ்வாறே பாண்டவர் அவற்றைப் பெற்றனராக, அதுகண்ட சகுனி தன் மருகனுக்குக் கூறியதாகவரும்,

2 "யாதொரு கரும மேனு மெண்ணியே துணிக வென்றும்
காதலிற் றுணிந்து செய்தாற் கருதுதல் கடனன்றென்றும்
ஓதுநூற் புலவர் சொன்ன ருமக்குள வுணர்வற் றன்றே
பேதுற வடர்த்தும் பின்னை யுருகினீர் பிழைசெய் தீரே"

இச்செய்யுளில், 3 "எண்ணித் துணிக கருமந் துணிந்தபின், எண்ணுவமென்ப திழுக்கு" என்னும் குறளின் சொல்லுங் கருத்தும் அமைந்திருக்கின்றன. அச்சகுனியே பின்னும் கூறியதாகவரும்,

4 " தீயினாற் சுட்ட செம்பு ணாறுமத் தீயிற்றீய
வாயினாற் சுட்ட மாற்ற மாறுமோ வடுவே யன்றோ
பேயினாற் புடையுண் டாரோ மறப்பரோ பெரியோ ரென்றான்
வீயினாற் றொடுத்த தண்டார் வேந்தர்க்கு வேந்தன் மாமன்"

இச்செய்யுளில், 5 "தீயினாற் சுட்டபுண் உள்ளாறு மாறாதே, நாவினாற் சுட்டவடு" என்னும் இப்பொது மறையின் சொற்களை யதே பொருளிற் பொருத்தியுள்ளனர்.

கடுஞ் சுடர்க் கதிரவனும் பசுபதியை நோக்கித் தவம்புரி யுந்தனஞ்சயனுக்குக் கோடை காலத்தினும் வெங்கதிர் பரப்ப

* சூது 72. 1. குறள் 508. 2. சூது 266. 3. குறள் 467. 4. சூது 267. 5. குறள் 129.

வின்றித் தண்கதிர் பரப்பித் திங்கள் போன்றனென்றும், அங்ஙனம் அவன் மதியம் போன்றதற்குக் காரணம் உலகங்கட்கெல்லாம் கண்ணாவான் கதிரவனே யாதலானும், கண்ணுக் கணிகலங் கண்ணோட்ட மென்பவாகலானும், அக்கண்ணோட்டந்தான் கருணையாமாதலானும், ஆகவே கருணையால் அருச்சுனற்கு வெப்பஞ் செய்யானாயினன் என்றும் பொருள் பொதிந்த

1 "பண்ணுக்கு வாம்பரித்தே ராதபனும் பணிந்துபசு பதியை நோக்கி, மண்ணுக்குத் தவம்புரியுந் தனஞ்சயற்குக் கோடையினு மதியம் போன்றான், எண்ணுக்கு வரும்புவனம் யாவினுக்குமொரு கண்ணாவா னிவனே யன்றோ, கண்ணுக்குப் புனைமணிப்பூண் கண்ணோட்ட மென்பதெலாங் கருணையன்றோ" இப்பாவின்கண், 2 "கண்ணிற் கணிகலங் கண்ணோட்ட மஃதின்றேல், புண்ணென் றுணரப்படும்" என்னும் குறளின் சொற்களையும் பொருளையும் பெய்து கொண்டுள்ளார்.

அருச்சுனன் தவஞ்செய்தலையறிந்த பருப்பத வரசன் மகளாகிய உமையம்மையார் அச்செய்தியைத் திரிபுரமெரித்த விரிசடைக் கடவுட் கறிவுறுத்த, அதுகேட்ட முதுமறை முதல்வனாகிய முக்கட்பரமன் அவ்வம்மைக்குக் கூறுவதாகவரும்,

3 "ஆலமுண்டமுதம் பொழிதரு நெடுங்கண் அம்பிகை யருண்மொழி கேட்டு, நீலமுண்டிருண்ட கண்டனு மிரங்கி நிரைவளைச் செங்கையாய் நெடிது, காலமுண்டருள் கூரறத்தின்மைந் தனுக்குங் காற்றின்மைந் தனுக்குநே ரிளையோன், ஞாலமுண்டவனுக்குயிரெனச் சிறந்தோன் நானெனு நாமமும் படைத்தோன்"

என்னும் பாவில் அம்பிகையின் அருள்விழி வருணனையில், 1 "இருநோக் கிவளுண்கண் ணுள்ள தொருநோக்கு, நோய்நோக்கொன் றந்நோய்மருந்து" என்னும்பொருண்மொழியின்கருத்து பெய்து கொள்ளப் பட்டுளது. இச்செய்யுளின் முதலடி 2 "....முனிவரையும், மாலுறுப்ப மகிழ் செய்வ மாண்பில் நஞ்சமமுதமுமே, போல் குணத்த பொருகயற்கண்" எனவரும்

---

1. அருச்-தவ 43. 2. குறள் 575. 3. அருச்-தவ 75.
1. குறள் 1091. 2. சீவக 167.

சிந்தாமணிச் செய்யுளையும், 3 "நச்சாவமிர்த மன்ன நங்கையர் நாட்டவைவேல்" எனவரும் கந்தபுராணச் செய்யுளையும் நினைப் பூட்டுகின்றது.

துரியனுலேவப்பட்ட ஒற்றர் 'உலகமெங்கும் துருவியும் பாண்டவர்களையும் அவர்கள் வாழும் பதியையும் அறியலாக வில்லை' யென்று கூற, அதுகேட்ட வீட்டுமன், நெறி திறம்பாச் செங்கோன்மையறக் கடவுள் உறையும் நாடு இத்தகைய விலக் கணங்களோடு பொருந்தி விளங்கும் எனக் கூறியதாகவரும்,

4 "முன்னெற்றை யிருசங்க முடனூத வெதிர்சென்று முனை வெல்லுமா, மன்னெற்ற ரிதுகூற மந்தாகி னீமைந்தன் மகன் மைந்தனுக், குன்னெற்ற ருணர்தற்கு வருமோ வறன்காளை யுறை நாடுகார், மின்னெற்று மழையுண்டு விளைவுண் டெனத் தேடும் விரகோ தினன்" இப்பாவின்கண்,

1 "இயல்புளிக் கோலோச்சு மன்னவனுட்ட, பெயலும் விளை யுளுந்தொக்கு" எனவரும் பொதுமறையின் கருத்து அமைக்கப் பெற்றுளது.

துரியோதனன் நிரைகவர்தற் பொருட்டு விராடநாடு சென்று எதிர்க்க வருவானின்றுனென வுணராது போருக்கெழ, அதுகண்ட விதுரன் இடத்தினுற்றல் கூறிப் போர் புரிதல வேண்டாவென விலக்கியதாக வரும்,

2 "தன்னிலத்தினிற் குறுமுயல் தந்தியின் வலிதென்
றிந்நிலத்தினிற் பழமொழி யறிதிநீ யிறைவ
எந்நிலத்தினு முனக்கெளி தாயினு மிவர்நம்
நந்நி லத்தினில் வரவமர் தொடங்குத னன்றால்" இக்

கவியில், 3 "நெடும்புனலுள் வெல்லுமுதலை யடும்புனலி, னீங்கி னதனைப்பிற" 4 "காலாழ் களரி னரியடுங் கண்ணஞ்சா, வேலாண் முகத்த களிறு" 5 "சிறை நலனுஞ் சீரு மிலரெனினு மாந்த, ருறை நிலத்தோ டொட்டலரிது" எனவரும் குறட்பாக் களின் கருத்துக்கள் அமைந்துள்ளன.

---

3. கந்த-மார்க்கண்ட 1. 4. விரை 5. 1. குறள் 545.
2. விரை 50. 3. குறள் 495. 4. குறள் 500. 5. குறள் 499.

குந்தி மக்கள் மறைந்தொழுக வேண்டிய காலம் கழிந்து வெளிப்பட்ட பின்னர், தானின்னாரென வறியாது செய்த குற்றங்களைப் பொறுத்தருளுமாறு விராடன் அவன் வேண்டிக் கொள்வதாகவரும்,

6 "அறைமுற சுயர்ந்தவனை யவனுநனி யைய,
பொறையுடைய வர்க்கலது புகழ்புனைத லுண்டோ
அறிவுமுத னற்குண மடாதவ ரிடத்திற்
குறைதிரு வுளத்தினிடை கொண்டருள லென்றான்"

இப்பாவின்கண், 1 "ஒருத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப், பொன்றுந் துணையும்புகழ்" என்னுமிப் பொருண் மொழியின் பொருள் பொதிந்து பொலிகின்றது.

ஆயத்தான் அனைத்தையுமிழந்து நின்ற தருமன் பெரியோர் கூறியவாறே மறு சூதாடி தான் தோற்ற எல்லாவற்றையும் வென்று, பின்னர் முன்னோர் பணிசிரமேற் கொண்டு காட்டிடை புகும்போதும் மனம் கலங்குதலின்றிக் களிகூர்ந்து சென்றான் என்று கூறும்,

2 "நாட்டிடை நடந்துபொற்று ணறுமலர் சிவக்கவேகிக்
காட்டிடை புகுந்தபோதுங் கலக்கமற்று வகைகூர்ந்தான்
கூட்டிடை யின்பதுன்பக் கொழும்பயன் துய்த்துமாறி
வீட்டிடை புகுதும்போதும் மெய்ம்மகிழ் விபுதர்போல்வான்"

என்னுமிப்பாட்டில், 3 "இன்பத்து ளின்பம் விழையாதான் துன்பத்துள், துன்ப முறுதலிலன்" என்னுமிப்பொய்யாமொழியின்பொருள் பொலிகின்றது.

அறம் வளருஞ் செங்கோலனாகிய அறன் மகன் ஆட்சியில் இந்திரப் பிரத்த நகரம் இருந்த நிலையைக் கூறும்,

4 "துன்பம்பய மிடிநோய்பகை சோரங்கொலை யெய்தா
தின்பம் பொருளறன்யாவையு மியல்பாதலி னெய்தித்
தன்னுபங்குடை நிழன்மன்பதை தரியார்முனை மதியா
வன்பன்றனை நிகர்வாழ்வுற வருநாள்களி லொருநாள்"

6. நிரை 10. 1. குறள் 156. 2. சூது 284. 3. குறள் 629.
4. அருச்-தீர்த்த 1.

இப்பாவில், 5 "உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ், சேரா தியல்வது நாடு," 6 "பிணியின்மை செல்வம் விளைவின்ப மேம, மணியென்ப நாட்டிற் கிவ்வைந்து" என்னும் தமிழ்மறைகளின் கருத்துக்கள் எடுத்தாளப்பட்டிருக்கின்றன.

கிருட்டினன் துரோணனைக் கொல்வான் வேண்டித் தருமனை யொரு பொய் கூறுகவென, அவன் அவ்வாறு கூறற் கொருப்படானாக, கண்ணபிரான் அவனுக்கு வாய்மையின் இலக்கணங் கூறித்தெருட்டியதாகவரும்,

1 உம்மையின் மறுமைதன்னி லுறுபயனிரண்டும் பார்க்கில்
இம்மையின் விளங்கும்யார்க்கு மவரவ ரியற்கையாலே
மெய்ம்மையே யொருவர்க்குற்ற விபத்தினை மீட்டுமாகில்
பொய்ம்மையு மெய்ம்மைபோலப் புண்ணியம் பயக்குமாதோ"

இச்செய்யுளின்கண் 2 "பொய்ம்மையும் வாய்மையிடத்த புரைதீர்ந்த, நன்மை பயக்குமெனின்" எனவரும் பொருண்மொழியைப் பெய்து கொண்டுள்ளார்.

எட்டாம் நாட்போரில் அருச்சுனனுக்கு நாக கன்னியாகிய உலூபியென்பாளிடத்திற் றோன்றிய அராவான் பலவுருவங் கொண்டு தனது முழுவலியுந் தோன்றச் செய்த போரைப் புகலும்,

3 "ஒருபுடை யிவன்போர்செய்ய வொருபுடை யுரககன்னி
யருளுடை மைந்தனெண்ணி லாயிர முருவமாகி
யிருபுடை யினும்போர் வேந்தரெலிகள் போலேங்கியம்பால்
பொருபடை யுருண்டுபோகப் பொருவில்வெம் பூசல்செய்தான்"

இப்பாவின்கண், 4 "ஒலித்தக்காலென்னா முவரி யெலிப்பகை, நாகமுயிர்ப்பக் கெடும்" என்னுமித் திருக்குறட் கருத்தை யமைத்து அழகுறுத்தியுள்ளார்.

---

5. குறள் 734. 6. குறள் 738. 1. 15ஆம் போர் 24.
2. குறள் 297. 3. 8ஆம் போர் 18. 4. குறள் 763.

திருதராட்டிரன் அழைப்புக்கிணங்கி அத்திளுபுரம்போதல் ஆகாதெனவீமன் ஆதியோர் மறுத்துக் கூறக்கேட்ட தருமன், தந்தை யாணையைக் கடத்தல் அறனும்புகழுமன்றென்று கூறுவதாகவரும்,

1 "ஆவி யார்நிலை பெறுகுவர் நீதிகூரரி யவான் புகழன்றிப்
பாவி யானதங் கணுகுறு தொழிலினும் பலித்திடு நினைவின்றி
மேவி யாளுடை யையன்வந் திருக்கவும் வேரிவண் டெழுமன்றல்
காவி யார்தொடைக் காவல னேவனு மறுப்பது கடனன்றே"

இப்பாவின்கண், 2 "ஒன்றாவுலகத் துயர்ந்த புகழல்லாற், பொன்றாது நிற்பதொன்றின்று" என்னுமிப் பொருண்மொழியின் பொருள் அமைக்கப் பெற்றுள்ளது. அன்றியும்,

1 "பொன்று மிவ்வுட லின்பொருட்
டென்று நிற்கு மிரும்புகழ்
இன்று நீர்கழிந் தீர்களாற்
குன்றின் மேற்குடை வேந்திர்காள்"

2 ஒருவன திரண்டு யாக்கை யூன்பயி னரம்பின் யாத்த
உருவமும் புகழு மென்றாங் கவற்றுளூழ் காத்து வந்து
மருவிய வுருவ மிங்கே மறைந்துபோ மற்ற யாக்கை
திருவமர்ந் துலக மேத்தச் சிறந்து பின்னிற்கு மன்றே"

3 "மன்னு வுலகத்து மன்னிய சீர்த்தஞ்சை வாணன்"

4 "நின்று நிலைகெடா நல்லிசை நிலைஇ"

5 "மண்ணின்மேல் வான்புகழ் நட்டானும்............சாவா
வுடம்பெய்தினார்"

6 "தொலையா நல்லிசை யுலகமொடு நிற்ப"

7 "செல்லா நல்லிசைப் பெயரொடு நட்ட"

எனவரும் பழந்தமிழ்ப் பாக்களும் உடல்பொன்றினும் உலகம் பொன்றுங்காறும் பொன்றாது நிலைத்து நிற்பது புகழொன்றுமே என்பதைச் செவ்வன் விளக்குகின்றன.

---

1. சூது 74. 2. குறள் 233.

1, 2 சூளா சீயவதை 204, அரசியல் 226. 3. தஞ்சை 21.
4. பதிற்றுப் 14. 5. திரிகடு 16. 6, 7 மலைபடு 70, 88.

பாண்டு மன்னன் வசந்த காலத்தாற் சாபத்தையுமறந்து மதிமயங்கி காமவயத்தனாய் மாத்திரையுடன் இன்பம் நுகர்வான் வேட்டுச் சேர்ந்து, முன்னரெய்திய முனிவன் சாபத்தான் உயிர் துறக்க, அஃதறிந்த குந்தியும் தருமனாதிமக்களும் அவ்வுழி யடைந்து அழுதரற்றினர் என்று கூறிய ஆழ்வார், பாண்டுவின் மரணத்தை வியந்து தன் கூற்றாக,

* "கொஞ்சுகிளி யன்னமொழி குமுதவித ழமுதால்
எஞ்சின னராதிபதி யீதென வியப்போ
அஞ்சுதரு தீவினையி னாலமுது நஞ்சாம்
நஞ்சுமமு தாமுரிய நல்வினையின் மாதே"

என்று பாடிய பாட்டிலும், மாயன் மாயையாலுண்டான பொய் கையின் நஞ்சையருந்தி உதிட்டிரனொழிந்த நால்வரு மிறந்தனர் என்று கூறும்,

1 "ஆருயிர் பொன்றுங் காலை யமுதமும் விடமா மென்று
பாருளோ ருரைக்கு மாற்றம் பழுதறப் பலித்த காலை
மாருதி முதலா வுள்ள மன்னவர் நால்வர் தம்மோ
டோருயி ரான மற்றை யொருவனே யொருவ னானான்"

இச்செய்யுளிலும், 2 "நல்லவை யெல்லாந் தீயவாம் தீயவு, நல்ல வாஞ் செல்வஞ் செயற்கு" என்று மிக்குறளின் பொருளைப் பெய்து கொண்டனர். 3 "நல்வினை யுடைய நீரார் நஞ்சுணி னமுத மாகும், இல்லையே லமுது நஞ்சா மின்னதால் வினையி னாக்கம்" எனவரும் சிந்தாமணிச் செய்யுளுமிப் பொருட்டே யாம்.

(தொடரும்.)

---

* சம்பவச் 100.

1. நச்சுப் 32. 2. குறள் 375. 3. சீவக 2314.

# சாத்தனார் கோயில்கள்

(கல்வெட்டால் அறிந்த உயரிய செய்தி)

திரு. வை. சுந்தரேச வாண்டையார்,
ஆசிரியர், திருவையாறு.

தமிழ் மக்கள் தொன்றுதொட்டு வழிபட்டு வருந் தெய்வங்களுள் சாத்தனாரும் ஒருவர். மகாசாத்திரன் என்ற பெயரே மாசாத்தன் என்று திரிந்தது என்பதும், இவர் பாசண்டமாகிய தொண்ணூற்றறுவகைச் சமய சாத்திரத் தருக்கக் கோவைகளிற் பயின்றவராதலால் பாசண்டச் சாத்தர் எனப்படுவரென்பதும், சிலப்பதிகார உரையாசிரியராகிய அடியார்க்கு நல்லாரது கருத்தென்று புலப்படுகிறது. (சிலப். கனாத். 14-15).

சாத்தனாருக்குக் கோயில் அமைத்து வழிபடும் வழக்கம் சிலப்பதிகாரத்தில் காணப்படுகிறது. இக்காலத்தில் ஐயன் கோயில், ஐயனார்கோயில் என்ற பெயருடன் பல கோயில்கள் தமிழ் நாட்டில் பல இடங்களிலும் காணப்படுகின்றன. அவற்றுள் காப்பியக்குடி, பிடவூர் என்றவை சிறந்தவை. அப்பதிகள் யாண்டுள்ளன, என ஆராய்வாம்.

சாத்தனாரைப் பற்றிய இனிய வரலாறு ஒன்று ஐம்பெருந் தமிழ்க்காப்பியங்களில் ஒன்றாகிய சிலப்பதிகாரத்தில் காணப்படுகிறது. அது வருமாறு :—

முன்னொரு காலத்தில் மாலதி என்பாள் ஓர் பார்ப்பனி தனது மாற்றாள் குழந்தைக்குத் தன் பாலைச் சங்காலூட்ட அப்பால் விக்கிக் குழந்தை அவள் கையிலே இறந்தது. அதனால் மாலதி என் மாற்றாளும் கணவனும் என்மீது அடாப்பழி கூறுவரே! இதற்கு என் செய்வேன், என அஞ்சி அம்மகவை எடுத்துக்கொண்டு காவிரிப்பூம்பட்டினத்தே யிருந்த கற்பகக்கோட்டம், சூரியன் கோட்டம், கைலாயக் கோட்டம், வச்சிரக் கோட்டம், நிக்கந்தக் கோட்டம் முதலிய கோட்டங்களுக்குச் சென்று தன் துயரைத் தீர்க்குமாறு குறையிரந்தும் தீராமை

யினல் பாசண்டச் சாத்தனர் கோயிலிலே பாடு கிடந்தாள். அவ்வேளையில் சுடுகாட்டுக் கோட்டத்திருந்த இடு பிணம் தின்னும் இடாகினிப்பேய் இளங்கொடி போன்ற ஒரு பெண் வடிவாய் அணுகிப் பாடுகிடந்தாளை நோக்கி 'ஒரு குற்றமு மற்ற வளே, முற்பிறப்பில் தவஞ்செய்தில்லாதவருக்குத் தேவர்கள் வரங்கொடார். நீ பாடு கிடந்து பயனென்? எங்கே நின் குழந்தையைப் பார்ப்போம்' என்று வாங்கித் தன் வயிற்றினிவிட்டு மறைந்தது. இறந்த சேயின் உடலையும் இழந்த மாலதியின் வருத்தங்காணப்பொருத பாசண்டச் சாத்தனர் அவளை நோக்கி 'அன்னப், நீ செல்கின்றவழிமுன்னர்ப் பொதும்பரிடத்து அக்குழவி உயிரோடு கிடக்கின்றது. கண்டிலேயோ' என அவள் அங்குச் சென்று பார்க்க அவர் குழந்தையாய்க் கிடந்தார். அவள் அக்குழவியை ஐபமின்றி எடுத்துச்சென்று தாய் கைக் கொடுத்தாள். அக்குழவியாகிய சாத்தனரும் கல்வி கேள்வி களில் துறைபோய்த் தந்தை தாயரிறந்த பின்னர் நீர்க்கடன் முதலிய செய்து தாயத்தாரொடு வெல்வழக்குரைத்து தேவந்தி என்னும் மனைவியோடு எட்டியாண்டு கூடிவாழ்ந்தார். பின் தம் மூவா இளநலத்தைத் தம் மனைவிக்குக் காட்டி உண்மையை உரைத்து அவள் குறிப்பினை அறிந்து அதற்கேற்ப நீ எம்கோட்டத்துக்கு வா என அவளுக்கு அருளிச்செய்து, பிறர்க்கெல்லாம் 'தீர்த்தத்துறைபடிவேன்' என நீங்கினர் என்பது.

இங்ஙனம் மாயக் குழவியாகி வளர்ந்தது காப்பியக்குடி என்னும் பதியாகும் என்பது 'காப்பியத்தொல்குடி கவின்பெற வளர்ந்து' என்று சிலப்பதிகாரத்து வரந்தரு காதை 83ஆம் வரியால் போதருகிறது.

இந்தக்காப்பியக்குடி என்பது தஞ்சைசில்லாவில் சீகாழிக்கு மிக அண்மையில் உள்ளது. அங்கு சாத்தனர் கோயில் ஒன்று இன்றும் நின்று நிலவுகின்றது.

சாத்தனரைப்பற்றிய மற்றும் ஒரு வரலாறு திருத்தொண்டர் புராணத்து வெள்ளானைச் சருக்கத்தால் அறியலாகும். அஃதாவது :—

சேரமான் பெருமாணாயனார் அருளிச்செய்து திருக்கயிலாயத்தில் சிவபெருமான் திருமுன்பு விண்ணப்பித்த ஆதியுலாவை மாசாத்தனார் கேட்டறிந்து வந்தருளித் திருப்பிடவூரில் வெளிப்படுத்தா ரென்பது. (Published).

இதனை

"சேரர் காவலர் விண்ணப்பஞ் செய்தஅத் திருஉலாப் புறம்அன்று
சாரல் வெள்ளியங் கயிலையிற் கேட்டமா சாத்தனார் தரித்திந்தப்
பாரில் வேதியர் திருப்பிட வூர்தனில் வெளிப்படப் பகர்ந்தெங்கும்
நார வேலைசூழ் உலகினில் விளங்கிட நாட்டினர் நலத்தாலே."

என்று பெரிய புராணம் வெள்ளானைச் சருக்கத்து 52-ஆவது திருப்பாட்டுச் செப்பும்.

அத்திருப்பாட்டில் குறிப்பிடப்பட்ட பிடவூர் யாண்டுள்ள தென்னில் திருச்சிராப்பள்ளியிலிருந்து விருத்தாசலத்திற்குப் போகும் ரயில்பாதையில் பிச்சாண்டர் கோயில் ரயில்வே நிலயத்தில் இறங்கி பிரம்பலூருக்குப்போகும் பெருவழியில் செருகனூருக்குப் பக்கத்திலிருக்கின்றது.

பண்டைப் பெருமக்கள் தம் வரலாற்றுக் கருவூலமாயமைந்துள்ள புறநானூற்றின் 395ஆம் பாட்டில்,

"செல்லா நல்லிசை யுறந்தைக் குணாது
நெடுங்கை வேண்மா னருங்க டிப்பிடவூ
ரறப்பெயர்ச் சாத்தன் கிளையேம்" (வரிகள் 19—21)

என்பதில் பாட்டுடைத் தலைவன்பெயர் சாத்தனென்று குறிக்கப்பட்டுள்ளது. அதன் கீழ்க்குறிப்பிலும் 'சோழநாட்டுப் பிடவூர் கிழார் மகன் பெருஞ்சாத்தன்' என்று அவன் பெயர் கூறப்பட்டிருக்கிறது.

அப்பாட்டுடைத் தலைவனுக்கு அவ்வூரில் கோயில்கொண்டு எழுந்தருளியுள்ள மாசாத்தனார் பெயரே இட்டிருக்கலாமென்று தமிழ்த் தெய்வ மன்ன மகாமகோபாத்தியாய ஐயர் அவர்கள் அப்பாடலின் கீழ்க் குறிப்பெழுதியுள்ளார்கள். தம் ஊரில் கோயில்கொண்டு எழுந்தருளியுள்ள தெய்வத்தின் பெயரைத்

தம்மக்களுக்கு இடம் வழக்கம் பண்டும் இன்றும் தமிழ் மக்களிடத்திற் காணப்படுவதொன்றே யாகும்.

இவ்வூர் இப்போது திருப்பட்டூர் என வழங்கப்படுகிறது. ஈண்டுள்ள ஐயனர் கோயிலில்பல கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன (ஐயனர்கோயில் இஃதொன்றே கல்வெட்டுக்கள் அமையப்பெற்றதெனத் தோன்றுகின்றது.) கல்வெட்டுக்களுள் இவ்வூர் பிடவூர் நாட்டுப் பிடவூர் என்று காணப்படுகிறது.

மேற்கூறிய புறநானூற்றுச் செய்யுளில் "உறந்தைக்குணாது .......பிடவூர்" என்று குறிப்பிட்டிருப்பதாலும், உறையூருக்குக் கிழக்கே வேறு பிடவூர் காணப்படாமையாலும், ஈண்டுக் கூறிய பிடவூரிலே ஐயனர்கோயில் சிறப்பாக இன்றும் விளங்குவதாலும், இதுவே மேற்கூறிய புறநானூற்றுச் செய்யுளிற் கூறப்பட்டதும், பெரிய புராணத்திற் கூறியாங்கு மாசாத்தனர் திருவுலாப்புறத்தை வெளியிடப் பகர்ந்ததும் ஆகிய பிடவூராகும் என்பது தேற்றமாம்.

இவ்வூர் முடிவுடைவேந்தர்க்கு, மகட்கொடைக் குரியராகிய வேளாண் பெருமக்கள் வாழிடமாயும் தேவார வைப்புத் தலங்களில் ஒன்ருகியும், "பொருளாளன் பிடவூரன்," என்று தேவாரத்திலும் பாராட்டப்பெற்ற தலைவனெருவன் வாழ்ந்ததாகியும் விளங்கும், சிறப்பமைந்ததாகும்.



[இச்சாத்தனரின் திருவுருவப்படத்தையும், இக்கோயிலின் கல்வெட்டு ஒன்றையும், கல்வெட்டு ஆராய்ச்சி வல்லுநரும், அத்துறையில் அடியேனைப் பழக்கி வருபவர்களுமாகிய திருவாளர் பண்டாரத்தாரவர்கள் உதவிகொண்டு மற்றொரு முறை வெளியிடுவேல்.]

# திருக்குறணுதலிய நெறிமுறை.

## (Basic principles of Morality as expounded in Thirukkural.)

BY

K. சோமசுந்தரம் பிள்ளை B.A., B.L.,

மக்கள் எனச் சொல்லப்படும் ஆறறிவுடைய உயிர்கள், எண்ணிறந்த உயிர்ப் பாகுபாடுகளுள் ஒன்றிற் சேர்ந்தனவாயினும், பகுப்புணர்வினால் ஏனைய ஐயறிவுயிர்கள் எல்லாவற்றையும் விடச் சிறந்தது அஃம்மக்கட் பகுதியினமே. 'எப்பிறப்பாயினும் ஏமாப் பொருவற்கு மக்கட் பிறப்பிற் பிறிதில்லை,' என்பது அறநெறிச்சாரம். எனவே இம்மக்கட் தொகுதியொன்றே நல்ல திது தீயதிது எனவும் இறப்புப் பிறப்புகளின் சிறுமையும் பெருமையுமுணர்ந்து இறைவனது திருவடிநீழலிலுண்டாகிய பேரின்பத்தை அடைதற்குரியபெருமை முற்றும் வாய்ந்ததாகும். இத்துணைப் பெருமை வாய்ந்த இவ்வுயிர்கள் பிறவிப்பயனை அறியாமலும், வாழ்க்கையின் நோக்கம் யாதெனவும் அத்தகைய நோக்கத்தை அடைதற்குரிய நெறிகள் யாவையெனவும் உய்த்துணராது வாழ்க்கைக்கு ஒவ்வாநிலையை மேற்கோடல் இழிந்ததாகும். இறைவன் உவந்தருளிய இவ்வரிய மக்கட் பிறவியை வறிதாக்குவது தகுதியல்லதென்றும், இறைவன் நமக்குச் சிறப்பாக மனனுணர்வு உதவியதன் நோக்கம் அதற்குத் தக விழுமியதாக இருத்தல் வேண்டுமென்றும், அஃதுதான் அவ்வுணர்வினை அறநிலையில்வைத்து ஒழுக வேண்டுமென்றும் உலகெலாம் உய்வான் பொதுமறை வகுத்த தெய்வப்புலவர் திருவள்ளுவர், மனுநீதி, சாணக்கிய சதகம் என்ற வடமொழி நூல்களைப் போலாது ஒரு குலத்துக்கொரு நீதி கூறுததாய் இற்றைக்கு சற்றேறக்குறைய இரண்டாயிரஆண்டுகளுக்கு முன்னர் உலகெங்குமுள்ள அறிஞர் உள்ளுவப்ப, மலைதரும் பற்பல மதத்தரும் சிறந்த மெய்ப் பொருளாகத் தலைமிசைக்கொண்டு போற்றப்படும் உண்மைகள் பொதிந்த திருக்குறள் என்ற அரியபெரிய நூலிலே உய்த்துணர வைத்தார்.

முப்பாலுக்கும் முதற்பாலாய் அறம் பொருள் இன்பம், வீடு என்ற உறுதிப்பொருள் நான்கிற்கும் அடிப்படையாயுள்ள அறத்தின் சிறப்பினையும் திறமும் உய்த்துணரவைக்கும் ஆசிரியர் திருவள்ளுவர் 'மனத்துக்கண் மாசிலனாதலனைத்தற, ஞகுல நீரபிற' என்றதில் மனத் தூய்மையும், 'அழுக்காறவா வெகுளி யின்னுச் சொன்னுன்கு, மிழுக்கா வியன்ற தறம்' என்றதில் மனமொழியின் தூய்மையும், 'அறவினை யாதெனிற்கொல்லாமை கோறல், பிறவினை யெல்லாந்தரும்' என்றதில் ஏனைய உயிர்களிடத்தில் அன்பும் இரக்கமும் பற்றிய வினையும், 'அறனீனு மின்பமு மீனுந்திறனறிந்து, தீ தின்றி வந்த பொருள்' என்றதில் புண்ணியமும், 'அன்புமறனு முடைத்தாயினில் வாழ்க்கை, பண்பும் பயனுமது' என்றதில் ஈகையும், 'அளவறிந்தார் நெஞ்சத்தறம்போல நிற்கும், களவறிந்தார் நெஞ்சிற்கரவு' என்றதில் நீதியும், 'அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய், நின்றது மன்னவன்கோல்' என்றதில் உண்மை ஒழுக்கமும் முதலிய பலவும் பலவாருகப் பொருள் கொள்ளக் கிடக்க உரைத்தலான் அறமென்றது காரண காரிய முறைமையில் ஒரே கருத்தை தழுவினதாகக் கொள்ளப்படும். அஃது யாதெனின் கூறுவாம். 'அறம்' என்ற மொழியை பகுத்துப் பார்க்கின் அஃது 'அறு' எனும் வினையடியாகப் பிறந்து மக்கள் கொள்ள வேண்டியதையும் தள்ள வேண்டியதையும் வரையறுப்பது எனப்பட்டு, மனவுணர்வாகும் இயற்கை யறிவோடு கூடிய கலையறிவாகுஞ் செயற்கை அறிவினுன் நல்லனவும் தீயனவும் நாடி, தீயனவற்றை விலக்கி, நல்லனவற்றை கைக்கொண்டு மனிதப் பிறப்பினர் யாவரும் அதன்படி நடக்கவேண்டியதோர் ஒழுக்கத்தை விளக்குகின்றது. இத்தகைய நல்லொழுக்கம் மக்களாய்ப் பிறந்த ஒவ்வொருவரிடத்தும் அமைந்திருத்தல் வேண்டுமென்று திருவள்ளுவர் தம் நூலிலே தெளிவு படுத்தருளினர். இதனை நாநலம் வாய்ந்த நல்லியற் கவிஞராய கம்பரும்,

"தக்கஇன்ன, தகாதன இன்ன, என்று
ஒக்க உள்ளலர் ஆயின உயர்ந்துள
மக்களும் விலங்கே மனுவின் நெறி
புக்கவேல் அவ்விலங்கும் புத்தேளிரே."

என்று வலியுறுத்தினதையுங் காண்க. மனமொழி மெய்களால் உடன்பாட்டானும் எதிர்மறை யானும் குற்றமற ஒழுகுதலே அறத்தின் நயமெனக் கூறவந்த வள்ளுவர் அறத்தினதியல்பைப் பொதுவாக அறன்வலியுறுத்தல் எனும் அதிகாரத்தில் கூறி விட்டு அறநெறியே நன்னெறியென்றும் அறத்தால் விளைவதே இன்பமென்றும் அறமே இம்மை மறுமைப் பயன்களைப் பயக்கு மெனவும் அருளிச்செய்து இல்லறவொழுக்கத்தையும் துறவற வொழுக்கத்தையும் வகுத்துரைத்தார்.

ஒழுக்கம், பகுத்தறிவென்ற பண்பு மன்னியிருக்கும் மக்க ளெல்லோருக்கும் பொதுவான பொருளாகும். 'பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும்'; அதனன் பிறப்பினல் உயர்வு தாழ்வு இல்லை. பின்னர் உயர்வுக்கும் தாழ்வுக்கும் காரணந்தான் என்னையெனின் உயர்விற்குக் காரணம் நல்லொழுக்கமும் தாழ்விற்குத் தீ யொழுக்கமுமாகும். மக்கட் பிறவிக்குரிய உயரிய ஒழுக்கத்தி னின்றும் ஒருவன் தவறுவானுகில் அவன் துன்பத்திலாழ்ந்து அறவே கெடுவான். இதனை 'ஒழுக்கமுடைமை குடிமையிழுக்க, மிழிந்த பிறப்பாய்விடும்' என்ற குறளால் நன்கறியப்படும். எக்குடியில் பிறப்பினும் எத்தொழிலைச் செய்யினும் ஒழுக்க முடையவர் உயர்ந்தவரே; அஃதில்லாதார் தாழ்ந்தவரே. 'பெரு மைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங் கருமமே கட்டளைக்கல்' என்ற குறட்பா ஈங்கு நோக்கத்தக்கது. சிந்தித்துப் பார்க்குங் கால் ஐம்புலவறிவும் நுகர்வுமுள்ள உலகின்கண் வாழும் மக்கள் முதலா மனைத்துயிர்களும் துன்ப நீக்கத்தையும் இன்பப் பேற் றையும் அவாவி நிற்கின்றன. எனினும் இன்ப ஆக்கம்பெற நல்லொழுக்கம் இன்றியமையாதது. நல்லொழுக்க உணர்ச்சி மக்களுக்கு மாசற்ற உள்ளமுடைமையைக்குறித்து நிற்பதனல், யாவரிடத்தும் அன்புசெலுத்தும் இயல்பினை அம்மக்கள் தானே பெறப்படுகின்றனர். இத்தகைய நல்லொழுக்கத்திற்கு காரணம் நன்னெஞ்சும் நற்சிந்தையும் ஒருங்கே வாய்க்கப்பெற்ற யாவரும் ஒருங்கு சேர்வதற்கு ஒத்த உணர்ச்சியே. இதனைப் பெருநாவ லர், 'புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதா, னட்பாங் கிழமைதரும்' என்ற செழுந் தமிழ்க்குறளிலே விளக்கியுள்ளார்.

இத்தகைய நல்லொழுக்கமே அறத்திற்கும் ஆதியாய் இம்மை மறுமையாகிய இருமையினும் இன்பத்தை யளிக்கவல்லது. இதனானே வள்ளுவர் 'நல்லொழுக்கம் நன்றிக்கு வித்தாகு மென்று' கூறினர். தீயொழுக்கம் என்றும் இடும்பை தருத லால் அதனை விரும்புவார் ஒருவருமிலரென்று உய்த்துணர்க. நல்லொழுக்கம் எல்லா உயிர்களுக்கும் விழுப்பம் தருதலல்லாது மேன்மையும் தரத்தக்கதால், 'ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்.'

நல்லொழுக்கமே அறத்திற்குக்காரணமாய் நிற்றலின், அவ் வறத்தினை முதற்பாவலர் இல்லறவியல் என்றும் துறவறவியல் என்றும் இருவகைப்படுத்தி இல்லறவியலுக்கு இன்றியமையா தனவாய வாழ்க்கைத்துணை நலம், புதல்வரைப் பெறுதல், பிற னில் விழையாமை, முதலிய அறங்கூறும் அதிகாரங்களை முன் னையவியலில் பெய்துவைத்து, அவ்வழியானனுட்டித்துப் பின்னர் வீடுபேற்றின் பொருட்டு துறந்தார்க்கு இன்றியமையாதனவாய அருளுடைமை, புலான் மறுத்தல், தவம், துறவு முதலியவற் றைப் பின்னையவியலிற் பெய்து வைத்து தனிவளம் ததும்பிய பெருநூலை இயற்றியருளினர். இல்லறமென்பது ஒருவன் மனைத் தக்க மாண்புடையாளை மனையாளாகக் கொண்டு, நல்லொழுக்க நெறிநின்று அறவோர்க் களித்தல், அந்தணரோம்பல், துற வோர்க்கெதிர்தல், விருந்தெதிர் கோடல் ஆகிய நல்லறங்களை நாள்தோறும் வழுவாதியற்றி 'காகத்திரு கண்ணிற் கொன்றே மணிகலந்தாங்கிருவர் ஆகத்திலோருயிர் கண்டனம் யாம்' எனக் கண்டாரியம்புமாறு இருவரும் ஒன்றுபட்ட மனத்தினராய், வாழ்வினும் தாழ்வினும் ஒன்றெனவிளங்கித்தம்மில் ஒத்த அன் பொடு இனிது வாழ்தலாம். துறவறமாவது இல்லறத்தில் வழுவாதொழுகி அறிவுடையராய் இவ்வுலகின் நிலையாமை யுணர்ந்து 'பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்—பிறவார் உறுவது பெரும் பேரின்பம்' எனக்கருதி பிறப்பினை அஞ்சி வீடு பேற்றின் பொருட்டுத் துறந்தார்க்குரிய அறம்.

இல்வாழ்வான் கற்புடைய நன் மனைவியொடு இல்லறம் நடாத்தி நன் மக்கட்ப் பேறுடையவனாய் மனமொழி மெய் முதலியவற்றால் நிகழும் ஒழுக்கக்குற்றமிலனாய் சுற்றத்தார்பால்

அன்பும் வறியார் மாட்டு ஈகையுமுடையராய் அதனுன் ஓங்கிய புகழடைந்து வாழக்கடவன். மற்றும் அவன் தன் மனைவி மக்கள் மாட்டுச்செலுத்தும் அன்பினை பிறர்மாட்டும் செலுத்தும் விருப்பமுடையவனுப் பகையும் நொதுமலுமில்லையாய் யாவரும் கேளிராய் அளவிலாச் சிறப்பினை எய்தல்வேண்டும். இத்தகைய இல்லறம் நடைபெறுதாயின் அறங்குன்றி மறம் மேவிடும். எவ்வாறெனின் 'இல்வாழ்வானென்பா னியல்புடைய மூவர்க்கு, நல்லாற்றினின்றதுணை' என்றருளப்பட்டதாகலின் என்க. இல்லறத்தினை நடாத்தும் மாண்பினையுடையார் அறம் வளர்த்தற்பொருட்டு சான்றோரால் உடன்பாடாகக் கொண்ட அன்புடைமை, அருளுடைமை, இனியவை கூறல், விருந்தோம்பல், அடக்கமுடைமை, பொறையுடைமை, வாய்மை முதலிய குணங்கள் வாய்க்கப் பெற்றவர்களாயிருத்தல்வேண்டும். இல்லையேல் அவர்கள் மனிதராய்த் தோன்றிய பெருமையுமிலராகி விலங்கொடொரு தன்மையராய் மாக்கள் எனப்படுவர்.

உலகத்துப்பொருள்கள் உண்மைமட்டும் உணர்த்தி பிழம்பு உணர்த்தப்படாதனவும், உண்மையும் பிழம்பும் உணர்த்தப்படுவனவாய் இரண்டுவகையானே உணர்த்தப்படுமென்பது யாவருமறிந்ததே. அன்பு, முதற்கண்ணதாய உண்மையினை யுணர்த்தி பிழம்புணர்த்தப் படாதவகையின் பாற்படும், அந்த அன்பு பசுக்களாகிய தாய் தந்தை மற்றும் தன்னைச் சார்ந்த மற்றவர்களிடத்துச் செலுத்தும் பாசஅன்பும், தன்னைப் படைத்துக்காக்கும் இறைவன் மாட்டு செலுத்தும் பதிஅன்பும் என இருபாற்படும். எதுபோது இத்தகைய அன்பு முருகி முதிருகின்றதோ அக்கணமே அவ்வன்பு செய்வார் செய்யும் துன்பமும் இன்ப மயமாய் இலங்குகின்றது. எனவே இன்பங்கட்கெல்லாம் அடிப்படையாயுள்ளது அன்பெனில் பிழைபடாது. 'வாரம் பட்டுழித் தீயவு நல்லவாந், தீரக் காய்ந்துழி நல்லவுந் தீயவாம்' என்பது ஈண்டு உய்த்துணரத் தக்கது. ஒரு செம்மலைத் தலைமகனுகப்பெற்ற தலைவிக்கும், அத்தலைவனுக்கு முண்டாய ஊடற்கண் தலைவி ஊடிச் செய்வனயாவும், அத்தலைமகனுக்கு இன்ப

மாகின்றதினுனும், ஊடலுமின்பாதல் பற்றி, * அன்பின் முதிர்வே இன்பமென்பதூஉங் காண்க.

இல்லறத்தை இனிதே நடத்தும் அவாமேலீட்டை யுடையார் இத்தகைய அன்புமின்பும் அவரகத்தில்லையேல் அன்பின் பயனுய் விளையும் அருளும், இல்லறத்தை செம்மையாக நடத்தலு மிலதாகும். அன்புடைமையை முன்னிட்டே எய்துதற்கரிய மானிடப்பிறவி எய்திற்றென்பர் தமிழகத்துச் சான்றோர். மற்றும் திருவள்ளுவர் உடலோடு வாழும் உயிர்க்கு உறுதி யாவது அன்பு என்பதை 'அன்பின் வழிய துயிர்நிலை யஃதி லார்க், கென்பு தோல் போர்த்த வுடம்பு' என்ற குறட்பாவால் நன்குணர வைத்தார். இத்தகைய அன்பில்லாத இல்வாழ்க்கை வறிய பாலை நிலத்தே வற்றல் மரம் தளிர்த்தலை நிகர்க்கும்.

அறம், பொருள், இன்பம் ஆகிய மூவகை உறுதிப்பொருள்களை எய்துதற்கு இன்றியமையாததாகிய அன்புடைமை அறத்திற்கே யன்றி மறத்திற்கும் அருந்துணையாய் நிற்கும். ஒருவன் மீது பிறனொருவன் இகல் கொண்டால் அவன்மீது உள்ளத்தே வெறுப்பு நிகழுவது இயற்கை. இதனுனே அன்னவனுக்கு துன்பம் செயல் வேண்டுமென ஓர் துணிவு ஏற்படும். அன்புடையவனுயின் அம்மறத்தை நீக்கினவனுய் பகைமை நீங்கி பொறுமையுற்று மேம்பட்டவனுவன். அறத்தை வளர்க்கும் அன்பு மறத்தையும் கொன்று ஒழிக்கும். இவ்வுண்மை 'அறத்திற்கே யன்பு சார்பென்ப வறியார், மறத்திற்கு மஃதே துணை' என்ற குறளால் விளங்கப்பட்டது காண்க. ஆகவே அன்புடைப் பெரியார் பொது நலம் பேணும் பெருமை வாய்ந்து தனெக்கெனவாழா பிறருக்குரியவராக வாழ்வர். 'அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையா ரென்புமுரியர் பிறர்க்கு' என்பது திருக்குறள். இதுகாறும் இல்லறத்தார்க்குரியது அன்பு எனக் கூறிப்போந்தோம். துறவறத்தை நாடி தவ

* (1) புலத்தலிற் புத்தேணு டுண்டோ நிலத்தொடு
நீரியைந் தன்ன ரகத்து,

(2) ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல் வியர்ப்பக்
கூடலிற் றோன்றிய வுப்பு.

வொழுக்கத்தினை மேற்கொண்டொழுகுவோர்க்கும் அன்பு இன்றியமையாததாகவே விளங்குகின்றது. மனைவி மக்கள் முதலானோரைப் பற்றிவரும் தொடர்பு பற்றாது இயற்கை யாகவே எவ்வுயிரிடத்தும் செலுத்தும் அன்போடு கலந்த கருணையே அருளுடைமையாகும். இவ்வருளுடைமை துற வறத்தார்க்கு இன்றியமையாததெனத் தெய்வப்புலவர் கூறியிருக் கின்றதினாலும் மற்றும் 'அருளென்னு மன்பீன் குழவி' எனக் குறித்திருப்பதினாலும் அருளும் அன்பின்பாற் படுமென்பதையு முய்த்துணர்க.

பொருள் கூறுவான் தொடங்கிய திருவள்ளுவர் பொரு ளீட்டத்திற்கு பெருந்துணைக் காரணமாகிய அரசநீதியை வரை யறுத்துக் கூறவே அடங்கும் எனத் துணிந்து, அறவழி நின் றொழுகு மன்னர்க்கு அன்புடைமை இன்றியமையாததாகுமென விளங்க வைத்தார். அஃது இன்றேல் அரசன் குடி கொள்ளாச் செயல்களை இயற்றிக் கடுந்திறை இறுக்கும் கொடுங்கோன் மன் னவனாவன். 'காட்சிக்கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல், மீக்கூறும் மன்னனிலம்' என்றபடி முறை வேண்டினார்க்கும் குறை வேண்டினார்க்கும் காண்டற் கெளியனாய் யாவர்மாட்டும் கடுஞ் சொல்லனல்லனாதற்கும் இவ்வன்புடைமை இன்றியமை யாததாய் விளங்குகின்றது. மற்றும் இன்பம் பயப்பதாகிய காமச்சுவை அநுபவித்தற்கு அன்புடைமையும் அன்பின் முதிர்ச் சியும் இன்றியமையாததெனஇடந்தலைப் பாட்டிலே தலைவி நீங்கும்போது தலைவன் சொல்லியது போலுள்ள 'கருமணியிற் பாவாய்நீ போதாய் யாம் வீழும், திருநுதற் கில்லையிடம்' எனும் குறட்பா விளங்கவைக்கும். ஆகவே இதுகாறுங் கூறிய வாற்றான் அறம் பொருள் இன்பம் என்ற இம்மூன்று பொருளை யும் எய்துதற்கு அன்பு இன்றியமையாததொன்றாக விளங்கு கின்றது. அன்பு ஒவ்வொரு உயிர்க்கும் உரிய இயற்கைக் குணமே யாதலின் அதனை ஒரு தலையாக வேண்டற்பாற்று.

(தொடரும்.)

# சோழன் கரிகால் வளவன்.

(ஒரு சிறு நாடகம்.)

திரு. சிவ. குப்புசாமிப் பிள்ளையவர்கள்,
தலைமையாசிரியர், கரந்தைத் தமிழ்ச்சங்கக் கல்லூரி, தஞ்சை.

(முற்றொடர்ச்சி 387-ம் பக்கம் பார்க்க.)

இருமுதியர் :—பெருமைசால் பெரும! உங்களது முதிர்ந்த அனுபவ மிக்க மொழிக்கு எட்டுணையும் மாறுகொள்ளோம். நீங்கள் காட்டிய வழியிலேயே யாங்கள் இருவரும் உளமொத்து நின்று அதனையே சிக்கெனப் பற்றுவோம். எங்களது வழக்கை முடிக்க இத்தகைய நிறைந்த நூலறிவுபெற்று யாண்டினால் முதிர்ந்த தங்கள் போன்ற ஒரு பெரியாரைப் பெறுதற்கு யாங்கள் முன்புசெய்த பேறுதான் என்னையோ!

[கரிகால் வளவன் மாறுவேடம் களைதல்-முதியவர் வியப்புற்று] ஆ! என்ன! முன்னர் கண்ட இளைஞர் அல்லவா இன்று வழக்கு முடித்த இறைவனாகின்றார். பெரும! யாங்கள் தங்களையறியாது புரிந்தசெயலைப் பொறுத்தருளுமாறு நெடிது வணங்குகின்றோம்.

கரிகால் வளவன் :—முதியவர்களே! ஒரு சிறு பசுங்கன்றின் பொருட்டு தன் பாலனைக்கொன்று முறை செய்த சோழன் வாயிலினுள் நீவிர் இருவீரும் நுழைந்து "இறைவன் இளம்பருவத்தினன், அவன் எம் வழக்கை உணர்தற்குரிய அறிவுபெற்றிலன்" என முடிவுகட்டி, வளவனின் தலைவாயில்வரை வந்து உங்கள்தம் வழக்கு முறைகாணாதுபோயின் அது எங்கள் குலத்துக்கு ஏற்குமா? ஆதலால் நீங்கள் மனங்கொள்ளுமாறு இம் மாறு வடிவம் பூண்டு உங்களை ஈண்டு அழைத்தேம். இனி பெரியீர்! 'சிறியோரெல்லாம் சிறியருமல்லர்' யாண்டிற் பெரியோரெல்லாம் பெரியருமாகார். மகிழ் சிறிதாயினும் தாழையினும் மணம் மிக்கது அல்லவா? அறிவு பெற்றவர்க்கு இளமையும் முதுமையும் என்ன செய்யும்? ஆதலால் உங்கள்போன்ற ஆன்றோர்களின் நல்லாசிபெற்று யான் நாளும் நல்லறிவில் தலைசிறக்க வேண்டுமென்பதே எனது கருத்தாகும்.

**முதியவர் :**—பெரும! தாங்கள் அறைந்தன யாவும் கொண்டோம். யாங்கள் அறியாது கூறியவற்றைப் பொறுத்தருள்க. வணக்கம். யாங்கள் விடை பெறுகின்றோம்.

**கரிகால் :**—முதியவர்களே! நன்று; சென்றுவருக! உங்கட்கு நலம் சிறக்க.

[முதியவர்கள் வணங்கிச் செல்லுதல்]

**இரும்பிடர்த்தலையார்:**—பொன்னி நன்னாட்டின் பொலிவை மிகுக்கும் போர்செறிவீர! நினக்கு நல்வாழ்வு பெருகுக. நீ இன்று ஒரு முதியோன் வடிவு தாங்கி இருந்து மூத்தவர் இருவரும் மகிழ முறைமை செய்ததை இம்மூவுலகும் கொண்டாடும். நின்புகழ் ஓங்குக! காவிரியின் கரைகாணும் கரிகால் வளவ! நினக்கு நான் அறிவுறுத்தற்கு உற்ற ஒரு குறையுளது. அஃதாவது நின் நாட்டின் வடபாலிருந்து நினக்குத் திறை கட்டிவாழும் ஆந்தரநாட்டரசனுய பிரதாபருத்திரன் என்பவனைப்பற்றியதாகும். இன்று நின் ஆணைப்படி மற்றைய நாட்டுப் பெருமுடிவேந்தர்களும், அவர்கள் தங்களது ஆட்களைப் போக்கி, காவிரியாற்றினுக்குக் கரையை யமைத்து நின் நாட்டிற்குத் தொண்டு இயற்றும்போது, அப்பிரதாபருத்திரன்மட்டும் அவனுக்குரிய பகுதியில் அணையிட்டுக் கரையமைத்துச் சீர் செய்யாது இருப்பதை நினக்கு அறிவிக்கின்றேன். அவன் ஒரு குறுநில மன்னனுயமைந்தும் நின்ஆணைக்கு உடனே பணியாதிருப்பதை நோக்கின் அவன் நின்னிடம் கொண்டுள்ள நன்மதிப்பின்மை காணப்பெறுகின்றது. ஆதலால், வளவ! அவனை இன்னே நின் ஆணையின்படி ஒழுகுதற்கு ஆவனபுரிதல் வேண்டும்.

**கரிகால்:**—என் இனியமாம! யான் இதுவரையில் இச்செய்தியை அறியேனே. என்னவியப்பு! வடநாட்டு மன்னர்கள் பலரும் என்பால் தலைமை நிலைகண்டதோடு அமையாது, பணிவுடைமைக்கு அறிகுறியாக அவர்களது அரிய பொருள்களைத் தந்து அன்பு செலுத்தவில்லையா? அவந்திநாட்டு அரையன் அளித்த வாயிற்றோரணமும், மகதநாட்டு மன்னன் பகைப்

புறத்துக்கொடுத்த பட்டி மண்டபமும், வச்சிரநாட்டு வேந்தன் தந்த முத்துப்பந்தரையும் இவன் அறியான்போலும். என்னே இறுமாப்பு! மலையும், கடலும், வானும், காற்றும், யான் கருதிய நெறியில் அமையும் என்பதை யிவன் அறியானோ? வடக்கு இமயம், வாழ்குமரி தெற்கு, குணகுடம் கடல்சூழ்ந்த இந்நாட்டிற்கு என்னினும் ஒரு தலைவன் உண்டோ? என் வலிமையை இவன் உணரான்போலும். நன்று, மாம! எந்நாட்டவரும் என் தாளிணைகளைப் பணிந்துநிற்க, இவன்மட்டும் இறுமாந்திருத்தற்கு உற்றநிலை ஏதாவது இவன்பால் இருத்தல் வேண்டும். இவனது உருவத்தைச் சரிவர உணர்த்தற்குரிய ஒருபடம் இருக்குமேல் இவண் கொணர்க. யான் அஃதை நன்கு ஆராய வேண்டும்.

இரும்பிடர்த்தலையார்:—வளவ! இதோ வந்துவிட்டது அவனது படமும்.

கரிகால்வளவன்:—[படத்தைக் கையிற்பெற்று உற்று நோக்கி ஒருபுறம் இருந்து] என்ன வியப்பு! இவனது நெற்றியின் நடுவில் சிவபெருமானைஒப்ப ஓர் அழகிய சிறு கண்காணப் பெறுகின்றதே! ஆ! நன்று! நன்று! ஏ! பிரதாபருத்திர நீ கொண்ட இறுமாப்பின் காரணம் இன்று உணர்ந்தேன். [கையில் உடைவாளை எடுத்து] நீ இவ்வாறு என் ஆணையை மீறுதற்குத் துணையாயமைந்து நின்னை, இறுமாப்புறச் செய்தது இந்தக் கண்தானோ? [சினத்துடன் நகைபுரிந்து கண்நோக்கி ஓங்கி குத்துதல்] இனிமேல் என்ன செய்வாய்!

இயல் உ. காட்சி உ. முடிவு.

---

இயல் உ,—காட்சி ௩.

உறுப்பினர்:—1. கரிகால்வளவன். 2. பிரதாபருத்திரன். 3. இரும்பிடர்த்தலையார். 4. வெண்ணிக்குயத்தியார். 5. கருங்குழலாதனர். 6. காவலாளன்.

இடம்:—காவிரிப்பூம்பட்டினத்தின் பேரவை.

பொழுது:—மாலைப்பொழுது.

[புலவர்கள் கரிகால்வளவனின் புகழுரை பேசுதல். பிரதாபருத்திரன் செருக்கழிந்து அடிபணிதல்.]

வெண்ணிக்குயத்தியார்:—பெரிய அலைகள் மிகுந்து விரிந்த கடலிலே, போரில் தனக்குத் துணையாமாறு, காற்றுக்கடவுளைத் தொழில்புரியச் செய்து வெற்றியுற்றவனின் வீர மரபில் தோன்றிய வீர! மதம் மிக்க யானைகளை உடைய கரிகால்வளவ!! போரில் முன்சென்று, நினது வலிமை தோன்ற நின் மாற்றலரை வென்ற வேந்தே!!! தழைந்த புதுவருவாயைப் பெற்ற 'வெண்ணி' என்னும் ஊர்க்குப் புறத்ததாய பாசறையில், நினது வெற்றியால் விளைந்த தனது முதுகின் புண்ணிற்கு நாணி வடக்கிருந்த புகழ்மிக்க சேரமான் பெருஞ்சேரலாதனை விட நீயே இன்று உயர்வுடையோனாய் விளங்குகின்றாய். பெரும! நினக்குப் பெருவாழ்வு மிகுக.

கருங்குழலாதனார்:—வென்றி முரசு வீறிட்டொலிக்க வீர வேல்தாங்கிய வேந்தே! "முழுமதிநாளன்று ஞாயிறும் திங்களும் எதிர்ந்து முடிவில் அவற்றுள் ஒன்று மலையுள் மறைவதே போன்று, நின்னையொக்கும் வேந்தனால் நின்புறத்துற்ற புண்ணிற்கு நாணி, முழவம் ஒலிஎழுப்பும் மண்ணைப் பெறாதிருக்க, யாழ்பண்மறக்க, பெரிய பாற்பானைகள் கவிழ்ந்து இருத்தலால் நெய் அற்றுப்போக, தனது சுற்றத்தார் மதுவுண்டு மகிழாதிருக்க, உழவர் இடும் ஓசை ஓய்ந்துபோக, சிற்றூர்கள் விழாவற்றிருக்க, நீ வடக்கிருக்கின்றாய். ஆதலால் இங்கு எனக்குப் பகற்பொழுது முன்போற் கழியாததாயிற்று" எனப் புலவர் பெருந்தகை கழாத்தலையாரும் வாய்விட்டுப் புலம்ப, சேரமானையும் அவனுடன் துணைநின்ற வேம்பு புனை பாண்டியனையும் வேளிர் தலைவர் ஒன்பதின்மரையும் வென்று, நின்புகழை இந்நில முழுதும் பரப்பிய சோழர் குலக்கொழுந்தே! நின் புகழ் பரந்தோங்குக!

(தொடரும்.)

## தமிழ்ச் செய்திகள்.



கரந்தைத் தமிழ்ச் சங்கம்:—இச்சங்கத்தின் மெய்யன்பரும் உறுப்பினருமாகிய தஞ்சை வர்த்தகர் பாங்கியின் அமைச்சர் திருவாளர். K. விசுவநாத பிள்ளை அவர்கள் சங்கக் கல்லூரியின் உயரிய நோக்கங்களையும், சீர்த்த முறையினையும் நன்குமதித்து, இக்கல்லூரியை வளம்பெற வளர்த்தற்பொருட்டு தாமே மனமுவந்து 22—1—35 தேதி யன்று வெண்பொற்காசுகள் ஒரு நூறையும் உதவினர். இவர்கள் இயற்றியது காலத்தினாற் செய்த பேருதவியாகலின் ஞாலத்தின் மாணப் பெரிதெனச் சங்கத்தார் நன்றியுடன் போற்றுகின்றனர்.

இச்சங்கத்தின்பால்மிக்க அன்பு பூண்டு பல ஆண்டுகளாய் தொண்டு புரிந்துவந்த கூடலூர், சோக்கலிங்கம் பிள்ளை அவர்கள் 13—3—35 தேதி உலக வாழ்க்கையை நீத்ததுபற்றிச் சங்கம் மிகவும் கவல்கின்றது. அன்னார் சங்கத்திற்குத் தரவேண்டியிருந்த வரித்தொகை ரூபா பத்தையும் உயிர் துறக்கும் தருணத்தில் நினைவு கூர்ந்து அனுப்பியதும், அவர் புதல்வர், சோ. வீரபத்திர பிள்ளை அவர்கள் தந்தையின் ஆன்மா சாந்தி பெறுதற்கென ரூபா ஐந்து நன்கொடை உதவியதும் தமிழர் போற்றுதற்குரிய அருஞ்செயல்களாம்.



உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத்
திங்கள் வெளியீடு.

துணர்-ய } பவ—பங்குனி. { மலர் - யஉ.

க. பொருளின் அமைப்பு 481
திரு. அ. சீநிவாசாச்சாரியாரவர்கள்
உ. ஆழ்வார்பாரதமும் பண்டைத் தமிழ்நூல்களும் 490
௩. தமிழ்மொழி யம்மானை 495
திரு. கோமான். ம. வி. இராகவன் அவர்கள்
ச. சேக்கிழாரும் கம்பரும் 496
பண்டித திரு. R. P. அமிர்தலிங்கம் பிள்ளையவர்கள்
ரு. சோழன் கரிகால் வளவன் 504
திரு. சிவ. குப்புசாமி பிள்ளையவர்கள்
சூ. ஓர் திருமுகம் 512
திரு. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளையவர்கள்
எ. சொல்லதிகார ஆராய்ச்சியுரை மறுப்பின்
தடையும் அதற்கு விடையும் 513
திரு. ம. நா சோமசுந்தரம் பிள்ளையவர்கள்
அ. தமிழ்ச்செய்திகள் 519
கூ. மதிப்புரை 519
பொழிற்றொண்டர்

செந்தமிழ்ப்புரவலர்,

த. வே. உமாமகேசுவரம் பிள்ளை, பொழிற்றொண்டர்.

தஞ்சைக் கூட்டுறவுப் பதிப்பகம், கரந்தை.

உ

தமிழ்த்தாய்வாழ்க.

# தமிழ்ப் பொழில்.

தஞ்சைக்
கரந்தைத் தமிழ்ச் சங்கத்துத்
திங்கள் வெளியீடு.





பவ ஆண்டு

**(1934-35.)**

பத்தாம் துணர்

தஞ்சைக் கூட்டுறவுப் பதிப்பகத்தில்
அச்சிடப்பெற்றது.

## கட்டுரையெழுதிய பேரறிஞர்களும், கட்டுரைகளும்.

திரு. பண்டிதர், கா. போ. இரத்தினம்
புத்தாண்டு வாழ்த்து 1
பழந்தமிழ்ப் பாவலருங் காவலரும் 3
,, கோமான். ம. வி. இராகவன் திருவத்திபுரம்
ஆழ்வார் பாரதமும் சோழர்களும் 15
ஆழ்வார் பாரதமும் பண்டைத் தமிழ் நூல்களும் 377
[458, 490
தமிழ்மொழி யம்மானை 495
,, சித. நாராயணசாமிகள்
தருக்க விளக்க வினுவிடை 19
,, ம. நா. சோமசுந்தரம் பிள்ளையவர்கள்
சொல்லதிகார ஆராய்ச்சிக் குறிப்புரையும் மறுப்பும் 24
சொல்லதிகார ஆராய்ச்சி மறுப்பின்
தடையும் அதற்கு விடையும் 231, 241, 303, 513
,, வீ. உலகவூழியர்
திருந்திய கை எழுத்துக்கள் 35, 49
,, வித்துவான். ஔவை. சு. துரைசாமிப்பிள்ளையவர்கள்
தேம்பாவணி 41, 125, 172
அகநானூற்று உரை 321
ஓர் திருமுகம் 512
,, அ. சீனிவாசாச்சாரியாரவர்கள் B A., L T.,
பொருளின் அமைப்பு 53, 119, 226, 481
,, பண்டித. ஞா. தேவநேயப்பாவாணர்
இலக்கியம் இலக்கணம் 60
,, கோவை. சி. கு. நாராயணசாமி முதலியார்
அஜந்தாவும் குடைவரைக் கோயில்களும் 71
,, கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் M.A., M.L.,
சென்னைமாகாணத் தமிழர்மாநாட்டின் அறிக்கை 81
வாழ்த்துப்பா 89
வரவேற்புரை 90

,, K. சோமசுந்தரம் பிள்ளையவர்கள். B.A., B.L.,
தமிழகத்து உழவின்நலமும் வாணிகத்தின் சிறப்பும் 111, 333
திருக்குறளுதலிய நெறிமுறை 470
,, S. இராமச்சந்திரன் அவர்கள் B. A.,
நகைச்சுவையும் புலவர்களும் 133
,, த. இராமநாதபிள்ளை அவர்கள்
கருதலளவைப் பகுதி 159, 201, 350, 361, 418
,, மி. போ. இராமநாதஞ் செட்டியார் அவர்கள்
பத்துப்பாட்டு 167
,, வே. வேங்கடராசலு ரேட்டியார் அவர்கள்
சிலசொற்களின் பொருள் 176, 393, 426
,, ச. தண்டபாணி தேசிகர் அவர்கள்
நற்றிணை 183
சங்கர நமச்சிவாயர் உரைபொருந்துமாறு 274, 289
,, கா. நமச்சிவாய முதலியாரவர்கள் M.R., A.S.,
சென்னைமாகாணத் தமிழர் மாநாடு 195
,, துடிசைகிழார். அ. சிதம்பரனுர் அவர்கள்
தம்பிரான் தோழர் தேவாரம் 212
,, நல்லூர். சுவாமிஞானப்பிரகாசர் அவர்கள்
இலக்கணமும் இலக்கியமும் 221
,, ரீ. கந்தசாமி பிள்ளையவர்கள்
ஒருபெருமகிழ்ச்சி 237
வாழ்த்துப்பாக்கள் 238
,, வித்துவான். வீ. குமாரசாமி ஐயரவர்கள்
நன்னெறி 250
,, T. V. சதாசிவப்பண்டாரத்தாரவர்கள்
வர் என்னும் வைப்புத்தலம் 258
விரையாக்கலியும் விடேல்விடுகும் 401
,, A. கந்தசாமி பிள்ளை அவர்கள்
நமது வரலாறுகளும் கல்வெட்டாதாரமும் 263

,, அ. சிதம்பரநாதஞ் செட்டியார் அவர்கள் B. A.,

*மண்ணியல் சிறுதேர்* 267, 281

,, சிவ. குப்புசாமி பிள்ளையவர்கள்

*அமைச்சர்களின் வருகை* 280a

*கல்லூரி ஆண்டு அறிக்கை*

*சோழன் கரிகால் வளவன்* 312, 356, 382, 434, 477 [504

,, ஆசிரியர். அ. வரதநஞ்சைய பிள்ளையவர்கள்

*கலித்தொகையும் நச்சினர்க்கினியரும்* 294

,, பண்டித. ஆ. சிவசுப்பிரமணியன்

*ஆர்கைதயென்னுந் தொகைவிரியுமாறு* 326, 410

,, இ. மு. சுப்பிரமணிய பிள்ளையவர்கள்

*தம்பிரான்றோழர் தேவாரம்* 339, 369

,, சே. சின்னத்தம்பியவர்கள்

*ஓர்செய்யுள்* 375

,, E. R. நரசிம்ம அய்யங்காரவர்கள் B.A., B.L.,

*வீரசோழிய உரையாசிரியர் காலம்* 387, 428, 449

,, சக்கரை இராமசாமிப்புலவர்

*வாழ்த்துப்பா* 448

,, வை. சுந்தரேச வாண்டையார்

*சாத்தனர் கோயில்கள்* 466

,, R. P. அமிர்தலிங்கம் பிள்ளையவர்கள்

சேக்கிழாரும், கம்பரும் 496

பொழிற்றொண்டர்

*தமிழ்ச்செய்திகள்* 37, 399, 480a

*மதிப்புரை* 40, 240, 519

*தமிழர் மாநாட்டுத் தலைமைப்பேருரை* 142

*கரந்தைத் தமிழ்ச்சங்கம் ஆண்டுவிழா* 441



உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு

| | | |
|---|---|---|
| துணர் ௰ | பவ, பங்குனி | மலர் ௰உ |


உ

## பொருளின் அமைப்பு.

திருவாளர். அ. சீநிவாசாச்சாரியார் அவர்கள், B.A., L.T.,
ஆசிரியர், உயர்தரக்கல்லூரி, சீவில்லிப்புத்தூர்.

முற்றொடர்ச்சி துணர் 10. மலர் 5. பக்கம் 231.

அணுக்களைப் பகுக்குங்கால் ஒவ்வொன்றின்கண்ணும் திரள் திரளாக மின்னுருக்கள் காணப்படுகின்றன என்று முன்னர்க் கூறினேம். ஒவ்வொரு மின்னுருவின்கண்ணும் அமைந்துள்ள மின்சார ஊட்டம் (Electric charge) பின்னுங் குறையவொண்ணாதபடி மிகக்குறைந்த ஓரளவினதாயிருப்பதுமன்றி, மின்னுரு எத்தகைய பொருளணுவினைச் சார்ந்ததாயினும், மின்னுருக்களனைத்தும் தினைத்துணையும் ஒன்றுக்கொன்று வேறுபடாதனவாய், ஒன்றையொன்று முற்றிலும் ஒத்தனவாய் அமைகின்றன. [அனைத்திணுஞ் சிறிய அவ்வூட்டத்தின் அளவினை ஒரு 'கூறு' (Unit) என்போம்.] இம்மின்னுருக்களை அணுவினின்றும் பிரித்தறியுங்கால், அவை நிறையும் பருமனும் பெற்றுள்ள சடப் பொருட்டொகுதியாகத் தோன்றுகின்றன.

சுடரியத்தினின்றும் எம்மருங்கும அகரத்துகள்கள் விரைந்தெறியப்படுகின்றன என்று முன்னர் உரைத்தோம். அத்துகள்கள் வளிவழியாகச் செல்லும் நெறியினையும் படிமக் கருவியின் (Photo graphic camera) துணையானே படம் பிடித்துக்கொள்ளல் இயலும். அங்ஙனம் செய்யவேண்டின் சுடரியத்தைச் சூழும் வளியினை ஈரஞ் செறியச் செய்து, ஒரு சிறிது ஈரம் மிகினும் அக்கணமே மஞ்சு படிதற்குரிய நிலையில் அமைக்க வேண்டும். (ஈரத்தை உட்கொள்ளமாட்டாத வெளிக்காலும் நிலையில் தான் வளியில் மஞ்சுபடியத் தொடங்கும்.) அந்நிலையில் அவ்வழியே பாய்ந்து செல்லும் அகரத்துகள்களில் ஒன்று வளியின் அணுக்களின்மீது மோதுமாயின், உடனே அவ்வவ்விடங்களில் மஞ்சு தோன்றுகிறது; ஆதலின் அகரத்துகள்களின் நெறிமுழுதும் வரிசையாக மஞ்சு படிதலின், ஒரு மஞ்சுவரை புலப்படுகின்றது. இவ்வரையின் மின்சாரப் பொறியின் ஒளியிற்படம் பிடிக்கவும் கூடும். அப்படங்களைக் கண்ணுறுங்கால், சுடரியத்தினின்று புறப்பட்டு வெளிச்செல்லும் பற்பல நேர் வரைகள் காணப்படுகின்றன; ஆனால் இடையிடையே ஒருநெறி இரண்டாகக் கவர்படுதலும் புலனாகின்றது. அதன் காரணத்தை ஆராய்கின்றுழி, ஓர் அணுவின்கண் அமைந்த மற்றோர் இன்றியமையாத பகுதியும் அறியப்படுகின்றது. எங்ஙனேயெனின் விரைந்தியங்கும் ஒரு பந்து நிலையான ஒரு கனத்த பந்தின்மீது மோதுங்கால், அதை ஓர் அளவிற்கு ஒடச் செய்யினும் தான் நெறியினின்று விலகுமல்லவா? அஃதேபோல், விரைந்தியங்கும் ஓர் அகரத்துகள் ஓர் அணுவினைத் தாக்குங்கால் தனது நேர் நெறியினின்றும் விலகிச் செல்லுமாயின், அவ்அணுவிலுள்ள ஒருபகுதி அகரத்துகளினும் மிக்ககனமுடையதாயும், ஆயினும் மிக நுண்ணிதாயும் இருத்தல் வேண்டும். அகரத்துகளின்நெறி, பொதுப்பட நோக்கின், வெகுதொலைக்கு ஒரு நேர்வரையாகின்றமையின், அது அணுவினும் மிக நுண்ணிதென்பதும், அணுக்களையும் ஊடுருவி நேர்நெறியினின்றும் விலகாது செல்லும் ஆற்றல் வாய்ந்தது என்பதும் கண் கூடாம். ஆக, அகரத்துகளின் நெறி கவர்படுதல் ஓர் அணுவிலுள்ள கனத்த பகுதியின்

உண்மைக்கு ஒரு சான்ருகின்றது. இப்பகுதியினை ஓர் அணுவினது 'நடுக்கோண்' அல்லது 'நிலைக்கோண்' (Nucleus) என்போம். பல்வகை யணுக்களின் நடுக்கோண்களோடு அகரத்துகள்கள் மோதுங்கால் விளையும் நிகழ்ச்சிகளை நுணுகியாராய்ந்ததன் பயனாய், எவ்அணுவின் நடுக்கோணும் அவ்அணுவினும் பல இலக்கமடங்கிற்கும் சிறியதாயிருப்பினும் அவ்அணுவின் நிறை முழுதும் அதன் நடுக்கோணிற் குவிந்திருக்கின்றதென்பது தெளியப்பட்டது. (சுடரியத்தினின்றும் பாய்ந்தெழும் அகரத்துகள்கள் அதன் அணுக்களின் நடுக்கோண்களிலிருந்தே புறப்படுகின்றன. அத்துகள்கள் இரவியம் (helium) என்னும் மூலப்பொருளின் நடுக்கோண்களே; தமது கழிபெரும் விரைவு தணியப்பெறுங்கால், அவை இரவியம் எனும் வாயுப்பொருளின் அணுக்களாக மாற்றமடைகின்றன.) இக்காரணத்தினுலேயே நமது உடலின்கண் அடங்கியுள்ள அணுக்களனைத்தின் நடுக்கோண்களையும் சேரத் தொகுத்து வைப்போமாயின், அது ஒரு விரற் பருமனும் ஓரங்குல நீளமுமுள்ள ஒரு சிறு கலத்தையே நிரப்புவதாகும்; எனினும் நமது உடலின் நிறைமுழுதும் (ஏறத்தாழ 130 ராத்தல் எடையும்) அதன்கண் அடங்கிக் குவிந்து கிடப்பதாகும். இப்பெற்றித்தாய நடுக்கோண்களைச் சூழ்ந்து, ஓரணுவின் பெரும் பகுதியைத் தமக்கு இடமாக்கிக் கொள்வன நாம் முற்கூறிய மின்னுருக்களே. இம்மின்னுருக்கள் மாற்று மின்சாரம் ஊட்டப் பெற்றிருத்தல்போல், (Negative electricity=மாற்று மின்சாரம்) நடுக்கோண்களும் நேர் மின்சாரம் (Positive electricity) ஊட்டப் பெற்றுள்ளன. இவ்இருவகை மின்சாரங்களும் ஒன்றுக்கொன்று மாருக இருத்தலின், ஓர் அணுவின்கண் அவை ஒருங்குகூடி அண்மையில் அமர்ந்திருக்குங்கால், மின்சார ஊட்டம் வெளித்தோன்ரு தொழிகின்றது. இவ்விருவகைக் கோண்கட்கும் உள்ள தொடர்பை இன்னும் விரிவாக ஆராய்ந்து காணவும் இயலும்.

### நிலைக்கோணும், சுற்றுக்கோண்களும்.

ஓர்அணுவின் பருமையையும் அதன்கண் அமைந்துள்ளநடுக்கோண் மின்னுருக்கள் ஆகிய இருபகுதிகளின் பருமையையும்

(volume) தனித்தனியே கூட்டிவரும் மொத்தப் பருமையையும் ஒப்பிட்டு நோக்குங்கால், முன்னது பின்னதினும் மிக்கதாகக் காணப்படுகின்றது. ஆயினும் அணுக்கள் அடர்த்தியாகத் தொகுக்கப் பட்டிருக்குங்கால், அவைகளைப் பேரழுத்தத்தாலன்றிக் குறுக்க இயலுவதில்லை; அன்றியும் ஓர் அணுவின் நடுக்கோணும் மின்னுருவும் ஏறத்தாழ ஒத்த பருமையை உடையனவாகின்றன. இவைகளையெல்லாம் ஒருங்கு நோக்கிச் சிந்திக்குங்கால், மின்னுருக்களை ஒன்றையொன்று அணுகவொட்டாது தகையும் சத்தியொன்றும், நிலைக்கோணைவிட்டு அவை விலகியோடாத வண்ணம் தகையும் சத்தியொன்றும் ஓர் அணுவின்கண் அமைந்திருத்தல் இன்றியமையாததாகின்றதல்லவா? அத்தகைய சக்திகள் ஆங்கே அமைந்திருத்தலும் உண்மையே. ஓர் அணுவிலுள்ள நடுக்கோணைச்சூழும் மின்னுருக்கள் நிலையாக அதன் மருங்கே அமர்ந்திருப்பனவல்ல. இவையனைத்தும் நிலைக்கோணினின்றும் பலப்பல தொலைகளில் தத்தமக்குரிய வீதிகளின் வழியே ஒரு விநாடிக்கு இலக்கங்கோடி முறை அந்நடுக்கோணைச் சுற்றி விரைந்து சுழன்று வருகின்றன. உன்னற்கரிய இத்துணை விரைவோடு சுழலுதலின், இவை அவ்வீதிகளனைத்தையும் தமக்கிடமாகக் கொள்கின்றன. வெட்ட வெளியிலுள்ளதொரு மாளிகையைச் சுற்றிப் பலமக்கள் தத்தமக்குரிய விரைந்தியங்கும் ஊர்திகளில் பற்பல வட்ட வீதிகளின் வழியே இமைப்பொழுதிற்கு இலக்கங்கோடி முறைசுற்றிவருவாராயின், யாம்நோக்கும்போதெல்லாம் அவர்கள் இவ்வீதிகளின் முழுமையிலும் அமர்ந்திருப்பதாகத் தோன்றுமல்லவா? செந்தீக்கொள்ளியை விரைந்து சுழற்றுங்கால், தீவட்டமொன்றே புலப்படுமன்றோ? அதுபோன்றே, மின்னுருக்களும் நடுக்கோணைச் சுற்றிவரும் விரைவின் காரணமாக, வெகுதொலை பரவி அமைந்திருப்பனவாம். அவை யொவ்வொன்றுக்கும் இயல்பாக உரித்தான பருமை மிக நுண்ணிதாயினும், ஒரு வட்ட வீதி முழுமையிலும் பிறிதொன்று புகாத வண்ணம் விரைந்து சுழன்று வருதலின், அப்பரப்பு முழுதையும் தனது உறைவிடமாக்கிக் கொள்கின்றது. இவை யொவ்வொன்றும் ஒரே படித்தான மாற்று மின்

சாரம் ஊட்டப்பெறுதலானும், ஒரு தன்மைத்தான மின்சாரம் ஊட்டப்பெற்ற இருபொருள்கள் ஒன்றையொன்று விலக்குதல் விதியாகலானும், இம்மின்னுருக்கள் ஒன்றையொன்றணுகாது உரிய தொலையில் விலகியே செல்லும் இயல்பினவாகின்றன. இக்காரணம்பற்றியே அவைகளை நெருக்கிச் சுருங்கிய இடத்திற் றிணித்தல் அரிதாகின்றது. இன்னும், ஓரணுவின் மின்னுருக்கள் நடுக்கோணைச் சுற்றி வருதலை விடுத்துத் தம் இச்சைப் படியே நேரான நெறிகளின் வழியே நடுக்கோணை விட்டு விலகிச் செல்லுதலும் இயலாது. என்னெனின், அப்மின்னுருக்கள் அனைத்தின்கண்ணும் அமைந்திருக்கும் மாற்று மின்சாரத்தின் அளவிற்கு ஈடான நேர் மின்சாரம் அவைகட்கு நடுநாயகமாய் விளங்கும் நடுக்கோணின்கண் உறைகின்றது; நேர் மின்சாரமும் மாற்று மின்சாரமும் ஒன்றையொன்றி பற்றியிழுக்குமாதலின், நடுக்கோணைவிட்டு அவை அகல மாட்டாதனவாகின்றன. விரைந்து வட்டமிட்டுவரும் மின்னுருக்களைச் சுற்றுக்கோண்கள் என்றழைப்போமாயின், ஓர் அணுவில் நிலைக்கோண் ஒன்றும், அதைச்சுற்றி வட்டமிட்டுச் சுழலும் சுற்றுக்கோண்களும், உள என்பது பெறப்படுகின்றது. ஓர் அண்டத்தின் நடுவே பரிதி யொன்றும், அதைச் சுற்றி வெவ்வேறான தொலைகளில் தத்தமக் குரிய வட்ட வீதிகளில், ஒன்றையொன்று மோதாதும் நெறியி னின்றும் விலகாதும், அப்பரிதியின் கவர்ச்சிக்கு உட்பட்டு முறைப்படிச் சுழலும் பலகோண்களும் அமைந்திருக்கும் விந்தையே ஓர் அணுவின் உள்ளமைப்பிலும் காணப்படுகின்றது. ‘அண்டத்திலுள்ளது பிண்டத்திலும் உண்டு’ என்பது, நமது நாட்டில் தொன்று தொட்டு வாழையடி வாழையெனத் திகழ்ந்து வந்துள்ள மாசறு காட்சியோரது மலர்மொழியன்றோ?

ஓரணுவின் நிலைக்கோணின்கண் ஆரும் நேர் மின்சார ஊட்டமும் அதனைச் சூழும் மின்னுருக்களின் மாற்று மின்சார ஊட்டத்தொகுதியும் அளவொத்திருத்தல் இன்றியமையாததா கின்றது; அங்ஙனம் அளவொத்திராது ஒன்றை மற்றொன்று விஞ்சியிருக்குமாயின், அவ்அணுவிற்கு நிலையும் அமைதியும் உண்டாகாதொழியும். பற்பல மூலப்பொருள்களின் அணுக்

களில் அமைந்துள்ள நிலைக்கோண்களோடு அகரத்துகள்களை மோதவிடும்போது அகரத்துகள்கள் நெறிவிலகிச் செல்லும் பான்மையை உற்றுநோக்கி யாராய்வதினால், ஒவ்வொருவகை யணுவின் நிலைக்கோணிலுள்ள நேர்மின்சார ஊட்டத்தின் அளவை இத்தனை கூறுகள் (Units) எனக் குறிப்பிட்டுரைத்தல் இயலுகின்றது; அங்ஙனம் செய்யுங்கால், அணு எப்பொருளின தாயினும் அவ்வூட்ட அளவு குறிப்பிட்ட ஒரு முழு எண் கொண்ட மின்னுருக்கட்குச் சமனாதல் காணப்படுகின்றது; அன்றியும் நடுக்கோணிலுள்ள அம்மின்சார ஊட்டம் மூலப் பொருளுக்குத் தக்கவாறு வேறுபடுதலும் காணப்படுகிறது. இதனால் அறியக்கிடப்பது யாதெனின், ஒரு நிலைக்கோணைச் சூழும் சுற்றுக்கோண்களின் தொகை வெவ்வேறு மூலப்பொருள் கட்கும் வெவ்வேறாகின்றதென்பதே. இத்தொகை 1 முதல் 92 வரை உள்ளதென இதுகாறும் கணக்கிடப்பட்டுள்ளது. நீரய அணுவிலுள்ள சுற்றுக் கோண்களின் தொகை 1; உயிர (Oxygen) அணுவிற்கு அத்தொகை 8 ஆகும்; சுண்ணக அணு விற்கு அது 20 ஆகும். நாகத்திற்கு (Zinc) அது 30 ஆகும்; ஒளிரியத்திற்கு 92 ஆகின்றது. ஓரணுவின் நடுக்கோணிலுள்ள நேர்மின்சார (ஊட்ட)க் கூறுகளின் தொகையும், அதனைச்சூழும் மின்னுருக்களின் (சுற்றுக்கோண்களின்) தொகையும் ஒன்றே யாம். இவ்வெண்ணை இயைபு நூலார் ‘அணுவெண்’ (Atomic number) என்றழைப்பர். ஒவ்வொரு மூலப்பொருளணுவின் நடுக்கோணிலும் மின்சார ஊட்டம் உண்டெனக் கூறினேமாயி னும், அவ்விதிக்கு விலக்காக ஓரோவழி யாதொரு மின்சார ஊட்டமுமற்ற நடுக்கோண்களும் [இவை வறுங்கோண்கள் (Neutrons) எனப்படும்.] தென்படுகின்றன; அவைகளுக்குரிய அணுவெண்ணைச் சுழியென்றே கொள்ளல் வேண்டும்.

ஒவ்வொரு மூலப்பொருட்கும் உரிய அணுவெண் எத் தனையோ அத்தனை மின்னுருக்களும் (சுற்றுக் கோண்களும்) அதன் நிலைக்கோணைச் சுற்றி ஒரே வீதி வழியாக வட்டமிடுவ தில்லை; அவையனைத்தும் ஒரே திறன் (Energy) அமைந்தனவு மன்று; அவைகளின் திறனது உறைப்பிற்கு உரியவாறு அவை

களைப் பாகுபாடு செய்யின், ஒரே திறனமைந்தனவும் அக்காரணத்தானே ஒரே தொலையிற் சுழல்வனவுமாய மின்னுருக்கள் அனைத்தும் ஒரே தொகுதியின்பாற் படுவனவாம்; அவை ஒரே திறன் மட்டத்தில் (Energy level) இருப்பனவாகக் கூறுதல் மரபாகும். ஒரு தொகுதியின் திறன் மட்டம் மற்றொரு தொகுதியின் திறன் மட்டத்தினும் வேறுபட்டே யிருக்கும். ஒவ்வொரு தொகுதியினையும் சார்ந்த மின்னுருக்கள் ஒரே தொலையில் யாண்டும் விரைந்து சுற்றி வருதலின், ஒரு மின்சாரத் திறன் வட்டத்தை அமைக்கின்றன. ஒரு தொகுதியின் மின்சாரத் திறன் வட்டத்திற்கும் மற்றொருதொகுதியின் மின்சாரத்திறன் வட்டத்திற்கும் மின்சாரத்திறனுறைப்பில் வேறுபாடு உளதாகுமாதலால், ஓரணுவின் நிலைக்கோணைச்சுற்றிப் பற்பல மின்சாரத் திறன் வட்டங்கள் அடுக்கடுக்காகத் திறன் வரிசைப்படி யாண்டும் அமர்ந்திருக்கும்; திறன் மிகுந்தன அண்மையிலும் திறன் குறைந்தன சேய்மையிலும் இருக்கும். ஆயினும், அத்திறன் பொருக்கெனக் குறைவுறாது சிறுகச் சிறுகக் குறைந்து வருமாதலின், ஒரு வட்டத்தையும் அடுத்த வட்டத்தையும் வரையறுத்துக்காட்டும் இடைவரம்பொன்று இல்லாதுபோகும். ஒரு பொருளைச் சூழும் மூடுபனி அப்பொருளின் அருகே அடர்த்தி மிகுந்தும், தொலையேறவேற அடர்த்தி குன்றியும் வருவதாக மனப்படம்வரைந்துகொள்வோமாயின், அப்படமே ஓரணுவின் அகத்துள்ள மின்சார வூட்டத் திறனமைப்பை ஒருவாறு புலப்படுத்தும் உவமையாகலாம்.

ஒரு நிலைக்கோணைச் சுற்றி அடுக்கடுக்காக அமைந்துள்ள மின்சாரத்திறன் வட்டங்களில் உள்ள மின்னுருக்களின்தொகை அனைத்திலும் ஒன்றாயிராது வேறுபட்டே யிருக்கும். இவ் அடுக்குகளை உண்ணின்று வரும் முறையில் 'க' அடுக்கு 'ச' அடுக்கு 'ட' அடுக்கு 'த' அடுக்கு 'ப' அடுக்கு என்று பெயரிடுவோம். (K shell, L shell, M shell, N shell etc ,) 'க' அடுக்கில் 2 மின்னுருக்கட்குமேல் என்றும் காணப்படுவதில்லை; அங்ஙனமே 'ச' அடுக்கில் 8க்குமேலும், 'ட' அடுக்கில் 18க்கு மேலும் இருப்பதில்லை; அன்றியும், அணுவெண் முறைப்படி

மூலப்பொருள்களை நாம் வரிசைப் படுத்தி வருங்கால், வேறு பல அரிய விந்தையான உண்மைகள் விளங்குகின்றன. ஒரு மூலப்பொருளின் அணுவெண் 2 ஆயின், அதன் 'க' அடுக்கில் 2 மின்னுருக்களே யுள்ளன. அணுவெண் 3 ஆயின், அதன் அணுவின் 'க' அடுக்கில் 2ம், அடுத்த 'ச' அடுக்கில் 1ம் அமைகின்றன. பிற அட்டவணையிற் காட்டப்பட்டுள்ளன.

| மூலப்பொருள் | அணு வெண் | மின்னுருக்களின் தொகை | | | | |
|---|---|---|---|---|---|---|
| | | 'க' | 'ச' | 'ட' | 'த' | 'ப' |
| வறுங்கோண்கள் | 0 | — | — | — | — | — |
| நீரயம் (Hydrogen) | 1 | 1 | — | — | — | — |
| இரவியம் (Helium) | 2 | 2 | — | — | — | — |
| உத்தியம் (Lithium) | 3 | 2 | 1 | — | — | — |
| உயிரம் (Oxygen) | 8 | 2 | 6 | — | — | — |
| பிதகம் (Fluorine) | 9 | 2 | 7 | — | — | — |
| நவனம் (Neon) | 10 | 2 | 8 | — | — | — |
| உவரியம் (Sodium) | 11 | 2 | 8 | 1 | — | — |
| கந்தகம் (Sulphur) | 16 | 2 | 8 | 6 | — | — |
| பசியம் (Chlorine) | 17 | 2 | 8 | 7 | — | — |
| மடியம் (Argon) | 18 | 2 | 8 | 8 | — | — |
| நீறியம் (Potassium) | 19 | 2 | 8 | 8 | 1 | — |
| சுண்ணகம் (Calcium) | 20 | 2 | 8 | 8 | 2 | — |
| செம்பு (Copper) | 29 | 2 | 8 | 18 | 1 | — |
| புதியம் (Bromine) | 35 | 2 | 8 | 18 | 7 | — |
| கரவினம் (Krypton) | 36 | 2 | 8 | 18 | 8 | — |
| தாமிரம் (Rubidium) | 37 | 2 | 8 | 18 | 8 | 1 |

இவ்அட்டவணையை உற்றுநோக்குங்கால், அணுவெண் கூடுங்கால் மின்னுருக்களின் தொகை எங்கெந்த அடுக்கில் எவ்வண்ணம் கூடுகின்றது என்பது காணப்படும். அதினின்றும் அறியக்கிடப்பனவாவன:—(1) 'க' அடுக்கில் 2 மின்னுருக்கட்கு மேல் இருப்பதில்லையாதலின், 2க்குமேல் 3 மின்னுருக்கள் அணுவிலிருக்குமாயின், அடுத்த 'ச' அடுக்கு தொடங்குகிறது; அது

போல் 'ச' அடுக்கில் 8 மின்னுருக்கட்கு மேற்பட நேருங்கால், அதற்கு அடுத்த 'ட' அடுக்கு தொடங்குகிறது. (2) 'ட' அடுக்கிலும் 'த' அடுக்கிலும் மின்னுருக்களின் தொகை நிரம்பு முன்னரே அவைகட்கு அடுத்த அடுக்குகள் கிளம்புகின்றன. (3) அனைத்திற்கும் வெளியிலுள்ள அடுக்கு எதுவாயினும் சரி, அதன்கண் 8க்கு மேற்பட்ட மின்னுருக்கள் அமைவதில்லை; ஆனால் யாதானும் ஓர் அடுக்கில் 8க்கும் மேற்பட்ட மின்னுருக்கள் அமைய நேரும் அமயத்தில், அதற்கு அடுத்த அடுக்கு கிளம்பத் தொடங்குகின்றது. (4) மூலப்பொருள்களை முற்கூறியாங்கு அணுவெண் முறைப்படி வரிசைப் படுத்துங்கால், மூலப்பொருட் குலங்கள் எழுகின்ற முறைமையும் விந்தையும் செவ்வனே தோன்றுகின்றன. எவ்வாறெனின், அனைத்திற்கும் வெளியிலுள்ள அடுக்குகளில் நிரம்பிய மின்னுருக்களையுடைய அணுக்களெல்லாம் ஒரே குலத்தைச் சார்ந்தனவாகின்றன. இதற்குச் சில எடுத்துக்காட்டுகள் தருவாம். இரவியத்தின் அணுவெண் 2; இதன் அணு 2 மின்னுருக்களைக் 'க' அடுக்கில் உடையது. அதற்குமேல் மின்னுருக்கள் அவ் அடுக்கில் இருப்பதில்லையாதலின், அவ்அடுக்கு நிரம்பிய மின்னுருக்களையுடைய தொன்றும். நவனத்தின் அணுவெண்ணும் வரிசையும் 10; இதன் அணு 'க' அடுக்கில் 2யும் 'ச' அடுக்கில் 8ஐயும் உடையதாதலின், இதன் வெளியடுக்கும் நிரம்பிய மின்னுருக்களையுடையதாகும். மடியத்தின் வரிசையும் அணுவெண்ணும் 18; இதன் அணுவின் இறுதி அடுக்காகிய 'ட' அடுக்கில் 8 மின்னுருக்கள் இருத்தலின், இதுவும் நிரம்பிய புற அடுக்கினையுடையதே. 'ச' அடுக்கிலும் 'ட' அடுக்கிலும் மின்னுருக்கள் 8க்கு மிக நேருங்கால், அடுத்த 'ட' அடுக்கும் 'த' அடுக்கும் முறையே தொடங்கும் என்பது ஈண்டு நினைவுறுத்தற்பாற்று. இனிக் கரவினத்தின் வரிசையெண் 36; இதுவும் புற அடுக்காகிய 'த' அடுக்கில் 8 மின்னுருக்களையுடையது; அதற்கு மேற்பட நேரின் அடுத்த 'ப' அடுக்கு முளைத்தலின், நிரம்பிய மின்னுருக்களைப் புற அடுக்கின்கண் உடையதாம். இரவியம், நவனம், மடியம், கரவினம் என்னும் நான்கு மூலப் பொருள்களும் (பிற பொருள்களோடு

இணையும் பெற்றியின்மை வாய்க்கப் பெற்றிருத்தலின்) 'மடி வாயுக்கள்' எனும் மூலப் பொருட் குலத்தைச் சார்ந்தனவாகின்றன. இன்னும், அனைத்திற்கும் வெளியிலுள்ள (மின்சாரத் திறன்) அடுக்கில் உயர்ந்ததொகையாகிய 8க்கு ஒன்று குறையும் போதும், அவ்அணுக்கள் யாவும் ஒரு குலத்தினவாதல் காணப்படுகின்றது; இத்தகைய குலத்தைச்சார்ந்தன, பீதகமும், பசியமும், பூதியமும், ஊதாயமும்; இக்குலம் 'கடலுப்புக்குலம்' என வழங்கப்படும். இம்மட்டோ! நிரம்பிய மின்னுருக்களை (8ஐ) யுடைய ஒரு மின்சாரத்திறன் அடுக்கிற்கு வெளியே ஒரு மின்னுருவையும் இரண்டு மின்னுருக்களையும் உடைய அணுக்கட்குள்ளும் ஒரு குல ஒப்புமை மிளிர்கின்றது.

இதுகாறும் கூறியவற்றானே ஒரு மூலப்பொருளின் இயைபு வழிப் பண்புகள் (Chemical Properties) அதன் அணுவில் அமைந்துள்ள மின்னுருக்களின் தொகைக்கும், அம்மின்னுருக்கள் அமர்ந்திருக்கும் முறைமைக்கும் ஏற்றவாறு வேறுபடுகின்றன என்பது பெறப்படுகின்றது.

(தொடரும்.)

[ஜாண் பில்லியென்பவர் 'இயைபுநூல்' என்னும் தலைப்பின்கீழ் எழுதிய கட்டுரையைத் தழுவியும் தொகுத்தும் வேறு நூல்களைத் தழுவியும் எழுதப்பட்டது.]

---

## ஆழ்வார் பாரதமும் பண்டைத் தமிழ்நூல்களும்.

திரு. கோமான். ம. வி. இராகவன், ஔவைத்தமிழகம், திருவத்திபுரம்.

(முற்றொடர்ச்சி 465-ம் பக்கம்.)

விராடநகரம் சென்று நிரைகொண்ட காலத்துக் கன்னன் அருச்சுனனால் அடிக்கப்பட்டு முதுகிட்டோடுவது கண்ட அச்சுவத்தாமன் முதலியோர் நகைத்து இகழ்ந்து பேச, அவர்கட்கு அவன் கூறியதாகவரும்,

1 "சொல்லலா மிருந்துழி சொன்ன சொற்படி
வெல்லலா மென்பது விதிக்குங் கூடுமோ
மல்லலா ளியைப்பல வளைந்து கொள்ளினும்
கொல்லலா யிருக்குமோ குஞ்சரங் களால்"

இப்பாவில், 2 "சொல்லுதல் யார்க்கு மெளிய அரியவாஞ், சொல்லிய வண்ணஞ் செயல்" என்பதன் கருத்துப் பொருந்தப் பெற்றிருத்தலறிக.

வாரணாவதத்தின்கண் அமைக்கப்பட்ட அரக்குமாடத்துள் வஞ்சகம் நிலைபெற்ற நெஞ்சகனான புரோசனன் என்னும் அமைச்சனுடன் குந்திமக்கள் வாழ்ந்த தன்மையைக் கூறுவார்,

1 "பாந்த ளோடொரு மனைவயிற் பயில்பவர் போல
வேந்த ரைவரு மந்திர வலியினன் மிக்கோர்
காந்து நெஞ்சுடை யமைச்சனைக் கைவிடா ரணுகித்
தாந்த மெய்யென வுயிரெனத் தனித்தனி சார்ந்தார்"

என்று இப்பாவின்கண், 2 "உடம்பாடிலாதவர் வாழ்க்கை குடங்கருட், பாம்போ டுடனுறைந்தற்று" என்னும் பொருளுரையைப் பெய்தமைத்தார்.

பாஞ்சாலி வேற்றுருக்கொண்டு விராட நகரில் வாழ்ந்து வருங்கால் தனித்துநின்ற அவளைக்கண்டு கீசகனென்பான் காதல்கொண்டு தகாதன கூறி யணையுமாறு வேண்ட, அவள் அவனை யிடித்துக் கூறியதாக வரும்,

3 "மார னாயகத் தாலுயிர் மாளினும் வசையி லாத மரபின்வர் தோர்பிறர்
தார மானவர் தம்முகம் பார்ப்பரோ தக்கவர்க்குத் தகவினவை யேகொலாம்
சோர னாதலிற் சொற்று யினித்தவிர் சுரேசரைவர்தங் காவலென் றுளினை
வீர போவென் னருகுறி லாவிபோம் விழித்தி மைக்குமு னென்று விளம்பினள்"

இச்செய்யுளில், 4 "பிறர்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க், கறனொன்றோ வான்றவொழுக்கு" என்னும்குறட்பாவின் பொருளை விளக்கிக் காட்டியுள்ளார்.

---

1. நிரை 83. 2. குறள் 664.
1. வாரணா 127. 2. குறள் 890. 3. கீசகன் 6. 4. குறள் 148.

விசயன் முதலோர் விராடன் தருமனைக் கவறினலடித்தமை யறிந்து சிறிதும் பொருது பெரிதும் வெகுண்டெழ, அதுகண்ட தருமன் செய்நன்றியின் மாண்புகூறி அவரையாறுமாறு கூறிய தாகவரும்,

1 "ஒன்றுதவி செய்யினுமவ் வுதவி மறவாமை
பின்றையவர் செய்தபிழை பொறுத்திடுவர் பெரியோர்
நன்றிபல வாகவொரு நவைபுரிவ ரேனுங்
கன்றிடுவ தன்றிமுது கயவர்நினை யாரே"

இப்பாவினும், ஆயர் தலைமகன் தூதுசென்ற ஞான்று துரியோதனன் தன்மனைக்குப்போனகங்கொள்ளவாராமைக்குக்காரணம் வினவினுக, அவனுக்கு அவன் கூறியதாகவரும்,

2 "அவை மல்கிய பதாகை யாய்மதி யமைச்ச ராயர சழிப்பினும்
குரவர் நல்லுரை மறுக்கினும் பிறர் புரிந்த நன்றியது கொல்லினும்
ஒருவர் வாழ்மனையி லுண்டு பின்னுமவ ருடனழன்று பொர வுள்ளினும்
இரவி யுள்ளளவு மதிய முள்ளளவு மிவர்க ளேநரகில் எய்துவார்"

இப்பாவினும், பதினுன்காம் நாட்போரில் விகருணன் என்பான் வீமனேடு போர் குறித்து வந்து அழைக்க, அவன் அவனேடு பொர மனமிசையாதவனுக் கூறியதாகவரும்,

3 "பாரறிந்த பழிக்குட் படாதநின்
நேரறிந்தும் பொரநெஞ் சியையுமோ
போரறிந்து பொருகவென் றுனெடுஞ்
சீரறிந்தவர் செய்நன்றி கொல்வரோ"

இப்பாவினும், 4 "கொன்றன்ன வின்னு செயினு மவர்செய்த வொன்றுநன் றுள்ளக் கெடும்" 5 "தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக் கொள்வர் பயன்றெரிவார்" 6 "எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு" எனவரும் பொன் மொழிகளாற் கூறப்படும் செய்ந் நன்றியின் சிறப்பு நன்கு விளக்கப்பட்டுள்ளது. அன்றியும்,

1. வெளிப் 6. 2. கிருட்டினன் 109. 3. 14ஆம்போர் 145.
4. குறள் 109. 5. குறள் 104. 6. குறள் 110.

1 "செய்தி கொன்றோர்க் குய்தியில்லென, அறம் பாடிற்றே யாயிழைகணவ" 2 "நன்றி, செய்குநர்ப் பிழைத்தோர்க் குய் விலவென்னுங், குன்றாவாய்மை"

3 "யாப்பின் மன்னிய நன்றி தன்னை விடுத்த தீமையிதற் குயிர், நீப்பதே பரிகார மென்றிடும் நீதிநூல்"

4 "சிதைவகல் காதற்றாயைத் தந்தையைக் குருவைத்தெய்வம்
பதவியந் தணரை யாவைப் பாலரைப் பாவை மாரை
வதைபுரி குநர்க்கு முண்டா மாற்றலா மாற்றல் மாயா
வுதவிகொன் றார்க்கொன் றேனுமொழிக் கலாமுபாய முண்டோ"

5 "தன்னை யாக்கிய தார்ப் பொலி வேந்தனைப்
பின்னை வெளவிற் பிறழ்ந்திடும் பூமகள்"

6 "ஒன்றொரு பயன்றனை யுதவி னோர்மனங்
கன்றிட வொருவினை கருதிச் செய்வரேல்
புன்றொழி லவர்க்குமுன் புரிந்த நன்றியே
கொன்றிடு மல்லது கூற்றும் வேண்டுமோ"

எனவரும் இச்செய்யுட்களும் செய்ந்நன்றியின் சிறப்பினை விரித்துக் கூறுகின்றமை காண்க.

பாண்டவர் விராட நகரில் கரந்துறைவுழிக் கீசகனென்பான் பாஞ்சாலியைத் தொடர்ந்து வந்து, அரசனவைக் களத்திற்புக்க அவளை வலியில் பற்றித் தழுவ முயன்றானாக விராடன் அவன் ஆற்றற்கஞ்சி யொறுத்தலின்றி வாளாவிருக்க, அது கண்ட விரதசாரணி அவ்வரசனைக் கழறிக் கூறியதாகவரும்,

7 "பெருந்தகை யன்றிது பேசலன்றி நீ
யிருந்தனை யுனக்கர செங்ஙன் செல்வது
வருந்தினர் வருத்தநீ மாற்றலா யெனின்
அருந்திற லரசநின் றுணை யொன்றுமே"

இக்கவியிலும், அத்திரௌபதியே விராடன் மனைவியிடத்திற் சென்று மொழிந்ததாகவரும்,

---

1. புறம் 34. 2. கல்லா 4. 3. சேதுபுராணம். 4. கம்பரா. கிட்கிந்தா 62.
5. சீவக; நாமக. 6. கந்தபுராணம். 7. கீசக. 37.

2 "பூதல மாண்மையாற் புரக்கு மன்னவர்
தீதொழில் புரிஞரைத் தெண்டி யாரெனின்
நீதியுஞ் செல்வமும் நிலைபெறுங் கொலோ
ஏதிலர் தமரென விரண்டு பாற்பரோ"

இப்பாவிலும், 3 "எண்பதத் தானோரா முறைசெய்யா மன்னவன், தண்பதத்தால் தானே கெடும்" 4 "கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ், களைகட்டதனோடுநேர்" 5 "அல்லற்பட்டாற்றா தழுதகண் ணீரன்றே, செல்வத்தைத் தேய்க்கும்படை" 6 "சமன் செய்து சீர்தூக்குங் கோல்போலமைந்தொருபாற், கோடாமை சான்றோர்க்கணி" என்னும் குறட்பாக்களாற் கூறப்படும் அரசியல் முறைகள் விளக்கமுற உரைக்கப்பட்டிருக்கின்றன.

இதுகாறும் கூறியவாற்றால் திருக்குறளின்மாண்பும், அதன் சீரிய சொற்கருத்துக்களைத் தத்தம் நூலிடைப் பெய்துகோடல் தமிழ்ப்புலவர் வழக்கமென்பதூஉம், அம்முறையைக் கையாண்ட புலவர்களில் பாரதமியற்றிய வில்லிபுத்தூராரு மொருவரென்பதூஉம், ஏனைய பழந்தமிழ் நூல்களின் சொற்கருத்துக்களும் இவர் தாமியற்றிய பாரதத்திடை மிளிர்கின்றனவென்பதூஉம், இவர் பாக்களில் பொய்யில் புலவரின் பொருளுரைகளின் சொற்றொடர்களும் கருத்துக்களும் அமைந்து விளங்குவன பலவற்றுள் சில, இவையென்பதூஉம், பிறவும் கூறப்பட்டன. இவ்வாறே திருக்குறளில் "சூது" என்னும் அதிகாரத்திற் கூறப்பட்டுள்ளன சில சூதுபோர்ச் சருக்கத்திற் பல பாக்களிலும், "மக்கட்பேறு," "ஒழுக்கம்," "வாழ்க்கைத் துணைநலம்," "இல்வாழ்க்கை" முதலிய அதிகாரங்களிற் கூறப்பட்டுள்ளன நச்சுப் பொய்கைச் சருக்கத்திற் பல பாக்களினும் அமைத்துப் பாடியுள்ளார். மற்றும் பலகுறட்பாக்களின் கருத்தும் சொற்றொடருமாகிய மணிகளை வைத்திழைத்து அழகுறுத்தப் பெற்றுள்ள செய்யுட்கள் பாரதத்தில் பலவிடங்களிலும் பல காணப்படுகின்றன. அவை முற்றிலும் எடுத்துக் காட்டுவதென்றால் கட்டுரை மிக விரிந்து, ஒரு தனிப்புத்தகமாமாகலான் விரிவஞ்சி,

2. சீசக 39. 3. குறள் 548. 4. குறள் 550. 5-6. குறள் 555, 118.

அவற்றை அறிஞரின் ஆராய்ச்சிக்கு விடுத்து இதோடு இதை முடிவுறுத்திக் கொள்ளுகின்றேன்.

—ₒₒₒ—

## "தமிழ்மொழி யம்மானை"

1 வரமுனிவன் றெரிந்துரைத்த வண்டமிழு மாரியம்போற்
றரணியிடை நிலவுமொரு தனிமொழியா மம்மானை;
தரணியிடை நிலவுமொரு தனிமொழியே யாமாயின்
புரவலரும் பிறநாடும் புகழ்வதெவ னம்மானை;
பொருளதிகா ரம்படைத்தாற் புகழாரோ வம்மானை.

2 சொலவரிய நலங்கனிந்த தூயதமிழ் மடந்தைமுனம்
பலவரமர் சங்கங்களிற் பயின்றனள்கா ணம்மானை;
பலவரமர் சங்கங்களிற் பயின்றனளே யாமாயின்,
பலமொழியு மீன்றவட்குப் பங்கமன்றோ வம்மானை;
பாவகத்துட் படிந்தவட்குப் பங்கமுண்டோ வம்மானை.

---

குறிப்புரை.

1. வரம் முனிவன்—முனிச்சிரேட்டனான அகத்தியன்.

பொருளதிகாரம்—பொருளிலக்கணத்தைக் கூறும் பகுதி; இப் பொருட்கு இரண்டாம் வேற்றுமையுருபும் பயனுமுடன் தொக்கதொகை. பொருளும் அதிகாரமும் என உம்மைத் தொகையாக்கியும் பொருள் கொள்ளலாம்.

2. பலவர்—பலர். சங்கம்—கூட்டம்; தமிழ்ச்சங்கம். பாவகத்துட்—படிந்தவள்—செய்யுட்களிற் பொருந்தியிருப்பவள்; நெருப்பிற் குளித்தவள், புலவர்தம் பாந்த உள்ளத்தில் தங்கியிருப்பவள். பங்கம்—பழி (or) இழிவு.

# சேக்கிழாரும் கம்பரும்

பண்டித. திரு. R. P. அமிர்தலிங்கம் பிள்ளை அவர்கள், தமிழாசிரியர்,
அண்ணாமலைநகர்.

பெரிய புராணம் எனப் பெயரிய திருத்தொண்டர் புராணத்தைத் திருவாய் மலர்ந்தருளிய ஆசிரியர் சேக்கிழாரையும், இராமாயணத்தைத் தமிழில் மொழி பெயர்த்துதவிய கவிச் சக்ரவர்த்தி கம்பரையும் யாவரும் நன்கறிவர். செய்யுளியற்றிய தற்கு வேண்டும் சொற்களைப் பல நூல்களின் உதவியாலும் பிறவாற்றானும் தேடிக்கொள்ளலின்றி செய்யுளியற்றக் கருதிய விடத்து வேண்டும் சொற்கள் தாமே முன்வந்து நிற்கும் அருட்டன்மை வாய்ந்த கற்பகமனையவக் கவிஞர்களையும், காவியங்களை இயற்றும் பொழுது அக்காவிய பாத்திரங்களின் உள்ளங்களிலிருந்து உண்மையை உணர்த்தவல்ல சிறந்த கவிகளையும், எண்ணுங்கால் அத்தகைய புலவர்களின் வரிசையில் முதற்கண் வைத்தெண்ணத் தகுந்தவர்கள் ஈண்டு கூறப்பெற்ற சேக்கிழாரும் கம்பருமே யென்னின், அதனை அறிஞரெவரும் மறுக்க முன்வர மாட்டாரென்றெண்ணுகிறேன். பெரும்பாலும் அடியார் உள்ளத்து நின்ற ஆண்டானடிமைத் திறத்தை நன்கு விளக்கியவர் சேக்கிழார். மக்களுள்ளத்து நின்று உலகிய லொழுக்கத்தைத் தெளிவு பெறக் கூறியவர் கம்பர். இவ்விரு பெரும் புலவரும், தாங்கள் எடுத்துக்கொண்ட வரலாறுகட் கேற்ப அவ்வாறு கூறியுள்ளனரேனும், ஒத்தப் புலமை வாய்ந்தவரென்பதற்கு அவ்விருவரிலக்கியங்களுமே தக்க சான்றாகும். இவ்விருவர் நூல்களும் இலக்கியப் போக்கால் ஒத்துள்ளன வென்பதற்காதாரமாக, இருநூல்களினின்றும் சில செய்யுட்களை எடுத்துக்காட்டு முகத்தான், இவ்விரு பெரும் புலவர்களும் ஒத்த புலமை வாய்ந்தவர்களென்பதை விளக்கிக் காட்டுவதே இக் கட்டுரையின் நோக்கமாகும்.

(1) முதற்கண் சேக்கிழார் கடவுள் வாழ்த்து கூறுமிடத்து

"உலகெலா முணர்ந்தோவற் கரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்."

எனக் கூறியுள்ளார்.

கம்பர்

"உலகம் யாவையும் தாமுள வாக்காலும்
நிலைநிறுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகிலா விளையாட்டுடையா ரவர்
தலைவ ரன்னவர்க்கே சரணுங்களே."

எனக் கூறுகின்றார்.

ஈண்டு இவ்விரு செய்யுட்களினும் ஒப்பு நோக்கத் தகுவன, இருவரும், உலகு என்னும் மங்கல மொழியாற்றொடங்குவதும், நாற்சீரடி நான்கு கொண்ட கலி விருத்தமாக வியற்றியிருப்பது மாம். 'உலகெலாம்' என்ற தொடரும், "உலகம் யாவையும்" என்ற தொடரும் ஒப்புநோக்கத் தக்கன.

இனி, சரியை, கிரியை, யோகம், ஞானம், என்னும் நான்கு மார்க்கங்களிலும் சென்ற அடியார்களின் வரலாற்றைக் கூற வந்தவராதலின், ஆசிரியர் சேக்கிழார் கடவுள் வாழ்த்துச் செய்யுளை நாற்சீரடி நான்கு கொண்ட கலி விருத்தமாகக் கூறின ரென்பது அறிஞர்களின் கொள்கை. அங்ஙனமே, ஓது நிலை (பிரமச்சரியம்) இல் நிலை, (கிரகஸ்தம்) வனநிலை, (வானப்ரஸ்தம்), துறவுநிலை (சந்நியாசம்) என்னும் நான்கு நிலை (ஆச்சிரமங்)களினும் நின்றாரது வரலாற்றைக் கூறவந்த கம்பரும் கடவுள் வாழ்த்துச் செய்யுளை, நாற்சீரடி நான்கு கொண்ட கலிவிருத்தமாகவே இயற்றியுள்ளார் என்பது எனது அபிப்பிராயம்.

(2) அவையடக்கங் கூறுமிடத்து,

"தெரியவரும் பெருமைத் திருத்தொண்டர்தம்
பொருவருஞ் சீர் புகலலுற்றேன் முற்றப்
பெருகு தெண்டிரை யூற்றுண் பெருநசை
ஒரு சுணங்கனை யொக்குந் தகைமையேன்"

எனக் கூறுகின்றார் சேக்கிழார்.

"ஓசை பெற்றுயர் பாற்கட லுற்றொரு
பூசை முற்றவும் நக்குபு புக்கென
ஆசைபற்றி யறையலுற்றேன் மற்றிக்
காசில் கொற்றத்தி ராமன் கதையரோ."

எனக் கூறுகின்றார் கம்பர். இங்கு, "பெருகுதெண்டிரை........ ....தகைமையேன்" எனச் சேக்கிழார் கூறுவதும், "ஓசை பெற்றுயர்...........புக்கென", எனக் கம்பர் கூறுவதும், கருத்துவகையான் ஒத்திருத்தல் காண்க.

(3) "எடுக்கு மாக்கதையின் றமிழ்ச் செய்யுளாய்
நடக்கு மேன்மை நமக்கருள் செய்திடத்
தடக்கைபந் துடைத்தாள் செவி நீண்முடி
கடக்களிற்றைக் கருத்து ளிருத்துவாம்". என்ற

செய்யுளில் சேக்கிழார் தாம் எடுத்துக்கொண்ட வரலாற்றை "மாக்கதை" எனக் கூறியிருத்தல் போலக் கம்பரும்,

"நொய்தி னெய்ய சொல்நூற்கலுற்றேனெனை
வைதவை வின்மராமரமேழ் துளை
எய்த எய்தவர்க் கெய்திய மாக்கதை
செய்த செய்தவன் சொன்னின்ற தேயத்தே"

"நடையினின் றுயர்நாயகன் தோற்றத்தின்
இடைநிகழ்ந்த இராமாவதாரப் பேர்
தொடை நிரம்பிய தோமறு மாக்கதை
சடையன் வெண்ணெய் நல்லூர் வயிற்றந்ததே."

என்ற செய்யுட்களில் தாம் எடுத்துக்கொண்ட வரலாற்றினையும் மாக்கதை என்றே கூறியிருத்தல் காண்க.

(4) இனி, நூலுட்சென்று நோக்குமிடத்து எதிர்பாராது முடிந்த ஒரு காரியத்திற்கு வெகு நயமாகக் காரணங் கூறும் அழகை இவ்விரு பெரும் புலவரிடத்தும் ஒப்பக்காணலாம். இதற்குதாரணமாக ஒன்று கூறுவல். கைலையங்கிரியில் சிவபெருமானுக்குத் திருந்தொண்டு செய்து வந்த ஆலால சுந்தரர், ஒரு நாள் திருநந்தவனத்துக்கு மலர் கொய்யச் சென்றபொழுது அங்குப் பூக்கொய்தற்கு வந்த பார்வதியின் சேடியராகிய

அநிந்திதை, கமலி, என்னும் இரு பெண்களையும் கண்டு காத லித்தார். அம்மாதர்களும் இவரைக் காதலித்தனர், எனக் கூறு மிடத்து, சிவ புண்ணியத்தின் பயனையே நுகர்தற்குரிய கைலை யங்கிரியிலும் இத்தகைய சம்பவம் நிகழ்தல் கூடுமா என்னும் ஆசங்கையை உட்கொண்டு அதற்குக் காரணம் கூறவந்த சேக் கிழார்,

"மாதவம் செய்த தென்றிசை வாழ்ந்திடத்
தீதிலாத் திருத்தொண்டத் தொகைதரப்
போதுவா ரவர்மேன்மனம் போக்கிடக்
காதன் மாதருங் காட்சியிற் கண்ணினர்."

எனக் கூறுகின்றார்.

இங்கு, தென்றிசைச் செய்த மாதவமே அவர்களை அவ் வாறு காதலிக்கச் செய்தது, எனக் கூறியுள்ளது, எவ்வளவு நய மாகவும், எத்துணை ஆழ்ந்த கருத்துடையதாகவும், அமைந் துள்ளதென்பதை வாசகர்கள் ஊன்றி நோக்குவார்களாக.

இதேபோல், இராமாயணத்தில் இராமனிடத்து மிக்க அன்புடையவளாக விருந்த கைகேயி அவனிடத்துச் சிறிதும் இரக்கங்காட்டாது, முடிசூட்ட நிச்சயித்திருந்த அந்நாளில், அவனைக் காட்டிற் கனுப்பிவிடத் துணிந்தாள், எனக் கூறு மிடத்து, கைகேயி அவ்வாறு துணிந்ததற்குக் காரணம் கூற வந்த கம்பர்

"அரக்கர் பாவமும் அல்லவரி யற்றிய அறமும்
துரக்க நல்லருள் துரந்தனள் தூய் மொழிமடமான்
இரக்க மின்மையன்றோ இன்றிவ் வுலகங்களிராமன்,
பரக்குந் தொல்புகழ முதினைப் பருகுகின்றதுவே."

எனக் கூறியிருத்தல் காண்க.

இங்கு, ஆலால சுந்தரரிடத்துத் தோன்றிய காதலும், கைகேயியிடத்துத் தோன்றிய இரக்கமின்மையும், உலகிற்குச் சிறந்த நன்மைகளைத் தர எதுவாயினமையின் நற்குணங்கள் பலவாற்றானும் அமைந்த நன்மக்களிடத்து, நிகழக்கூடாத தொன்று நிகழுமாயின், அது உலகின் நன்மைக்கே எதுவாகும்

என்ற சிறந்த உண்மையை இவ்விரு செய்யுட்களும் நன்கு விளக்கிக் காட்டுதல் காண்க.

(5) பின்னே சொல்ல வெண்ணிய ஒன்றற்கு முன்னமேயே அடிப்படை கோலிக்கொள்ளும் அழகை இவ்விரு புலவரிடத்தும் ஒப்பக் காணலாம். உதாரணமாக, தடுத்தாட்கொண்ட புராணத்தில், திருமுனைப்பாடி நாட்டின் சிறப்பைக் கூறவந்த ஆசிரியர் சேக்கிழார்,

"கங்கையும் மதியும் பாம்பும் கடுக்கையு முடிமேல்வைத்த
அங்கண ரோலைகாட்டி யாண்டவர் தமக்குநாடு
மங்கையர் வதனசீத மதியிருமருங்குமோடி
செங்கயல் குழைகளுடுந் திருமுனைப் பாடிநாடே.

எனக் கூறியுள்ளார்.

இங்கு, திருமுனைப்பாடி நாட்டின் சிறப்பைக் கூறவந்தவர். அந்நாட்டிற்குரிய சிறப்புக்கள் பலவற்றையும் விடுத்து, முதற்கண் பெண்களைச் சிறப்பித்துக் கூறியதற்குக் காரணம், என்னையெனில், பின்னே பரவையாரையும், சங்கிலியாரையும், கண்டு காதலித்த சுந்தரர், இயற்கையிலேயே கட்டழகுடைய காரிகையாரைக் காணின் காதலிக்குந் தன்மையுடையரல்லர், ஆயினும் முன்னிகழ்ச்சியினால் சிவபெருமான் திருவருள் கூட்டுவிக்க அதனாலேயே அவ்விருவரையுங் கண்டு காமுற்றார் என்பதைத் தெளிவுபடுத்தற்கேயாம்.

இங்ஙனமே, விசுவாமித்திரர், இராமர், இலக்குவன், மூவரும் மிதிலையை நெருங்கிய பொழுது மருதநிலத்தின் சிறப்பைச் சொல்லவந்த கம்பர்,

"பள்ளி நீங்கிய பங்கயப் பழன நன்னுரை
வெள்ளவான்களை களைவுறு கடைசியர் மிடைந்த
கள்ளவாணெடுங் கண்ணிணை கயலெனக் கருதா
அள்ளிநாணுறு மகன்பணை மிதிலை நாடடைந்தார்"

எனக் கூறியிருத்தலை உற்றுநோக்குக.

(6) செயப்படு பொருள் கருவி முதலியவற்றை யாதானுமோர் நயம்பற்றிக் கருத்தாவாக்கிக் கூறும் திறனை இருவரிடத்

தும் ஒப்பக் காணலாம். இதற்கு உதாரணமாக, வாகீசப் பெருந்தகையார் சிதம்பரத்திற்குச் சென்று சிற்சபையின் கண்ணே திருநடனஞ் செய்தருளும் நடராசப் பெருமானை அன்போடு வணங்கினர் எனக் கூறவந்த சேக்கிழார்

கையுந்தலைமிசை புனையஞ்சலியன கண்ணும் பொழிமழை யொழியாதே
பெய்யுந்தகையன கரணங்களுமுடன் உருகும்பரிவின பேறெய்தும்
மெய்யுந்தரைமிசை விழுமுன் பெழுதரும் மின்றுள் சடையொடுநின்றாடும்
ஐயன் திருநட மெதிர்கும்பிடுமவர் ஆர்வம் பெருகுதலளவின்றால்

எனக் கூறுகின்றார்.

இச் செய்யுளில் திருநாவுக்கரசர் கையை அஞ்சலியாகக் கூப்பினர். கண்ணால் மழையைப் பொழிந்தார், மெய்யால் வீழ்ந்து வணங்கினர் எனக் கூறாது, "கையும்.......அஞ்சலியன" "கண்ணும்..........தகையன" "மெய்யும்..........பெழுதரும்" என அவற்றையே கருத்தாவாக்கிக் கூறியிருத்தல் காண்க. இவ்வாறே.

"அரசறிய உரைசெய்ய அப்பூதி அடிகளார்
கரகமலம் மிசைகுவியக் கண்ணருவி பொழிந்திழிய
உரைகுழறி உடம்பெல்லாம் உரோம புளகம் பொலியத்
தரையின்மிசை வீழ்ந்தவர்தம் சரண கமலம் பூண்டார்"

"கடையுடைக் காவலாளர் கைதொழுதேற நின்றே
உடையவர் தாமேவந்தார் உள்ளெழுந் தருளுகென்னத்
தடைபல புக்கபின்பு தனித்தடை நின்றதத்தன்
இடைதெரிந் தருளவேண்டும் துயில்கொளும் இறைவ
[னென்றான்."

என்ற செய்யுட்களினும், "கரகமலம் மிசைகுவிய" எனவும் "கைதொழுதேற நின்றே" எனவும் கூறியிருத்தல் காண்க. இங்ஙனமே கம்பரும்

"நைவள நவிற்றுமொழி நண்ணவரலோடும்
வையநுகர் கொற்றவனு மாதவரு மல்லார்
கைகள்தலைபுக்கன கருத்துளது மெல்லாம்
தெய்வமென உற்றவுடல் சிந்தைவயமன்றே."

"உண்டுகொல் உயிரென ஒடுங்கி னானுருக்
கண்டனன் நின்றனன் கண்ணன் கண்ணெனும்
புண்டரீ கம்பொழி புனலவன் சடா
மண்டிலம் நிறைந்துபோய் வழிந்து சோரவே."

"வந்தவள் தன்னைச் சென்னி மண்ணுற வணங்கி வாய்த்த
சிந்துரப் பவளச் செவ்வாய் செங்கையாற் புதைத்து மற்றைச்
சுந்தரத்தடக்கை தானைமடக் குறத்துவண்டு நின்றான்
அந்திவந் தடைந்த தாயைக்கண்ட வான்கன்றினன்னான்."

என்ற செய்யுட்களில் "கைகள் தலைபுக்கன" எனவும் "கண்ணெனும் புண்டரீகம் பொழிபுனல்" எனவும் "மற்றைச் சுந்தரத் தடக்கைதானை மடக்குற" எனவும் கூறியிருத்தல் காண்க.

(7) ஒருவர் ஒருவரை ஒன்றைப்பற்றி வினவுமிடத்து, அது சம்பந்தமாக மீள மீளக்கேட்டு சலிப்படையாதவாறு பதில் சொல்லுதலே சிறப்புடைத்து என்பதை இவ்விருபேராசிரியர்களும் நன்கு விளக்கியுள்ளார்கள் இதனை,

"என்றுரைக்க அரசுகேட்டிதற் கென்னோ கருத்தென்று
நின்றவரை நோக்கியவ ரெவ்விடத்தா ரெனநிறைந்து
துன்றியநூன் மார்பருமித் தொல்பதியார் மனையின்கண்
சென்றனரிப் பொழுததுவும் சேய்த்தன்று நணித்தென்றார்"

என்ற பெரிய புராணச் செய்யுளானும்

"மஞ்செனத் திரண்டகோல மேனிய மகளிர் யார்க்கும்
நஞ்செனத் தகையவாகி நளிரிரும் பனிக்குத் தேம்பாக்
கஞ்சமொத் தலர்ந்த செய்ய கண்ணயான் காற்றின் வேந்தற்
கஞ்சனை வயிற்றில் வந்தேன் நாமமு மநுமனென்றான்."

இம்மலையிருந்து வாழும் எரிகதிர்ப்பரிதிச் செல்வன்
செம்மலுக்கேவல் செய்வேன் தேவநும் வாவு நோக்கி
விம்மலுற் றனையானேவ வினவிய வந்தேனென்றான்
எம்மலைக் குலமுந்தாழ இசைசுமந் திளைத்த தோளான்.

என்ற இராமாயணச் செய்யுட்களானும் அறிக.

(8) குணங்களைக் குணிகளாக்கியும், குணங்களையே உவமையாக்கியும் கூறும் நயங்களை,

அருட்பெருகு தனிக்கடலும் உலகுக்கெல்லாம்
அன்புசெறி கடலுமா மெனவு மோங்கும்
பொருட்சைவ முதற்சமய நெறிதான் பெற்ற
புண்ணியக் கண்ணிரண் டெனவும் புவனமுய்ய
இருட்கடுவுண்டவ ரருளும் உலக மெல்லாம்
ஈன்றாள்தன் திருவருளு மெனவுங்கூடித்
தெருட்கலை ஞானக்கன்றும் அரசுஞ் சென்று
செஞ்சடை வானவர் கோவில் சேர்ந்தாரன்றே.

உள்ளத்திற் தெளிகின்ற அன்பின் மெய்மை
உருவினையும் அவ்வன்பினுள்ளே மன்னும்
வெள்ளைச் செஞ்சடைக் கற்றை நெற்றிச் செங்கண்
விமலரையுமுடன்கண்ட விருப்பம்பொங்கிப்
பள்ளத்தில் இழிபுனல்போற் பரந்துசெல்லப்
பைம்பொன்மலை வல்லி பரிந்தளித்த செம்பொன்
வள்ளத்தில் ஞானவார முதமுண்டார்
மகிழ்ந்தெழுந்து பன்முறையும் வணங்குகின்றார்.

"ஞானத்தின் திருவுருவை நான்மறையின் தனித்துணையை
வானத்தின் மிசையன்றி மண்ணில் வளர்மதிக் கொழுந்தைத்
தேனக்கமலர்க் கொன்றைச் செஞ்சடையார் சீர்தொடுக்கும்
கானத்தினெழு பிறப்பைக் கண்களிப்பக் கண்டார்கள்."

என்னும் சேக்கிழார் செய்யுட்களினும்

கூட்டமொத் திருந்த வீரர் குறித்ததோர் பொருட்கு முன்னாள்
ஈட்டிய தவமும் பின்னர் முயற்சியு மியைந்த தொத்தார்
மீட்டும் வாளரக்க ரென்னும் தீவினை வேரின் வாங்கக்
கேட்டுணர் கல்வியோடு ஞானமுங் கிடைத்த தொப்பார்.

தருமமும் ஞானமும் தவமும் வேலியா
மருவரும் பெருமையும் பொறையும் வாயிலாக்
கருணையங் கோயிலுள் இருந்த கண்ணனை
அருணெறி யெய்திச் சென்றடி வணங்கினான்.

என்ற கம்பர் செய்யுட்களிலும் காண்க.

---

# சோழன் கரிகால் வளவன்.

(ஒரு சிறு நாடகம்.)

திரு. சிவ. குப்புசாமிப் பிள்ளையவர்கள்,
தலைமையாசிரியர், கரந்தைத் தமிழ்ச்சங்கக் கல்லூரி, தஞ்சை.

(முற்றொடர்ச்சி 480-ம் பக்கம் பார்க்க.)

வெண்ணிக்குயத்தியார்:—புலவர்கள் போற்றும் பெரும! நின் வள்ளன்மை வாழ்க! நின்னிடத்து வந்த முடத்தாமக் கண்ணியார் பொருநரின் வாழ்வு, அவரது பாலைப்பண்ணால் வழி மறைத்துக் களவாடும் கள்வரும் அன்பராகும் நிலை, விறலியர் அழகு, நினது வள்ளன்மை, நின் வீரம், நின்பால்பரிசில் பெற்றார் கொள்ளும் மனமகிழ்வு ஆகிய இன்னோரன்னவற்றை இனிய பாவாக யாத்து பொருநர் ஆற்றுப்படையாகக் கூறி, நீயருளிய கொடையால் அவர் சுற்றமும் நட்பும் சூழ மகிழ்வுற்றிருத்தலைக் காணாதார் உண்டோ? இன்னும் நினது நாட்டின் வளமும் நின் பெருமையும் அரசிருக்கையாகிய இக் காவிரிப்பூம்பட்டினத்துச் சிறப்பும் இதனிடத்துள்ள வாணிபம், குடிமக்கள், அரசியலமைப்பு, ஏற்றுமதி இறக்குமதி, வீதிகளின்ஒழுங்கு, செல்வப்பெருக்கு, முதலிய இன்னோரன்னவும் உனது காடுகெடுத்து நாடு ஆக்கிய முறையும், நினக்கு இளமையிலுற்ற துன்பத்தை நீ எதிர்த்து மேன்மையுற்ற நெறியும், நின் மாற்றலர் கொள்ளும் அச்சமும், பிறவும் ஆகிய நின் பெருமைகள் யாவும் ஒருங்கே விளங்கப் பாலைத்திணையில் பட்டினப் பாலை என்னும் நூலாக இயற்றிப் பதினாறு நூறாயிரம் பசும் பொன்னைப் பரிசிலாகப் பெற்ற கடியலூர் உருத்திரங்கண்ணனாரை உணர்ந்தவர் உன்னிடத்துள்ள தமிழ் மொழிப் பற்றையும் புலவரைப் போற்றும் பெருஞ் செயலையும் அறியாதிருக்க இயலுமா? ஏ! கார் நிகர்க்கும் கரிகால்! நீ நெடிது வாழ்வாயாக.

இரும்பிடர்த் தலையார்:— காவிரியாற்றின் கரை கோலிய காவல! வாழி! இன்று நம் ஏவலர், காவிரியாற்றின் இருமருங்கி லும் கரைகள் மிக உயரமாகவும் சிறப்பாகவும் அமையப்பெற் றிருக்கின்றனவென்று அறைகின்றனர். மேலும் பிரதாபருத்திர னும் அவனுடைய ஆட்களுடன் போந்து அவன் பங்கை யாவரினும் திறம்படச் செய்துளானும். நின் சினத்தீ எழுந்த மறு ஏழாம்நாளே நம்நாட்டிற்கு வந்து வேலை தொடங்கிவிட்டா னும். நினது பெருமையும், ஆட்சியும், வீரமும் சிறப்புற் றோங்குக.

காவலன்:—நாவலந்தீவின் நாயக! நெடுவணக்கம். ஆந்திர நாட்டு மன்னர் பிரதாபருத்திரர், தங்களது தலைவாயிலில் நின்று, தங்களைக்காண விழைகின்றார்.

கரிகால்வளவன்:—நல்லது! இவண் வரவிடுக! [பிரதாபருத் திரன் வணங்கிய நிலையோடு மன்னன் முன் நுழைதல்] வருக! பிரதாபருத்திர! வருக! இவண் அமர்க!

பிரதாபருத்திரன்:—பெருநிலந்தாங்கும் பெரும! நினது வலிமையை உள்ளவாறு உணராது நாயினேன் இழைத்த பிழை யினைப் பொருத்தருள வேண்டித் தங்களது திருவடியிணைகளைத் தொழுகின்றேன். யான், தங்களது ஆணையைக் கவனியாது மதியாதிருந்தமைக்காக எனக்கு இன்றுவரையில் பெருவாழ்வு தந்து நின்ற எனது அரிய நுதல் விழியை இழந்து நிற்கின்றேன். எனது நெற்றிக்கண் ஒழிந்த அளவில் யாவராலும் பெறுதற் கரிய எனது திருவாழ்வும் அழிந்தது. யான் இனி ஏழை. என் மீது இரக்கங்கொண்டு என்னைப் புரந்தருள வேண்டுகின்றேன். இனி நின்னையல்லால் எனக்கு வேறு துணை கிடையாது.

கரிகால்:—பிரதாபருத்திர! நின் வலியுடன் நினக்கு மாற்ற லனுய எனது வலியை ஒத்து உணராது உனது அரிய பெரு மையை இழந்துவிட்டாய். தனக்கு மேற்பட்டவரின் ஆணையைப் பொருட்படுத்தாதவரின் வாழ்வும் நினக்கு வாய்த்தவாறே யாகும். இனிமேலாவது எனது ஆணையின் கீழ்நின்று அன் புள்ள குறுநில மன்னனாக வாழ்வாய். நின்பிழையைப் பொருத் தருளினேம்.

64

பிரதாபருத்திரன்:—கருணை நிறைந்த கரிகால்வளவ! நீ காடு கெடுத்து நாடுஅமைத்து குளங்கள் அகழ்வித்து பலவளங்களைப் பெருகச் செய்து நிறைமுறை செய்து நின் குடிகளைப்புரப்பது போல என்னையும் ஆட்கொண்டமைக்கு யான் என்றும் கடப் பாடுடையேனுகின்றேன். நீயும் நின் சுற்றமும் நின்குடியும் நினது நாடும் ஓங்கித்தழைக்க,

கரிகாலன்:—நன்று! பிரதாபருத்திர, நன்று! நீ வாழ்க. நீ இன்று எம்முடன் தங்கி பின்னர் நின்நாடு செல்லுதல் நலம் ஆகும். இன்று வேனில் வெம்மை கொடுமையாயுளதால் நாம் கடற்கால்நகர கடற்கரைக்சேகுவோம். உடன் வருக.

பிரதாபருத்திரன்:—பெரும! அவ்வாறே ஆகுக. இதோ வருகின்றேன்.

[இருவரும் செல்லுதல்]

காட்சி முடிவு.

---

இயல் ரு,—காட்சி க.

உறுப்பினர்:—1. கரிகால்வளவன், 2. நாங்கூர்வேள்மகள், 3. தோழியர், 4. குறத்தி.

இடம்:—நாங்கூர்புறத்துற்ற ஓர் இளமரக்கா.

பொழுது:—மாலைப்போது.

[நாங்கூர் வேள்மகள் நங்கை, தோழியருடன் சோலையில் பாடிக் கொண்டிருக்கும்போது, ஒரு குறத்தி தோன்றி குறி கூறுகையில், கரிகால் வளவன் தோன்றி நங்கையை மணக்க உளங்கொள்ளுதல்]

(பூங்கொடியாலமைந்த ஊஞ்சலில் நாங்கூர் வேள்மகள் ஆடிக் கொண்டிருக்க, நிலமிசை தோழி வீற்றிருந்து மலர்தொடுக்கிறுள்)

வேள்மகள்:—ஏடி தோழி, இந்த இடத்தின் நிறைந்த நிழலும் மணங்கமழும் தென்றலும் வேனில் வெம்மையை வெற்றி கொண்டன, பார்த்தனையா? என்னையறியாமலே எனது உள்ளம் மிகுந்த மகிழ்ச்சியால் பூரிக்கின்றதே? எனது இடது தோளும் இடது கண்ணும் துடித்துக்கொண்டே இருக்கின்றன. மேலும் என் மனமும் இசையின்பால் நாடியுளது.

தோழி:—தேவி! உங்களுக்கு விரைவில் எவராலும் பெறுதற்குரிய சிறப்புகள் வருதற்குள்ளன என்பதை இவை தெரிவிக்கின்றன. தாங்கள் நேற்று ஒரு பாடலைப் பயின்றீர்களே, அதை இப்போது பாடுங்கள் கேட்போம்.

வேள்மகள்:—தோழி! நான் முதலில் பாடுகின்றேன். பின்னர் நீயும் பாடவேண்டும். மனம் நிறைந்த மகிழ்ச்சியாளருக்குத் தான் இசையின்பால் விருப்பமும் வரும்.

தோழி:—அவ்வாறே ஆகட்டும், தாங்கள் முதலில்பாடுங்கள்.

வேள்மகள்:—[பாடுகிறாள்]

மைசேர் கண்ட ரண்டவாணர் வானவருந் துதிப்ப
மெய்சேர் பொடிய ரடியாரேத்த மேவியிருந்தவிடங்
கைசேர் வளையார் விளைவினோடு காதன்மையாற்கழலே
பைசேரரவா ரல்குலார்சேர் பல்லவனீச்சரமே
நற்பதங்கண் மிகவறியாய் நானுன்னை வேண்டுகின்றேன்
பொற்பமைந்த வாயலகிற் பூவைநல்லாய் போற்றுகின்றேன்
சொற்பதஞ்சேர் மறையாளர் திருத்தோணி புரத்துறையும்
விற்பொலிதோள் விகிர்தனுக்கென் மெய்ப்பயலைவிளம்பாயே

தோழி:—நான் பாடிவிட்டேன். இனிமேல் உன்முறைதான்.

தோழி:—தங்கள் பாட்டு மிகவும் இனிமையாகவுளது. இதோ யானும் பாடுகின்றேன். [பாடுகிறாள்]

தொடுக்குங் கடவுள் பழம்பாடல் தொடையின் பயனே நறை பழுத்த
துறை தீந்தமிழின் ஒழுகு நறும் சுவையே அகந்தைக்கிழங்கையகழ்ந்(து)
எடுக்கும் தொழும்பர் உளக்கோயிற் கேற்றும் விளக்கே வளர்சிமைய
இமையப் பொருப்பில் விளையாடும் இளமென்பிடியே எறிதரங்கம்
உடுக்கும் புவனம் வந்து நின்ற ஒருவன் திருவுள்ளத்திலழ(கு)
ஒழுக எழுதிப்பார்த்திருக்கும் உயிர் ஓவியமே மதுகரம்வாய்
மடுக்கும் குழல்காடேந்தும்இள வஞ்சிக்கொடியே வருகவே
மலையத்துவசன் பெற்றபெரு வாழ்வே வருக வருகவே.

வேள்மகள்:—தோழி! உன் பாட்டு மிகவும் பொருள் நிரம்பியதாகவும் செல்லழகு மிக்கதாகவுமுளதே ........எடி! அது என்ன ஓசை? [தோழி கவனித்தல்]

குறத்தி:—[திரைக்குள்ளாக] கூடைமுறங் கட்டலையோஒஒ கூஉஉடை. குறிகள் கேட்கலையோஒஒ குறிகள்.

தோழி:—குறத்தி வருகிறாள்போலிருக்கிறது. அம்மா!

[குறத்தி அவர்கள் முன் தோன்றல்]

தோழி:—ஏ! குறத்தி! நீ யார்? எந்தவூர்? உனக்கென்ன தெரியும்.

குறத்தி:—அம்மே! நானு, என்னைத்தெரியாதா உங்களுக்கு? என்பெயர்தான் குறவள்ளி. நான் தென்பாண்டிய நாடு. கூடைமுறங் கட்டுவேன். குறிகள் சொல்லுவேன். பிணக்கமுற்ற பெண்களும் இணக்கமுறும் மை தருவேன். என் பாட்டி குறி எயினிதான் இந்த பக்கத்தில் இருந்தவளாயிற்றே.

[பாட்டு]

தென்றலா ரகில்மணக்கும் மலைபெங்கள் மலையே
தெள்ளுதனித் தமிழ்முனிதென் பொதியமுமெம் மலையே
கந்தவேள் கனஞ்சடையன் கண்ணணிவர் களிக்க
கனகமுடி யுடையமரர் பணியுமெங்கள் மலையே
துன்பமே தருங்கரடி வேங்கைஅரி அரவும்
துணையாக மரைமான் கரிமயிலோ டாடும்
இன்பமே உலகுபெற எங்ஙனும்நீர் அளித்து
ஏற்றமுறும் ஆறுபல தோற்றுமெங்கள் மலையே.

தோழி:—ஏடி, வள்ளி! உமது மலைவளம் எமக்கு மகிழ்ச்சியைத் தருகின்றது. இனி உங்கள்உணவு, உடை, செயல் ஆதியவெல்லாம் என்னென்ன?

குறத்தி:—தாயே! கூறுகின்றேன்.

[பாட்டு]

சிறுதினைசெந் தேன்வள்ளிக் கிழங்கோடு யெமது
சிலையம்பு வாய்மடுத்த மலைவிலங்கு முண்போம்
தறுகண்மிகு கரிவேங்கைத் தோலினிற்கண் படுப்போம்
தழைமலிந்த துணரும்மர வுரியு மிடை யுடுப்போம்

உறுமொருவர் கைமுகமெய்க் குறிபார்த்து அவர்க்கு
உயர்வுதரும் புகழ்மிகுநாள் உணர்த்திநலம் பெறுவோம்
நறுமணங்கொள் மலர்சூடும் நாயகியே எங்கள்
நற்குறக்கு டிப்பெருமை நவிலவது பெருகும்

தோழி:—ஏ! குறத்தி, உங்கள் வாழ்க்கை மிகுந்த இயற்கை முறையிலுளது! நன்று. எங்கள் தலைவி, ஈதோ வீற்றிருக்கின்றார், அவர்களைக் கண்ணுற்று உனது குறிகளால் அவர்களின் நலத்தைக் கூறுவாய்.

குறத்தி:—அம்மே! எனக்குத் தெரிந்தவரையில் எங்கள் குலக் கடவுள் அங்கயற்கண்ணியை உளத்திலிருத்திக் கூறுவன்.

[பாட்டு]

செல்வமுள நாங்கூர்வேள் சிறுதேவி எனக்கு
சிறிதளவு ஒருதுணியும் பிடிசோறுந் தருவாய்
பல்வகைய நலங்கொண்டு பாரெல்லாம் புரக்கும்
பகைவென்று முறைசெலுத்தும் பார்தனுளன் நினக்கு
நல்வழியா லறம்புரிந்து நானிலமீக் கூற
நன்னுதலே நலமுறுவாய் நன்மக்களைப் பெற்று
சொல்வதுண்மை என்குறியில் சோர்வில்லை யம்மே
சோழன்கரி கால்வளவன் மேலிடுவன் ஆணை.

[கரிகால்வளவன்:-நாங்கூர் வேள்மகள், தேவி, குறத்தி இவர்கள் முன் தோன்றல்] ஏ, குறத்தி! நீ உண்மையைத்தான் கூறுகின்றாய்: நீ சொன்ன குறிக்கு இப்பொன் ஆடையைப் பரிசிலாகப் பெறுவாய். [ஒரு பட்டாடையைத் தருதல்-குறத்தி மகிழ்ச்சியுடன் ஏற்றல்-நாங்கூர் வேள்மகளை நோக்குதல்-கடைக்கண்ணுற்கண்டு நாணி தோழியின் பின்புறம் மறைந்து நிற்றல்] இன்று எனக்கு உற்ற நன்னிமித்தங்களின் பயனை இவண் கண்ணுற்றேன். அழகினும் பன்னலங்களினும் மிக்க இந்நங்கை நாம் மணத்தற்குரிய நன்மகளேயாகின்றாள். என் மாமன் இரும்பிடர்த்தலையாரிடம் இஃதை யுணர்த்தி விரைவில் இவளைக் கடிமணம்புரிவேன்.

இயல் ௩, காட்சி க, முடிவு

---

இயல் ரு,—காட்சி உ.

உறுப்பினர்:—1. கரிகால்வளவன், 2. நாங்கூர் வேள்மகள், 3. இரும்பிடர்த்தலையார், 4. வெண்ணிக்குயத்தியார், 5, கருங்குழலாதனர், 6. அமைச்சர், 7. பணியாளர் முதலானோர்.

இடம்:—காவிரிப்பூம் பட்டினத்து மன்னர் பேரவையின் மணஅமளி.

பொழுது:—வைகறைப் பொழுது.

[பெரியாரின் வாழ்த்து-நாங்கூர் வேள்மகள் நங்கை கரிகால்வளவன் திருமணம்-இரும்பிடர்த்தலையாரின் அறவுரை]

[நாங்கூர் வேள்மகள் நங்கையுடன் கரிகால் வளவன் வீற்றிருத்தல்]

வெண்ணிக்குயத்தியார்:—பொன்னிசூழ் நாட்டின் புரவல! நீ வாழ்வாயாக. உனக்கு வாய்த்திருக்கும் இந்நங்கை நாங்கூர் வேள்மகள் திருமகளையொத்த அழகும், கலைமகளன்ன கல்வி நலனும், பரம்பிற் கோமான் பாரியை நிகர்க்கும் வள்ளன்மை மிக்க மரபும், சிறப்புற ஒருங்கே வாய்க்கப்பெற்றுள்ளாள். இவளது சேர்க்கையால் உனது மரபு இமயத்தினும் உயர்ந்து விண்ணினும் பரந்து கடலினும் பெருகி விளங்குவதாகுக.

கருங்குழலாதனர்:—புகார் நகரைத் தலைமையாகக்கொண்டு சோழநாட்டை ஆண்டுவருகின்ற மனுக்குல வேந்தே! நினது பெரும் புகழும் சிறந்த ஆட்சியும் இந்நிவவுலகில் நீடு நிலைபெறுக. உனது பக்கத்தில்வீற்றிருக்கும் இந்நங்கை தீய செயல்களைக் கருதிய அளவில் அச்சமும், நானிலப் பெரியார் வெறுப்பனவற்றைக் காணுதலில் நாணமும், தாய்மையின்றி இன்னல் நிறைந்த கொடுஞ் செயலை அறிவதில் மடமையும், நல்ல குணமும் சிறந்த ஒழுக்கமும் 'இல்லாதவரிடத்து நட்புரிமைகொள்ளுதலில் பயிர்ப்புங்கொண்டு சாலியொருமீனின் கற்பை பெற்றவளாவாள். இத்தகையாளுடன் நீ இனிது வாழ்ந்து இல்லறம் ஓம்பி நின்புகழால் இவ்வுலகம் சுருங்குமாறு பெரும் பேற்றை அடைவாயாக.

இரும்பிடர்த்தலையார்:—வீரமும், ஈகையும், வெற்றியும் புகழும் படைத்த எம் மருக! உன்பால் நல்லன யாவும் என்றும் நிலைக்களனுய் எய்துக! நீ நினது தந்தை விண்ணுடுபுரக்கச் சென்றதும், உனக்கு உற்ற கணக்கற்ற இடுக்கண்கள் யாவும் நடுக்கமுற்று ஓட, நாற்றிசையும் நின்னை வணங்கி நிற்ப, முன்பே வீரமகளை மணங்கொண்டாய். உனது முன்னோர்கள் நினைவின் பொருட்டு எழுந்த அறவினைகளை இபற்றி, உலகத்திலுள்ள உயிர்களிடத்துக்கொள்ளும் அன்புடைமையே கடவுள் பணியாக்கி, பிறநாடுகளிலிருந்து உனது நாட்டிற்கு வருகின்றவர்களை அன்புடன் ஏற்று, உன் வாழ்க்கை நலத்தையும் புகழையும் உயர்வையும் நீடிய வாழ்நாளையும் விரும்பிநின்று, உன்னையே தாயாகவும், தந்தையாகவும் கருதி வழிபடும் நினது குடிமக்களிடத்தில் நீ நீங்காத பற்றுடனிருந்து, எவரித்தும் விருப்பு வெறுப்பின்றி, தன்னலங் கருதாது, நல்லவர்களைப் புரந்து தீயவர்களைத் தடிந்து செங்கோலோச்சி, இன்பமுற்று வாழ்வதற்குத் துணையாக உனது பக்கத்தில் உற்ற இப்பூங்கொம்பனையாளை நீ இதுபோது மணப்பாய். ஆதலால் என் இளைஞ! நீ இந்நங்கைக்கு இம்மலர் மாலையைச் சூட்டி மனமகிழ்வுகொள்வாய்.

## கரிகால்வளவன் நங்கைக்கு மாலை சூட்டல்.

## நங்கை மன்னர்க்கு மாலை சூட்டல்

என் இனிய மணமக்களே! இன்றுமுதல் நீங்கள் இருவிரும் கண்களிரண்டும் ஒரு பொருளையே காணுவதையொப்ப, இல்லறமாகிய நல்லறத்தை மாறு இல்லாத உள்ளத்துடனே புரிந்து உலகோர் இன்புறும் மாண்புமிக்க செயலுள் திளைத்து எல்லாம் வல்ல பெரும் பொருளின் வலியாலும் தமிழ்த்தாயின் தண்ணிய அருளாலும் என்றும் புகழ்ப்பரப்பி வாழ்வீர்களாக.

இந்நில்வுலகைத் தனது ஒரு தனிக் குடைக்கீழ் நிறுத்தி செங்கோலோச்சி, இசை நிறுவி, வாழும் நம் சோழன் கரிகால் வளவன் வாழ்க! (யாவரும்: -வாழ்கவே)

“வாழிபல வூழிதோறும் வாழி தமிழ் அன்னாய்
மைந்தரொடுந் தொண்டரொடும் வாழி தமிழன்னாய்”

தமிழ்த்தாய் வாழ்க.

நலம்.

குறிப்பு:—இச்சிறு நாடகம் எழுதுவதற்குற்ற துணையாகவமைந்தன. திரு. பண்டித L. உலகநாதபிள்ளை யவர்களது ‘கரிகாற்பெருவளத்தான்’ எனும் நூலும் திருவருள்மிகு குமரகுருபர அடிகளது “மீனாட்சியம்மை குறம்” எனும் நூலும் ஆகும். இஃது 21—10—1934ல் நிகழ்ந்த கரந்தைத் தமிழ்ச் சங்கக் கல்லூரி ஆண்டு விழாவின் போது அக்கல்லூரி மாணவர்களால், கல்லூரி ஆசிரியர்கள் திரு. பி, இலக்குமணாச்சாரியாரவர்கள் திரு. கோ. இரத்தினம்பிள்ளை யவர்கள் ஆகிய இவர்கள் தந்த பயிற்சியினால் சிறம்பெற நடிக்கப்பெற்றது.

---

## நாகை. திரு, தண்டபாணிதேசிகர் ‘சங்கர நமச்சிவாயர் உரைபொருந்துமாறு’ என்னும் உரைபற்றிய ஓர் திருமுகம்.

ஔவை சு. துரைசாமிப்பிள்ளை அவர்கள்.
தலைமைத்தமிழாசிரியர், திருவத்திபுரம்.

(3—1—35)

ஐயன்மீர்,

தாங்கள் செய்துவரும் தொல். சொல். குறிப்புரை மறுப்பின் இடை நுழைந்து, பலர்தம் வெற்றுரையால் தகைதலால் காலம் நீட்டித்தலின், தாங்கள் இம்மறுப்பு முடியுங்காறும், அவர்கள் உரைப்பனவற்றை ஏலாது, இதனையே முற்றும் தொடர்ந்து செல்லுமாறு வேண்டுகின்றேன். நாகை, திரு. தண்டபாணி தேசிகர் முதலியோர் எழுதுவனவற்றின் பொருந்தாமை இலக்கணவறிவு சிறிதுடையார்க்கே நன்கு புலனாதலின், அவற்றைப் பொருளாகக்கொண்டு காலந் தாழ்க்காமையைப் பெரிதும் வேண்டுகின்றேன். தங்களால் ஆதற்குரிய தமிழ்ப் பணிகளை அவர் உணர்ந்திலர், தங்கள் நலனையே வேண்டி நிற்பார். இவ்வூரினர், பலரின் பணிகொண்டு இதனை எழுதுகின்றேன்.

# பின்னங்குடிச் சுப்பிரமணிய சாத்திரியார் தொல்காப்பியச் சொல்லதிகார வராய்ச்சியுரை மறுப்பின்மேல் செந்தமிழ்ப்பத்திராதிபர் திருநாராயணையங்கார் எழுப்பிய தடையும் அதற்கு விடையும்.

(முற்றொடர்ச்சி துணர் 10. மலர் 7. பக்கம் 311.)

இனி, பத்தாவது பிழை:—இலக்கணக்கோத்துநூலார் 77ஆம் சூத்திரவுரையுள் கூறியது பின்வருவது. 'ஒருபொருளின் புடைபெயர்ச்சியே வினையென்பது எல்லார்க்கும் ஒப்ப முடிந்தது. 'அவ்வினையைக் கொள்ளுதலால் வினையெச்சம்' என்பதும் அங்ஙனம் முடிந்தது. அவ்வினையெச்சம் வினையைக் கொள்ளுதலின்றி வினையின்மையைக் கொள்ளாது என்பதும் அங்ஙனம் முடிந்தது. ஆகவே 'உண்டு நடந்தான்' என்பது பொருந்தும். 'உண்டு நடவான்' என்பது பொருந்தாது; இலக்கண வழுவேயாம். ஆகையால் அம்மறைச் சொல்லினுள் முதனிலையைப் பிரித்து ஒருபொருளின் புடைபெயர்ச்சியாகிய புடை பெயர்ந்த நடத்தல் என்னும் தொழிற்பெயர் ஆக்கி, வினையெச்சத்தை வினைகொண்டு முடித்துப் பின்பு செய்யான் என்னும் மறையை வருவித்து, 'உண்டு நடத்தலைச் செய்யான்' என முடிப்பர். இக்கருத்துப் பரிமேலழகர்க்கும் உரையாசிரியர்க்கும் நியமம் எ-று.

இவ்வுரையுள், 'இக்கருத்துப் (பரிமேலழகர்க்கும்) உரையாசிரியர்க்கும் நியமம்' என்னும் கூற்றிலே, செந்தமிழ்ப் பத்திராசிரியர் குற்றங் காட்டப் புகுந்து, உரையாசிரியர் எனப்பட்டவர் இளம்பூரணரே யெனக் கொண்டு,

'புள்ளியீற்றுமுன் உயிர் தனித் தியலாது' (புணரி-36)
'தெருங்காலை உருபொடு சிவணிச்
சாரியை நிலையும் கடப்பாடிலவே' (உருபி-30)
'இன்னிடை வரினும் மானமில்லை' (உயிர்மயங்கி-69)
'நெறிப்பட வாரா' (குற்றிய-77) என்னும்

சூத்திரங்களை யெடுத்துக்காட்டி, அவற்றுள்வந்த 'இல' 'இல்லை' என்பனவற்றையும் எதிர்மறை வினைமுற்றெனக் கொண்டு, ஆண்டு வந்த எதிர்மறை வினைச்சொற்களிலெல்லாம் பகுதியை வேறாகப் பிரித்து வினையெச்சத்திற்கு முடிவு காட்டினாரிலர் இளம்பூரணர் ஆதலால், இலக்கணக் கொத்து நூலார் 'இக்கருத்து உரையாசிரியர்க்கும் நியமம்' என்ற கூற்றுப் பொருந்தாதென்று கூறினர். அவ்வாறு முடிபு காட்டினவர் இளம்பூரணர் அல்லர் என்பது மெய்யே. ஆயினும் அவ்விளம்பூரணர் உரையை இலக்கணக் கொத்து நூலார் படித்தறியாதவரா? தொல்காப்பியத்திற்கு இளம்பூரணர் தெய்வச்சிலையார் சேனாவரையர் நச்சினார்க்கினியர் இவர்கள் உரையை எழுத்தெண்ணிப் படித்தவர் என்று பாராட்டப்பட்டவர் ஆயிற்றே. அவர், இளம்பூரணர் கூறுதலொன்றைக் கூறினர் அவர் என்பரா? என்றார். ஆகவே, 'பேராசிரியர்க்கு' என்ற பாடம் எழுதினோரால் 'உரையாசிரியர்க்கு' எனப் பிழைத்ததாகல்வேண்டும். அல்லதேல், 'கோவை உரையாசிரியர்க்கு' என்ற பாடத்தில் 'கோவை' யென்பது விடப்பட்டிருத்தல்வேண்டும். அதுவும் அன்றேல், பேராசிரியரே உரையாசிரியர் என்று சுட்டப்பட்டார் ஆதல்வேண்டும்.

ஏனெனில், 'பல்காற் பழகினும் தெரியா வுளவேல், தொல்காப்பியந் திருவள்ளுவர் கோவையார் மூன்றினும் முழங்கும்' என்று அவ்விலக்கணக் கொத்துநூலார் ஓதியவதனால், கோவையார் உரையை அவர் எழுத்தெண்ணிப் படித்தார் என்பது விளங்கிற்றில்லையா? அவர் அக்கோவையார் உரையாசிரியர் பேராசிரியர் என்பது நன்றாக அறிந்தவர் அல்லரோ? அவ்வுரையை அவர் தம்மரபின்படியும் அக்கால வழக்கின்படியும் பூசித்தவர் ஆவரே. அப்பேராசிரியரையும் அவர் தம் மனக்கோயிலில் எழுந்தருளுவித்துப் பூசித்தவர் ஆவரே. அப்பேராசிரியரை அவர் ஒருநாளும் மறப்பரோ? மறவாரே. எதிர்மறை வினைச்சொல்லுள் முதனிலையைப் பிரித்து வினையெச்சத்திற்கு முடிபு காட்டிய பகுதிகள் கோவையார் உரையுள்ளே மலிந்துகிடக்கவும அம்முடிபு காட்டிய பேராசிரியரை இவர் சுட்டாது, அங்ஙனம் முடிபு காட்டாத இளம்பூரணரைச் சுட்டுவரா? ஒரு நாளும் சுட்

டார். ஆகவே ஆண்டு உரையாசிரியர் என்று சுட்டப்பட்டார் பேராசிரியரென்பதே துணிவாம்.

அற்றேல், இயற்பெயரான் அன்றி உரையாசிரியர் என்னும் சிறப்புப்பெயரால் எல்லாரானும் பாராட்டப் பெற்றவர் இளம் பூரணரே யாவர்; ஏனையோர் அல்லரெனின், நன்று கூறினீர், சேனாவரையர் உரையுள்ளே, அவரால் மறுக்கப்பட்டாருள் இளம்பூரணர் அல்லாத வேறொருவரும் உரையாசிரியர் எனச் சுட்டப்பட்டார். ஆகவே அவரை இப்பேராசிரியரெனக் கொள்ளினும் இழுக்காதென விடுக்க.

இனிப் பிரயோக விவேக நூலார் 'நிறக்குந் துணைவினையோர் காலத்தெய்திடும்' என்னும் காரிகையுரையுள் 'உண்ணாது வந்தான், உண்டுவாரான்' என்புழி எதிர்மறை முடிபுபற்றிக் கூறியவர், 'மருங்கோடித் தீவினை செய்யானெனின்' 'கற்றில கண்டன்னம்' என்னும் திருக்குறளினும் திருக்கோவையாரினும் பரிமேலழகரும் பேராசிரியரும் செய்தலோடும் கற்றலோடும் முடியுமென்பர்' என்று கூறியுள்ளார் ஆதலால், அப்பிரயோக விவேக நூலார் கருத்தையே தழுவியுரைத்த இலக்கணக்கொத்து நூலார்க்கும், அவ்விரண்டு உரையாசிரியரைச் சுட்டுதலே கருத்தாமென்பது துணிந்துகொள்க.

ஆகவே, இவ்விலக்கணக் கொத்து நூலார் கூற்றை யெடுத்துக்கொண்டு அதனை ஒரு பெரும் பிழையாகச் செந்தமிழ்ப் பத்திராசிரியர் காட்டி மறுத்தவாறெல்லாம் வினையிலுழப்பாக முடிந்தவாறு அறிக.

இனிப் பதினோன்றும் பிழை*:—மேலே பத்தாவது பிழை விளக்கத்திலே குறிக்கப்பட்ட சூத்திரங்கள்

'புள்ளியிறுதி முன்உயிர் தனித்தியலாது'
'தெருங்காலை உருபொடு சிவணிச்
சாரியை நிலையும் கடப்பாடு இலவே.'

---

* 'பதினோராவது தொகுதி,' 'பதினோராந்திருமுறை,' 'பதினோரா நாட்போர்' என்பது புணரியல் வழு. பன்னிராவது தொகுதி, பன்னிராந் திருமுறை பன்னிரானாட்போர் என வாராமை நோக்குக.

'இன்னிடை வரினும் மானம் இல்லை.'

'நெறிப்பட வாராக் குறைச்சொற் கிளவியும்.'

என்பனவற்றுள்ளே 'இல' 'இல்லை' என்பனவற்றை 'இயலாது' 'வாரா' என்பனபோல எதிர்மறை வினைச்சொல் என்றார் செந்தமிழ்ப் பத்திராசிரியர்.

இது 'வினைக் குறிப்புச்சொல்' என்பதனோடு 'எதிர்மறை வினைச்சொல்' என்பதனிடை வேற்றுமை உணராமையேயாம். 'இல்லை' என்பதும் 'இல்' என்பதும் இருதிணைக்கும் பொதுவான (விரவு) வினைச்சொற்பற்றி ஓதப்பட்ட 'முன்னிலை வியங்கோள் வினையெஞ்சு கிளவி' என்னும் சூத்திரத்திலே 'இன்மை செப்பல்' என்பதனாற் குறிக்கப்பட்ட வினைக்குறிப்பு முற்றுச் சொற்கள். 'இல' என்பது அஃறிணை வினைக்குறிப்புச் சொற்பற்றி ஓதிய 'இன்றில உடைய என்னும் கிளவியும்' என்னும் சூத்திரத்திலே குறிக்கப்பட்ட பலவின்பாற் படர்க்கை வினைக் குறிப்பு முற்றுச் சொல்லேயாம். இவை எதிர்மறை வினைச் சொல் அல்ல.

இனி, 'இல்லை' 'இல' என்பன வினைக்குறிப்பு முற்றுச் சொற்களே ஆயினும் ஆக; அவை முறையே 'உண்டு' 'உள' என்பனவற்றிற்கு எதிர்மறை யென்றற்கு இழுக்கென்னையோ எனின், அவற்றிற்கு அவை மறுதலைச் சொல்லாகுமேயன்றி எதிர்மறைச்சொல் ஆகா என்க. இங்குக் குறித்த 'உண்டு' என்பது ஐம்பான் மூவிடங்களுக்கும் பொதுவாகிய வினைக் குறிப்பு முற்று. ஒன்றன்பாற் குறிப்பு வினைமுற்று ஆகிய 'உண்டு' என்பதும் வேறு இதுவும் வேறு. இதனை 'இன்றில வுடைய' என்னும் சூத்திரத்தில் ஆசிரியர் தொல்காப்பியனார் எடுத்தோதிற்றிலர் ஆயினும் முன்னே 'உண்டென் கிளவி உண்மை செப்பின்' எனவும் 'பொருண்மை சுட்டல்' எனவும் கூறி, அதனை ஈண்டு உய்த்துக்கொண்டுணர வைத்தார். அதனை 'வேறில்லை உண்டு ஐம்பான் மூவிடத்தன' என்னும் சூத்திரத்தால் நன்னூலார் எடுத்தோதினர். ஒன்றன்பாற் குறிப்பு வினை முற்று ஆகிய 'உண்டு' என்பதற்கு 'இன்றிலவுடைய' என்புழி ஓதிய 'இன்று' என்பது மறுதலை. இல என்பதும் 'உள' என்பதும் அச்சூத்திரத்தில் ஒருங்கு ஓதப்பட்டனவே. அவை யிரண்டும் ஒன்றற்கொன்று மறுதலை. ஒன்றற்கொன்று மறுதலை

யெனின், ‘உள’ என்பதற்கு ‘இல’ என்பது மறுதலையாவதன்றி’ ‘இல’ என்பதற்கு மறுதலை ‘உள’ வென்பதும் ஆமோவெனின், ஆமென்பது. அவ்வாறே, ‘இல்லை’ யென்பதற்கும் ‘இன்று’ என்பதற்கும் ‘உண்டு’ என்பது மறுதலையெனவும்படும் என்பது அவ்வாறே ‘இலன்,’ ‘இலள்,’ ‘இலர்’ என்பனவற்றிற்கு ‘உளன்’ ‘உளள்’ ‘உளர்’ என்பனவும் முறையே மறுதலையாம் என்க.

இதுவே ஆசிரியர் சிவஞானமுனிவர்க்கும் கருத்தாதல், சூத்திரவிருத்தி யிறுதியிலே அவர், ‘இல்’ என்பதற்கு மறுதலையாக வரும் ‘உண்டு’ என்னும் சொல்லும் வேறு, ‘இன்று’ என்பதற்கு மறுதலையாகவரும் ‘உண்டு’ என்னும் சொல்லும் வேறே’யெனக் கூறியவாற்ருல் அறிக.

உளன், உளள், உளர், உண்டு, உள என்பன ‘உண்மை’ யென்னும் சொல் அடியாகப் பிறந்தன. இலன், இலள், இலர், இன்று, இல, இல்லை, இல் என்பன ‘இன்மை’ யென்னும் சொல்லடியாகப் பிறந்தன.

இனி, ‘அல்லன்’ ‘அல்லள்’ ‘அல்லர்’ ‘அன்று’ ‘அல்ல’ என்பன ‘அன்மை’ யென்னும் சொல்லடியாகப் பிறந்த வினைக் குறிப்பு முற்று.

‘இன்றி’ யென்பது ‘இன்மை’ யடியாக வந்த வினையெச்சம் ‘இல்லாத’ பெயரெச்சம்.

‘அன்றி’ யென்பது ‘அன்மை’ யடியாக வந்த வினையெச்சம் ‘அல்லாத’ பெயரெச்சம்.

‘உண்மை’ யடியாகப்பிறக்கும் வினையெச்சம் இல்லை. ‘உள்ள’ என்பது பெயரெச்சம்.

இந்த ‘இன்மை’ யென்பதன் அடியாகப் பிறந்த சொற்களும் ‘அன்மை’ என்பதன் அடியாகப் பிறந்த சொற்களும், பகுதியே எதிர்மறைப்பொருள் உணர்த்துவனவென்றும், அதனுல் அவை எதிர்மறைக் குறிப்பு வினைச்சொல்லாம் எனவும் கூறுவது இளம்பூரணர் நச்சினர்க்கினியர் சங்கரநமச்சிவாயர்முதலியோர் வழக்கு. அது ஆசிரியர் தோல்காப்பியனர் கருத்தன்று. சேனவரையர் அவையெல்லாம் வினைக் குறிப்புச்சொல் என்றுரே யன்றி எதிர்மறை வினைச்சொல் என்று யாண்டும் கூறினரிலர். அவரே ஆசிரியர் கருத்துணர்ந்தவர். ஆசிரியர் எதிர்மறை வினைமுற்றுக்காயினும் வினையெச்சத்திற்காயினும் பெயரெச்சத்திற்காயினும் ‘செய்யான்’ ‘செய்யாது’ ‘செய்யாத’ என்ருற் போலும் வாய்பாடுபற்றிச் சூத்திரம் ஓதினரிலர். (சூ. 236 உரை)

வினையெச்சத்திற்கும் பெயரெச்சத்திற்கும் விதிவினையே பற்றிச் 'செய்து' 'செய்த' என்றாற்போலும் வாய்பாட்டால் ஓதினார். முற்றுவினைக்கும் ஆகார வீறு ஒன்றுமே எடுத்தோதினார் (செய்யாவென) அவர்,

'எதிர்மறுத்து மொழியினும் தத்தமரபிற்
பொருணிலை திரியா வேற்றுமைச் சொல்லே.'

'பெயரெஞ்சு கிளவியும் வினையெஞ்சு கிளவியும்
எதிர்மறுத்து மொழியினும் பொருணிலை திரியா.'

'வன்புற வரூஉம் வினாவுடை வினைச்சொல்
எதிர்மறுத் துணர்த்துதற் குரிமையு முடைத்தே.'

என்னும் சூத்திரங்களால் மூன்று வகைப்பட்ட வினைச்சொல்லினும் எதிர்மறையுண்மை நேர்ந்தார்; ஆயினும் அவ்விலக்கண முடிபுபற்றிச் சூத்திரம் ஓதினாரிலர். எனினும்,

'சொல்லெதிர் பெறாஅன்'

'எண்ணாரும் பாசறைப் பெண்ணொடு புணரார்.'

'வினையெனப்படுவது வேற்றுமை கொள்ளாது.'

'பெயர்நிலைக்கிளவி காலந்தோன்றா.'

'வரையாது பிரிதல் கிழவோற்கில்லை.'

'மன்னாப் பொருளும் அன்ன வியற்றே.'

'மறைக்குங் காலை மரீஇய தொராஅல்'

என அவ்வெதிர் மறைவினைச் சொற்களை உடம்பொடுபுணர்த்து ஓதியதனால் அவற்றின் முடிபை உய்த்துணர்ந்து கொள்ள வைத்தார். எதிர்மறைப் பொருண்மையை உணர்த்துவது பெரும்பான்மையும் ஆகார விடைநிலை. சிறுபான்மை இல் அல் என்னும் இடைநிலை. (உண்கிலன் உண்ணலன்.) சிறுபான்மை அல் விகுதியுமாம். 'உண்ணேன்' என்பதன்கண் ஏகாரம் எதிர்மறையிடைநிலை யென்றார் சேனாவரையர். அது பொருந்தாது. ஏன் என்பது தன்மையொருமை விகுதியாக அவ்விடத்தே எதிர்மறை ஆகாரம் புணர்ந்து கெட்டதென்க. இவ்வெதிர் மறை வினைச்சொல் இலக்கணத்தைச் சேனாவரையர் 'செய்யாவென்னும் முன்னிலை வினைச்சொல் செய்யென் கிளவியாகிடனுடைத்தே.' என்னும் சூத்திரவுரையுள் விளங்க எடுத்துரைத்தார். அதனைச் சிவஞான முனிவர் சூத்திரவிருத்தியுள் விரித்துரைத்தார்.

(தொடரும்.)



# தமிழ்ச் செய்திகள்.

## திருவாளர். மகாமகோபாத்தியாய Dr. உ. வே. சாமிநாதய்யர் அவர்களின் எண்பதாவது ஆண்டு நிறைவு விழா:—

தமிழ்த்தாயின் தவப்புதல்வராம் ஐயரவர்கள் இடையறாது புரிந்துவரும் தமிழ்த்தொண்டின் கீர்த்தியை நன்கறிந்த தமிழுலகம் அவர்களின் 80வது ஆண்டுவிழாவை பவ, பங்குனி, ௫ஆம் நாளன்று நாடெங்கும் சிறப்புடன்கொண்டாடிற்று. தமிழ்மொழியையும், தமிழ்ப் புலவரையும் போற்றுவாரில்லை எனப்படும் நாளில் ஆங்கிலமாதிய பிறமொழிகளில் புலமைசான்ற, அறிஞர்களும், அறிவு நூல்களில் துறைபோகிய கலைவாணரும் எய்தவொண்ணாத பெருஞ் சிறப்புகள் ஐயரவர்கள் வேண்டாதேயும் நாடிச் சார்ந்தனவென்பது கண்கூடு. அரசியலார் "மகாமகோபாத்தியாயர்" எனவும் பல்கலைக்கழகத்தினர் "டாக்டர்" எனவும் சிறந்தபட்டங்களை அளித்ததும், பல்கலைக்கழக மன்றத்தை ஐயரவர்களின் திருவுருவத்தால் அழகு செய்ததும், பெருமக்கள் அனைவரும் ஆங்குக் குழுமியிருந்து பொற்கிழியளித்துச் சிறப்பித்ததும், மற்றெவரும் பெறலரும் சிறப்புக்களாம். அருந்தமிழின் மொழிச் செல்வங்கள் காலநதியிற்கரவாது அவற்றை மீட்டு, தமிழுலகிற்கு ஈந்த ஐயரவர்களின் வள்ளன்மை ஞாலத்தின் மாணப்பெரிது. ஐயரவர்களின் மெய்ச்சரிதத்தைக் கூர்ந்து ஆய்பவர், அவர்கள் வாழ்க்கையானது

"இன்பம் விழையான், வினைவிழைவான் தன்கேளிர்
துன்பம் துடைத்தூன்றுந் தூண்"

என்னும் பொய்யாமொழிக்கு இலக்கியமாய் மிளிர்வதை யுணரலாகும். ஐயர் அவர்களின் இணையற்றதொண்டின் திறத்தையும், செயற்கரிய நன்றியையும் தமிழுலகு அன்புடன் போற்றுமாக.

# மதிப்புரை.

**ஈழகேசரி:—** இது யாழ்ப்பாணம் சுன்னகத்திலிருந்து ஞாயிற்றுக்கிழமைதோறும் வெளிவரும் செய்தித்தாள். சென்ற 5 ஆண்டுகளாக செவ்வனே நடைபெற்று வருகிறது. தமிழ் நலத்தையும், தமிழர் நாகரிகத்தையும், நாட்டின் நலத்தையும்

பேணும் கருத்துடன் எழுதப்பெறும் கட்டுரைகள் அதில் வெளிவருகின்றன. தூயதமிழில் செய்திகள் முதலியன எழுதப்பெறுவதும் பாராட்டத் தக்க சிறப்பாகும். இத்தகைய சிறப்புகள் வாய்ந்த செய்தித் தாளை எமக்கு மாற்றுத்தாளாக அனுப்பி உதவிபுரியும் பத்திராதிபர் அவர்களின் நன்றியைப் போற்றுகிறோம். இதன் ஆண்டுச் சந்தா ரூபா நான்கு.

மனோன் மணியம் :— இராய்பகதூர். P. சுந்தரம் பிள்ளை அவர்கள் M A., தமிழ்நலங்கனியவும், சுவைததும்பவும், கவினுற இயற்றிய மனோன்மணியமெனும் நாடக காவியம் புலமைமிக்க சான்றோரால் கற்றுக்களிக்கும் தரத்ததாய் இருந்துவருகின்றது. இவ்வரிய நாடகத்தை மேடையில் நடிக்கத் தக்கவாறு முதனூலைப் பெரும்பாலும் தழுவி, உரைநடையில் எழுதி வெளியிடப்பட்ட இந்நூல் தமிழ் நாடக இலக்கியங்களில் தலைசிறந்து மிளிருவதொன்றாம். சென்னைப் பச்சையப்பன் கல்லூரி ஆங்கிலப்பேராசிரியராம் திரு. ம. சண்முகசுந்தர முதலியார் M. A. L. T., அவர்கள் இவ்வரிய தமிழ்ப்பணியைச் செவ்வனம் ஆற்றியதைத் தமிழுலகு நன்றியுடன் போற்றுங் கடப்பாடுடையது. இதன் விலை ரூ. 1—4—0.

அபிமன்யு:—இது சென்னையிலிருக்கும் திரு. வெங்களத்தூர் சாமிநாதசர்மா அவர்கள் எழுதிய சிறு நாடகநூல். பாரதப் போரில் 13ஆம் நாளன்று அபிமன்யு வீரசுவர்க்கம் எய்திய சரிதத்தைத் தழுவி இயற்றப் பெற்றிருக்கின்றது. தமிழ்நூல் எழுதுவோர் தமிழ்மரபு வழுவாது காத்தல் கடன். வடமொழிச் சொற்களை அவ்வண்ணமே மிகுதியாகப் பெய்து எழுதியதால் நூலின்கவின் குன்றிவிட்டது. இதன் விலை அணா எட்டு.

திருவருணைக்கலம்பகம் :—சைவ எல்லப்ப நாவலர் அவர்கள் இயற்றியது. சொற்சுவை, பொருட்சுவை நிரம்பியது; பாடல்தோறுந் தெய்வமணங் கமழ்வது. இதன் பொருளாழத்தையும் சொன்னயங்களையும் செவ்விதின் விளக்குதற்குரிய உரையினை திரு. நா. இராமலிங்கம் பிள்ளை அவர்கள் எழுதி உபகரித்திருக்கின்றனர். இவ்வரிய நூலும், அதன் உரையும் தமிழுலகுக்குப் பயன்படும்வண்ணம், கவினுறப் பதிப்பித்து வெளியிட்ட வித்துவான் திரு. காழி. சிவ. கண்ணுசாமி பிள்ளை அவர்கட்கு எமது நன்றி உரியதாகும். இதன் விலை ரூ 1—0—0.